## ஸ்ரீமான் உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்களும் அவற்றின் விலையும்.

---

| | | | |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி—தெளிவுரை ... | 3 | 0 | 0 |
| திருப்பாவையின் விரிவுரை ... ... ... | 1 | 4 | 0 |
| ஷை திக் ராப்பர் பயிண்ட் ... ... ... | 1 | 0 | 0 |
| நாச்சியார் திருமொழியின் விரிவுரை ... ... ... | 2 | 0 | 0 |
| பெருமாள் திருமொழியின் விரிவுரை ... ... ... | 1 | 12 | 0 |
| திருச்சந்த விருத்தத்தின் விரிவுரை ... ... ... | 1 | 10 | 0 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு—இவற்றின் விரிவுரை ... | 1 | 6 | 0 |
| முதலாயிரம் முழுமையும் 3 வால்யூம்களாக நல்ல பைண்ட் ... | 10 | 8 | 0 |
| இராமானுச நூற்றந்தாதியின் விரிவுரை ... | 0 | 12 | 0 |
| சிறிய திருமடல்—விரிவுரை ... ... ... | 0 | 10 | 0 |
| பெரிய திருமடல்—விரிவுரை ... ... ... | 1 | 0 | 0 |
| திருவெழுகூற்றிருக்கை—விரிவுரை ... ... ... | 0 | 5 | 0 |
| திருவாசிரியம்—விரிவுரை ... ... ... | 0 | 5 | 0 |
| ஸ்ரீவசநபூஷண ஸாரம் ... ... ... | 1 | 0 | 0 |
| கூரத்தாழ்வான் வைபவம் ... ... ... | 0 | 4 | 0 |
| பிரதிவாதி பயங்கரம் அண்ணா வைபவம் ... ... | 0 | 3 | 0 |
| முகுந்தமாலையின் தெளிவுரை ... ... ... | 0 | 6 | 0 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை ... ... | 0 | 12 | 0 |
| ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம் ... ... ... | 0 | 3 | 0 |
| நமஸ்காரதத்துவம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| ப்ரணவாதிகாரதத்துவம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| ஸுதர்சந சதகம் தமிழுரை ... ... ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீவரதராஜ ஸ்தவத்தின்—விஸ்தாரமான மணிப்ரவாள வியாக்கியானம் (தெலுங்கு லிபி) ... | 1 | 4 | 0 |
| ஸ்ரீஸ்தவத்தின் ஷை ஷை ... | 0 | 6 | 0 |
| அதிமாநுஷ ஸ்தவத்தின் ஷை ... ஷை ... | 0 | 12 | 0 |
| திருப்பல்லாண்டு விரிவுரை ஷை ... | 0 | 4 | 0 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் ... ஷை ... | 0 | 3 | 0 |
| ரஹஸ்ய மூலம் ... ஷை ... | 0 | 6 | 0 |
| உபந்யாஸரத்நமாலா(க்ரந்தலிபி) [ஸம்ஸ்க்ருதபாஷையில் சிறந்த 5 உபந்யாஸங்கள் ... | 0 | 6 | 0 |
| சேஷாவதாரச் சிறப்பு ... ... ... .... | 0 | 2 | 0 |

[இன்னும் பல புத்தகங்களும் உள்ளன.]

---

"திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை" ஆபீஸ், 32, பந்தர் தெரு, G. T., மதராஸ்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத்தனியன்கள்.

---

## நம்பெருமாள் அருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶 𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

## ஆழ்வான் அருளிச்செய்தவை.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥
𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜 𑌯𑍁𑌗𑍍𑌮 𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

## ஆளவந்தார் அருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌲𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌲𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

## ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌸𑍍𑌯 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁 𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥



திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி - அவதாரிகை.

சோழமண்டலத்திலே திருமங்கை யென்று ஒரு நாடு உண்டு. அதில், திருவாலி திருநகரியென்கிற திவ்யதேசத்தின் ஸமீபத்திலுள்ள திருக்குறையலூரிலே, நான்காம் வருணத்தில் கள்ளக் குடியில், சோழராஜனுக்குச் சேனைத்தலைவனாகவுள்ள ஒருவனது குமாரராய் ஒருத்தர் கலியுகத்தில் முந்நூற்றுத்தொண்ணூற் றெட்டாவதான நள வருஷத்திற் பூர்ணிமை பொருந்திய வியாழக்கிழமையில் கார்த்திகை மாதத்தில் கிருத்திகா நக்ஷத்திரத்திலே அவதரித்தார். இப்படி அவதரித்த இவர் நீல நிறமுடையராயிருந்ததுபற்றி இவர்க்குத் தந்தை நீலனென்று நாமகரணஞ் செய்தார்.

இவர் தமது குடிக்கு ஏற்ப இளமையிலே ஆயுதப்பயிற்சியில் தேர்ச்சி பெற்றுச் சோழராஜனையடுத்துச் சேனாதிபதி உத்தியோகத்தில் அமர்ந்து, கொற்றவனுக்குக் கொடியவரோடு கடும்போர் நேருங்காலங்களில் படைகளோடு முன் சென்று பராக்கிரமத்தாற் பகைவென்று பரகால னென்று ப்ரஸித்தி பெற்றார். இவருடைய இப்படிப்பட்ட ஒப்பற்ற பராக்கிரமத்தையுணர்ந்த கொற்றவன் இவரை அத்திருமங்கைநாட்டுக்கு அரசராக்கி முடி சூட்டினன்.

இவ்வாறு குறுநிலத்தலைமைபூண்ட திருமங்கைமன்னன் அரசாங்க காரியத்தைக் குறைவின்றி நடத்திப் புகழ்பெற்று இசை நாடகங்களில் பிரியமுடையராய் எப்பொழுதும் பல இளமங்கையர் இன்னிசை பாடக் கேட்பதையும் நன்னடம் பயிலக் காண்பதையுமே பொழுது போக்காகக் கொண்டிருந்தார்.

இப்படியிருக்கையில், அந்நாட்டில் "அண்ணன் கோயில்" என்று வழங்குகின்ற திருவெள்ளக்குளமென்னுந் திருப்பதியில் மிகச் சிறந்ததொரு தாமரைப் பொய்கையில் தேவலோகத்து அப்ஸரஸ் ஸ்த்ரீகள் பலர் வந்து ஜலக்ரீடை செய்து செல்ல, அவர்களுள் திருமாமகளென்பாள் தன் இச்சையால் தெய்வவடிவத்தை விட்டு மானுட வடிவங்கொண்டு தனியே குமுதமலர் கொய்து நின்றாள். அங்கு அனுஷ்டாநத்திற்காக வந்த ஒரு வைஷ்ணவ வைத்யன் அவளைக்கண்டு செய்தி விசாரிக்க, அவள் "ஸ்வாமி! என்னோடு கூட வந்த மாதர்கள் என்னை விட்டுப் போய்விட்டார்கள்; தனியிருந்து அலைகின்ற என்னை நீர் பாதுகாத்தருளவேணும்" என்று வேண்டினாள். மலடனான அம்மருத்துவன் மகிழ்ச்சியோடு அதற்கு உடன்பட்டு அம்மகளைத் தன் மாளிகைக்கு அழைத்துப்போய் மனையாள்வசம் ஒப்பித்து, குமுதமலர் கொண்டு நின்றது காரணமாகக் குமுதவல்லி யென்று அப்பெண்ணுக்கு நாமமிட்டு வளர்த்துவந்தான். வருகையில், அக்கன்னிகைக்கு விவாஹத்துக்குரிய பிராயம் வந்தவளவிலே அவளை வளர்க்கிற அந்த வைத்தியனுக்கு "மஹா குணவதியான இப்பெண்ணுக்கு ஏற்ற கணவன் உலகத்திலுளனோ" என்ற கவலையும் உடன் வந்தது.

அப்பொழுது அவளுடைய ரூபலாவண்ய ஸௌந்தரியங்களையும் குணாதிசயங்களையும் சாரர்கள் திருமங்கை மன்னனிடம் கொண்டாடிக் கூற, உடனே அவர் அவளழகைப் பார்ப்பதற்கு ஆசைகொண்டு ராஜ்யகாரியங்களை இருந்தது இருந்தபடியே விட்டுத் திருநாங்கூரைச் சார்ந்ததான திருவெள்ளக்குளத்துக்கு வந்து அந்த வைத்தியனிருக்கும் வீட்டிலே புக்கு அவனோடு ஸம்பாஷணை செய்துகொண்டிருக்கையில் அக்கன்னிகை கண்ணெதிரிற்படக் கண்டு வியந்து காதல்விஞ்சி அவள் வரலாற்றை வினவி அதைத் தந்தையால் அறிந்தவளவில், 'இவளை எனக்குத் தாரைவார்த்துக் கொடுக்கவேணும்' என்று அவரை வணங்கிக் கேட்டார். வஸ்திரபூஷணம் முதலியவற்றையும் மிகுதியாக முன்வைத்தார். இவர் இங்ஙனம் விரும்பிக் கேட்டதற்குத் தந்தைதாயர் இசைந்து அப்படியே கன்னிகாதானஞ் செய்ய விருக்கையில், குமுதவல்லி குறுக்கிட்டு "திருவிலச்சினை திருமண்காப்பு முதலிய பஞ்ச ஸம்ஸ்காரமுடைய ஒரு வைணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்படமாட்டேன்" என்று தன் உறுதியைத் தெரிவித்தாள். அது கேட்ட திருமங்கைமன்னன் உடனே திருநறையூர்க்குச் சென்று அங்கு எழுந்தருளியுள்ள நம்பியென்னு மெம்பெருமா

னுடைய திருமுன்பே நின்று பிரார்த்தித்து அப்பிரானிடத்தில் திருவிலச்சினை பெற்றுப் பன்னிரண்டு திருமண்காப்புகளும் சாத்திக்கொண்டு விவாஹார்த்தமாக விரைவில் வந்து சேரக் கண்டு மீண்டும் குமுதவல்லி 'நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுது செய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையும் போனகஞ் செய்த சேஷத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் பாணிக்கிரஹணஞ் செய்துகொள்ளமாட்டேன்' என்ன; அவளிடத்துக் கொண்ட ஆசையின் கனத்தால் அவர் இவ்வரிய விதத்தைச் செய்து முடிப்பதற்கும் உடன்பட்டு அங்ஙனமே செய்வதாகச் சபதஞ் செய்துகொடுக்க, அதன்பின் இருவர்க்கும் திருமணம் நடைபெற்றது.

பின்பு திருமங்கைமன்னன் பகவதாராதனத்திற்காட்டிலும் பரம பாவநமான பாகவதாராதனத்தைச் செய்துகொண்டு தம் அரசனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப்பொருளு முட்படச் செல்வமுழுவதையுஞ் செலவிட்டுவர, அச்செய்தியைச் சிலர் சொல்லக் கேட்ட கொற்றவன் கோபங்கொண்டு இவர் பக்கல் திறை வாங்கிவருவதற்காகத் தன் சேவகரை அனுப்பினன். அவர்கள் வந்து கேட்டதற்கு இவர் 'காலை, பகல், மாலை, இரவு, நாளை, பின்னிட்டு' என்பதாகச் சில தவணைகளைச் சொல்லிக்கொண்டு கால விளம்பஞ் செய்து வந்தார். பின்பு அச்சேவகர்கள் கடுமையாக நிர்ப்பந்தஞ் செய்யவே நீலர் வெகுண்டு அவர்களை வெருட்டித் துரத்தினர். அதனையறிந்த அரசன் சீற்றமுற்றுத் தனது ஸேனாபதியை விளித்து 'நீ சென்று பரகாலனைப் பிடித்து வா' என்று நியமிக்க, அவன் அங்ஙனமே பல சேனைகளோடு வந்து இவரை வளைத்துப் பிடிக்கத் தொடங்க, இவர் ஆடல்மா என்று பிரசித்தமான தமது குதிரையின்மீது ஏறிக்கொண்டு சேனைகளோடு முன்சென்று எதிர்த்துப் பொருது அவனை முதுகு காட்டி ஓடச்செய்ய, அஃதுணர்ந்த அரசன் தானே ஸேனாஸமூஹங்களோடு வந்து இவரை வளைய, இவர் தம் படைவலிமையால் அப்படைக்கடலைக் கடந்து தமது திறமையைக் காட்டிப் பொருகையில், தாம் அருள்மாரி யாதலால் அரசனைக் கொல்லலாகாதென்று சிறிதுகாலம் போர்நிறுத்தி நின்றார்.

அதுவே ஸமயமாக அரசன் தந்திரமாய் நல்வார்த்தை சொல்லிக்கொண்டு அருகில் வந்து 'உமது பராக்கிரமத்தைக்கண்டு மிகமகிழ்ந்தோம்' என்று கொண்டாடி 'விரைவில் கப்பஞ் செலுத்திவிடும்' என்றுசொல்லி இவரை மந்திரிவசமாக்கிவிட்டுத் திரும்பிப் போயினன்.

அந்த மந்திரி இவரைப் பகுதிப் பொருளுக்காகப் பிடித்து ஒரு தேவாலயத்திற் சிறைவைக்க, அங்கு இவர் உணவு இல்லாமல் மூன்றுநாள் பட்டினி கிடக்கையில், கச்சிநகர்த்தலைவனான பேரருளாளன் இவரது கனவிலே வந்து காட்சி தந்து 'உனக்கு வேண்டிய பொருள் தருகின்றோம், வா' என்று சொல்லி

யருளினான். இவர் அக்கனவை நனவாகவே நம்பி எம்பெருமானது திருவருளுக்கு மகிழ்ந்து பொழுது விடிந்ததும் மந்திரியை நோக்கிக் "காஞ்சீபுரத்திலே நிதி இருக்கின்றது; அங்கு வந்தால் தருவேன்" என்று கூற, அவன் அதனை அரசனுக்கு அறிவித்து அநுமதி பெற்றுப் பல பரிவாரங்களால் காவல் செய்துகொண்டு கச்சிப்பதிக்கு இவரை அழைத்து வந்தான். அங்கு இவர் நிதியைத் தேடிக்காணாது கவலைக்கடலில் மூழ்கி மூர்ச்சிக்குமளவிலே, பேரருளாளனாகிய வரந்தரும் மாமணிவண்ணன் மீண்டும் கனவில் எழுந்தருளி அபயமளித்து வேகவதி யாற்றங்கரையில் நிதியுள்ளவிடத்தைக் குறிப்பிட்டு அருளிச்செய்தபின்பு, இவர் தெளிந்தெழுந்து பொருள் கண்டெடுத்து அரசன் கடமையைச் செலுத்தி மிகுந்த தனத்தைப் பாகவதாராதனத்துக்கு வைத்துக் கொண்டார்.

அதன்பிறகு மந்திரி பொருளைக் கொண்டுபோய்ப் பிரபுவின் முன்னிலையில் வைத்து, நடந்த செய்திகளைத் தெரிவிக்க, அவ்வரசன் இவரது மஹிமையை ஆராய்ந்து அச்சமும் ஆச்சரியமுங் கொண்டு உடனே இவரை வரவழைத்து விசேஷமாக உபசரித்து, தான் செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தருளும்படி பிரார்த்தித்து, அநந்தரம் 'திரௌபதிக்குப் புடவை சுரந்ததுபோல மாயவனருளாற் பெருகிய இப்பொருளைக் கோச கிருஹத்தில் வைக்கலாகாது' என்று துணிந்து அப்பொருள் முழுவதையும் இவரைப்பட்டினி வைத்த பாவந் தீருகைக்காகப் பலபல பாகவதர்கட்குக் கொடுத்துப் பரிசுத்தனாயினான்.

பிறகு பரகாலர், சேஷித்த பொருளைக்கொண்டு ததீயாராதனம் நடத்திவருகையில் எல்லாம் செலவாய்விட்டதனால் கைப்பொருளொன்றுமின்றி, வழிபறித்தாகிலும் பொருள் ஸம்பாதித்து அக்கைங்கரியத்தைத் தடையற நடப்பிக்கத் துணிந்து, நீர்மேல் நடப்பான் நிழலிலொதுங்குவான் தாளூதுவான் தோலாவழக்கன் என்ற நால்வரை உற்றதுணைவராக உடன்கொண்டு ஆங்காங்குச் சென்று வழிச்செல்வோரைச் சூறையாடிக் கொணர்ந்த பொருளால் திருமாலடியார்களைப் பூசிக்கும் நோன்பை நோற்றுவந்தார். இவர் களவு செய்வதும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஆராதிப்பதற்கேயாதலால் ஸ்ரீமந்நாராயணன் இவர் செயலைத் தீவினையாகக் கருதாமல் நல்வினையாகவே கொண்டு இவர்க்கு விசேஷ கடாக்ஷம்பண்ணி இவரை அங்கீகரிக்கவேண்டுமென்று திருவுள்ளம்பற்றி இவர் தன்னை வழிபறிக்குமாறு தான் ஒரு அந்தணனாக வேடம்பூண்டு பல ஆபரணங்களையும் தரித்து மணவாளக் கோலமாய் மனைவியுடனே இவரிருக்கிற வழியே எழுந்தருள, திருமணங்கொல்லையில் திருவரசமரத்தின்கீழ்ப் பதுங்கியிருந்த குமுதவல்லி மணவாளர்கண்டு களித்து ஆயுதபாணியாய்ப் பரிவாரத்துடனே வந்து அவர்களை வளைந்து வஸ்திரபூஷணங்களையெல்லாம் அபஹரிக்கையில்

அம்மணவாளப்பிள்ளை காலில் அணிந்துள்ள மோதிரமொன்றைக் கழற்ற முடியாமையால் அதனையும் விடாமற் பற்களாலே கடித்துவாங்க, அம்மிடுக்கை நோக்கி எம்பெருமான் இவர்க்குக் கலியன் என்று ஒரு பெயர் கூறியருளினன்.

அதற்குப்பிறகு, இவர் பறித்த பொருள்களை யெல்லாம் சுமையாகக்கட்டி வைத்து எடுக்கப்பார்க்கையில் அப்பொருட்குவை இடம்விட்டுப் பெயராமல் மலைபோல் அசலமாயிருக்க, அதுகுறித்து ஆச்சரியப்பட்டுத் திருமங்கைமன்னன் அவ்வந்தணனை நோக்கி 'நீ என்ன மந்திரவாதம் பண்ணினாய்?' என்று விடாது தொடர்ந்து தன் கையிலேந்திய வாட்படையைக்காட்டி அச்சமுறுத்தி நெருக்க, அப்பொழுது ஸர்வேச்வர ஸ்வரூபியான அந்த அந்தணன் 'அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம், வாரும்' என்று அருகிலழைத்து, ஸகலவேத ஸாரமான திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை, முன்பு நரநாராயணராய்த் தனக்குத்தானே சொல்லிக்கொண்ட குறைதீர இவர் செவியிலே உபதேசித்து உடனே கருடாரூடனாய் இவர் முன் எழுந்தருளி ஸேவை ஸாதித்தான்.

அங்ஙனம் மந்திரோபதேசம் பெற்றதனாலும் அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்ததனாலும் முன்பு காலாழியைப் பற்களால் கழற்ற நேர்ந்தபோது பகவத் பாதாரவிந்தத்தில் வாய் வைத்ததனாலும் கலியன் அஜ்ஞாநவிருள் நீங்கித் தத்துவஞானச் சுடரெழுந்து எம்பெருமானைப் பரிபூரணமாக அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான ஆநந்தாதிசயத்தை வெளியிடுமாறு ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, விஸ்தாரக்கவி என்னும் நால்வகைக் கவிகளையும் பாடவல்ல பாண்டித்தியமுடையவராய் "வாடினேன் வாடி வருந்தினேன்" என்று தொடங்கிப் பாடலுற்று, வடமொழி வேதங்கள் நான்குக்கும் ஆறு அங்கங்கள் அமைந்திருக்கின்றதுபோல அவ்வேதங்களின் உட்பொருளால் நம்மாழ்வார் அருளிச்செய்த நான்கு திவ்வியப் பிரபந்தங்களுக்கும் தமது பிரபந்தங்கள் அங்கங்களாக அமையும்படி பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் என்னும் ஆறு திவ்விய நூல்களைத் திருவாய்மலர்ந்தருளி, 'திருமங்கையாழ்வார்' என்று திருநாமம் பெற்றார்.

அவற்றுள் முதற் பிரபந்தமாம் இப்பெரியதிருமொழி. ஆழ்வார் இப்பிரபந்தம் பாடுகையில் தாம் உஜ்ஜீவந ஹேதுவாகப் பெற்ற திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தின் வைபவத்தை முதல் திருமொழியிலே பன்னியுரைத்து, அநந்தரம் திவ்விய தேசயாத்திரையாகச் சென்று ஆங்காங்குப் பெருமாளை மங்களாசாஸநஞ் செய்து பாசுரங்கள்பாட உத்தேசித்து, பிருதி, பதரிகாச்ரமம், ஸாளக்ராமம், நைமிசாரணியம், சிங்கவேள்குன்றம், திருவேங்கடம் என்னும் வடநாட்டுத் திருப்பதிகளிற் சென்று எம்பெருமான்களை ஸேவித்துப் பாசுரம் பாடி, தொண்டைநாட்டுத் திருப்பதிகளுள் திருவெவ்வுளூர்க்கு வந்தபின் திருநின்றவூரைச் சேர்ந்தார். அத்திருப்பதியிலெழுந்தருளியுள்ள பத்தராவிப்

பெருமாள் அப்பொழுது ஆழ்வார்க்கு முகங்கொடாமல் பிராட்டியோடு ஸரஸ ஸல்லாபஞ் செய்துகொண்டு பராங்முகமாயிருக்க, அப்பால் ஆழ்வார் திருவல்லிக்கேணிக் கெழுந்தருளி மங்களாசாஸனஞ் செய்து திருநீர்மலை யெம்பெருமானையும் துதித்து அநந்தரம் திருக்கடன்மல்லையை யடைந்து பெருமானை ஸேவித்துநின்றார். அப்பொழுது திருநின்றவூரெம்பெருமான் திருமகளால் தூண்டப்பட்டு இவ்வாழ்வார் திருவாக்கினால் பாடல் பெற்றுச் சிறப்புறக்கருதி அக்கடன்மல்லையில் வந்து ஸேவைஸாதிக்க, கலியன் அப்பெருமானையும் அங்கே கண்ணாரக்கண்டு களித்து அவ்வூர் விஷயமான திருமொழியிலே "நின்றவூர் நித்திலத்தைத் தொத்தார் சோலைக், காண்டவத்தைக் கனலெரி வாய்ப் பெய்வித்தானைக் கண்டது நான் கடன்மல்லைத் தலசயனத்தே" என்று பாடினார்.

இவ்வாறே மற்றுஞ்சில தொண்டைநாட்டுத் திருப்பதிகளையும் நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டையுங் கடந்து சோழநாட்டுத் திருப்பதிகளில் தில்லைத் திருச்சித்திரகூடம் பாடியபின்பு சீர்காழி வழியாக எழுந்தருளுகையில் வழக்கப்படி பரிஜனங்கள் இவர்முன்னே "நாலுகவிப்பெருமாள் வந்தார்! பரவாதி மத்தகஜ கண்டீரவர் வந்தார்" இத்யாதி பல பிருதாவளிகளை எடுத்தேத்திக் கொண்டு செல்லாநிற்க, அவ்வூரிலுள்ள ஞானசம்பந்தமூர்த்திநாயனா ரென்கிற சைவசமயாசிரியருடைய அடியார்கள் வந்து "எங்கள் நாயனாருள்ள விடத்தே நீர் விருதூதிச் செல்லலாகாது" என்று தடைசெய்ய; அது கேட்டுப் பரகாலர் சம்பந்தருள்ள விடத்தே சென்று அவரோடு வாதப்போர்செய்யத் தொடங்குகையில், நாயனார் ஆழ்வாரை நோக்கி 'உமது கவித்திறத்தை யான் காணுமாறு முந்துற முன்னம் ஒரு பாடல் பாடும்' என்று சொல்ல, உடனே ஆழ்வார் "ஒரு குறளாயிருநில மூவடி மண்வேண்டி" என்று தொடங்கி அருகிலிருக்கிற காழிச் சீராமவிண்ணகரமென்ற திருப்பதியிலுள்ள தாடாளப் பெருமாள் விஷயமாகப் பதிகம்பாட, கேட்டு ஞானசம்பந்தர் மிக அதிசயித்து 'உமக்கு இந்த விருதுகள் யாவும் தகும் தகும்' என்று சொல்லித் தமது வேலாயுதத்தை இவர்க்குத் திருமுன்காணிக்கையாக ஸமர்ப்பித்து நன்கு பஹுமானித்து உபசரித்து வழிபட்டு வழிவிட்டு மீள, இம்மெய்யடியவர் வெற்றிவேல் பறித்துக்கொண்ட தமது கொற்றம் முற்றுந்தோன்ற "செங்கமலத் தயனனைய மறையோர்காழிச் சீராம விண்ணகரின் செங்கண்மாலை, அங்கமலத் தடவயல் சூழாலிநாடனருள்மாரி அரட்டமுக்கியடையார் சீயம், கொங்குமலர்க்குழலியர் வேள் மங்கை வேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன, சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார் தடங்கடல் சூழுலகுக்குத் தலைவர் தாமே" என்று தமது பாயிரத்தோடு அத்திருமொழியை முடித்து ஜயபேரி முழங்க அப்பாலெழுந்தருளித் தமது திருவவதார ஸ்தலத்திற்கு அடுத்த திருவாலியைச் சார்ந்து திருநாங்கூர்த் திருப்பதிகள் முதலியவற்றைப் போற்றின பிறகு திருவிந்தளூரை யடைந்தார்.

அப்பொழுது அத்திருப்பதியெம்பெருமான் ஆழ்வார்க்குத் தன்னை ஒருகால் காட்டிமறைய, அவர் த்ருப்தி பெறுமல் மனக்குறையோடு "வாசிவல்லீரிந்தளூரீர் வாழ்ந்தே போம் நீரே" என்று தமது குறைபாடு தோன்றப் பாடி, அதற்கு இரங்கிப் பெருமான் நிரந்தர ஸேவை ஸாதிக்க அது பெற்று நிரம்பிய மனத்தராய், பல திருப்பதிகளின் வழியாகத் திருவரங்கம் பெரியகோயில் சேர்ந்து நம்பெருமாள் பக்கலிலே மிக்க ஈடுபாடுகொண்டு பலபதிகங்கள்பாட அதுகேட்டுத் திருவுள்ளமுகந்து அப்பெருமான் திருமுகமலர்ச்சியோடு ஆழ்வாரைக் குளிர நோக்கி "நமக்கு விமானம் மண்டபம் கோபுரம் பிராகாரம் முதலிய கைங்கரியங்களைச் செய்யும்" என்று நியமித்தருள,

[జిత బాహ్యజినాది మణిప్రతిమాః
అపి వైదికయన్నివ రంగ పురే।
మణిమంటప వప్రగణాన్ విదధే
పరకాలకవిః ప్రణమేమహి తాన్.]

[ஜித பாஹ்யஜிநாதி மணிப்ரதிமா:
அபி வைதிகயந்நிவ ரங்க புரே
மணிமண்டப வப்ரகணாந் விதகே
பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்.]

என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் மங்களாசாஸநஞ் செய்துள்ளபடியே திருப்பணிகளைக் குறைவற முடித்தபின்பு நம்பெருமாள் பக்கல் விடைபெற்று மீண்டும் திவ்ய தேசயாத்திரை தொடங்கித் தென்திருப்பேர், நந்திபுரவிண்ணகரம், திருவிண்ணகர் என்ற இத்தலங்களை மங்களாசாஸனஞ் செய்தபின், திருநறையூரைச் சேர்ந்து நம்பிவிஷயமாக நூறு பாசுரம் விண்ணப்பஞ் செய்து, திருச்சேறை தேரழுந்தூர் சிறுபுலியூர் என்னும் திருப்பதிகளின் வழியாகத் திருக்கண்ணமங்கை புக்கு அத்திருப்பதி யெம்பெருமானைப் பாடித் துதிக்கையில், திருநின்றவூர்ப் பத்தராவிப்பெருமாள் முன்பு (திருக்கடன் மல்லையில்) ஒரு பாடல் பெற்றது போதாதென்று மறுபடியும் ஆழ்வாரெதிரில் வந்து காட்சியளிக்க, ஆழ்வார் "நின்றவூர் நின்ற நித்திலத் தொத்தினைக்......கண்ணமங்கையுட் கண்டு கொண்டேனே" என்று அப்பெருமானையுஞ் சேர்த்துத் துதி செய்தனர்.

அப்பால் திருக்கண்ணபுரம் திருக்கண்ணங்குடி திருநாகை யென்னுஞ் சோழநாட்டுத் திவ்யதேசங்களையும், திருப்புல்லாணி திருக்குறுங்குடி யென்னும் பாண்டியநாட்டுத் தலங்களையும், திருவல்லவாழ் என்னும் மலைநாட்டுத் திருப்பதியையும் மங்களாசாஸனஞ் செய்து பின்னும் தென்னாட்டில் திருமாலி

ருஞ்சோலை திருக்கோட்டியூர் முதலானவற்றைத் தொழுது மற்றும் பல திருப்பதிகளை வணங்கி, எம்பெருமானுடைய அர்ச்சாவதாரங்களோடு விபவாவதாரங்களையுங்கருதி உள்ளங்கரைந்து பல பாசுரங்கள் பாடிக்கொண்டு ஆச்சரியமான அநுபவத்திலே ஆழ்ந்திருக்கையில்,—

எம்பெருமான் இவர்க்கு உண்டான இவ்வநுபவம் நித்யமாய்ச் செல்லுமாறு இவரைத் திருநாட்டிலே கொண்டுபோக நினைத்து அதற்காக இந்த ஸம்ஸாரமண்டலத்தின் கொடுமையை இவர்க்கு அறிவிப்போமென்றெண்ணி அப்படியே அறிவிக்க, அதனையறிந்த ஆழ்வார் 'இந்தக் கொடுவுலகத்திலோ எம்பெருமான் நம்மை வைத்திருக்கிறது!' என்று மிகவும் அஞ்சி நடுங்கி இறுதித் திருமொழியிலே "ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன்" "பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல்" "இருபாடெரி கொள்ளியினுள்ளெறும்பேபோல்" "வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே" என்றிப்படி பலவற்றையும் தம்முடைய அச்சத்திற்கு த்ருஷ்டாந்தமாகக் காட்டி "அந்தோ! அடியேற்கு அருளாய் உன்னருளே" என்று பரமபதப்ராப்திக்கு உறுப்பான பரிபூர்ண கிருபையைப் பிரார்த்தித்துத் தலைக்கட்டுகிறதாயிற்று இப்பிரபந்தம்.

நம்மாழ்வார் திருவாய்மொழி பாடித் தலைக்கட்டி அவாவற்று வீடு பெற்றாற்போல இவ்வாழ்வார் திருநெடுந்தாண்டகம் பாடித் தலைக்கட்டி வீடு பெற்றாராகிறார். ... ... ... ... ... *

## பெரிய திருமொழி திவ்யார்த்த தீபிகையின் முன்னுரை முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ

# பெரிய திருமொழித் தனியன்கள்.

(திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்தது.)

శ్లో॥ కలయామి కలిధ్వంసం కవిం లోకదివాకరమ్!
యస్య గోభిః ప్రకాశాభిరావిద్యం నిహతం తమః॥.

[கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்
யஸ்ய கோபி꞉ ப்ரகாசாபிராவித்யம் நிஹதம் தம꞉.]

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| யஸ்ய | யாவரொரு ஆழ்வாருடைய | (தம்) | அப்படிப்பட்டவராய் |
| ப்ரகாசாபி꞉ | உலகமெங்கும் விளங்குகின்ற | கலி த்வம்ஸம் | கலிதோஷத்தைத் தொலைப்பவராய் |
| கோபி꞉ | கிரணங்கள் போன்ற ஸ்ரீ ஸூக்திகளாலே | லோக திவாகரம் | உலகத்துக்கெல்லாம் ஒரு ஸூர்யன் போன்றவரான |
| ஆவித்யம் | அஜ்ஞாந ப்ரயுக்தமான | கவிம் | ஸ்ரீ பரகாலகவியை |
| தம꞉ | இருளானது | கலயாமி | த்யானம் செய்கிறேன். |
| நிஹதம் | நீக்கப்பட்டதோ, | | |

* * * கலிகன்றி என்று ப்ரஸித்தரான திருமங்கையாழ்வாரை த்யானிக்கின்றேனென்கிறது. இதில் ஆழ்வார் ஸூர்யனாக வருணிக்கப்படுகிறார். வடமொழியில் గో (கோ) என்கிற சப்தம் கிரணம், சொல் முதலிய பல பொருள்களையுடையது. ஸூர்யன் தனது கோக்களினால் (கிரணங்களால்) புறவிருள்களைப் போக்குவான்; இப்பரகாலதிவாகரர் தமது கோக்களினால் (ஸ்ரீஸூக்திகளால்) அகவிருளைப் போக்குவார். இத்தால், ஆதித்ய கிரணங்களால் அகலமாட்டாத உள்ளிருள் இவரது ஸ்ரீஸூக்திகளால் அகலுமென்று அதிசயமும் சொல்லப்பட்டதாயிற்று.

கவிம் என்கிற ஸாமாந்யசப்தம் - ஆசுகவி, மதுரகவி, சித்ரகவி, விஸ்தார கவி என்னும் கவித்திறங்கள் நான்கிலும் ஆழ்வார் வல்லவரென்பதை விளக்கும். ஆவித்யம் = அவித்யயா க்ருதம்-ஆவித்யம் என்று தத்திதவ்ருத்தியாம். ... *

(எம்பெருமானாரருளிச் செய்தது.)

(நேரிசை வெண்பா.)

வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

| | | | |
|---|---|---|---|
| பரகாலன் | புறமதத்தவர்கட்கு யமன்போன்ற திருமங்கையாழ்வார் | வாள் வலியால் | தமது வாளின் வலிமையினால் |
| வாழி | வாழ்ந்திடுக ; | மந்திரம் கொள் | திருமந்திரத்தைப் பெற்றவராயும் |
| கலிகன்றி | கலியைக்கெடுத்த திருமங்கையாழ்வார் | தூயோன் | பரமபரிசுத்தராயுமிருக்கிற |
| வாழி | வாழ்ந்திடுக ; | மங்கையர் கோன் | திருமங்கையாழ்வாரது |
| குறையலூர் | திருக்குறையலூரில் | சுடர் | ஒளிபொருந்தியதும் |
| வாழ் | வாழ்கின்ற | மானம் | பெருமை பொருந்தியதுமான |
| வேந்தன் | அரசரான திருமங்கையாழ்வார் | வேல் | கொற்ற வேலானது |
| வாழி | வாழ்ந்திடுக ; | வாழி | வாழ்ந்திடுக. |
| மாயோனை | எம்பெருமானிடத்தினின்று | | (அரோ—அசை.) |

* * *—திருமங்கையாழ்வாரையும் அவரது திவ்வியாயுதத்தையும் வாழ்த்துகிறது இது.

எப்பெருமானது வைபவங்களைப் பொறாத பாவிகளைக் கண்டித்து ஒழிப்பவரும், கலிதோஷம் நீங்கும்படி உலகை வாழ்விப்பவரும், திருக்குறையலூரைத் திருவவதாரஸ்தலமாக வுடையவரும், மங்கைநகர்க்கு அரசருமான திருமங்கையாழ்வார் பல்லாண்டு பல்லாண்டாக வாழவேணும். அவரது திருக்கையிலே திகழ்வதும் எம்பெருமானை வெருட்டித் திருமந்திரோபதேசம் செய்வித்துக் கொண்டதுமான வேலும் வாழி என்றதாயிற்று.

பின்னடிகளில் அறியவேண்டிய வரலாறு அவதாரிகையில் விவரிக்கப்பட்டுள்ளமை காண்க.

தூயோன் = வழிபறித்தலாகிய அக்ருத்யத்தைச் செய்தாலும், அச்செல்வம் முழுவதையும் பகவத்பாகவத கைங்கரியத்துக்கே உபயோகித்ததனாலும் அபாகவதர்களின் பொருளை அபஹரித்துப் பாகவதர்க்கு உரியதாக்கியதனாலும் புகழ்புண்ணியங்களையே யன்றிப் பழிபாவங்களைச் சிறிதும் பெற்றிலர் என்பது தோன்றத் தூயோன் என விசேஷிக்கப்பட்டாரென்க.

ஞானசம்பந்தர் முதலிய புறமதத்தவர்களை வாதப்போரில் வென்று அவர்கட்கு ம்ருத்யுவாயிருந்ததனால் பரகாலன் என்றும், தமது திவ்ய ப்ரபந்தங்களால் உலகத்தை நன்னெறிச் செலுத்திக் கலிதோஷத்தைக் கடிந்ததனால் கலிகன்றி என்றும் இவ்வாழ்வார்க்குத் திருநாமங்களாயின வென்க

சுடர்மான வேல் = சீர்காழியிலிருந்த ஞானசம்பந்த மூர்த்திநாயனார் ஆழ்வாருடைய நாவீறுகண்டு வியந்து தமது வேலாயுதத்தை இவர்க்குத் திருமுன்காணிக்கையாகச் சமர்ப்பித்து நன்கு மதித்து உபசரித்து வழிபட்டனர் என்ற வரலாறு அறிக. ... ... ... ... ... ... ... *

ஆழ்வான் அருளிச்செய்தது.

(கட்டளைக் கலித்துறை.)

நெஞ்சுக் கிருள்கடி தீப மடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்லவமுதம் தமிழ நன்னூல்துறைகள்
அஞ்சுக்கிலக்கிய மாரணசாரம் பரசமயப்
பஞ்சுக் கனலின்பொறி பரகாலன் பனுவல்களே.

| | |
|---|---|
| பரகாலன் பனுவல்கள் | திருமங்கையாழ்வாருடைய ஸ்ரீஸூக்திகள் (எப்படிப்பட்டவை யென்றால்) |
| நெஞ்சுக்கு | நெஞ்சிலுண்டான |
| இருள் | இருளை |
| கடி | போக்கக்கூடிய |
| தீபம் | திருவிளக்காம்; |
| அடங்கா | ஒன்றுக்குமடங்காத |
| நெடு பிறவி நஞ்சுக்கு | நீண்ட ஸம்ஸாரமாகிற விஷத்தை மாற்றுவதற்கு |
| நல்ல அமுதம் | சிறந்த அமிருதமாம்; |
| தமிழ | தமிழிலுலாகிய |
| நல் நூல் | நல்ல நூல்களில் சொல்லப்பட்டுள்ள |
| துறைகள் அஞ்சுக்கு | எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்கிற ஐந்து லக்ஷணங்கட்கும் |
| இலக்கியம் | லக்ஷ்யமாயுள்ளவை; |
| ஆரணம் | வேதத்தினுடைய |
| சாரம் | ஸாரமானவை; |
| பரசமயம் பஞ்சுக்கு | மதாந்தரக் கோட்பாடுகளாகிய பஞ்சுக்கு |
| அனலின் பொறி | நெருப்புப் பொறியாம். |

* * *—திருமங்கையாழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளின் பெருமை சொல்லுகிறது இது. இவருடைய ஸ்ரீஸூக்திகளை ஓதி உணர்ந்தால் மனனக மலங்களெல்லாம் அற்று ஹ்ருதயம் நிர்மலமாகும்; இந்த ஸ்ரீஸூக்திகளை ஓதுமவர்களுக்கு "ஆண்டமாள்வதாணை" என்றபடி பரமபதம் ஸித்தமாதலால் ஸம்ஸாரத்தை அடியறுப்பவையாம் இவை; எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்று தமிழ் நூல்களிற் சொல்லப்பட்டுள்ள இலக்கணங்களுக்கு இலக்கியமாம் இவை; ஸகலவேதங்களிலும் சொல்லப்பட்டுள்ள அர்த்தங்கள் இவ்வாழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளில் சுருங்கக் காணலாயிருக்கையாலே வேதஸாரமுமாம் இவை; இந்த ஸ்ரீஸூக்திகள் அவதரித்தபின்பு பாஹ்யகுத்ருஷ்டி மதங்களெல்லாம் மாண்டுபோயினவாதலால் பரசமயப் பஞ்சுக்கு அனலின் பொறியாம் இவை.

கடிதீபம்—கடிகின்ற தீபம்; வினைத்தொகை. பிறவி நஞ்சுக்குநல்லவமுதம் = விஷம் பட்டவிடத்தில் அமுதமூற்றினால் நல்வாழ்ச்சியாவதுபோல் ஸம்ஸாரிகள் இப்பிரபந்தங்களை ஓதினால் தாபத்ரயமும் தணியப்பெற்று உஜ்ஜீவித்திடுவர்களென்கை. தமிழ நன்னூல் துறைகளஞ்சுக்கிலக்கியம் = இந்த ஸ்ரீஸூக்திகளைப் பார்த்து லக்ஷணம் கட்டலாம்படி குற்றமொன்றுமின்றி நற்றங்கள் நிறைந்திருக்கும் என்கை. "தமிழ் நன்னூல்" என்ற பாடம் மறுக்கத்தக்கது. 'தமிழ' என்றே ஓதுக. "நேர் பதினாறே நிரைபதினேழென்றோதினர் கலித்துறை

யோரடிக் கெழுத்தே" என்பது இலக்கணமாதலின். இங்கு நன்னூல் என்றது ப்ரஸித்தமான நன்னூலென்னும் இலக்கண நூலைச் சொல்லிற்ருகவுமாம். அஞ்சு=ஐந்து என்பதன் போலி. இலக்கியம்—லக்ஷ்யம். ஆரணஸாரம்—வடசொல் தொடர். ... ... ... ... ... *

## எம்பார் அருளிச்செய்தது.

(ஒரு விகற்ப நேரிசை வெண்பா.)

எங்கள் கதியே யிராமாநுச முனியே
சங்கை கெடுத்தாண்ட தவராசா—பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்த மறையாயிர மனைத்தும்
தங்கு மனம்நீ யெனக்குத் தா.

| | |
|---|---|
| எங்கள் கதியே | எங்களுக்குப் புகலாயிருப்பவரே ! |
| இராமாநுச முனியே | ஸ்ரீராமாநுச முனிவரே ! |
| சங்கை | ஸம்சயங்களை யெல்லாம் |
| கெடுத்து | போக்கி |
| ஆண்ட | ரக்ஷித்த |
| தவ ராசா | மஹாதபஸ்வியே ! |
| பொங்கு புகழ் | உலகமெங்கும் பரவிய புகழையுடையரான |
| மங்கையர் கோன் | திருமங்கையாழ்வார் |
| ஈந்த | தந்தருளின |
| மறை ஆயிரம் | வேதரூபமான திருமொழி யாயிரத்தையும் |
| அனைத்தும் | மற்றுமுள்ள எல்லாப் பிரபந்தங்களையும் |
| தங்கும் | தரிக்கக்கூடிய |
| மனம் | மநஸ்ஸை |
| நீ | தேவரீர் |
| எனக்கு | அடியேனுக்கு |
| தா | தந்தருளவேணும். |

* * *—எம்பார் என்னுமாசிரியர் எம்பெருமானர் திருவடிகளிலே வந்து வணங்கிப் பிரார்த்திக்கின்ருர்—;.ஸ்வாமிந்! தேவரீரையொழிய வேறுயாரும் அடியோங்களுக்குப் புகலாவாரில்லை; தத்துவ நூல்களில் எங்களுக்கு உண்டான எவ்வளவோ ஸம்சயங்களை இதுவரையில் தேவரீர் போக்கியருளி மஹோபகாரம் செய்திருக்கிறது. அதெல்லாம் பெரிதல்ல; திருமங்கையாழ்வாருடைய திவ்ய ஸூக்திகளை எவ்வளவு ச்ரமப்பட்டுக் கண்டபாடஞ் செய்தாலும் மறப்பின் மிகுதியாலே தரிக்கமுடியாமல் வருந்துகிற எங்களுக்கு எப்படியாவது அந்த ஸ்ரீஸூக்திகளையெல்லாம் தரிக்கும்படியான மனவுறுதியை அருள்செய்ய வேணும்.

குறையல்பிரானடிக்கீழ் விள்ளாதவன்பரான எம்பெருமானர் "கலிமிக்க செந்நெற் கழனிக்குறையல் கலைப்பெருமானொலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்ததனல் வலிமிக்க சீய மிராமாநுசன்" (இராமாநுச நூற்றந்தாதி.)

*என்றபடி திருமங்கையாழ்வாரருளிச் செயற்கடலைக் கரைகண்டவராகையால் இங்ஙனே பிரார்த்திக்கப் பட்டாரென்க.*

**கதி**—*வடசொல். 'சங்கா' என்ற வடசொல் சங்கையென ஐயீறுகத் திரிந்தது.* **மறையாயிர மனைத்தும்**=*திருமொழியாயிரத்தில் ஒன்றுதப்பாமல் என்றுமாம்.* ... ... .... .... ... ... ... ... ⁂

(சில விடங்களில் அநுஸந்திக்கப்படும் தனியன்.)

மாலைத் தனியே வழிபறிக்க வேணுமென்று
கோலிப் பதிவிருந்த கோற்றவனே!—வேலை
அணைத்தருளுங் கையா லடியேன் வினையைத்
துணித்தருள வேணும் துணிந்து.

(இதன் கருத்து.) *ஸர்வேச்வரனைத் தனிவழியிலே வழிபறிக்க வேணுமென்று முயற்சிகொண்டு திருவரசடியிலே மறைந்திருந்த திருமங்கைமன்னனே!, வேற்படை யேந்திய திருக்கையாலே அடியேனுடைய பாவங்களைக் கண்டித்தொழிக்கவேணு மென்றதாயிற்று.*

*ஆழ்வார் திருவடிகளே சரணம்.*

ஜீயர் திருவடிகளே சரணம்.

*தனியன் உரை முற்றிற்று.*





ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழி.

[பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

## முதற்பத்து—முதல் திருமொழி.

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயரிடும்பையில் பிறந்து
கூடினேன்கூடி இளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேனோடி உய்வதோர்பொருளால்
உணர்வெனும் பெரும் பதம் திரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (க)

### பதவுரை.

| பதம் | உரை |
|---|---|
| வாடினேன் | கீழ்க்கழிந்த காலமெல்லாம் வாடிக்கிடந்தேன்; |
| வாடி | அப்படி வாடியிருந்ததனால் |
| மனத்தால் வருந்தினேன் | மனவருத்தமடைந்தேன்; |
| பெரு துயர் இடும்பையில் | அளவற்ற துக்கங்களுக்கு இருப்பிடமான ஸம்ஸாரத்திலே |
| பிறந்து கூடினேன் | பிறந்து (அந்த ஸம்ஸாரத்திலேயே)பொருந்தப் பெற்றேன்; |
| கூடி | அப்படி ஸம்ஸாரியாய்க் கிடந்ததனால் |
| இளையவர் தரும் கலவியே கருதி | இளமை தங்கிய பெண்கள் தரக்கூடிய சிற்றின்பத்தை ஆசைப்பட்டு |
| அவர் தம்மோடு ஓடினேன் | அந்தப்பெண்கள்போன வழியையே பற்றி ஓடினேன்; |
| ஓடி | இப்படி ஓடித்திரியுமிடத்து, |
| உய்வது ஓர் பொருளால் | ஆத்மோஜ்ஜீவநத்துக்கு உறுப்பான எம்பெருமான் திருவருளாலே |
| உணர்வு எனும் பெரு பதம் திரிந்து | ஞானமென்கிற ஒரு சிறந்த ஸ்தானத்தில் அடி வைத்து |
| நாடினேன் | நன்மை தீமைகளை ஆராயப் புகுந்தேன்; |
| நாடி | அப்படி ஆராயுமளவில் |
| நாராயணா என்னும் நாமம் நான் கண்டு கொண்டேன் | திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரத்தை நான் லபிக்கப் பெற்றேன். |

* * *—[வாடினேன்வாடி.] அநாதிகாலம் விஷயப்ரவணராய் எம்பெருமானைமறந்திருந்த இவ்வாழ்வார் நிர்ஹேதுகமான பகவத்க்ருபையால் திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தைப் பெற்று ஸ்வரூபமுணர்ந்து திருந்தினராதலால், அந்த மஹாமந்திரத்தின் (உள்ளீடான ஸ்ரீநாராயண நாமத்தின்) சிறப்பை விரித்துரைத்துக்கொண்டு, தாம் நெடுங்காலமாக பகவத்விஷயத்தை மறந்து அநர்த்தப்பட்டபடியையும் இப்போது உஜ்ஜீவிக்கப் பெற்றபடியையும் பலருமறியப் பேசுகிறார்—இத்திருமொழியில்.

இன்று தாம் உஜ்ஜீவிக்கப்பெற்றாலும் கீழே வீணுகப் பலகாலம் கழிந்துவிட்டபடியால் 1. "பழுதே பல பகலும் போயினவென்று அஞ்சி யழுதேன்" என்றும் 2. "தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் வாளாவிருந்தொழிந்தேன் கீழ் நாள்களெல்லாம்" என்றும் இழந்த நாளைக்கு வயிறெரியாதிருக்கமுடியாதாகையால், ஐயோ! அளவற்ற காலத்தை அநியாயமாகப் பாழ்படுத்தினேனே !! என்கிற வருத்தத்தை முந்துற முன்னம் வெளியிடுகிறார்.

3. "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றபடி எம்பெருமானொருவனையே விஷயமாகக் கொள்ளவேண்டிய ஞானம் இதுவரையில் அவனைத்தவிர்த்துப் பலபல துர்விஷயங்களைப் பற்றிக் கிடந்ததனால் ஆத்மாவுக்கு இருக்கவேண்டிய விகாஸம் குன்றிப்போய் வாட்டமுண்டாயிருந்தது ; 4. "கோல் தேடியோடுங் கொழுந்தே போன்றதே மால்தேடியோடும் மனம்" என்றபடி எம்பெருமானாகிற கொள்கொம்பைப் பற்றித் தரித்து நிற்கவேண்டிய ஆத்மா அந்தக் கொம்பை இழந்ததனால் கொம்பைவிட்டு நீங்கிய தளிர் வாடுமாபோலே வாடிப்போயிற்று. அப்படி வாடிப் போனதனால் உண்டான மனவருத்தம் ஒருநாளும் தீராதாயிற்று. வருந்தினேன் மனத்தால் என்கிற இந்த மனவருத்தம் முன்பு உண்டானதோ? இப்போது உண்டானதோ? என்னில் ; அன்றும் இன்றும் உண்டான வருத்தத்தைச் சொல்லுகிறது. நெடுநாள் இழந்துபோன முற்காலத்திலும் வருத்தமுண்டு ; இழந்தோமே யென்கிற அநுதாபம் பிறந்த இக்காலத்திலும் வருத்தமுண்டு ; அதாவது—முன்பு இந்திரியங்கள் விஷயாந்தரங்களில் ஊன்றி அவற்றை அநுபவிக்க ஆசைப்படும்போது அவ்விஷயங்கள் இஷ்டப்படி கிடையாமையாலும், கிடைத்தாலும் அவற்றில் உண்மையான இனிமை இல்லாமையாலும் மனம் வருந்தியே கிடக்குமாயிற்று. நித்தியாநந்தமயமாயிருக்கவேண்டிய மநஸ்ஸை வீணான வருத்தத்திற்கு ஆளாக்கினோமே ! என்கிற வருத்தம் இப்போதுண்டானது. முன்புண்டான மனவருத்தத்தையே இங்கு முக்கியமாகச் சொல்லுகிறது.

---

1. முதல் திருவந்தாதி—16
2. பெரிய திருவந்தாதி—82
3. முதல் திருவந்தாதி—67
4. இரண்டாந் திருவந்தாதி—27

“ సంసారసాగరం ఘోరమనంతక్లేశభాజనమ్ [ஸம்ஸாரஸாகரம் கோரம் அநந்தக்லேச பாஜநம்] என்றபடி எண்ணிறந்த துன்பங்களுக்கு ஆஸ்பதமான ஸம்ஸாரப்படுகுழியிலே வந்து பிறந்ததனாலே சிற்றின்பங்களை அநுபவிப்பதிலேமிக்க ஆசைகிளர்ந்து அதனாலே கண்டவிடமெங்கு மோடித்திரிந்து ஸ்வரூபநாசம் பெற்று முடிவில் மனவருத்தமொன்றே கைகண்டபலனாகத் தலைக்கட்டிற்றென்று கீழ்நாளைய வருத்தத்தை முன்னிரண்டடிகளாலே சொல்லி முடித்தாராயிற்று.

இனி, இன்று தமக்குண்டான பெரும்பேற்றைப் பேசுகிறார் உய்வதோர் பொருளால் என்று தொடங்கி. “எம்பெருமானுடைய திருவருளாலே” என்ன வேண்டிய ஸ்தானத்தில் “உய்வதோர் பொருளால்” என்று சேமித்துச் சொல்லுகிறார். ஆத்மவர்க்கங்களுக்கெல்லாம் உஜ்ஜீவநஹேதுவான பொருள் பகவத்கிருபையேயன்றி வேறொன்று மல்ல என்பது ஸகல சாஸ்த்ரஸித்தாந்தமாகையாலே இங்கு உய்வதோர் பொருளென்று பகவத்கிருபையைச் சொல்லத் தடையில்லை. அப்படிப்பட்ட பகவத்கிருபையாலே நல்லறிவு என்கிற ஒரு சிறந்த பதவியிலே அடிவைத்து அந்த விவேக வுணர்ச்சியைக்கொண்டு இனி நமக்குத் தஞ்சமேதென்று ஆராய்ந்து பார்த்தேன்; பார்த்ததில் ஸ்ரீமந் நாராயண நாமமே தஞ்சமென்று கடைப்பிடித்தேன் என்றாராயிற்று.

“பெரும்பதம் தெரிந்து” என்றும் பாடமுண்டு; ஞானமென்கிற ஒரு பெரிய பதவியினால் ஹிதாஹிதங்களைத் தெரிந்துகொண்டு என்றபடியாம்.

நாராயணாவென்னும் நாமம் என்றது அந்தத் திருநாமத்தை மாத்திரம் சொல்லுவதாகக் கொள்ளுதலும், அந்தத் திருநாமத்தோடு கூடிய திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தளவும் சொல்லுவதாகக் கொள்ளுதலும் உண்டு. திருமந்த்ரத்தில் நாராயணாய என்று சதுர்த்தீவிபக்தி [நான்காம் வேற்றுமை] யாக இருக்குஞ் சொல் இங்கு நாராயணாவென்று கடைக்குறையாய்க் கிடக்கிறது. அன்றி, நாராயணா! என்று விளியுருபு ஏற்றுக்கிடப்பதாகச் சொல்லுவாருமுளர். “நாராயணனென்னும் நாமம்” என்னுமேத விளியீறாகச் சொல்லுவானேன் என்றால், அல்லும்பகலும் ‘நாராயணா! நாராயணா!!’ என்று விளித்துக் கதறுவதே பாகவதர்களின் போதுபோக்காகையால் அதுதோன்ற இங்கு விளியீறாகக் கிடக்கிறதென்பர். நாராயணாய என்பதே இங்கு விகாரப்பட்டிருக்கின்றதெனக் கொள்ளுதலே சிறக்கும். ... ... ... ... (க)

ஆவியே! அமுதே! என நினைந்துருகி
அவரவர் பணை முலை துணையா
பாவியேனுணராதெத்தனை பகலும்
பழுது போயொழிந்தன நாள்கள்
தூவிசேரன்னம் துணையோடும் புணரும்
சூழ்புனற்குடந்தையே தொழுது, என்
நாவினாலுய்ய நான் கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (உ)

| | | | |
|---|---|---|---|
| ஆவியே என | ‘எனக்கு உயிர் போன்றவளே!’ என்றும் | எத்தனை நாள்கள் பழுதுபோய் ஒழிந்தன | அந்தோ எத்தனை நாள்கள் பாழாய்க் கழிந்தன! |
| அமுதே என | ‘எனக்கு அம்ருதம் போல் இனியவளே!’ என்றும் (இப்படி பலவாருகச் சொல்லி வாய் பிதற்றிக் கொண்டு) | | (காலமெல்லாம் பாழாகப் போயிற்றே!.) |
| | | தூவி சேர் அன்னம் | இறகுகளையுடைய அன்னப் பறவைகள் |
| நினைந்து உருகி | சிற்றின்பங்களை நினைத்து நினைத்து மனமுருகி | துணையொடும் புணரும் | பேடையோடு புணருமிடமாய் |
| அவர் அவர் | பலபல பெண்டுகளுடைய | புனல் சூழ் | நீர் நிலங்கள் சூழ்ந்ததான |
| பணை முலை | பருத்த முலைகளையே | குடந்தையே | திருக்குடந்தையையே |
| துணை ஆ | ரக்ஷகமாகக்கொண்டு | தொழுது | ஸேவித்து |
| பாவியேன் | பாபியான நான் | உய்ய | உஜ்ஜீவிக்கும்படியாக |
| உணராது | ஸ்வரூபஜ்ஞானம் பெருததன் பயனுகை | நாராயணு என்னும் நாமம் என் நாவினுல் நான் கண்டு கொண்டேன். | திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரத்தை எனது நாவிலே உரைத்துக் கொள்ளப்பெற்றேன். |
| எத்தனை பகலும் பழுது போய் ஒழிந்தன | ஐயோ! எத்தனை காலம் வீணுகக் கழிந்தன; | | |

***—[ஆவியே யமுதே.] இப்பாட்டிலும் முன்னடிகளால் பூர்வாவஸ்தையி லநுதாபத்தையும், பின்னடிகளால் உத்தராவஸ்தையிலாநந்தத்தையும் பேசுகிருர். “ஆவியே! ஆரமுதே!!” என்று எம்பெருமான் விஷயத்திலே சொல்ல வேண்டிய பாசுரங்களை ஸ்த்ரீகள் விஷயத்திலே சொல்லியும், அந்த மாதர்களால் உண்டாகக்கூடிய சிற்றின்பங்களை நினைந்து அதிலே ஈடுபட்டும், 1. “வன்துணைவானவர்க்காய் வரஞ்செற்று அரங்கத்துறையும் இன்துணைவன்” என்று எம்பெருமானையே துணையாகக் கொள்ளவேண்டியது நீங்கி அந்த ஸ்த்ரீகளின் கொங்கைகளையே துணையாகக் காதலித்தும் இப்படியாக மஹா பாபியான நான் அவிவேகத்தாலே பாழாகப் போக்கின காலங்களுக்கு அளவேயில்லை; ஹா! ஹா!! இப்படிபழுதே கழிந்தவை எத்தனையோ பகல்! எத்தனையோநாள்கள்!! கணக்கேது வழக்கேது என்று கழிவிரக்கங் கொள்ளுகிருர்—முன்னடிகளில்.

இதுவரையில், விஷமானவற்றை அமுதாக ப்ரமித்துக் கிடந்த நிலைமை நீங்கி, மெய்யே அமுதமாகவுள்ளதை இன்று ஸேவிக்கப்பெற்றேன்; (அதாவது) ஆராவமுதப் பெருமானைத் திருக்குடந்தையிலே கண்டு தொழுதேன்; அபதார்த்தங்களைப் புகழ்ந்து பேசின வாயாலே திருமந்த்ரத்தை அநுஸந்தித்து ஸ்வரூபம் பெற்றேன் என்று மகிழ்கின்ருர்—பின்னடிகளில்.

1. பெரிய திருமொழி 3–7–6.

“ தூவிசேரன்னம் துணையொடும்புணரும்” என்றது—பெருமாளும் பிராட்டியும் நித்தியவாஸம் பண்ணுகிறபடியைச் சொல்லிற்றாகக் கொள்க. அன்னம் என்றது எம்பெருமானை; துணை என்றது பிராட்டியை. நம்முடைய அபராதங்களைப் பொறுப்பிப்பவளும் பொறுப்பவனும் பிரியாதே வாழுமிட மென்கை.

முதலடியில் அவரவர் என்றது—தாம் பேணின பெண்டிர்களுக்கு ஒரு கணக்கில்லாமையைக் குறிப்பிட்டபடி.

இத்திருமங்கையாழ்வார்க்கு மற்றைத்திருப்பதிகளெல்லாவற்றினும் திருக்குடந்தையில் அபிநிவேசம் அளவற்றதென்னுமிடம் உய்த்துணரத்தக்கது; இங்கே தொடக்கத்தில் திருக்குடந்தையைப்பேசி, மேலே சரமப்பிரபந்தமாகிய திருநெடுந்தாண்டகத்தின் முடிவிலும் “தண்குடந்தைக் கிடந்தமாலை நெடியானை அடிநாயேன் நினைந்திட்டேனே” என்று திருக்குடந்தையைப் பேசித் தலைக்கட்டினபடியாலென்க. ... ... ... ... ... (உ)

சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்
தெரிவைமாருருவமே மருவி
ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்
ஒழிந்தன கழிந்த அந்நாள்கள்
காமனார் தாதை நம்முடை யடிகள்
தம்மடைந்தார் மனத்திருப்பார்
நாமம் நானுய்ய நான் கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (௩)

- சேமமே வேண்டி — நன்மையையே அபேக்ஷித்திருந்தும் (அதற்கு உறுப்பாக நல்வினை செய்யாமல்)
- தீவினை பெருக்கி — துஷ்கருமங்களை அதிகமாகச் செய்து
- தெரிவைமார் உருவமே மருவி — ஸ்திரீகளுடைய வடிவழகையே பேணி
- கழிந்த அந்நாள்கள் — கீழே கழிந்த நாள்களானவை
- ஊமனார் கண்ட கனவிலும் பழுது ஆய் ஒழிந்தன — ஊமை கண்ட கனவிலுங் காட்டில் வீணாகக் கழிந்து போயின;
- காமனார் தாதை — மன்மதனுக்குப் பிதாவும்
- நம்முடை அடிகள் — நமக்கு ஸ்வாமியும்
- தம் அடைந்தார் மனத்து இருப்பார் — தம்மைப் பற்றினவர்களுடைய நெஞ்சில் நீங்காதிருப்பவருமான பெருமாளுடைய
- நாமம் — திருநாமமாகிய
- நாராயணா என்னும் நாமம் — நாராயண நாமத்தை
- நான் உய்ய — நான் உஜ்ஜீவிக்கும்படியாக
- நான் கண்டு கொண்டேன் — நான் காணப்பெற்றேன்.

* * *—[சேமமே வேண்டி.] பகவத் விஷயானுபவத்தாலே மிகவும் இனிதாகச் செல்லவேண்டிய காலமெல்லாம் பாழாய்க் கழிந்தனவே யென்கிற அநுதாபமே மீண்டும் மேலிட்டு உள்ளடங்காத துக்கந் தோன்றப் பேசுகிறார். 'நமக்கு ஒருவராலும் ஒருவிதமான துன்பமும் நேரிடக் கூடாது, இன்பமே பெருக வேண்டும்;க்ஷேமமாக நாம் வாழவேண்டும்' என்கிற அபேக்ஷை மாத்திரம் பரிபூர்ணமாயிருந்தது; அவ்வபேக்ஷைக்குத் தக்கபடி நல்ல காரியங்களைச் செய்தாலன்றோ அப்படியே க்ஷேமமாக வாழலாகும்; அப்படியிருக்க, க்ஷேமத்தை விரும்புதல் மாத்திரஞ் செய்து நல்லகாரிய மொன்றுஞ் செய்யாதொழிந்தேன்; அவ்வளவேயோ? பல கெட்ட காரியங்களையும் ஏராளமாகச் செய்துதீர்த்தேன்; ஸ்த்ரீகளுடைய வடிவழகிலே ஈடுபட்டுச் செய்யாத பாவமில்லை. இப்படி பாவமேசெய்து பாவியான எனக்குக் கழிந்தநாள்கள் அந்தோ! வீணுகக் கழிந்தன. ஊமை கனக்கண்டால் அதை ஒருவரிடத்தும் வாய் விட்டுச் சொல்லிக்கொண்டு ஆநந்திக்கமுடியாது; ஆகவே ஊமைகண்ட கனக்கள் பழுதேயாம்; ஊமையர்க்கு வாய்விட்டுச் சொல்லிக்கொள்ள முடியாமற் போனலும் தம் நெஞ்சினுள்ளேயாகிலும் நினைத்திருந்து மகிழக்கூடும். அப்படி நினைத்துத் தமக்குள்ளேயே மகிழக்கூடிய விஷயமும் ஒன்றில்லாமையாலே ஊமனார் கண்ட கனவிலுங் காட்டில் வியர்த்தமாகவே என் நாள்கள் கழிந்து போயின வென்கிறார்.

ஆக முன்னடிகளாலே இழந்த நாளைக்கு அநுதபித்து, இன்று பெற்ற பேற்றின் கனத்தை நினைத்து மகிழ்ந்து பேசுகிறார் பின்னடிகளில்.

அழகிற் சிறந்த மன்மதனுக்கும் ஜநகனுகையாலே அதிஸுந்தரனாய், ஸர்வ ஸ்வாமியாகையாலே ப்ராப்தசேஷியாய், ஒருகால் தன்னைப்பணிந்தவர்களுடைய நெஞ்சை விட்டுப் பிரியாதவனுகையாலே ஸுலபனுயுமுள்ள எம்பெருமானுடைய திருநாமமாகிய ஸ்ரீமந்நாராயணமஹாமந்த்ரத்தை இன்று நான் லபிக்கப் பெற்றேனுகையால் இனி எனக்கொரு குறையுமில்லையென்றாராயிற்று.

ஸ்ரீக்ருஷ்ணன் மன்மதனுடைய அம்சமாகிய பிரத்யும்நனுக்குத் தந்தையாதலால் காமனார் தாதை என்றார். தாதః என்ற வடசொல் தாதை யெனத் திரிந்தது. க்ஷேமம் என்ற வடசொல் சேமமெனத் திரிந்தது. தெரிவைமார்—பெண்கள் என்றபடி. ஐந்து வயது முதல் ஏழுவயது வரையில் பேதைப் பருவமென்றும், எட்டு முதல் பன்னிரண்டு வரையில் பெதும்பைப் பருவமென்றும், பதின்மூன்றும் வயது மங்கைப்பருவமென்றும், பதினன்குமுதல் பத்தொன்பது வரையில் மடந்தைப் பருவமென்றும், அதன்மேல் ஆறு வயது வரையில் அரிவைப் பருவமென்றும், இருபத்தாறு முதல் முப்பத்திரண்டு வயது வரையில் தெரிவைப் பருவமென்றும் இலக்கண நூல்களிற் கூறப்பட்டுள்ளது இருந்தாலும், பேதை மங்கை அரிவை தெரிவை இத்யாதி பதங்களை ஸ்த்ரீகளுக்குப் பொதுப் பெயராகப் பிரயோகிப்பதுமுண்டு. ... ... ... (௩)

வென்றியேவேண்டி வீழ்பொருட்கிரங்கி
வேற்கண்ணார் கலவியேகருதி
நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன்
என்செய்கேன்? நெடுவிசும்பணவும்
பன்றியாயன்று பாரகங்கீண்ட
பாழியானாழியானருளே
நன்றுநானுய்ய நான் கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (௫)

வென்றியே வேண்டி — வெற்றியையே விரும்பிடும்

வீழ் பொருட்கு இரங்கி — நச்வரமான பொருள்களைப்பற்றிக் கரைந்தும்

வேல் கணார் கலவியே கருதி — வேல்போன்ற கண்களையுடைய மாதர்களின் கலவியை ஆசைப்பட்டும் (ஆக இப்படிகளாலே)

நின்ற ஆ நில்லா நெஞ்சினை உடையேன் — நின்றபடி நில்லாத [சஞ்சலமான] நெஞ்சை யுடையேனான நான்

என் செய்கேன் — என்ன பண்ணுவேன்?

அன்று — முன்னொரு காலத்து

நெடு விசும்பு அணவும் பன்றி ஆய் — நெடிய ஆகாசத்தை அளாவி வளர்ந்த மஹா வராஹஸ்வரூபியாய்

பாரகம் கீண்ட — பூ மண்டலத்தை உத்தரித்த

பாழியான் — மிடுக்கையுடையனாய்

ஆழியான் — ஸ்ரீ ஸுதர்சந பாணியான ஸர்வேச்வரனுடைய

அருளே — க்ருபையினாலே

நான் நன்று உய்ய — நான் செவ்வையாக உஜ்ஜீவிக்கும்படி

நாராயணா என்னும் நாமம் நான்கண்டு கொண்டேன்—.

* * *—[வென்றியேவேண்டி.] 'நாம் எல்லார்க்கும் கீழ்ப்படிந்திருக்க வேண்டும்' என்று ஆசைப்பட வேண்டியதுபோய் 'எல்லாரிலும் நாம் மேற்பட்டிருக்க வேண்டும்; நாமே வெற்றிபெற்று எல்லாரும் நமக்குத் தோற்றிருக்க வேண்டும்' என்று ஆசைப்பட்டுக் கிடந்தேன்; கையிலிருந்து ஒரு காசு நழுவிப் போனாலும் ஸர்வஸ்வமும் இழந்தாற் போல் அநுதபித்துக் கிடந்தேன்; மாதர்களோடு புணர்ந்து வாழ்வதற்கு மேற்பட வாழ்ச்சியே யில்லையென்று துணிந்து கிடந்தேன்; ஒன்றிலும் நிலைத்து நிற்கமாட்டாமல் கண்டவிடங்களிலும் சபலமாய்த் திரியும் நெஞ்சை யுடையேனான நான் என் செய்வது! எப்படி உஜ்ஜீவிப்பது!! என்று தடுமாறிக் கிடந்தவளவிலே எம்பெருமானுடை நிர்ஹேதுக க்ருபையாலே இன்று நன்றாக உஜ்ஜீவிக்க வழி ஏற்பட்டது என்றதாயிற்று.

வீழ்பொருட்கிரங்கி—நசித்துப்போவதே இயல்வான உடலுக்காகக்கரைந்து என்றும் பொருள் கொள்ளலாம். வேற்கணார்—ஸ்த்ரீகளின் கண்ணுக்கு வேல் உவமை கூறப்படும். நின்றவா—நின்றவாறு என்றபடி.

நெடுவிசும்பணவும் பன்றியாயன்று பாரகங்கீண்ட வரலாறு:—ஹிரண்யகசிபுவின் உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன்

வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹாவராஹ ரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினாற் குத்திக் கொன்று பாதாள லோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற் குத்தி அங்கு நின்று எடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பதாம். இப்பொழுது நடக்கிற ச்வேதவராஹ கல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலே யெடுக்க நினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை எடுத்து வந்தனனென்ற வரலாறும் உண்டு; 1. "பாராருலகம் முது முந்நீர் பரந்த காலம் வளைமருப்பில், ஏராருருவத் தேனமா யெடுத்த வாற்றலம்மான்" என்று இவ்வாழ்வார் தாமே அருளிச் செய்துமுள்ளர். "நெடுவிசும்பணவும் பன்றியாய்" என்றது—ஆகாசாவகாச மடங்கலும் விம்ம வளர்ந்தமையைச் சொன்னபடி. பாழியான்—மஹாபலசாலி. அருளே என்றது அருளால் என்றபடி; மூன்றனுருபு தொக்கி நிற்கிறது. ... ... ... ... ... (ச)

கள்வனேனானேன் படிறு செய்திருப்பேன்
கண்டவா திரிதந்தேனேலும்
தெள்ளியேனானேன் செல்கதிக்கமைந்தேன்
சிக்கெனத்திருவருள் பெற்றேன்
உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்தேன்
உடம்பெலாம் கண்ணநீர்சோர
நள்ளிருளளவும் பகலும் நானழைப்பன்
நாராயணா வென்னும் நாமம். (ரு)

கள்வனேன் ஆனேன் — (கீழ்க்கழிந்த காலமெல்லாம்) ஆத்மாபஹாரக் கள்வனாகி
படிறு செய்து இருப்பேன் — பலபல தீமைகளைச் செய்பவனாகி
கண்ட ஆ திரிதந்தேனேலும் — (இப்படி) மனம்போன படியே திரிந்துழன்றேனாயினும் (இன்று)
தெள்ளியேன் ஆனேன் — தெளிவு பெற்றவனானேன்;
திரு அருள் சிக்கென பெற்றேன் — பகவத் கிருபையைத் திண்ணிதாக லபிக்கப் பெற்றேன்;
செல் கதிக்கு அமைந்தேன் — போகவேண்டிய நல்வழிக்கு ஆளானேன்;
உள் எலாம் உருகி — ஹ்ருதய மடங்கலும் நீர்ப்பண்டமாகி
குரல் தழுத்து ஒழிந்தேன் — குரல் தழுதழுக்கப் பெற்று
கண்ண நீர் உடம்பு எலாம் சோர — ஆநந்த பாஷ்பமானது சரீரம் நிறையப் பெருகப் பெற்று
நள் இருள் அளவும் பகல் அளவும் — அஹோராத்ர விபாகமின்றி ஸர்வகாலத்திலும்
நாராயணா என்னும் நாமம் நான் அழைப்பன் — நாராயண நாமத்தைச் சொல்லி நான் கதறா நிற்பன்.

1. பெரிய திருமொழி 8-8-3.

* * *—[கள்வனேனானேன்.] உலகில் திருடப்படும் பொருளின் தாரதம்மியத்திற்கு ஏற்பவும் பொருளுடையவனது யோக்யதையின் தாரதம்மியத்திற்கு ஏற்பவும் பாபத்திலும் தாரதம்மியமுண்டு; விறகு திருடினவனுடைய பாபத்திற்காட்டில் ரத்னம் திருடினவனுடைய பாபம் பெரிது; சூத்ரனுடைய பொருளைத் திருடின பாபத்திற்காட்டில் பிராமணனுடைய பொருளைத் திருடின பாபம் பெரிது. நான் திருடின பொருளும் சிறந்தது, அப்பொருளுடையவனும் ஸர்வோத்தமன்; சிறந்தரத்னத்திலும் மேற்பட்டதான ஆத்மவஸ்துவை அபஹரித்தேன்; அந்த வஸ்துவோ ஸர்வோத்தமனான எம்பெருமானுடையது. ஆகையாலே 'இதற்கு மேற்பட்ட பாபமில்லை' என்னலாம்படியான கொடிய பாபத்திற்குக் கொள்கலமான களவைச் செய்தவனாயினேன்.

(அதாவது—ஈச்வர சேஷமான ஆத்மாவை ஸ்வசேஷமாகக் கொண்டிருந்தேன், அஹங்காரமமகாரவிசிஷ்டனாயிருந்தேன்—என்றபடி.)

படிறு செய்கையாவது—தீம்பு செய்கை; ஆஸ்திகராயிருப்பார் 'அப்பா! ஈச்வர சேஷமான ஆத்மவஸ்துவை அபஹரிக்கலாகாது' என்று உபதேசித்தாலும் 'ஈச்வரனாவதென்? அவனுக்கு சேஷமாயிருக்கையாவதென்?' என்று திரஸ்காரமாகச் சொல்லி அந்த ஆத்மாபஹாரத்தை வற்புறுத்திக்கொண்டேன் என்றவாறு.

கண்டவா திரிதருகையாவது—விதிநிஷேத சாஸ்த்ரங்களுக்குச் சிறிதும் கட்டுப்படாமல் 'மனமே அரசன், மதியே மந்திரி' என்று கொண்டு பசுக்களிலுங் கேடாகக் காரியங்கள் செய்கை. ஆக இப்படி நான் அநாதிகாலமாக ஆத்மாபஹாரம் முதலிய கொடிய பாவங்களைச் செய்து போந்தேனாகிலும் இன்று பகவத்க்ருபையைத் திண்ணிதாகப் பெற்று நல்லது கெட்டதுகளை ஆராய்ந்துணரக் கூடிய விவேகஞானம் பெற்று "இனி இவன் ஸம்ஸாரத்துக்கு ஆளாகமாட்டான், பரமபதத்துக்கு ஆளாகுமத்தனை" என்று ஞானிகள் நிச்சயிக்கும்படியாகச் சிறந்த நிலைமைக்கு வந்துவிட்டேன். இப்போது நானிருக்கிறபடியைப் பாருங்கள்; ஸ்ரீமந்நாராயண நாமத்தை அநுஸந்திக்கவேணுமென்று நினைக்கும்போதே எனது ஹ்ருதயம் நீர்ப்பண்டமாக உருகுகின்றது; அத்திருநாமத்தை வாய்விட்டுச் சொல்லத் தொடங்கினால் குரல் தழுதழுத்துப் போகிறது; ஆநந்தக் கண்ணீர் உடம்பெங்கும் முத்துமாலையிட்டாற்போலே பெருகுகின்றது. இப்படியாயிருந்துகொண்டு அஹோராத்ரமும் நான் நாராயண நாமந்தன்னையே கதறுபவனாயினேன் என்றாராயிற்று.

தேள்ளியேன்—தெளிவு பெற்றவன். சேல்கதி—பரமபதப்ராப்தி. (6)

எம்பிரானெந்தை என்னுடைச்சுற்றம்
எனக்கரசென்னுடைவாணாள்
அம்பினாலரக்கர் வெருக்கொள நெருக்கி
அவருயிர் செகுத்த எம் அண்ணல்
வம்புலாம் சோலை மாமதிள் தஞ்சை
மாமணிக்கோயிலே வணங்கி
நம்பிகாள்! உய்ய நான் கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (௬)

| | |
|---|---|
| நம்பிகாள் | பகவத்குணாநுபவத்தால் நிறைந்திருக்கின்ற பாகவதர்களே !, |
| எம் பிரான் | எமக்கு உபகாரகனும் |
| எந்தை | எமக்குத் தந்தையும் |
| என்னுடை சுற்றம் | எனக்கு ஸகலவித பந்துவும் |
| எனக்கு அரசு | என்னை ஆண்டவனும் |
| என்னுடை வாழ்நாள் | என்னுடைய ப்ராண பூதனும் |
| அரக்கர் வெருக்கொள | ராக்ஷஸர் அஞ்சும்படியாக |
| அம்பினால் | அம்புகளினால் |
| நெருக்கி | தகர்த்து |
| அவர் உயிர் செகுத்த எம் அண்ணல் | அவர்களது உயிரைமுடித்த அஸ்மத் ஸ்வாமியுமான ஸர்வேச்வரனுடைய |
| வம்பு உலாம் சோலை | பரிமளம் வீசுகின்ற சோலைகளையும் |
| மா மதிள் | பெரிய மதிள்களையும் உடைத்தான |
| தஞ்சை மா மணிக் கோயிலே வணங்கி | தஞ்சை மாமணிக் கோயிலையே ஸேவித்து |
| நான் உய்ய | (உங்களைப் போலே) நானும் உஜ்ஜீவிக்கும் படியாக |

நாராயணா என்னும் நாமம் கண்டு கொண்டேன்—.

* * *—[எம்பிரானெந்தை.] திருமந்திரத்தின் அர்த்தத்தை ஒருபடி அநுஸந்திப்பதாயிருக்கும் இப்பாட்டு. "మాతా పితా భ్రాతా నివాసశ్శరణం సుహృద్గతిర్నారాయణః" [மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:] என்று ஸுபாலோபநிஷத்திலே சொன்ன அர்த்தத்தை அநுஸந்திக்கிறார். எனக்குப் பல உபகாரங்கள் பண்ணினவனும், எனக்குத்தந்தையும், எனக்கு எல்லா உறவு முறையும், விரோதிகளைப் போக்கி என்னை ஆண்டவனும், என்னுடைய ஜீவித ஸர்வஸ்வமும், ஸங்கல்பத்தாலல்லாமல் சரமாரிபொழிந்து ராக்ஷஸவர்க்கங்களைக் கிழங்கெடுத்தவனுமான ஸர்வஸ்வாமி எழுந்தருளியிருக்கிற பரமபோக்யமான தஞ்சைமாமணிக்கோயிலைத் தொழுது" ஸர்வவித பந்துவும் அவனே" என்கிற அர்த்தத்துக்கு வாசகமான திருநாமத்தைக் காணப்பெற்றேன் என்றாராயிற்று.

என் தந்தை என்பது எந்தையென மருவிற்று. வாழ்நாள் என்பது வாணாளென மருவிற்று. வெருக்கொள = வெரு—அச்சம். கொள்ள என்பது கொள என்று தொக்கியிருக்கிறது; அச்சங்கொள்ள என்றதாயிற்று. செகுத்தல்—

அழித்தல். அண்ணல்—பெருமை பொருந்தியவன். 'உலாவும்' என்பது உலாம் என்று கிடக்கிறது. தஞ்சை மாமணிக்கோயில்—'தஞ்சாவூர்' என வழங்கிவருவது. .... .... ... ... (௬)

இற்பிறப்பறியீர் இவரவரென்னீர்
இன்னதோர் தன்மையென்றுணரீர்
கற்பகம் புலவர் களைகணென்றுலகில்
கண்டவா தொண்டரைப் பாடும்
சொற்பொருளாளீர் சொல்லுகேன்வம்மின்
சூழ்புனற் குடந்தையே தொழுமின்
நற்பொருள்காண்மின் பாடிநீருய்ம்மின்
நாராயணா வென்னும் நாமம். (எ)

- இல் பிறப்பு அறியீர் — இல்வாழ்க்கை நடத்துகிற படியையும் குடிப்பிறப்பையும் அறியாதவர்களாயும்
- இவர் அவர் என்னீர் — இப்போது ஸம்பந்நராயிருக்குமிவர்கள் முன்பு தரித்ராராயிருந்தவர்களென்றறியாதவர்களாயும்
- இன்னது ஓர் தன்மை என்று உணரீர் — 'இவர்களுடைய தன்மை இப்படிப்பட்டது' என்றறியாதவர்களாயும்,
- உலகில் தொண்டரை — உலகில் பிறர்க்கு இழிதொழில் செய்து ஜீவிக்கும் நீசர்களை
- கற்பகம் என்று — கல்பவ்ருக்ஷம்போல் ஸர்வஸ்வதானம் செய்பவரென்றும்
- புலவர் என்று — ஸர்வஜ்ஞரென்றும்
- களைகண் என்று — ரக்ஷகர் என்றும் (ஆகவிப்படி)
- கண்ட ஆ பாடும் — மனம்போனபடி (சிறப்பித்துக்கூறிக்) கவிபாடுகின்ற
- சொல் பொருள் ஆளீர் — சொல்லும் பொருளும் நன்கறிந்த மஹாகவிகளே!
- சொல்லுகேன் — உங்களுக்கு ஹிதஞ்சொல்லுகிறேன்;
- வம்மின் — நீசரைக் குறித்துக் கவிபாடுவதை விட்டு இப்படி வாருங்கள்;
- புனல் சூழ் குடந்தையே தொழுமின் — நீர் சூழ்ந்த திருக்குடந்தையை ஸேவியுங்கள்;
- நாராயணா என்னும் நாமம் பாடி நீர் உய்ம்மின் — நாராயண நாமத்தைப் பாடி நீங்கள் உஜ்ஜீவித்துப் போங்கள்;
- நல் பொருள் காண்மின் — உங்களுக்கு நான் உபதேசிக்கும் சிறந்த அர்த்தம் இதுவே காணுங்கள்.

[இற்பிறப்பு.]—நூல்களைக் கற்றுக் கவிபாடும் வல்லமை பெற்றவர்கள் உபயோகமற்ற க்ஷுத்ர மநுஷ்யர்களை வீணேசிறப்பித்துக்கூறிக் கவிபாடுவதுண்டே; அன்னவர்களை நோக்கி வெறுத்து, ஐயோ! நீங்கள் வாக்குப்படைத்ததற்கு இதுவோ ப்ரயோஜனம்; க்ருபணனைக் கல்பவ்ருக்ஷமென்பதும், நிரக்ஷரகுக்ஷியான மூடனை ப்ருஹஸ்பதியென்பதும், தெருத்திண்ணையில் தங்கவும் இடங்

தராமல் துரத்தித்தள்ளுமவனை ஸர்வரக்ஷகனென்பதும் ஆகவிப்படி பொய் யுரை கூறுவதேயோ நீங்கள் கற்ற கல்விக்குப் பயனாவது!; கவிபாடுகைக்குப் பாங்கான ஊரும் ஆறும் பேருமுடையனான பெருமானை நான் காட்டித்தருகி றேன், வாருங்கள்; திருக்குடந்தையாராவமுதனை வாயாரப்புகழ்ந்து உஜ்ஜீவித் துப் போங்கள்; இதுவே உங்களுக்கு நான் உபதேசிக்கும் சிறந்த அர்த்தம்— என்கிறார்.

இல் பிறப்பு அறியீர்=இல் அறியீர், பிறப்பு அறியீர் என்க. 'இல் அறி யீர்' என்றது இல்லறம் அறியீர் என்றபடி. இல்லறமாவது க்ருஹஸ்த தருமம். இழிவான அநுஷ்டான முடையராயிருந்தாலும் இழிவான குலத்திலேபிறந்த வர்களாயிருந்தாலும் அந்த இழி தொழிலையும் இழி பிறப்பையும் நீங்கள் அறி யாமல்தானே அவர்களை நல்லொழுக்கமுடையராகவும் நற்குலமுடையராகவும் வருணித்துக் கவிபாடிவிடுகிறீர்கள் என்பது கருத்து. இவர் அவரென்னீர்= இவர்—இப்போது கையில் கொஞ்சம் பணங்காசு உள்ளவர்களாகத் தென்படு கிற இவர்கள், அவர் என்னீர்— இதற்கு முன்பு கையுங் கபாலமுமாய்த் திரிந்த பிச்சைக்காரப்பயல்கள் என்று தெரிந்து கொள்ளாது பரம்பரையாகப்பெருஞ் செல்வர்களெனப் போற்றுகின்றீர்களே என்றவாறு. அன்றியே, இவரவர் என்று ஒரு வார்த்தைப்பாடாய் இன்னாரினையாரென்று தெரிந்து கொள்ளமாட்டீர்க ளென்றபடியுமாம்.

இன்னதோர் தன்மை யென்றுணரீர்—இவர்களுடைய தன்மை இவ்வளவு தான் என்று தெரிந்து கொள்ளாமல் அபாரசக்தி யுடையவர்களாகக் கொண்டு கவிபாடிவிடுகிறீர்கள் என்றவாறு. அறியீர், என்னீர், உணரீர்—முன்னிலை யெதிர் மறைப் பன்மை வினைமுற்றுகள். கற்பகம்—நினைத்ததை யெல்லாம் அளிக்க வல்ல தேவலோகத்து வ்ருக்ஷம். உலகில் தொண்டரைக் கற்பகமென்றும் புலவ ரென்றும் களைகணென்றும் கண்டபடி பாடித்திரிகிற கவிகளே! என்று விளித்த படி. "புலவர்களைகண்" என்று சேர்த்து யோஜித்து, புலவர்களுக்கு ரக்ஷகரா யிருப்பவர்களென்று சொல்லிக் கவி பாடுகிறவர்களே! என்பதாகவும் உரைக்க லாம். களைகண்—ஆதாரம். தொண்டர்—சேகவத் தொழில் செய்பவர்கள்.

சொல் பொருள் ஆளீர்—சொல்லின்பமும் பொருளின்பமும் இல்லாமல் கவிபாடுகிறவர்களாயிருந்தால் கவலையே யில்லை; புன்சொற்களாலே எந்தப் புல் லியரைப் போற்றினாலும் கவலையில்லை; சொல்நோக்கும் பொருள்நோக்கும் சிறப்புறக் கவிபாட வல்ல நீங்கள் உங்களது அருமந்த சொற்களை இழிபிறப் பாளர்மேல் செலுத்தி வாக்கை எச்சிலாக்கிக் கொள்ளுகிறீர்களே என வருந்து கின்றேன் என்ற கருத்துக் காண்க. ... ... ... ... (எ)

கற்றிலேன் கலைகள் ஐம்புலன் கருதும்
　　கருத்துளே திருத்தினேன் மனத்தைப்
பெற்றிலேன் அதனல் பேதையேன் நன்மை
　　பெருநிலத்தாருயிர்க்கெல்லாம்
செற்றமேவேண்டித் திரிதருவேன் தவிர்ந்தேன்
　　செல்கதிக்குய்யுமாறெண்ணி
நற்றுணையாகப் பற்றினேனடியேன்
　　நாராயணு வென்னும் நாமம். (அ)

கலைகள் — சாஸ்த்ரங்களை
கற்றிலேன் — கற்றறிந்தவனல்லேன்;
ஐம்புலன் கருதும் கருத்துள் — பஞ்சேந்திரியங்கள் விரும்புகின்ற விஷயங்களிலே
மனத்தை திருத்தினேன் — நெஞ்சைச் செலுத்திக் கிடந்தேன்;
அதனல் — இப்படியிருந்ததனலே
பேதையேன் — அவிவேகியான நான்
நன்மை பெற்றிலேன் — ஒரு நன்மையும் பெருதவனுயினேன்;
பெரு நிலத்து ஆர் — பெரிய இப்பூமியிலேயுள்ள
உயிர்க்கு எல்லாம் — பிராணிகளுக்கு எல்லாம்
செற்றமே வேண்டி — தீங்கு செய்வதையே புருஷார்த்தமாகக்கொண்டு
திரிதருவேன் — (அதுவே போதுபோக்காகத் திரிந்துகொண்டிருந்தேன்,
(இப்படி நெடுங்காலம் கெட்டுப் போனேனுகிலும், இன்று பகவத் கடாக்ஷத்தாலே)
தவிர்ந்தேன் — இக்கொடுமைகளெல்லாம் தவிரப்பெற்றேன்;
அடியேன் — தாஸனுகப் பெற்ற நான்
செல் கதிக்கு உய்யும் ஆறு எண்ணி — செல்ல வேண்டிய நல் வழியை நண்ணி உஜ்ஜீவிக்கும்படியைச் சிந்தித்து
நாராயணு என்னும் நாமம் — நாராயண நாமத்தை
நல் துணை ஆக பற்றினேன் — நல்ல ஸஹாயமாகக் கைக்கொண்டேன்.

* * *—[கற்றிலேன் கலைகள்.] ஓர் ஆசிரியன் திருவடிகளிலே சென்று பணிந்து குனிந்து கேட்டவனல்லேனுகையாலே ஒரு சாஸ்த்ர ஞானமும் எனக்கில்லை; நெஞ்சை ஒரு நொடிப்பொழுதாகிலும் நல்விஷயத்திலே செலுத்தினவனல்லேன்; செவி வாய் கண் மூக்கு உடலென்னுமைம்புலன்கள் விரும்புகின்ற சப்தாதி விஷயங்களிலேயே நெஞ்சைச் செலுத்திப் போந்தவனுதலால் அறிவு கேடனுய் ஹிதசிந்தை பண்ணப்பெற்றிலேன்; எனக்கொரு நன்மை ஸம்பாதியாதவளவேயன்றி உலகத்திலுள்ள பிராணிகளை யெல்லாம் ஹிம்ஸிக்கும் வழியைச் சிந்தித்தும் திரிந்தேன்; எல்லாரையும் ஹிம்ஸித்து நான் வயிறு வளர்க்கும் வழியையே நோக்கினேன். இப்படி நான் இருந்தது நேற்றுவரையில்; இன்று இந்த நிலைமைகளெல்லாம் தவிர்ந்து நல்வீடு சேர்ந்து உஜ்ஜீவிக்க வேண்டிய வழியைச் சிந்தித்து, இக்கரையில் நின்றும் அக்கரையிலே கொண்டு தள்ள வல்லதொரு திருநாமத்தைத் துணையாகப் பற்றினேன். ... ... (அ)

குலந்தரும் செல்வம் தந்திடும்
அடியார் படுதுயராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள் விசும்பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும்
பெற்றதாயினுமாயின செய்யும்
நலந்தருஞ்சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும் நாமம். (௯)

நாராயணா என்னும் நாமம் — நாராயண நாமமானது (தன்னை அநுஸந்திக்குமவர்கட்கு)
குலம் தரும் — உயர்ந்த குலத்தைக் கொடுக்கும்;
செல்வம் தந்திடும் — ஐச்வரியத்தை அளிக்கும்;
அடியார் படுதுயர் ஆயின எல்லாம் — அடியவர்கள் அனுபவிக்கிற துக்கமென்று பேர்பெற்றவை யெல்லாவற்றையும்
நிலம் தரம் செய்யும் — தரை மட்டமாக்கிவிடும்;
நீள் விசும்பு அருளும் — பரமபதத்தைக் கொடுக்கும்;
அருளொடு — எம்பெருமானுடைய கிருபையையும்
பெரு நிலம் — கைங்கரியமாகிற மஹாபதவியையும்
அளிக்கும் — உண்டாக்கும்;
வலம் தரும் — (பகவதநுபவத்துக்குப் பாங்கான) சக்தியைக் கொடுக்கும்;
மற்றும் — இன்னமும் வேண்டிய நன்மைகளை யெல்லாம்
தந்திடும் — செய்துகொடுக்கும்;
பெற்ற தாயினும் — பெற்று வளர்க்கும் தாயைக் காட்டிலும்
ஆயின செய்யும் — ஹிதங்களைச் செய்து கொடுக்கும்; (ஆக இப்படி)
நலம் தரும் சொல்லை — வேண்டிய நன்மைகளைத் தருமதான நாராயண நாமத்தை
நான் கண்டு கொண்டேன் — அடியேன் லபிக்கப் பெற்றேன்.

* * *—[குலந்தரும்] "நான் கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்" என்று பலகால் அருளிச் செய்கின்ற ஆழ்வாரை நோக்கிச் சிலர் 'நீர் ஆதரித்துப் போருகிற இத்திருநாமம் என்ன பலனைத் தரக்கூடியது?' என்று கேட்க, இது தரமாட்டாத பலனே உலகில் இல்லை யென்கிறார்.

"தொண்டக்குலத்திலுள்ளீர்! வந்தடிதொழுது ஆயிரநாமஞ் சொல்லிப் பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்மினே" என்றபடி எம்பெருமானுடையவையான விச்வம் விஷ்ணு: வஷட்கார: இத்யாதி திருநாமங்களைச் சொன்னாலே பழைய இழிகுலம் நீங்கிப் புதியதோர் சிறந்த குலம் உண்டாகுமென்றால், நாராயணா வென்னும் நாமம் நற்குலத்தைத் தருமென்பதில் என்ன ஸந்தேஹம்? இத்தால்-ஒருவன் நற்குலமுடையோனென்பதற்கு பகவத் ஸம்பந்தம் காரணமே யொழிய பிராமண யோனிப் பிறப்பு முதலியன காரணமல்ல என்றதாயிற்று. இங்கே உரைக்கவேண்டுமவற்றையெல்லாம் ஸம்ப்ரதாய ஸித்தாஞ்ஜனத்திலே விரித்துரைத்தோம்.

**செல்வம் தந்திடும்** = ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியைத் தருமென்றபடி. இலங்கைச் செல்வமனைத்தையும் விட்டிட்டுப் புகலற்று வானத்திலே வந்து நின்ற விபீஷணாழ்வானை "𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌗𑌤𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍" [அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்] என்றார் வால்மீகிமுனிவர். அப்போது அவ்விபீஷணரிடத்து இருந்த ஸ்ரீயாவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம். இராமபிரான்பின்னே காட்டுக்குப் புறப்பட்ட இளையபெருமாள் "𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍋 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌃" [லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:] எனப்பட்டார்; அப்போது லக்ஷ்மணனுக்கிருந்த லக்ஷ்மியாவது ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியேயாம். முதலையின் வாயிலே அகப்பட்டுத்துடியாநின்ற கஜேந்திராழ்வான் "𑌸 𑌤𑍁 𑌨𑌾𑌗𑌵𑌰𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍" [ஸது நாகவர: ஸ்ரீமாந்] என்னப்பட்டான்; அப்போது கஜேந்திராழ்வானுக்கிருந்த ஸ்ரீயாவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம்.

**செல்வம்** என்பதற்கு இங்ஙனே பொருள் சொல்லுகையல்லாமல், உலகத்தார் புருஷார்த்தமாக நினைக்கிற ஐச்வர்யத்தையே அர்த்தமாகச் சொல்வதுமுண்டு. சிறந்த ஐச்வரியத்தைத் தருமென்கை. "நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான் றன்னையே தான் வேண்டுஞ் செல்வம்" என்ற பெருமாள் திருமொழிப் பாசுரங்காண்க.

**அடியார் படுதுயராயின வெல்லாம் நிலந்தரஞ் செய்யும்**—ப்ராயச்சித்தங்களாலே தொலைந்து போகக்கூடிய பாபங்கள் பலவுண்டு; அவைபல்லாமல் கட்டாயமாக அநுபவித்தே தீரவேண்டிய பாவங்களும் பலவுண்டு; அவற்றை இங்கே **படுதுயர்** என்கிறார்; படுதல்—அநுபவித்தல்; அநுபவித்தே தீரவேண்டிய துயர் என்றவாறு. அப்படிப்பட்ட துயரங்கள் எத்தனையிருந்தாலும் அடியவர் திறத்தில் அவை ஒன்றுமில்லாமே போம். **துயராயின எல்லாம்** = துயரென்று பேர்பெற்ற எல்லாவற்றையும்; **நிலம்தரம் செய்யும்** = தரைமட்டமாக ஆக்கிவிடும்; சூந்யமாக்கிவிடும் என்கை. மற்றொருவகையாகவும் பொருள் கூறலாம்; அதாவது—**தரணம்** என்கிற வடசொல் கடைக்குறைப்பட்டுத் தரமென்று கிடப்பதாகக் கொண்டு [தரணமாவது விலகிப்போதல்] துயர்களை இடம்விட்டு விலகிப்போம்படி செய்யும் என்கை. "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ, கானோ ஒருங்கிற்றுங் கண்டிலமால்" [பெரிய திருவந்தாதி—] என்று போனவிடம் தெரியாதபடி பறந்தோடிப் போய்விடுமென்றவாறு.

**நீள்விசும்பருளும்** = துயரங்களைப் போக்குகை மாத்திரமல்ல; ஒப்பற்ற ஆநந்தமயமான ஸ்தானத்தையும் [மோக்ஷபதவியையும்] தருமென்கை.

**அருளொடு பெருநிலமளிக்கும்** = அருளையும் பெருநிலத்தையும் அளிக்கும் என்கை. அருளையளிக்கையாவது—எம்பெருமானுடைய கிருபைக்கு விஷயமாக்குகை. இனி, பெருநிலமளிக்கையாவதென்? கீழே சொல்லப்பட்ட நீள் விசும்பென்ற பரமபதத்திற் காட்டிலும் வேறுபட்டவொரு பெருநிலமுண்டோ? என்னில்; பரமபதஞ்சென்ற பின்பும் அங்கே குணாநுபவம் பண்ணுகையென்றும் கைங்கரியம் செய்கையென்றும் இரண்டு படிகள் உண்டே; அவற்றுள் கைங்கரியஞ் செய்யப் பெறுகையைப் பெருநிலமென்கிறது இங்கு.

வலம் தரும் = ಬಲಮ್ [பலம்] என்ற வட சொல் வலமெனத்திரியும்; பலமாவது சக்தி; நித்யஸூரிகளைப் போல இடைவிடாது பகவதநுபவம் பண்ணுகைக்குப் பாங்கான வலிமையை உண்டாக்கும் என்றபடி. "அருளொடு பெருநிலமளிக்கும் வலந்தரும்" என்று சேர்த்து யோஜிப்பதுமுண்டு; அப்போது அளிக்கும் என்றவிது வினைமுற்று அல்ல; வலத்துக்கு அடைமொழி. கருத்து யாதெனில், நாராயணாவென்னும் நாமத்தை யார் சொல்லுகிறார்களோ அவர்கள் தாங்கள் பரமபதத்தைப்பெறுகிற மாத்திரமல்லாமல் பிறர்க்கும் அருள் கூர்ந்து பரமபதமளிக்க வல்லாராம்படியான சக்தியைத் தருமென்பதாம்.

மற்றும் தந்திடும் = இவனுக்கு ஹிதமாய் இவனறியாதவற்றையும் தானே கொடுக்குமென்கை.

பெற்றதாயினும் ஆயினசெய்யும் = பல சொல்லுவதேன்? பத்து மாதஞ் சுமந்து மெய் நொந்து பெற்ற தாயானவள் செய்யும் நன்மைகளிற் காட்டிலும் அதிகமாகச் செய்யுமென்கிறார். ஆக இப்பாட்டால், "నమోనారాయణాయేతిమంత్రస్సర్వార్థసాధకః" [நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்த ஸாதகः] என்றதை விவரித்தாராயிற்று. (௯)

மஞ்சுலாஞ்சோலை வண்டறைமாநீர்
மங்கையார் வாள் கலிகன்றி
செஞ்சொலாலெடுத்த தெய்வநன்மாலை
இவைகொண்டு சிக்கெனத் தொண்டீர்!
துஞ்சும்போதழைமின் துயர்வரில்நினைமின்
துயரிலீர் சொல்லிலும் நன்றாம்
நஞ்சுதான்கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணா வென்னும் நாமம். (௰)

மஞ்சு உலாம் சோலை — மேகங்கள் உலாவுகின்ற சோலைகளையுடையதும்

வண்டு அறை மா நீர் — வண்டுகள் படிந்து ஒலி செய்கின்ற சிறந்த தீர்த்தத்தை யுடையதுமான

மங்கையார் — திருமங்கையென்னும் நாட்டிலே உள்ளவர்கட்குத் தலைவரும்

வாள் — வாளை உடையவருமான

கலிகன்றி — திருமங்கையாழ்வார்

செம் சொலால் எடுத்த — செவ்விய சொற்களைக்கொண்டு அருளிச்செய்த

தெய்வம் — திவ்யமான

நல் மாலை இவை — இந்த நல்ல சொல்மாலையை

சிக்கென கொண்டு — நாவிலே த்ருடமாகக் கொண்டு

தொண்டீர் — பாகவதர்காள்!

துஞ்சும் போது அழைமின் — சரீரம் முடியுங் காலத்தில் இத்திருநாமங்களைச் சொல்லுங்கோள்;

துயர் வரில் நினைமின் — மற்றும் துக்கங்களுண்டான போதும் இவற்றையே நினையுங்கோள்;

துயர் இலீர் சொல்லிலும் நன்று ஆம் — துக்கமொன்றுமில்லாதவர்கள் இவற்றை அநுஸந்தித்தாலும் நன்மையாகும்;

நாராயணா என்னும் நாமம் — நாராயண நாமமானது

நம்முடை வினைக்கு — நமது பாபங்களை முடிப்பதற்கு

நஞ்சு தான் கண்டீர் — விஷமேயாமென்பது [illegible]

* * *—[மஞ்சுலாஞ்சோலை.] இது திருநாமப்பாட்டு எனப்படும். கலியன் சொன்ன இப்பாசுரங்கள் வழியாக நாராயணா வென்னும் நாமத்தை எப்போதும் அநுஸந்தியுங்கள்; பாவங்களெல்லாம் பறந்தோடிப்போம்—என்று தலைக்கட்டுகிறார்.

மஞ்சுலாஞ்சோலை யென்பதும் வண்டறைமாநீர் என்பதும் மங்கைக்கு அடைமொழிகள். மேகங்கள் படிந்து உலாவும்படியான உயர்த்தியையுடைய சோலைகளையுடைத்தாய், வண்டுகள் மொய்க்கின்ற நீர்ப்பெருக்கையுமுடைத்தான மங்கை என்கை. அன்றியே, மஞ்சுலாஞ்சோலைகளிலே உள்ள வண்டுகள் வந்து மொய்க்கின்ற நீர்ப்பெருக்கையுடைய மங்கை என்னவுமாம். வண்டறைமாநீர் எனவே தீர்த்தங்கள் மதுவோடுகூடிப் பெருகுமென்க. மதுவில் நசையாலேயாம் வண்டுகள் வந்து மொய்ப்பது. *"ஈக்கள் வண்டோடு மொய்ப்ப வரம்பிகந்து, ஊக்கமேமிகுந்து உள்தெளிவின்றியே, தேக்கெறிந்து வருதலிற் றீம்புனல், வாக்கு தேனுகர் மாக்களை மானுமே." என்றதை நோக்குக.

நீர்வளம் பொருந்திய திருமங்கைநாட்டிலுள்ளார்க்குத் தலைவராய் வாளை நிரூபகமாகக்கொண்டவரான கலியன் வேதார்த்தங்கள் எல்லார்க்கும் தெரியும்படி செவ்விய சொல்லாலே அருளிச் செய்ததாய், திவ்யமான மாலைபோலே பரமபோக்யமாக அநுபவிக்கத் தக்கதான இத்திருமொழியைக் கொண்டு, பகவத் பக்தராயுள்ளவர்களே! சரீரம் முடியும்போது யமபடர்களால் நேரிடக் கூடிய துன்பங்களுக்குப் பரிஹாரமாகவும், மற்றும் தாபத்ரயங்கள் வந்து மேலிடும்போது அவற்றுக்குப் பரிஹாரமாகவும் இத்திருநாமத்தையே வாய் வெருவியிருக்கக் கடவீர்கள்: துயரங்களுக்குப் பரிஹாரமாகவேதான் இதனைச் சொல்ல வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; ஒரு துயரும் இல்லாவிடினும் ஸ்வயம்ப்ரயோஜநமாக அநுஸந்திக்கத்தகும். † "எனக்கென்றும் தேனும் பாலு மமுதுமாய திருமால் திருநாமம்—நமோ நாராயணமே" என்று நமக்கு அமுதாகிய இதுதானே கொடுவினைகட்குக் கொடிய விஷமாயிருக்கும்; ஆகையாலே, இத்திருமந்திரந்தவிர மற்றதெல்லாம் ஸம்ஸாரத்திலே வேர் பற்றுகைக்கு உறுப்பாயிருக்குமென்றும், இஃதொன்றுமே ஸம்ஸாரத்தை வேரறுக்கவல்லது என்றும் தெளிந்துகொண்டு எப்போதும் இதனை அநுஸந்திப்பதிலேயே ஊன்றியிருங்கள் என்று அன்பர்க்கு உபதேசித்துத் தலைக்கட்டினாராயிற்று. ... இத்திருமொழி—எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம் (௰)

அடிவரவு:—வாடினேன் ஆவியே சேமம் வென்றி கள்வனேன் எம்பிரான் இற்பிறப்பு கற்றிலேன் குலம் மஞ்சு வாலி.

முதல் திருமொழி உரை முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

* கம்பராமாயண—ஆற்றுப்படலம். (உக.)

† பெரிய திருமொழி 6-10-6



ஸ்ரீ:

## முதற்பத்து—இரண்டாந்திருமொழி.

# வாலிமாவலத்து.



அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் திருமந்திரத்தின் சிறப்பை அநுஸந்தித்த இவ்வாழ்வார், இனி அத்திருமந்திரத்தின் அர்த்தத்துக்கு எல்லைநிலமான திவ்ய தேசங்களிலேபுக்கு அநுபவிக்க இழிகிறார். எம்பெருமான் ஸர்வஸ்வாமி என்பதும் ஸர்வஸுலபன் என்பதும் திருமந்திரத்தின் தேர்ந்த பொருள். அடியவர்கள் இவ்வுடம்போடே அடிமைசெய்து மகிழும்படிக்குப் பாங்காக எம்பெருமான் பலவிடங்களிலும் கோயில்கொண்டு தன்னுடைய ஸ்வாமித்வத்தையும் ஸௌலப்யத்தையும் விளங்கக் காட்டிக்கொண்டு நிற்கிறுகையாலே திவ்யதேசங்கள் திருமந்திரப்பொருளுக்கு எல்லைநிலமாம். அப்படிப்பட்ட திவ்யதேசங்களை மற்றுள்ள ஆழ்வார்களும் அநுபவித்தார்களெனினும், திவ்ய தேசாநுபவமே யாத்திரையாகத் திரிந்தவர் இவ்வாழ்வாரொருவரேயாவர். தமிழ்ப்பாஷை நடமாடுமிடங்களுக்கு எல்லையான திருவேங்கடத்தளவிலே நின்றுவிடாமல், அவ்வருகே இமயமலைச் சார்பிலுள்ள திவ்ய தேசங்களையும், மற்றும் சோழநாடு, பாண்டிநாடு, தொண்டைநாடு, நடுநாடு, மலைநாடுகளிலுள்ள திவ்ய தேசங்களையும் ஒருங்கே அநுபவிக்க ஆவல்கொண்டு இமயமலையிலுள்ள திருப்பிரிதி யென்னுந் திவ்யதேசத்தை முந்துற முன்னம் அநுபவிக்கிறார்.

இத்திருப்பதியின் திருநாமம் பிருதி என்றும், பிரிதி என்றும் வழங்கப்படும். திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார் நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியில் இத்தலத்தைப்பற்றிப் பாடும்பாட்டில், "பொருப்பிருதிக்குங் கிடந்தாற் போற் றுணித்து வீழ்த்தான், திருப்பிருதிக் கென்னெஞ்சே செல்" என்றது காண்க. இத்தலம் நந்தப்ரயாகை என வழங்கப்படுமென்பர். (ஆல்மோராவுக்கு கநடு-மைலில் உள்ளது.) ... ... ... ... *

(அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.)

வாலிமாவலத் தொருவன துடல்கெட
வரிசிலை வளைவித்து * அன்று
ஏலநாறு தண்தடம்பொழி லிடம்பெற
இருந்த நலிமயத்துள் *
ஆலிமாமுகி லதிர்தர அருவரை
அகடுற முகடேறி *
பீலிமாமயில் நடஞ்செயும் தடஞ்சுனைப்
பிரிதி சென்றடை நெஞ்சே! (க)

பதவுரை.

| | |
|---|---|
| நெஞ்சே | ஓ மனமே!, |
| அன்று | முன்பு ஸ்ரீராமாவதாரத்தில் |
| வாலி | வாலி யென்னும் பெயருடையவனை |
| மா வலத்து ஒருவனது | மஹா பலசாலியான ஒரு வாநரராஜனுடைய |
| உடல் கெட | சரீரம் சிதறும்படியாக |
| வரி சிலை வளைவித்து | அழகிய வில்லை வளையச்செய்து |
| | (அந்த வாலியை ஒழித்த பெருமான்) |
| ஏலம் நாறு | பரிமளம் வீசுகின்ற |
| தண் தடம் பொழில் | குளிர்ந்து விசாலமான சோலைகளிலே |
| இடம் பெற | பாங்காக |
| இருந்த | எழுந்தருளியிருக்கப்பெற்ற |
| நல் இமயத்துள் | நல்ல இமயமலையினுள் |
| ஆலி மா முகில் அதிர்தர | சிறு துளியையுடைய காளமேகங்கள் அதிராநிற்க |
| பீலி மா மயில் | தோகைகளையுடைய பெரிய மயில்களானவை |
| அரு வரை முகடு | ஏறமுடியாதபடி உன்னதமான மலையினுச்சியிலே |
| அகடு உற ஏறி | கீழ்வயிறு தழுவும் படியாகச் சென்று ஏறி |
| நடம் செயும் | கூத்தாடா நிற்கு மிடமாயும் |
| தடம் சுனை | பரந்த சுனைகளையுடைய தாயுமிருக்கிற |
| பிரிதி | திருப்பிரிதி யென்கிற திவ்ய தேசத்தை |
| சென்று அடை | சென்று சேரக்கடவை. |

[**வாலிமாவலத்து.**] வாலியை வதை செய்தருளின பெருமான் இனிதாக எழுந்தருளியிருக்குமிடமான இமயமலையினுள் பரமபோக்யமாக அமைந்துள்ள திருப்பிரிதியைச் சென்று சேருமாறு நெஞ்சை நோக்கிக் கூறுகின்றார்.

'மாவலத்தொருவனை வாலியினது உடல்கெட' என்று கூட்டிக்கொள்ளலாம். **மாவலத்தோருவன்**—மஹாபலசாலிகளுள் அத்விதீயன் என்கை. வெள்ளிமலை பறித்த பெருவீரனை இராவணனையும் வாலிலே கொண்டு திரிந்தவனிறே வாலி. அன்னவனுடைய உடல் அழியுமாறு வில்லை வளைத்தவன் இராமன். ஸுக்ரீவன் இராமபிரானோடு ஸ்நேஹஞ் செய்துகொண்டு அவனது நியமனத்தினால் கிஷ்கிந்தைக்குச் சென்று வீரநாதஞ்செய்ய, அதைக் கேட்டு வாலி பொறுக்கமாட்டாதவனாய் வெளிக்கிளம்பிவந்து ஸுக்ரீவனோடு யுத்தஞ் செய்யத் தொடங்க, அப்போது இராமன் அவ்விருவரில் இன்னான் ஸுக்ரீவன், இன்னான் வாலி யென்று வாசிகண்டறியாமையால் அம்பு எய்யாதொழியவே, ஸுக்ரீவன் வாலியிடத்துப் பராஜயப்பட்டு வேதனை பொறுக்கமாட்டாமல் ரிச்யமூக பர்வதத்துக்கே மீண்டு ஓடிவந்துசேர, இராமன் அம்பு எய்யாத காரணங்கூறி 'இப்போது உனக்கு ஓர் அடையாளமிடுகிறேன்; மறுபடியும் வாலியை யுத்தத்துக்கு அழை' என்று சொல்லி அவன் கழுத்தில் ஒரு பூமாலையைச் சுற்றிக் கிஷ்கிந்தைக்குப் போகவிட, ஸுக்ரீவன் சென்று முன்போலவே வீரநாதஞ்செய்ய, அதைக்கேட்டு வாலி போர்க்குப் புறப்பட அப்போது அவன் மனைவியாகிய தாரை 'ஓ பிராணநாதா! சற்று முன்பு

அடிபட்டு ஓடினவன் திரும்பி இப்போதே சண்டைக்கு அழைக்கின்றமையால் இது வெறுமனன்று; ஏதோ ஒரு பெருத்த ஸஹாயத்தை அண்டைகொண்டு வந்திருக்கவேணும்; நீ இப்போது திடீரென்று போர்க்குப்போவது தகுதியல்ல' என்று சொல்லித் தடுத்தவளவிலும் அவள் வார்த்தையைச் செவியிலுங் கொள்ளாமல் சடக்கெனப் புறப்பட்டுவந்து ஸுக்ரீவனுடன் பிணங்கினன். அந்த வாலிஸுக்ரீவர்களிருவரும் ஒருவர்க்கொருவர் கீழேதள்ளுவது மேலே பாய்வது கட்டிக்கொண்டு நெருக்குவது கடிப்பது குத்துவது அடிப்பதாய் வலிதான யுத்தஞ் செய்யுங்காலத்தில், இராகவன் ஒரு மரத்தடியில் மறைந்திருந்து வாலியைப் பாணத்தினலடித்தார். அந்த பாணத்தினல் வாலி மார்பு பிளந்து கீழே விழுந்துவிட்டான். இதைத் தாரை கேள்விப்பட்டு அங்கதனென்னும் புத்திரனுடன்கூட ஓடிவந்து வாலியைத்தழுவிக்கொண்டு பலவாறு புலம்பி, பிறகு எதிரில் நின்ற இராமனைப் பார்த்து அவருடைய மஹாபுருஷ லக்ஷணங்களைக்கண்டு இவர் ஸாக்ஷாத் பரமாத்மாவென்று நிச்சயித்துத் துதித்தனள். வாலியும் இராமனேடு வாதாடிப் பல ஸமாதானங்கள் சொல்லக் கேட்டு நன்மதிபெற்றுக் கைகூப்பி இராகவனைத் தொழுது 'ஸுக்ரீவனைப் போல் அங்கதனையும் நோக்கிக்கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்துவிட்டு ப்ராணனையும் விட்டான்.

இராமன் வாலியைக் கொன்றவிதனில் ஸாமர்யர் சில ஆக்ஷேபங்கள் கூறுவதுண்டு; அவையும் அவற்றுக்கு ஸமாதானங்களும் வருமாறு:—இராவணவதத்திற்கு உதவி தேடுகிற இராமன் இராவணனை எளிதில் வெல்லவல்ல வாலியைக் கொன்றுவிட்டு, பயங்கொள்ளியான ஸுக்ரீவனை உதவிசெய்துகொண்டது என்ன புத்திசாலித்தனம்! என்று சிலர் சங்கிப்பர்கள்; கேண்மின்:—வாலி முன்னமே இராவணனுடன் அக்நிஸாக்ஷிகமாக ஸ்நேஹங்கொண்டிருந்தமைபற்றி, அவனைத் தான் உதவி கொண்டால் இராவணன் முதலிய துஷ்டர்களைத் தொலைக்க வகையில்லாமையால் இராமன் ஸுக்ரீவனை நண்பனுகக் கொண்டு அவன் வேண்டுகோளின்படி வாலியை வதைத்திட்டனன். இனிச் செய்யவேண்டிய ராவண ஸம்ஹாரமாகிற தேவகாரியத்திற்கு இவ்வாலிவதம் அங்கமெனக் கருதத்தக்கது; எவ்வகைப் பெருந்தீங்கு செய்திருந்தாலும் சரணமடைந்தால் அவர்களைப் பாதுகாப்பதென்ற சிறந்த தருமத்தை மேற்கொண்டு நடப்பவனான இராமபிரான், அத்தருமத்தை முழுதும்விட்டு ஸுக்ரீவன் சரணமடைந்த பின்னரும் அவனை மிக வருந்திக் கொல்லத்தொடங்கி அந்தத் தருமத்திற்கு எதிரானமைபற்றி வாலியைக் கொல்லலாயிற்று. அன்றியும், பிறர்மனைவியைக் காதலித்துக் கவர்தலும், தம்பியினிடம் பகைபாராட்டுதலும், வலியழிந்து புறங்கொடுத்து ஓடுகின்றவனைத் துரத்தித்துரத்திக் கொல்லத் தொடங்குதலும் முதலிய தீச்செயல்கள் வாலியினிடம் இருந்ததனுலும் பரம தார்மிகனுன இராமன் வாலியை அழிக்கலானுன். இராமபிரான்ருன் ஏகபத்நீவிரதமுடையு

வனும், தம்பியரைத் தன்னுயிர்போலக் கொள்பவனும், வலியிழந்த பகைவனை ‘இன்று போய் நாளை வா’ என்று அன்போடு சொல்லிவிடுத்தருளும் மஹா வீரனுவான்.

இஃதெல்லாமிருக்கட்டும்; மறைந்து நின்று அம்பு எய்தது கூடுமோ? எனின்; இது அரசர் கொடிய விலங்குகளைப் பதுங்கிநின்று அழிக்கும் வேட்டை முறைமையாலென்பர்.

“ యద్వా మృగం మృగయువన్మృగయాపథేన ఛన్నో జఘన్థ నతు శత్రువధాభిముఖ్యాత్ ।
తద్యుక్తమేవ తవ రాఘవవంశజస్య తిర్యక్షు నైవహి విపశ్చితనోపచారః.”

என்று அதிமாநுஷஸ்தவத்தில் ஆழ்வானருளிச்செய்ததுங் காண்க.

வேறுவகையான ஸமாதானங்களுமுள்ளன;—முதலில் சரணமடைந்த ஸுக்ரீவனுக்கு அபயமளித்து வாலியைக் கொல்வதாக வாக்குதத்தஞ்செய்து விட்ட பெருமாள் பின்னர் வாலியினெதிரில் நின்று போர்செய்தால் இப்பெருமானது திறத்தைக்கண்டு அஞ்சி வாலியும் அவனைச் சரணமடைந்திடுவனாயின் தஞ்சமடைந்தவனைக் கொலைசெய்யக்கூடாமைபற்றி அவனைக் கொல்லாதுவிட நேர்ந்தால் முன்னைய வாக்குத் தவறிவிடுமேயென்ற நோக்கம் முக்கிய காரணமாம். அன்றியும், எதிர்ந்தார் வலிமையிற் பாதி தன்னிடம் வந்து கூடும்படி வாலி சிவபிரானிடத்துப் பெற்றிருக்கின்ற வரம் பழுதுபடாமலிருக்குமாறு மறைந்து நின்று அம்பெய்தனன் என்றலுமொன்று; அவரவர்கள் தேவதாந்தரங்களிடத்துப் பெற்ற வரங்கள் பழுதுபடாதபடியன்றோ எம்பெருமான் காரியஞ் செய்வது. இங்ஙனம் பல காரணங்களுள. இங்கு விரிப்பிற் பெருகும். ஸ்ரீராமாயணம் அதன் வியாக்கியானங்கள் வல்லார்வாய்க் கேட்டுணர்க. கடவுளரது நியாயம் நுட்பமானதும் அறிதற்கு அரியதுமாதலால் அது மனிதரது நியாயத்தோடு ஒப்புநோக்கி ஆராய்தற்கு உரியதன்றென்பது உணரத்தக்கது. நிற்க.

அன்று வாலியைக் கொன்றவன் இன்று நீரும்நிழலும் மரமும் மணமுங் கண்டு உகந்திருந்து நித்யஸம்ஸாரிகளுக்கெல்லாம் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறவிடமான ஹிமவானில்.—இந்த ஏழாம்வேற்றுமை நான்காமடியில் பிரிதியில் அந்வயிக்கும். இமயமலையின்கணுள்ள பிரிதியைச் சென்று அடை என்றபடி.

பின்னடிகளில் பிரிதியை வருணிக்கின்றார். மேலுள்ள பாசுரங்களிலும் இவ்வாறே காண்க. மேகங்களானவை சிறுதுளிகளைப் பெய்துகொண்டு அதிரா நிற்க அம்முழக்கத்தைக் கேட்ட மயில்களானவை மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாக மலையினுச்சிமீது ஏறிக்கொண்டு கூத்தாடுகின்றனவாம்; அப்படிப்பட்டதும் பெரிய சுனைகளையுடையதுமான பிரிதியைச் சென்று சேர் என்று தம் திருவுள்ளத்துக்கு உரைத்தாராயிற்று.

ஆலி என்று சிறுதுளிக்குப் பெயர். "மாமுகில் அதிர்தர மாமயில் நடஞ் செயும்" என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செயல்;—"வாத்யங்கள் வாய்த்தால் கூத்தாடுவாருடம்பு பேசாதிராதிறே. காலுக்கீடாக வாய்த்த வாறே ஆடுவாரைப் போலே அவை முழங்க இவை ஆடாநிற்குமாயிற்று."

அருவரை அகடுறே முகடேறி=கீழ்வயிறுனது மலையிலே தழுவ, கொடுமுடியின் மீதேறி—என்கிறவிதற்குக் கருத்து யாதெனில், பீலிமாமயில்களாகையாலே தோகையின் கனத்தாலே பறந்து சென்று ஏறமாட்டாமல் மெல்லத் தவழ்ந்து சென்று ஏறுகிறபடியைக் கூறியவாறு.

அஃறிணைப் பொருள்களும் ஆநந்தமாக வாழும் திவ்ய தேசத்திலே உயர்திணைப்பொருளான நீ போய்க் களித்து வாழவேண்டாவோ நெஞ்சே! என்ற கருத்துக் காண்க. ... ... ... ... ... (க)

கலங்க மாக்கடலரிகுலம் பணிசெய்ய
அருவரை யணைகட்டி *
இலங்கை மாநகர் பொடிசெய்த வடிகள்தாம்
இருந்த நலிமயத்து *
விலங்கல் போல்வன விறலிருஞ் சினத்தன
வேழங்கள் துயர்கூர *
பிலங்கோள் வாளெயிற்றரியவை திரிதரு
பிரிதி சென்றடை நெஞ்சே! (உ)

| | |
|---|---|
| நெஞ்சே | மனமே!, |
| மா கடல் | மஹா ஸமுத்ரமானது |
| கலங்க | கலங்கும்படி |
| அரி குலம் பணிசெய்ய | வாநர ஸமூஹம் கைங்கரியம் பண்ண |
| அரு வரை | அசைக்க முடியாத பெரிய மலைகளைக்கொண்டு |
| அணை கட்டி | ஸேது கட்டி |
| மா இலங்கை நகர் | பெரிய லங்காபுரியை |
| பொடி செய்த | பொடிபடுத்திய |
| அடிகள் தாம் | ஸர்வஸ்வாமி |
| இருந்த | எழுந்தருளியிருக்கப்பெற்ற |
| நல் இமயத்து | நல்ல ஹிமவானில்,— |
| விலங்கல் போல்வன | மலை போன்றவையாய் |
| விறல் | மிடுக்கையுடையவையாய் |
| இரு சினத்தன | மிக்க கோபத்தை யுடையவையான |
| வேழங்கள் | யானைகள் |
| துயர்கூர | துன்பப்படும்படியாக |
| பிலம் கொள் | குகைகளை இருப்பிடமாகக் கொண்டிருக்கிற |
| வாள் எயிறு | வாள் போன்ற பற்களையுடைய |
| அரி அவை | சிங்கங்களானவை |
| திரிதரு | திரியுமிடமாகிய |
| பிரிதி | திருப்பிரிதியை |
| சென்று அடை | சென்று சேர்ந்திடு. |

[கலங்கமாக்கடல்.] ஸுக்ரீவமஹாராஜருடைய துயரைத் தொலைத்த விருத்தாந்தத்தைக் கீழ்ப்பாட்டில் அநுஸந்தித்தார். அந்த ஸுக்ரீவனுடைய

படைத்துணையால் இராமபிரான் தன்துயரைத் தொலைத்துக்கொண்ட விருத்தாந்தத்தை இப்பாட்டில் அநுஸந்திக்கிறார்.

விபீஷணாழ்வான் இராமபிரான் பக்கல் வந்துசேர்ந்து உய்ந்தபின் பெருமாளைப் பார்த்து 'ஸ்வாமிந்! இந்த நம்முடைய ஸேனைகள் கடலைக்கடந்து அப்பாற் செல்லவேண்டுமாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம் புகவேணும்' என்ன; இராமபிரான் "கடலைக்கடக்க உபாயம் சொல்லவேண்டும்" என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்பசயனத்திலே படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக்கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷையாயிருந்துவிடவே ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு 'அனைவரும் நடந்தேசெல்லும்படி கடலை வற்றச்செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு, நளன்கையினால் நீரில் போகட்ட கற்களும் மிதக்குமென்று அவனுக்கு அவன் தகப்பனார் வரமளித்திருக்கிறாராகையால் அவனைக்கொண்டு ஸேது கட்டவேணுமென்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டான். இராகவனும் அப்படியே மற்ற வானரங்கள் சுற்றுமுள்ள மலைகளைப் பிடுங்கிக்கொண்டுவந்து நளன்கையில் கொடுக்கச்செய்து நளன் கையினால் அம்மலைகளை நீரில் போகடுவித்து ஸேது கட்டுவித்தான். அவ்வழியாய் வானரப்படைகளோடு இராமபிரான் இலங்கை சேர்ந்து அந்நகரையும் இராவணனுள்ளிட்ட அரக்கர் குலத்தையும் நீறுபடுத்தின வரலாறு ப்ரஸித்தம்.

ஒன்றுக்குங் கலங்கமாட்டாத மாகடல் கலங்கும்படியாகவும், ஸம்ஸார நாற்றமே அறியாத திருவனந்தாழ்வான் ஸேனைமுதலியார் முதலிய நித்ய ஸூரிகள் செய்யத்தக்க கைங்கரியத்தை இடக்கை வலக்கை வாசியறியாத வாநர ஜாதி செய்யும்படியாகவும், நீரில் ஆழ்ந்துபோகக்கூடிய மலைகள் மிதந்து அணையாய் நிற்கும்படியாகவும் செய்தருளிய விசித்திரசக்தி இவ்வரலாற்றால் விசதமாகும்.

இப்படிப்பட்ட மஹாவீரன் எழுந்தருளியிருக்கப்பெற்ற இமயமலையின் கண்.

கீழ்ப்பாட்டில் இமயத்துள் என்று வந்தது; இப்பாட்டில் இமயத்து என்று வந்தது; மேற்பாசுரங்களிலும் இப்படி மாறிமாறி வருகின்றன; இதற்கு நிதானமேதென்னில்; மூன்றாமடியின் முதலெழுத்து உயிரெழுத்தாக அமையும் பாசுரங்களில் இமயத்துள் என்றும், அது மெய்யெழுத்தாக அமையும் பாசுரங்களில் இமயத்து என்றும் வருமெனக் கண்டுகொள்க.

மலைபோலப் பருத்த வடிவையுடையனவாய், வடிவுக்கேற்ற மிடுக்கையுமுடையனவாய், மிடுக்குக்கு உரிய கோபத்தையுமுடையனவான மத்தகஜங்கள் அஞ்சும்படியாக வாள்போன்ற பற்களையுடைய சிங்கங்கள் திரியுமிடமான பிரிதியென்று அத்தலத்தின் நிலைமை கூறப்பட்டது பின்னடிகளில். பிலம் என்ற வடசொல் பிலமெனத் திரிந்தது; குஹை. ... ... ... (௨)

துடிகொள் நுண்ணிடைச் சுரிகுழல்
துளங்கெயிற் றிளங்கொடி திறத்து * ஆயர்
இடிகொள் வெங்குர லினவிடை யடர்த்தவன்
இருந்த நலிமயத்து *
கடிகொள் வேங்கையின் நறுமல ரமளியின்
மணியறைமிசை வேழம் *
பிடியினோடு வண்டிசைசொலத் துயில்கொளும்
பிரிதி சென்றடை நெஞ்சே! (௩)

| | |
|---|---|
| துடி கொள் நுண் இடை | உடுக்கைபோன்ற ஸூக்ஷ்மமான இடையையும் |
| சுரி குழல் | சுருண்ட கூந்தலையும் |
| துளங்கு எயிறு | பளபளவென்று விளங்குகின்ற பற்களையும் உடையளாய் |
| இள கொடி திறத்து | இளங்கொடிபோன்றவளான நப்பின்னைப் பிராட்டிக்காக, |
| ஆயர் | இடையர்களுடையவையாய் |
| இடி கொள் வெம் குரல் இனம் விடை | இடிபோல் வெவ்விய குரலையுடையவையாய் கூட்டமாக வந்தவையான ஏழு ரிஷபங்களை |
| அடர்த்தவன் | வலியடக்கின பெருமான் |
| இருந்த | எழுந்தருளியிருக்கப்பெற்ற |
| நல் இமயத்து | நல்ல இமயமலையினுள்,— |
| வண்டு இசை சொல | வண்டுகள் இசைபாடாநிற்க |
| மணி அறை மிசை | இந்திரநீல மணிமயமான பாறைகளின் மேலே |
| கடி கொள் வேங்கையின் நறு மலர் அமளியில் | வேங்கைமரத்தினது மணம் மிக்க புஷ்பமயமான படுக்கையிலே |
| வேழம் | யானையானது |
| பிடியினோடு | தன் பேடையோடு கூட |
| துயில்கொளும் | உறங்குமிடமான |
| பிரிதி | திருப்பிரிதியை |
| நெஞ்சே | மனமே! |
| சென்று அடை | சென்று சேர்வாயாக. |

[துடிகொள்நுண்ணிடை.] ஸீதாபிராட்டிக்காக இலங்கையைப் பாழ்படுத்தினமையைச் சொன்னார் கீழ்ப்பாட்டில். நப்பின்னைப் பிராட்டிக்காகச் செய்ததொரு செயலைச் சொல்லுகிறார் இதில்.

கும்பனென்னும் இடையர் தலைவனது மகளும், நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக அவள் தந்தை கந்யா

சல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டனன் என்ற வரலாறு முன்னடிகளில் அடங்கியுள்ளது.

முதலடி முழுமையும் நப்பின்னைப்பிராட்டியின் அவயவஸௌந்தரியத்தை வருணிப்பது. 'அஸுராவேசம் பெற்ற ரிஷபங்களோடு எங்ஙனே நாம் போர் செய்வது' என்று பின்வாங்காமல் உயிரைப்புல்லாக நினைத்து அவ்வெருதுகளோடு போர்செய்ய மேல்விழப்பண்ணவல்ல சிறந்த அழகு பெற்றவளாம் நம்பின்னை யென்பவள். 'இவளுடைய திருமேனி நமக்குக் கிடைக்குமாகில் என்ன அருந்தொழில்தான் செய்யக்கூடாது' என்று துணிந்து விடைகளின்மேலே விழுந்தானாயிற்று.

மாதர்களின் சிற்றிடைக்கு உடுக்கையை உவமை கூறுதல் கவிமரபு. "இளங்கொடி போன்ற நப்பின்னை திறத்து" என்னாது, "இளங்கோடி திறத்து" என்று அபேதமாகச் சொன்னது அப்பிராட்டியின் திருமேனியிலுள்ள ஸௌகுமார்யத்தை நன்கு விளக்கும்; 'தாமரை போன்ற திருவடி' என்ன வேண்டுமிடத்து, * "தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே" என்றருளிச்செய்தது காண்க.

இளங்கோடிதிறத்து=கோல்தேடியோடுங் கொழுந்து போன்ற நப்பின்னைக்காக என்றபடி. ஆயரிடிகோள் வெங்குரலினவிடை=ஆயர் என்றவிது இனவிடையில் அந்வயிக்கும்; ஆயர்களுடைய இனவிடைகளை அடர்த்தவன் என்கை. இடியிடித்தாற்போல் பயங்கரமாக இரைத்துக்கொண்டிருந்ததனால் இடிகோள்வெங்குரல் என அடைமொழி கொடுக்கப்பட்டது. ப்ரதிபந்தகங்களைப் போக்கி அபிமத விஷயத்தோடே புணர்ந்த பெருமான் நம்போன்ற அபிமதர்களையுஞ் சேர்த்துக்கொள்வதற்காக எழுந்தருளியிருக்கிற இமயமலையின்கண்.

அழகிய பாறைகளின்மீது வேங்கைமலர்கள் விசேஷமாக உதிர்ந்து படுக்கை விரித்தாற்போலிராநிற்க, அதன்மீது யானையானது தன் பேடையோடு கிடந்துறங்குகைக்குப் பாங்காக வண்டுகள் கர்ணாம்ருதமாக இன்னிசை பாடப்பெற்ற பிரிதியைச் சென்று சேர் நெஞ்சமே!.

நப்பின்னைப்பிராட்டியோடே பரமரஸிகன் ரமிக்குமிடமாகையாலே அங்குள்ள திர்யக்ஜந்துக்களும் ச்ருங்காரரஸத்திலே நோக்காயிருக்கிறபடி. அமளி—படுக்கை. மணியறை என்பதற்கு மணிமயமான பாறை என்றும், அழகிய பாறை என்றும் பொருள் கொள்ளலாம். பிடி—யானைப் பேடை. (௩)

* திருவாய்மொழி 6–9–9.

மறங்கொ ளாளரி யுருவென வெருவர
ஒருவனதகல் மார்வம்
திறந்து * வானவர் மணிமுடி பணிதர
இருந்த நலிமயத்துள் *
இறங்கி யேனங்கள் வளைமருப் பிடந்திடக்
கிடந்தரு கெரிவீசும் *
பிறங்கு மாமணி யருவியோ டிழிதரு
பிரிதி சென்றடை நெஞ்சே! (ச)

| | |
|---|---|
| மறம் கொள் | 'சீற்றங்கொண்ட |
| ஆள் அரி உரு என | நரசிங்கமூர்த்தி' என்று ப்ரஸ்தாவ மெடுத்த மாத்திரத்திலே |
| வெருவர | அஞ்சி நடுங்கும்படியாக (நரஸிம்ஹாவதாரஞ் செய்து) |
| ஒருவனது | வீரரில் ஒப்பற்றவனை இரணியனுடைய |
| அகல் மார்வம் | விசாலமான மார்பை |
| திறந்து | பிளந்து, |
| வானவர் | (இப்படி இரணியனைக் கொன்ற மஹோபகாரத்தில் ஈடுபட்ட) தேவர்கள் |
| மணி முடி பணிதர | மணிமயமான கிரீடங்களணிந்த தலையாலே வணங்கும்படியாக |
| இருந்த | எம்பெருமான் எழுந்தருளியிருக்கப்பெற்ற |
| நல் இமயத்துள் | விலக்ஷணமான இமயமலையின்கண், — |
| ஏனங்கள் | பன்றிகளானவை |
| இறங்கி | தலை குனிந்து |
| வளை மருப்பு | வளைந்த கொம்புகளாலே |
| இடந்திட | (மணிப்பாறைகளைப்) பிளக்க (பிளந்ததனால் பெயர்ந்து) |
| அருகு கிடந்து எரி வீசும் பிறங்கு மா மணி | ஸமீபத்திலிருந்துகொண்டு தீ வீசுகின்ற ப்ரகாசம் மிகச் சிறந்த மணிகளானவை |
| அருவியொடு | மலையருவிகளோடுகூட |
| இழிதரு | இழியுமிடமான |
| பிரிதி | திருப்பிரிதியை |

நெஞ்சே! சென்று அடை.—

[மறங்கொளாளரி.] நரஸிம்ஹ மூர்த்தியாகத் திருவவதரித்து இரணியன் மார்வைப்பிளந்த பெருமிடுக்குத்தோற்ற எழுந்தருளியிருக்குமிட மென்கிறது இதில்.

இரணியனென்பான்—தேவர் மனிதர் முதலிய எவ்வுயிர்களாலும் பகலிலும் இரவிலும் வானத்திலும் பூமியிலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம்பெற்றவன். இவன் தேவர் முதலிய யாவர்க்கும் பலபல கொடுமைகளைப் புரிந்து அனைவரும் தன்னையே கடவுளாக வணங்கும்படி செய்துவருகையில், அவன் மகனான ப்ரஹ்லாதாழ்வான் இளமை தொடங்கி மஹாவிஷ்ணுபக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன் பெயரைச் சொல்லிக் கல்வி கற்காமல் நாராயணநாமம் சொல்லிவரவே கடுங் கோபங்கொண்ட இரணியன் ப்ரஹ்லாதனைத் தன் வழிப்படுத்துவதற்குப் பல

வாறு முயன்றபின் அங்ஙனம் வழிபடாத அவனைக் கொல்வதற்கு என்ன வுபாயஞ்செய்தும் அவன் பகவானுடைய அநுக்ரஹபலத்தினால் ஒரு கேடு மின்றியிருக்க, ஒரு நாள் ஸாயங்காலத்திலே அந்த ஹிரண்யன் தன் புத்திரனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கேயுளன்? காட்டு' என்ன, "தூணிலுமுளன், துரும்பிலுமுளன், எங்குமுளன்" என்று அக்குமாரன் உறுதியாய்ச் சொல்ல, உடனே இரணியன் "இங்கு உளனோ?" என்று சொல்லி எதிரில்நின்ற தூணைப்புடைக்க, உடனே அதிலிருந்து திருமால் மநுஷ்யரூபமும் சிங்கவடிவுங்கலந்த நரசிங்கமூர்த்தியாய்த்தோன்றி இரணியனைப்பிடித்து வாசற் படியில் தன்மடிமீது வைத்துக்கொண்டு தன் திருக்கையில் நகங்களால் அவன் மார்பைப்பிளந்து அழித்திட்டு ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்தானென்பது பிரஸித்தம். * "அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே, வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய், உளந்தொட்டிரணியனொண்மார்வகலம், பிளந்திட்ட கைகள்" என்றும், † "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்து, இங்கில்லையாலென்றிரணியன் தூண்புடைப்ப, அங்கப்பொழுதே அவன் வீயத் தோன்றிய, என் சிங்கப்பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்தே" என்றும் ஆழ்வார்கள் ஈடுபடுவர்கள்.

வேறேயொரு தூணிலிருந்து நரசிங்கமூர்த்தி தோன்றினால், முன்னமே ஒரு நரசிங்கத்தை உள்ளே வைத்து நாட்டிய தூண் அது என்று சொல்லி விடக்கூடுமாகையாலே அந்த வார்த்தைக்கு இடமில்லாதபடி அந்த இரணியன் தானே தனது உயரம் பருமனுக்குப் பொருந்தப் பார்த்து அளந்து நாட்டிய அவன் வாசல் தூணிலிருந்தே திருமால் நரசிங்கமாய்த் தோன்றினனென்பதும், வேறு யாரேனும் கையால் தட்ட அத் தட்டியவிடத்திலிருந்து தோன்றினால் 'அவர் தம்கையில் நரசிங்கத்தை அடக்கிக்கொண்டுவந்து தூணிலே பாய்ச்சி னார்' என்று சொல்லிவிடக்கூடுமாகையாலே அந்தவார்த்தைக்கு அவகாச மில்லாதபடி அவ்விரணியன் தானே தன் கையால் தட்டினவளவில் திருமால் தோன்றினனென்பதும்,—அவன் ஓரிடத்தில் தட்ட மற்றோரிடத்திலிருந்து நரசிங்கம் தோன்றினால் 'எங்குமுளன்' என்று ப்ரஹ்லாதன் செய்த பிரதிஜ்ஞை தவறி 'நீ சொல்லுகிறவன் இங்கில்லை' என்று இரணியன் செய்த பிரதிஜ்ஞை நிலைநிற்குமாகையாலே அதற்கு இடமில்லாதபடி அவன் தட்டின இடத்தி லிருந்தே திருமால் தோன்றினனென்பதும்,—அவன் தட்டினபிறகு சிறிது போது கழித்து நரசிங்கம் தோன்றினால் 'நான் தட்டினபொழுது திருமால் அங்கில்லை' என்று அவன் சொல்லி திருமால் எங்கும் எப்பொழுதும் எல்லாப்

* பெரியாழ்வார் திருமொழி 1-6-9.

† திருவாய்மொழி 2-8-9.

பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருக்கிற உண்மைநிலையை மறுக்கக் கூடுமாகையாலே அதற்கு இடமறும்படி கர்ப்பம் கருமுதிர்தல் ப்ரஸவித்தல் முதலியனவும் குழந்தையாய் ஜனித்தல் பிறகு நாளடைவில் வளர்தல் என்பனவுமில்லாமல் அவ்வெதிரியினும் பருத்து வளர்ந்த வடிவையுடையனாய் அப்பொழுதே தோன்றினனென்பதும்,—அங்ஙன் தோன்றிய விடத்தும் ஹிரண்யன் ஜயசீலனாகவும் நரஸிம்ஹன் பராஜிதனாகவும் நேர்ந்தால் 'எங்கு முளன்' என்ற உண்மை நிலைத்தாலும் பரத்வம் ஸித்தியாமற்போய்விடுதல் பற்றி அதைவிடத் தோன்றாமலிருப்பதே நலமென்னும்படி யிருக்குமாதலால் அங்ஙனமாகாதபடி அக்கொடியவனைத் தவறாது அழித்தன னென்பதும்,— தேவர் மனிதர் விலங்குகள் தாவரம் என்னும் நால்வகைப் பிறப்புக்களிலுள்ள வற்றில் ஒவ்வொன்றிலும் தனித்தனி சாகாதபடியும், ப்ரஹ்மஸ்ருஷ்டிக்கு உட்பட்ட எந்த பிராணியினாலும் சாகாதபடியும் அவன் ப்ரஹ்மருத்ராதிகளிடத்திற் பெற்றவரம் பழுதுபடாமைக்காக நரங்கலந்த சிங்கமாய் ப்ரஹ்மஸ்ருஷ்டியினுட் படாமல் தன்னைத்தானே தோற்றுவித்துக்கொண்டு தோன்றினனென்பதும்,—அஸ்த்ரசஸ்த்ரங்களொன்றினாலும் சாகாதபடியும் ஈரமுள்ளதனாலும் ஈரமில்லாததினாலும் இறவாதபடியும் பெற்றவரம் வீண்போகாமே நகங்களினால் கீண்டு கொன்றன னென்பதும், பகலிலுமிரவிலுஞ் சாகாதபடி பெற்ற வரம் பொய்படாதபடி அப்பகலிரவுகளின் ஸந்தியாகிய மாலைப்பொழுதிலே கொன்றன னென்பதும்,—பூமியிலும் வானத்திலும் சாகாதபடி பெற்றவரம் மெய்யாம்படி தன் மடிமீது வைத்துக் கொன்றன னென்பதும்,—வீட்டின் அகத்திலும் புறத்திலும் இறவாதிருக்கும்படி பெற்றவரத்திற்கு விரோதமின்றி வாசற்படிமீது வைத்துக்கொண்டு கொன்றனனென்பதும் இவைபோல்வன பல விசேஷங்கள் இவ்வவதாரத்திலே அருமையாக நோக்கத்தக்க விஷயங்களாம். "சுராசுரர் முனிவர் நரர்கையில் பாரில் சுடர்வானில் பகலிரவில் உள்புறம்பில், பெருபடையில் தான் சாகாவிரண்யன்றன்னைப் பிரகலாதன் தர்க்கித்துண்டென்ற தூணில், நரஹரியாய்ப் பொழுதுபுகு நேரந்தன்னில் நாடியுதித்துயர் வாசற்படிமீதேறி, இரணியனைத் தொடைமிசைவைத்துகிரினாலே இருபிளவாக் கினையரியே எம்பிரானே" என்றார் பின்னோரும்.

ஆளரியுருவென வெருவர=நரசிங்க வுருவத்தைக்கண்டவர்கள்தாம் அஞ்சி நடுங்குவர்களென்பதில்லை; அவ்வடிவை யாரேனுஞ் சிலர் பிரஸ்தாவித்த வளவிலும் குடல்குழம்பும்படி யிருக்குமென்று இதனால் அவ்வடிவின் பயங்கரத்வம் ஒப்புயர்வற்றதாகக் கூறப்பட்டது. "கைதொட்டுப் பிளக்கவேண்டாதே நரஸிம்ஹத்தினுடைய பேரைச் சொல்லவே ஆஸுரவர்க்கம் அஞ்சும்படியாயிற்றிருப்பது" என்ற பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி காண்க.

இரணியனும் நரஸிம்ஹமூர்த்திக்கு அடுத்தபடியாகச் சொல்லக்கூடிய மஹாசூரனுகையால் ஒருவன் என்றார். வீரர்களை எண்ணிக்கொண்டு வந்தால் இரணியனை முதல் விரலுக்கு எண்ணி அடுத்த விரலுக்கு ஒருவருமில்லாதபடி இரணியனே அத்விதீயனுயிருப்பனும். அப்படிப்பட்டவனுடைய அகன்ற மார்வை ரத்த வெள்ளத்திற்கு மதகுதிறந்துவிட்டாற்போலே திறந்து விட்டானுயிற்று எம்பெருமான்.

இரணியன் மிடுக்கனுயிருந்தகாலத்து அவனுக்கு அஞ்சி வேற்றுருக் கொண்டு திரிந்த தேவர்கள் அவ்விரணியன் மாண்டொழிந்தானென்று கேள்விப்பட்டவாறே தங்களைக் குடியிருக்கச்செய்த மஹாநுபாவனென்று நன்றி பாராட்டி எம்பெருமான் திருவடிகளிலே வந்து ஸாஷ்டாங்கமாக விழுவர்களாம். அப்படி விழும்போது, 'ஸ்வாமிந்! இத்தனை காலமாக நாங்கள் கிரீடமணிந்துகொள்ள யோக்யதையற்று அப்பபொவிக்கு அஞ்சி ஒளிந்துகிடந்தோம்; இன்றுதான் பழைய நிலைமைக்கு வரப்பெற்றோம்; உனது திருவருளால் கிரீடமணியப்பெற்றோங்காண்' என்பவர்கள்போலத் தமது முடியை எம்பெருமானது பாதாரவிந்தத்திலே படச்செய்துகொண்டு வீழ்வர்களாம். இரணியனைக் கொன்று தேவர்களால் வணங்கப்பட்ட பெருமான் எழுந்தருளியிருக்கிற இமயமலையின்கண்.

நரஸிம்ஹபகவான் செய்தருளின காரியத்தை முன்னடிகளிற் கூறவே அதுவே போன்ற வேறொரு செய்தி நினைவுக்கு வந்து அதனைக் கூறுகின்றார் பின்னடிகளில். அங்குள்ள வராஹங்களானவை குனிந்து, தங்களுடைய வளைந்த கொம்புகளாலே மாணிக்கப்பாறைகளைக் குத்திப் பெயர்த்திடும்; பெயர்ந்த மாணிக்கங்களானவை மலையருவிகளோடுகூடி உருண்டுவந்து இழியும். நரஸிம்ஹமூர்த்தி இரணியனுடைய மார்வைப் பிளந்து குடல் மாலையைத் தன்மேலெடுத்துப் போட்டுகொண்டபிறகு ரத்தவெள்ளமானது கொழித்துக் கொண்டு புறப்பட்டாற்போலே அவ்வருவிகள் பாய்கின்றனவாம்; அப்படிப் பட்ட பிரிதியைச் சென்று சேர் நெஞ்சமே!. அருகுகிடந்து—திருப்பிரிதியின் ஸமீபத்திலே யிருந்துகொண்டு என்கை. பிரிதியின் ஸமீபத்திலே மாணிக்கமயங்களான பாறைகள் இருக்கின்றன; மஹாவராஹங்கள் அவற்றை உரோசிப் பிளந்துவிடுகின்றன. அப்படி பிளக்கப்பட்டுக் கிளர்ந்த மணிகளானவை பளபளவென்று ஜ்வலித்துக்கொண்டு அருவிகளோடு கலந்து ப்ரவஹிக்கின்றன. ... ... ... ... . (௨)

கரைசெய் மாக்கடல் கிடந்தவன்
கனைகழ லமரர்கள் தொழுதேத்த *
அரைசெய் மேகலை யலர்மக ளவளோடும்
அமர்ந்த நலிமயத்து *
வரைசெய் மாக்களி றிளவேதிர் வளர்முளை
அளைமிகு தேன்தோய்த்து *
பிரசவாரி தன்னிளம்பிடிக் கருள்செய்யும்
பிரிதி சென்றடை நெஞ்சே!

கனை கழல் — (ஆபரணங்கள் பூண்டதனால்) ஒலிசெய்கின்ற திருவடிகளை

அமரர்கள் — தேவர்கள்

தொழுது ஏத்த — ஸேவித்துத் துதிக்கும்படியாக,

கரை செய் மா கடல் கிடந்தவன் — தனக்குத்தானே கரை செய்துகொண்டிருக்கிற பெரிய கடலிலே [க்ஷீரஸாகரத்தில்] பள்ளி கொண்ட பெருமான்,

அரை செய்மேகலை அலர்மகளவளொடும் அமர்ந்த — திருவரையிலே சாத்தப்பட்ட மேகலையையுடையளான பெரிய பிராட்டியோடுகூட எழுந்தருளியிருக்கப்பெற்ற

நல் இமயத்து — நல்ல இமயமலையின்கண்,—

வரை செய் மா களிறு — மலைபோற் பெரிய ஆண் யானைகளானவை

இள வெதிர் — இளமூங்கில்களுடைய

வளர் முளை — ஓங்கிவளர்ந்த முளைகளை(ப் பிடுங்கி)

அளை மிகு தேன் தோய்த்து — முழைஞ்சுகளிலே மிகுதியாகவுள்ள தேனிலே தோய்த்து

பிரசம் வாரி — அந்தத் தேன் வெள்ளத்தை

தன் இள பிடிக்கு — தனது இளையபேடைக்கு

அருள் செயும் — கொடுக்குமிடமான

பிரிதி — திருப்பிரிதியை

நெஞ்சே சென்று அடை—.

[கரைசெய்மாக்கடல்.] அவதாரங்களுக்கு அடியாகத் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறபடியை அநுஸந்தித்துப் பேசுகிறார் இதில்.

ஆபரணங்கள் பூண்டதனாலே ஒலிசெய்துகொண்டிருக்கிற பரவாஸு தேவன் திருவடிகளை ஸேவிக்கவேணுமென்கிற குதூஹலமுடைய நான்முகன் முதலான தேவர்கட்கு ஸ்ரீவைகுண்டத்திலே சென்று காணப்பெறுகை அஸாத்தியமாகையாலே அவர்கள் இழந்தே போகாதபடி திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்து அவர்களுக்கு ஸேவைஸாதிக்கிற க்ஷீராப்திநாதன் பிராட்டியுந் தானுமாய்வந்து பொருந்திவாழும் இமயமலையின்கண்.

மலைபோற்பெரியசரீரமுடைய யானைகளானவை இளையமூங்கில்முளைகளைப் பிடுங்கித் தேனிலே தோய்த்துத் தம் பேடைகளின் வாயிலே பிழியாநிற்கப் பெற்ற பிரிதியைச் சென்றுசேர் நெஞ்சமே!.

வரைசெய்மாக்களிறு=செய்—உவமவுருபு; மலைபோன்ற பெரிய யானைகள். வெதிர் என்று மூங்கிலுக்குப் பெயர். அது முளைக்கும்போதே நெடுக ஓங்கி வளருமாதலால் வளர்முளை என்றார். யானையானது தன் பேடையை மகிழ்விக்கவேண்டி இனிய உணவு கொடுக்க விரும்பும்; மூங்கில்முளையைப் பெயர்த்துத் தேனிலே தோய்த்து அதன்வாயிலே பிழியும்.* "பெருகுமத வேழம் மாப்பிடிக்கு முன்னின்று, இருகணிள மூங்கில் வாங்கி—அருகிருந்த, தேன் கலந்து நீட்டுந் திருவேங்கடங் கண்டீர், வான்கலந்த வண்ணன் வரை." என்கிற பாசுரத்திலும் இவ்விஷயம் காணத்தக்கது.

* இரண்டாந்திருவந்தாதி—75.

பிரசவாரி=பிரசம் என்று, கள்-தேனீ-தேன்-தேன்கூடு-வண்டு ஆகிய இவற்றுக்குப் பெயர்; வாரி என்பதற்குப் பல பொருள்களிருந்தாலும், அவற்றுள் இங்கு வெள்ளமென்னும் பொருள் கொள்ளத்தகும்; தேன் வெள்ளத்தை என்றதாயிற்று. தேனீக்கள் நிறைந்த தேனை என்றும் சொல்லலாம். .... ... .... ... .... ... ... (ரு)

பணங்க ளாயிரமுடைய நல்லரவணைப்
பள்ளிகொள் பரமா! என்று *
இணங்கி வானவர் மணிமுடி பணிதர
இருந்த நலிமயத்து *
மணங்கோள் மாதவி நெடுங்கோடி விசும்புற
நிமிர்ந்தவை முகில்பற்றி *
பிணங்கு பூம்பொழில் நுழைந்து வண்டிசைசோலும்
பிரிதி சேன்றடை நெஞ்சே! (சு)

| | |
|---|---|
| வானவர் | தேவர்கள் |
| இணங்கி | திரளாகக்கூடி |
| பணங்கள் ஆயிரம் உடைய நல் அரவு அணை பள்ளிகொள் பரமா என்று | 'ஆயிரம் படங்களையுடைய திருவனந்தாழ்வானாகிற சயனத்திலே பள்ளி கொண்டருளும் பரமபுருஷனே! என்று சொல்லி |
| மணி முடி பணிதர இருந்த நல் இமயத்து | மணிமுடிகளாலே வணங்கும் படி எம்பெருமான் எழுந்தருளியிருக்கப்பெற்ற நல்ல இமயமலையின்கண்,- |
| மணம் கொள் நெடு மாதவி கொடிஅவை | பரிமளமுள்ளவையும் நீண்டவையுமான குருக்கத்திக் கொடிகளானவை |
| விசும்பு உற நிமிர்ந்து | ஆகாசத்தளவுஞ் சென்று நிமிர்ந்து |
| முகில் பற்றி பிணங்கு | மேகங்களைப்பற்றிக்கொண்டு அவற்றோடு சண்டை போடுவதனாலே |
| பூ | புஷ்பிக்கப்பெற்ற |
| பொழில் | (குருக்கத்திச்) சோலைகளிலே |
| வண்டு நுழைந்து | வண்டுகள் (மதுவைப் பருகப்) பிரவேசித்து |
| இசை சொலும் | இசைபாடுமிடமான |
| பிரிதி | திருப்பிரிதியை |

நெஞ்சே! சென்று அடை—.

* * *—[பணங்களாயிரம்.] தேவர்களுக்காக ஸ்ரீவைகுண்டத்தைவிட்டுத் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்த எம்பெருமான் அக்கடலளவும் போகமாட்டாத மனிசர்க்கும் அநுகூலமாக இமயமலையிலேவந்து எழுந்தருளியிருக்கிறானென்பது தோன்ற அருளிச்செய்கிறார்.

வானவர்கள் திரள்திரளாக இமயமலையின்கண் வந்து எம்பெருமானை நோக்கி 'ஸ்வாமிந்! தேவரீர் திருப்பாற்கடலிலே சேஷசயனத்திலே பள்ளி கொண்டிருந்த பெருமானன்றோ' என்று சொல்லி அவன் திருவடிகளிலே தலையை வீழ்த்தி வணங்குவர்களாம். இணங்கி—பொருந்தி என்றுமாம்.

*பின்னடிகளின் கருத்து* :—நறுமணமுள்ள குருக்கத்திக்கொடிகளானவை ஆகாசம் வெளியடையும்படி ஓங்கிப்படர்ந்து மேகமண்டலத்தோடு போராடும்போது அந்த ஸம்மர்த்தத்தாலே பூக்கள் அலரும்; அப்பூக்களிலே மதுபானம் பண்ண நினைத்து வண்டுகளானவை அம்மேகத்துக்கும் கொடிக்கும் நடுவே நுழைந்து மதுவைப் பருகிக் களைத்துச் செருக்குக்குப் போக்குவீடாக இசைபாடாநிற்கும்; திருப்பிரிதியடங்கலும் இந்த ஆரவாரமேயாயிருக்கும். அப்படிப்பட்ட தலத்தைச் சென்று சேர் நெஞ்சே!.

மாதவிக்கொடியானது முகிலோடு பிணங்குவதாகவும் வண்டுகள் இசை பாடுவதாகவுஞ் சொல்லுகிறவிதற்கு ஒரு உள்ளுறை பொருள் கூறலாம்;—**மாதவிக்கோடி**யென்று பிராட்டியைச் சொல்லுகிறது; **முகில்** என்று எம்பெருமானைச் சொல்லுகிறது; அபராதிகளான சேதநர்களை க்ஷமித்து ரக்ஷிப்பதற்காகப் பிராட்டி எம்பெருமானோடே போராடி மன்றாடுவளிறே; அதைச் சொல்லுகிறது. ஸாரக்ராஹிகளான மஹான்கள் வந்து புகுந்து தோத்திரம் பண்ணும்படியைச் சொல்லுகிறது **வண்டிசைசோலும்** என்று.

பணம், பரமன், மாதவி—வடசொற்கள். ... ... (சு)

> கார்கோள் வேங்கைகள் கனவரை தழுவிய
> கறிவளர் கோடிதுன்னி *
> போர்கோள் வேங்கைகள் புனவரை தழுவிய
> பூம்பொழி லிமயத்துள் *
> ஏர்கோள் பூஞ்சுனைத் தடம்படிந்து
> இனமலரெட்டுமிட் டிமையோர்கள் *
> பேர்க ளாயிரம் பரவிநின் றடிதொழும்
> பிரிதி சென்றடை நெஞ்சே! (எ)

| | |
|---|---|
| கனம் வரை | அழகிய தாழ்வரைகளில் |
| கார் கொள் வேங்கைகள் | மேகமண்டலத்தை ஆக்ரமித்து வளர்ந்த வேங்கைமரங்களை |
| தழுவிய | தழுவிக்கொண்டிராநின்ற |
| கறி கொடி | மிளகுகளின் கொடிகளானவை |
| துன்னி வளர் | நெருங்கிப் படரப்பெற்றதும் |
| புனம் வரை | கொல்லை நிலங்களிலுள்ள சிறுமலைகளிலே |
| போர் கொள் வேங்கைகள் தழுவிய | யுத்தத்திற்கு வித்தமான வேங்கைப் புலிகள் ஸஞ்சரிக்கப்பெற்றதுமாய் |
| பூ பொழில் | அழகிய சோலைகளை யுடையதான |
| இமயத்துள் | இமயமலையின்கண்—, |
| இமையோர்கள் | தேவர்கள் |
| ஏர் கொள் பூ சுனை தடம் படிந்து | அழகிய புஷ்பங்களையுடைய தடாகங்களின் துறைகளிலே தீர்த்தமாடி |
| இனம் மலர் எட்டும் இட்டு | சிறந்த எட்டுவகைப் பூக்களையும் கொண்டு ஸமர்ப்பித்து |
| பேர்கள் ஆயிரம் | ஸஹஸ்ர நாமங்களையும் |
| பரவி நின்று | வாய் வந்தபடி சொல்லி |
| அடி தொழும் | எம்பெருமான் திருவடிகளைப் பணியுமிடமான |
| பிரிதி | திருப்பிரிதியை |

நெஞ்சே! சென்று அடை—.

* * *—[கார்கோள் வேங்கைகள்.] இமயமலையின் தாழ்வரைகளிலே மேகமண்டலத்தளவும் ஓங்கி வளர்ந்த வேங்கைமரங்கள் மிளகு கொடிகளாலே தழுவப்பெற்றுநிற்கும்; வெளி நிலங்களிலுள்ள சிறு மலைகளிலே கொடியவேங்கைப் புலிகள் திரியாநிற்கும்; இப்படி எங்கும் வேங்கை மயமாகவே யிராநின்ற இமயமலையின்கண் தேவர்கள் வந்து செங்கழுநீர் செண்பகம் இருவாட்சி பாதிரி புன்னை குருக்கத்தி கருமுகை தாமரை என்னப்படுகிற எண்வகைப் புஷ்பங்களையும் தடாகங்களிலிருந்து கொணர்ந்து ஸமர்ப்பித்து ஸஹஸ்ரநாமங்களைச் சொல்லிக்கொண்டே நமஸ்கரிக்குமிடமாகிய திருப்பிரிதியைச் சென்று சேர் நெஞ்சே!.

**கார்கோள் வேங்கைகள்** = வேங்கை மரங்களில் பல வர்ணங்களிருப்பதால் கரிய நிறமுள்ள வேங்கை மரங்களை இங்குச் சொல்வதாகவும் கொள்ளலாம். கார்—கருமைநிறத்தை, கோள்—கொண்டிருக்கிற என்றபடி. கறி—மிளகு. (எ)

இரவுகூர்ந் திருள்பெருகிய வரைமுழை
இரும்பசி யதுகூர *
அரவமாவிக்கு மகம்பொழில் தழுவிய
அருவரை யிமயத்து *
பரமனாதி யெம்பனிமுகில் வண்ணனென்று
எண்ணிநின்றிமையோர்கள் *
பிரமனோடு சென்றடிதொழும் பெருந்தகைப்
பிரிதி சென்றடை நெஞ்சே! (அ)

| | |
|---|---|
| இரவு கூர்ந்து இருள் பெருகிய வரை முழை | இராப்பொழுதே விஞ்சி இருள் அதிகரிக்கப்பெற்ற மலைமுழஞ்சுகளிலே |
| இரு பசியது கூர | பெரும்பசி உண்டாக |
| அரவம் | மலைப்பாம்புகளானவை |
| ஆவிக்கும் | பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிற |
| அகம் பொழில் தழுவிய | உட்சோலைகளோடு கூடிய |
| அரு வரை இமயத்து | ஏறமுடியாத தாழ்வரையையுடைய இமயமலையின்கண்,— |
| இமையோர்கள் | தேவர்கள் |
| பிரமனோடு சென்று | நான்முகனோடு கூடச் சென்று |
| பரமன் என்று | பரமபுருஷனே! என்றும் |
| ஆதி என்று | ஆதிமூலமே! என்றும் |
| எம் பனி முகில் வண்ணன் என்று | குளிர்ந்த மேகம் போன்ற நிறத்தையுடைய எம் பெருமானே! என்றும் |
| எண்ணிநின்று | அநுஸந்தித்துக்கொண்டு |
| அடி தொழும் | திருவடிகளை வணங்குதற்குரிய |
| பெரு தகை | பெருந்தன்மை பொருந்திய |
| பிரிதி | திருப்பிரிதியை |
| நெஞ்சே சென்று அடை—. | |

* * *—[இரவு கூர்ந்து.] இமயமலையில் சோலைகள் செறிந்து கிடக்குமாதலால் "இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியா" என்னுமாபோலே பகற்போது காணமுடியாமல் இரவு காலமே விஞ்சி எங்கும் இருள் மூடிக்கிடக்கும்.

அப்படி இருள் மூடிக்கிடக்கிற மலையின் குஹைகளிலே பாம்புகளானவை ஆஹாரம் பெறுமல் பெரும்பசியோடே பெருமூச்சு விட்டுக்கொண்டு கிடக்கும். அப்படிப்பட்ட இமயமலையின்கண், அமரர்கள் வந்து சேர்ந்து "பரமபுருஷா!, ஸகல ஜகத்காரண பூதா!!, காளமேகச்யாமளா!!!" என்றிப்படி அநுஸந்தித்துக்கொண்டு நான்முகக்கடவுளை முன்னிட்டு வணங்குமிடமாகிய திருப்பிரிதியைச் சென்று சேர் நெஞ்சே!.

அரவம் ஆவிக்கும் அகம்பொழில் என்பதற்கு—பாம்புகளானவை சோலையின் பரிமளத்தோடே கூடின காற்றை ஆக்ராணித்துத் தரிக்கு மென்றும் உரையிடலாம். பரமன் ஆதி முகில்வண்ணன் என்கிறவிவற்றை முதல் வேற்றுமையாகவும் அண்மைவிளிகளாகவுங் கொள்ளலாம். ... ... (அ)

ஓதி யாயிரநாமங்க ளுணர்ந்தவர்க்கு
உறுதுய ரடையாமல் *
ஏதமின்றி நின்றருளும் நம்பெருந்தகை
இருந்த நலிமயத்து *
தாது மல்கிய பிண்டி விண்டலர்கின்ற
தழல் புரையெழில் நோக்கி *
பேதை வண்டுகளெரியென வெருவரு
பிரிதி சென்றடை நெஞ்சே! (கூ)

| | |
|---|---|
| ஆயிரம் நாமங்கள் | ஸஹஸ்ர நாமங்களை |
| ஓதி | எப்போதும் சொல்லிக்கொண்டு |
| உணர்ந்தவர்க்கு | (அத்தாலே, ஸர்வேச்வரனே ரக்ஷகனென்று) விவேகம் பெற்றவர்களுக்கு |
| உறு துயர் அடையாமல் | உண்டாகக்கூடிய துன்பமொன்றும் உண்டாகாதபடியாகவும் |
| ஏதம் இன்றி | பாவமொன்றும் இல்லாதபடியாகவும் |
| நின்று அருளும் | எப்போதும் க்ருபை செய்கின்ற |
| நம் பெருந்தகை | நம் ஸ்வாமியானவன் |
| இருந்த | எழுந்தருளியிருக்குமிடமான |
| நல் இமயத்து | நல்ல இமயமலையின்கண்,— |
| தாது மல்கிய | தாதுகள் மிக்கிருக்கிற |
| பிண்டி | அசோகமலர்கள் |
| விண்டு அலர்கின்ற | விரிந்து அலருகிற போதுண்டான |
| தழல்புரை எழில் | நெருப்புப்போன்ற அழகை |
| பேதை வண்டுகள் நோக்கி | அறிவில்லாத வண்டுகள் பார்த்து |
| எரி என | நெருப்பென்று நினைத்து |
| வெருவரு | பயப்படுமிடமான |
| பிரிதி | திருப்பிரிதியை |

நெஞ்சே! சென்று அடை—.

[ஓதியாயிரம்.] ஆயிரந்திருநாமங்களையும் வாயாலே சொல்லி அவற்றினுடைய அர்த்தங்களையும் அநுஸந்திப்பவர்களுக்கு எவ்விதமான துன்பமும் வந்து சேராதபடியாக நித்யாநந்தத்தைக் கொடுத்து அருள் செய்கின்ற பரமபுருஷன் எழுந்தருளியிருக்கப்பெற்ற இமயமலையின்கண்.

*தாதுகள் நிறைந்திருக்கிற அசோகமலர் விகஸித்தால் அப்போதுண்டாகு மழகு நெருப்பு ஜ்வலிக்கிறுப்போலிருக்கும். வண்டுகளானவை அப்புஷ்பவிகாஸ சோபையைப் பார்த்து 'இவை அசோகமலர்' என்பதை மறந்து 'இது நெருப்பு' என்று ப்ரமிக்கும். அவற்றுக்கு இந்த ப்ரமம் நித்தியப்படியாகச் செல்லும். முதல் நாள் 'இது நெருப்பு' என்று ப்ரமித்து, பிறகு ஆராய்ந்து 'நெருப்பு அல்ல, அசோகமலராமிவை' என்று நிச்சயித்து அதிலே போயி ருந்தும் மறுநாளும் பழையபடியே ப்ரமித்து அதனருகு செல்ல அஞ்சி யிருக்கும். இப்படி அச்சமும் அச்சங்கழிதலும் மாறுமல் செல்லப்பெற்ற திருப்பிரிதியைச் சென்று சேர் நெஞ்சே!.*

*இங்ஙனே வண்டுகளின் அஞ்சுதலைக் சொன்னவித்தால் நினைவுக்கு வரக் கூடியதொன்றுண்டு;—'எம்பெருமான் ஸர்வரக்ஷகன்' என்பது தெரிந்திருக் க்ச் செய்தேயும் 'ஆராலே இவனுக்கு என்ன தீங்கு வந்துவிடுமோ!' என்று அஞ்சி, பல்லாண்டு பல்லாண்டென்று அவனுக்கு மங்களாசாஸநம் பண்ணு வாரும், மற்றொருகால் அந்த அச்சம் நீங்கி 'எம்மை ரக்ஷித்தருளவேணும்' என்று பிரார்த்திப்பாரும், மீண்டும் பழைய அச்சமே தலையெடுத்து மங்களா சாஸநம்பண்ணுவாருமாய் ஆகவிப்படி பயமும் பயநிவ்ருத்தியும் மாறிமாறிச் செல்லுகிற ப்ரபந்நர்கள் வாழுமிடம் திருப்பிரிதி என்றதாகிறது.*

*இரண்டாமடியில் ஏதமின்றி என்ற பாடத்திற்காட்டிலும் ஏதுமின்றி என்ற பாடம் சிறக்குமென்பது பெரியோர்களின் கொள்கை; ஏதும் இன்றி— ஹேது ஒன்றுமில்லாமல்; நிர்ஹேதுகமாக என்கை. பிண்டி—அசோகமரம்.* (௯)

கரியமா முகிற்படலங்கள்
கிடந்தவை முழங்கிட * களிறென்று
பெரிய மாசுணம் வரையெனப் பெயர்தரு
பிரிதி யெம்பெருமானை *
வரிகொள் வண்டறை பைம்பொழில்
மங்கையர் கலியன தொலிமாலை
அரியவின்னிசை பாடுநல்லடியவர்க்கு
அருவினை யடையாவே. (௰)

| | |
|---|---|
| *கரிய மா முகில் படலங்கள் அவை* | *கறுத்த மஹாமேகங்களின் கூட்டங்களானவை* |
| *கிடந்து* | *(நீர்க்கனத்தாலே திரிய மாட்டாமல்) ஓரிடத்திலே இருந்துகொண்டு* |
| *முழங்கிட* | *கர்ஜிக்க, (அந்த கர்ஜனையைக் கேட்டு)* |
| *பெரிய மாசுணம்* | *பெரிய மலைப்பாம்புகளானவை* |
| *களிறு என்று* | *(நமக்கு இரையாம்படி) யானைகள் (வருகின்றன) என்று நினைத்து* |
| *வரை என பெயர்தரு* | *மலைபேர்ந்தாற்போலே பெயர்ந்து கிட்ட வருமிடமான* |

| | |
|---|---|
| பிரிதி | திருப்பிரிதியிலே (எழுந்தருளியிருக்கிற) |
| எம் பெருமானை | எம்பெருமானைக் குறித்து,— |
| வரிகொள் வண்டு அறை பை பொழில் மங்கையர் | அழகிய வண்டுகள் ஒலிக்கின்ற விசாலமான சோலைகளையுடைய திருமங்கையிலே உள்ளவர்கட்குத் தலைவரான |
| கலியனது | ஆழ்வாருடைய |
| ஒலி மாலை | சொல்மாலையாகிய இத்திருமொழியினது |
| அரிய இன் இசை பாடும் | அருமையான இனிய இசையைப் பாடவல்ல |
| நல் அடியவர்க்கு | விலக்ஷண பாகவதர்களுக்கு |
| அரு வினை அடையா | மஹாபாபங்களொன்றும் கிட்டமாட்டா. |

[கரியமாமுகில்.] பரிபூர்ணமாக ஜலத்தை முகந்துகொண்டு கறுத்த நிறமுடையனவாயிருக்கிற பெரிய மேகங்களின் திரள்களானவை, உட்கொண்ட நீரின்கனத்தாலே பெயர்ந்து போகமாட்டாமல் இருந்தவிடத்திலேயிருந்து கர்ஜிக்கும்; அப் பெருமுழக்கத்தைக் கேட்ட மலைப்பாம்புகள் த்வநியின் காம்பீர்யத்தையும் உருவின் பெருமையையுங் கொண்டு இவை யானைகளாம் என்றெண்ணி அவற்றை விழுங்கநினைத்து மலை பெயருமாபோலே பெயர்ந்து கிட்ட வருகின்றனவாம்.

சில மலைப்பாம்புகள் யானையைப்பார்த்து அஞ்சிநடுங்கி ஓடிப்போய் விடுமென்றும், பல மலைப்பாம்புகள் யானையை அணுகி விழுங்கிவிடு மென்றும் தமிழ்நூல்களால் தெரிகின்றது; 'திரையன் பாட்டு' என்ற ஓர் பழைய நூலில்—"கடுங்கண்யானை நெடுங்கை சேர்த்தி, திடங்கொண்டறைதல் திண்ணமென்றஞ்சிப், படங்கொள் பாம்பும் விடரகம்புகூஉம், தடங்கொள் உச்சித் தாழ்வரை அடுக்கத்து" என்றதனால் மாசுணம் களிற்றைக்கண்டு அஞ்சி யொளிக்குமென்பது தெரிகின்றது. "ஞால் வாய்க் களிறு பாந்தட் பட்டெனத், துஞ்சாத்துயரத் தஞ்சுபிடிப் பூசல், நெடுவரை விடரகத் தியம்பும், கடுமான் புல்லிய காடிறந்தோரே" என்று சங்கநூல்களுள் ஒன்றான நற்றிணையிலும், * "பரிய களிற்றை அரவுவிழுங்கி மழுங்கவிருள் கூர்ந்த, கரிய மிடற்றர் செய்ய மேனிக் கயிலைமலையாரே" என்று தேவாரத்திலும், $ "இடி கொள் வேழத்தை எயிற்றொடு மெடுத்துடன்விழுங்கும், கடிய மாசுணங் கற்றறிந்த வரெனவடங்கிச், சடை கொள் சென்னியர் தாழ்விலர் தாமிதித் தேறப், படி கடாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்" என்று கம்பராமாயணத்திலும், உள்ள பாட்டுக்களால் மாசுணம் யானையை விழுங்கும் என்பது தெரிகின்றது. அஞ்சி ஒளித்தல் சிறுபான்மையும் விழுங்குதல் பெரும்பான்மையுமாயிருத்தலால் களிறென்று பேரியமாசுணம் வரையெனப் பெயர்தரு என்கிற இவ்விடத்திற்கு—மாசுணங்கள் மேகங்களை நோக்கி யானைகளாக ப்ரமித்து அவற்றை விழுங்குதற்காக மலை பெயருமாபோலே பெயர்ந்து கிட்டவருகின்ற—என்று பொருள் கொள்ளுதல் நன்கு பொருந்து மென்க. ... ... ... (க0)

அடிவரவு:—வாலி கலங்க அடி மறம் கரைசெய் பணங்கள் கார் இரவு ஒதி கரிய முற்ற.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

* தேவாரம் திருக்கயிலாயம் முதல் திருமுறை. 2—ம் பாட்டு,

$ கம்பராமாயணம் சித்திரகூடப்படலம் 34—ம் பாட்டு

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாந் திருமொழி—முற்றமூத்து.

திருப்பிரிதியை அநுபவித்த பிறகு திருவதரியை அநுபவிக்க இழிகிறார். பதரீ என்ற வடசொல் வதரியெனத் திரிந்துகிடக்கிறது. வடமொழியில் இலந்தைமரங்களுக்கு பதரீ என்று பெயர். அம்மரங்கள் அடர்ந்துகிடக்கும் ஸ்தானமென்பதுபற்றி பதரிகாச்ரமம் என்று ப்ரஸித்தமாக வழங்கப்படுகிற க்ஷேத்ரத்தை இத்திருமொழியிலும் அடுத்த திருமொழியிலும் அநுபவிக்கிறார். வதரி யென்பது வேறு, வதரியாச்சிரமம் என்பது வேறு—என்று சிலர் நினைத்திருப்பதுண்டு; உண்மையில் இரண்டும் ஒன்றே. "தென்னரங்கமே தென்னரங்கமே" என்று ஒருபதிகமருளிச்செய்து "அரங்மாநகரமர்ந்தானே" என்றும் "அணி பொழில் திருவரங்கத்தம்மானே" என்றும் வேறு பதிகங்களருளிச்செய்தவளவால் திவ்யதேசம் மாறுபட்டு விடாதிறே. அது போல் இங்குங்கொள்க. "வதரி வணங்குதுமே, வதரி வணங்குதுமே" என்ற இத்திருமொழியால் பதரிகாச்ரம க்ஷேத்ரத்தை மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்றும், "வதரியாச்சிரமத்துள்ளானே" என்ற அடுத்த திருமொழியால் அந்த க்ஷேத்திரத்தி லெழுந்தருளியிருக்கு மெம்பெருமானைத் துதிக்கின்றாரென்றும் உணர்க.

அடுத்த திருமொழியாகிய ஏனமுனாகி என்ற திருமொழியின் வியாக்கியான அவதாரிகைத் தொடக்கத்தில் "ஸ்ரீபதரியென்றும் பதரிகாச்ரமமென்றும் இரண்டு திருப்பதியாய்" என்று பெரியவாச்சான்பிள்ளை ஸ்பஷ்டமாக அருளிச்செய்திருக்கிறாரே, அதற்குக் கதி என்? என்று கேட்கக்கூடும். கேண்மின் ;— ஸ்ரீபதரீநாதன் எழுந்தருளியிருக்கிற திருமலை முழுவதையும் திருவுள்ளம்பற்றி வதரிவணங்குதுமே என்றும், அந்தத் திருமலையில் ஏகதேசமாயும் ஸ்ரீநாராயண மூர்த்தி தவம்புரிந்த இடமாயும் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளின இடமாயுமிருக்கிற ஸ்ரீபதரிகாச்ரம ஸ்தாந விசேஷத்தைத் திருவுள்ளம்பற்றி வதரியாச்சிராமத்துள்ளானே என்றும் அருளிச் செய்கிறார் ஆழ்வார்—என்னுமிவ்வளவையே பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி காட்டுமெத்தனை யொழிய வேறில்லை. திவ்யதேசக்கணக்கில் இவ்விரண்டையும் வெவ்வேறாகக்கொண்டு கணக்கிட்டால் நூற்றெட்டுத் திருப்பதி யென்பது போய் நூற்றொன்பது திருப்தியென்ன வேண்டிற்றும். பிள்ளைப்பெருமாளையங்கார் பாடிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் வடநாடு பன்னிரண்டனுள் வதரி என்று தனியே ஒரு திருப்பதி கூறப்படுவதில்லை; "தாட்கடிமை யென்று தமையுணரார்க் கெட்டெழுத்தும், கேட்க வெளியிட்டருளுங் கேசவனை—வேட்கையொடு, போவு தரிதானாலும் போய்த்தொழுவோ நெஞ்சமே, மாவதரி

யாச்சிரமத்து." என்று ஸ்ரீபதரிகாச்ரமமொன்றே பாடப்பட்டுள்ளது. ஆகையாலே, திருப்பதிக்கணக்கில் இரண்டும் ஒன்றே என்றும், ஆழ்வாரது திருவுள்ள நோக்கத்தால் ஸ்தாநபேதமுண்டென்றும் கொள்ளவேணும். நிற்க.

வதரி யென்னுமித்திருப்பதி மற்ற * கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை யென்னுந் திருப்பதிகள்போலல்லாமல் வெகு பரிச்ரமப்பட்டு அடையக்கூடிய தலமாதலால் சரீரம் கட்டுக்குலைவதற்கு முன்னே போய் அநுபவிக்கவேண்டு மத்தனை யன்றி உடல் தளர்ந்துபோனபின் நெஞ்சால் நினைக்கவும் அரிதாமாதலால் அப்படிப்பட்ட தளர்ச்சி நேருவதற்கு முன்னே (அதாவது—உடல் பாங்காக இருக்குங் காலத்திலேயே) சென்று ஸேவிக்கக் கடவதென்று அருளிச்செய்கிறார் இதில். ... ... ... ... *

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முற்றமூத்துக் கோல்துணையா முன்னடிநோக்கி வளைந்து *
இற்றகால்போல் தள்ளிமெள்ள விருந்தங் கிளையாமுன் *
பெற்றதாய்போல் வந்தபேய்ச்சி பெருமுலையூடு * உயிரை
வற்றவாங்கி யுண்டவாயான் வதரி வணங்குதுமே. (க)

| | |
|---|---|
| முற்ற மூத்து | பூர்த்தியாகக் கிழத்தனமடைந்து |
| கோல் துணை ஆ | ஊன்றுகோலை ஸஹாயமாகக்கொண்டு |
| முன் அடி நோக்கி வளைந்து | முன்காலைக் கவிழ்ந்து நோக்குமாபோலே கூன் முதுகிட்டு |
| இற்ற கால் போல் தள்ளி | முறிந்த கால்போலே தடுமாறி |
| மெள்ள இருந்து | மஹாப்ரயாஸத்தோடே உட்கார்ந்து |
| இளையா முன் | இவ்விதமாகக் கஷ்டங்களை யடைவதற்கு முன்னே, |
| பெற்ற தாய் போல் வந்த | பெற்ற தாயான யசோதையின் வடிவுகொண்டு (தன்னைக் கொல்ல) வந்த |
| பேய்ச்சி | பூதனையினுடைய |
| பெரு முலை ஊடு | பெரிய முலையின் வழியாக |
| உயிரை | அவளது உயிரை |
| வற்ற வாங்கி உண்ட வாயான் | நிச்சேஷமாக உறிஞ்சி உண்ட திருப்பவளத்தையுடையனான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற |
| வதரி | ஸ்ரீபதரியை |
| வணங்குதும் | வணங்குவோம். |

[முற்றமூத்து.] சரீரத்துக்கு எவ்வளவு கிழத்தனம் வரக்கூடுமோ அவ்வளவும் வந்து, நடந்து செல்லமாட்டாமல் ஒரு கோலைக் கையிலே அவலம்பமாகப் பிடித்துக்கொண்டு முதுகு கூனிட்டுப் போகவே முன்னடியை நோக்கி வளைந்து, முறிந்துபோன காலைக்கொண்டு நடக்கமுடியாதது போல ஓரடியும் எடுத்து வைக்கமாட்டாமல் தடுமாறி, தடி பிடித்துக்கொண்டும் நடக்கமாட்டாமல் திடீரென்று தரையிலே விழுந்திருந்துகொண்டு பெருமூச்சுவிட்டு இப்படியாக ச்ரமப்படுகிற காலம் வந்துவிட்டால் பதரிகாச்ரமயாத்ரையை

நெஞ்சால் நினைக்கவும் முடியாதே; ஆகையால் அப்படிப்பட்ட கெட்ட நிலைமை வருவதற்கு முன்னே ஸ்ரீபதரியைச் சென்று வணங்குவோம் வாருங்க ளென்று அன்பர்களை அழைக்கிறார்போலும்.

பேய்ச்சிபெருமுலையூடுயிரை வற்றவாங்கியுண்ட வரலாறு:—ஸ்ரீக்ருஷ்ணனைப் பெற்றதாயான தேவகியினது உடன்பிறந்தவனாய் அக்கண்ணபிரானுக்கு மாமனாகிய கம்ஸன், தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் ஒளித்து வளர்தலை அறிந்து, அக்குழந்தையை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அசுரர்களை யேவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ணசிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப் பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்பு களின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனன் என்பதாம்.

கோல்துணையா என்றவிடத்து வியாக்யானத்தில் ஓர் ஐதிஹ்யம் அருளிச் செய்வர்;—நஞ்சீயர் ஸந்ந்யாஸாச்ரமஸ்வீகாரம் செய்துகொள்ளும்போது த்ரிதண்டம் தரித்துக்கொள்வதற்கான மந்திரம் "సఖా మా గోపాయ" [ஸகா மா கோபாய] (இதன் பொருளாவது—ஓ த்ரிதண்டமே! நீ எனக்குத் துணையா யிருந்து என்னை ரக்ஷிக்கவேணும் என்பதாம்.) என்னக் கேட்டு, ஸர்வஜ்ஞனையும் ஸர்வசக்தனையும் பரமசேதநனையுமிருக்கிற எம்பெருமானையே துணையாகப் பற்ற வேண்டியிருக்க அசேதநமான தண்டத்தை நோக்கி இங்ஙனே சொல்லும்படி யாக ஒரு ஆச்ரமம் நேருவதே! என்று ஸாதித்தாராம். சாஸ்த்ர விதிப்படி கோலைத் துணைகொள்ள வேண்டியது அங்கு; கிழத்தனத்தில் கோலைத் துணை கொள்வது அசக்தியினாலே. அப்படிப்பட்ட அசக்தி வருவதற்கு முன்னே வதரி வணங்குதும்.

இவ்விடத்தில் இன்னுமோர் ஐதிஹ்யமும் சொல்லுவதுண்டு; நஞ்சீயர் பட்டர் திருவடிகளுக்கு அந்தரங்கராய் வர்த்திக்கிறநாளிலே ஒரு கைசிகத்வாதசி யன்று பட்டர் ப்ரஹ்மரதத்திலெழுந்தருளித் திருவீதி யலங்கரிக்கப் புறப்பட்ட வாறே நஞ்சீயரும் ஸ்ரீபாதம் தாங்கப் புக, "உத்தமாச்ரமியாய் த்ரிதண்டதாரி யான உமக்கு இக்காரியம் தகாது" என்று பட்டர் முதலானோர் மறுத்துக்கூற, நஞ்சீயர் "எனக்கு நீ துணையாகி என்னை ரக்ஷிக்கவேணும்" என்கிற மந்திரத் தைச் சொல்லி ஸ்வீகரிக்கப்பட்ட இந்த முக்கோல்தானே இன்று எனக்கு விரோதியாகிறதோ? இக்கோல் எனக்குத் துணையல்லவோ? ஸ்வரூபரக்ஷணத் துக்கு இக்கோல் இடையூறாயின் இஃது எனக்கு வேண்டா" என்று சொல்லி த்ரிதண்டத்தை விட்டெறியப் போனாராம். அப்போது அவருடைய பக்தி

விசேஷத்தைக் கண்டு அனைவரும் வியந்தனர். இவ் வைதிஹ்யங்கள் கோல் துணையா என்ற ப்ரஸங்கத்திலே நினைவுக்கு வரக்கூடியன.

கிழத்தனத்தில் முதுகு கூனிட்டபின் முன்னடி நோக்கி வளைதல் இயல்பு. ... ... ... ... ... ... ... (க)

முதுகுபற்றிக் கைத்தலத்தால் முன்னொரு கோலூன்றி *
விதிர்விதிர்த்துக் கண்சுழன்று மேற்கிளைகொண் டிருமி *
இதுவென்னப்பர் மூத்தவாறென் றிளையவ ரேசாமுன் *
மதுவுண்வண்டு பண்கள்பாடும் வதரி வணங்குதுமே. (உ)

| | |
|---|---|
| கைத் தலத்தால் | ஒரு கையாலே |
| முதுகு பற்றி | முதுகைப் பிடித்துக் கொண்டும் |
| முன் ஒரு கோல் ஊன்றி | (மற்றொருகையாலே) முன்னே ஒரு கொம்பை ஊன்றிக்கொண்டும் |
| விதிர் விதிர்த்து | (உடல்) நடுங்கியும் |
| கண் சுழன்று | கண்கள் சுழலமிட்டும் |
| மேல் கிளை கொண்டு இருமி | (லொக்குலொக்கென்று) பெரிய த்வநியைக் கொண்டு இருமியும் |
| | (ஆக இப்படிப்பட்ட ஜுகுப்ஸைகளைக்கண்டு) |
| இளையவர் | இளம்பெண்கள் (மோவாய்க் கட்டையில் கையை வைத்துக்கொண்டு) |
| அப்பர் மூத்த ஆறு இது என் என்று ஏசா முன் | "இந்தப் பெரியவர் கிழத்தனமடைந்த விது : என்ன விசித்திரம்!" என்று சொல்லிப் பரிஹஸிப்பதற்கு முன்னே, |
| மது உண் வண்டு | பூவில் தேனைப் பருகுகின்ற வண்டுகள் |
| பண்கள் பாடும் | இசைபாடப்பெற்ற |
| வதரி | ஸ்ரீபதரியை |
| வணங்குதும் | வணங்குவோம். |

* * *—[முதுகுபற்றி.] கிழத்தனத்தில் நாலடி நடந்தாலும் பலஹீனத்தால் முதுகு நோகும்; ஒருகையாலே முதுகைப்பிடித்துக்கொள்ள வேண்டியதாகும்; முன் பக்கமாக வளைந்து விழாமைக்காக ஒரு தடியை ஊன்றிக்கொள்ள வேண்டியதாகும்; இப்படி இரண்டு பக்கமும் கப்புக்கால் கொடுத்து நடக்கச் செய்தேயும் உடம்பு நடுங்கியும் கண்கள் சுழலமிட்டும் பெரிய த்வனியுண்டாம்படி இருமல் செய்தும் வெகு ஆயாஸம் தோற்ற நடக்க நேருமாகையாலே அந்த கோரமான நிலைமையைக்காணும் மாதர்களெல்லாரும் மோவாய்க்கட்டையில் கையை வைத்துக்கொண்டு "ஸ்வாமிகளே! நன்றாச்சுது; இப்படியும் ஒரு கிழத்தனம் வருவதுண்டோ? உலகில் எல்லாரும் மூப்பதுண்டு; இப்படி மூப்பவர்களை எங்குங்கண்டறியோம்; இஃது என்ன விசித்திரமான மூப்பு!" என்று சொல்லி ஏளனஞ் செய்வர்கள்; அப்படிப்பட்ட பரிதாபநிலைமையிலே வதரியை நெஞ்சாலும் நினைக்கப்ராப்தி இராது; ஆகையாலே, அப்படிப்பட்ட கிழத்தனம் வருதற்கு முந்தியே கரணகளேபரங்கள் பூர்ணசக்தியோடு இருக்கும் இளரொளியிளமையில்தானே பரமபோக்யமான வதரியை வணங்குதல் நன்று என்றாராயிற்று. தேனைப்பருகின வண்டுகள் களிப்புக்குப் போக்குவீடாக எல்லாப் பண்

களையும் பாடப்பெற்ற வதரியென்றது—“எனக்குத் தேனே பாலே கன்னலே அமுதே” என்னும்படியான எம்பெருமானைப் பூர்ணமாக அநுபவித்து அவ் வநுபவத்தாலுண்டாகிய ஆநந்தத்திற்குப் போக்குவீடாக “ஏதத் ஸாம காயந்நாஸ்தே. ஹாவு ஹாவு ஹாவு—ஏதத் ஸாம காயந்நாஸ்தே. ஹாவு ஹாவு ஹாவு” [தைத்திரீய உபநிஷத்து] என்றபடி ஸாமகாநம் பண்ணிக்களிக்கிற முமுக்ஷுக்கள் வாழப் பெற்ற வதரி என்றபடி.

விதிர்விதிர்த்தல்—நடுங்குதல். மேற்கிளைகொண்டிருமி—மேலான கிளை என்று பெரிய த்வனியைச் சொல்லுகிறது; கிழவர்கள் லொக்கு லொக்கென்று இருமும்போது உரத்த ஒலி உண்டாதல் காண்க. ... ... ... (உ)

உறிகள்போல்மெய்ந் நரம்பெழுந்து ஊன்தளர்ந் துள்ளமேள்கி *
நெறியைநோக்கிக் கண்சுழன்று நின்று நடுங்காமுன் *
அறிதியாகில் நெஞ்சமன்பாய் ஆயிரநாமம் சொல்லி *
வெறிகொள்வண்டு பண்கள்பாடும் வதரி வணங்குதுமே. (௩)

| | |
|---|---|
| மெய் நரம்பு | சரீரத்திலுள்ள நரம்புகள் |
| உறிகள் போல் எழுந்து | உறிகளைப்போலே மேலே கிளம்பித் தோற்றும்படியாக |
| ஊன் தளர்ந்து | மாம்ஸம் கட்டுக்குலைந்து |
| உள்ளம் எள்கி | நெஞ்சும் சிதிலமாகி |
| நெறியை நோக்கி கண் சுழன்று | நடந்து செல்லவேண்டிய வழியை நோக்கினவாறே கண்கள் சுழலமிட்டு |
| நின்று | போகமாட்டாதே ஸ்தம்பித்து நின்று |
| நடுங்கா முன் | நடுங்கும்படியான காலம் வருவதற்கு முன்னே,— |
| நெஞ்சம் | ஓ மனமே! |
| அறிதி ஆகில் | நீ விவேகியாகில் |
| அன்பு ஆய் | பக்தி பூண்டு |
| ஆயிரம் நாமம் சொல்லி | (எம்பெருமானது) திருநாமங்களை யெல்லாம் சொல்லிக்கொண்டு, |
| வெறி கொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதும் | பரிமளம்மிக்க வண்டுகள் இசைபாடப்பெற்ற ஸ்ரீபதரியை வணங்குவோம் வா. |

* * *—[உறிகள்போல்.] சரீரத்தில் நரம்புகளானவை இளமைப்பருவத்தில் மறைந்து கிடக்கும்; முதுமையில் சரீரம் பசையற உலர்ந்தபடியாலே அந்த நரம்புகள் உறிகள்போலே நீண்ட கொத்துக் கொத்தாகக் கிளம்பி விளங்கும் அதற்குத் தகுதியாக மாம்ஸம் க்ஷீணமாகி மனமும் நலிவுபடும். இப்படிப்பட்ட நிலைமையிலும் ஓரிடத்தில் வெறுமனே கிடக்கமாட்டாதே தாம்பும் தடியுமாகப் புறப்பட்டு எங்கேயாவது போகத் தொடங்குவர்கள். நெடிய வழியைப் பார்த்தவாறே கண்சுழலும்; பின்பு அடிபேர்ந்திடமாட்டாதே நடுங்கி நிற்பர்கள்; நெஞ்சமே! கிழத்தனத்தில் இங்ஙனே படும்பாடுகள் தெரிந்ததா உனக்கு; அப்போது பகவந்நாமங்களில் ஒன்றிரண்டையாகிலும் சொல்லத்தான் முடியுமோ? ஒரு திவ்ய தேசத்திற்குச் செல்லத்தான் முடியுமோ? ஒன்றும் முடியாது. நெஞ்சால் நினைக்கவுமரிது; வாயாற் சொல்லவுமரிது;

காலால் நடக்கவுமரிது. ஆகையால் போகப்போகப் பார்த்துக் கொள்வோ மென்று ஆறியிராமல், சரீரம் கொஞ்சம் த்ருடமாயிருக்கு மிக்காலத்திலேயே பக்தியுடன் பகவானுடைய திருநாமங்களையெல்லாம் அநுஸந்தித்துக்கொண்டு பரம போக்யமான வதரியை வணங்குதல் நன்றுகாண் என்றாராயிற்று ... (௩)

பீளைசோரக் கண்ணிடுங்கிப் பித்தெழ மூத்திருமி*
தாள்கள்நோவத் தம்மில்முட்டித் தள்ளி நடவாமுன்*
காளையாகிக் கன்றுமேய்த்துக் குன்றெடுத் தன்றுநின்றான்*
வாளைபாயும் தண்தடம்சூழ் வதரி வணங்குதுமே. (௪)

| பதம் | பொருள் |
|---|---|
| கண் இடுங்கி பீளை சோர | கண்கள் பசையற்றுப் பிளிச்சை பெருகவும் |
| பித்து எழ | பித்தம் மேலிடும்படியாகவும் |
| மூத்து | கிழத்தனமடைந்து |
| இருமி | (க்ஷயரோகத்தாலே) இருமிக்கொண்டு |
| தாள்கள் தம்மில் முட்டி நோவ | கால்கள் ஒன்றோடொன்று தாக்கி நோகும்படியாக |
| தள்ளி நடவா முன் | தடுமாறி நடப்பதற்கு முன்னே,— |
| அன்று | முன்னொரு காலத்தில் |
| காளை ஆகி | இளம்பிள்ளையா யிருந்துகொண்டு |
| கன்று மேய்த்து | கன்றுகளை மேய்த்து |
| குன்று எடுத்து நின்றான் | (அவற்றுக்குநேர்ந்த மழைத் தீங்கை யொழிப்பதற்குக்) கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்துநின்ற எம்பெருமானது |
| வாளை பாயும் தண் தடம் சூழ் | வாளைமீன்கள் குதித்துப் பாய்கின்ற குளிர்ந்த குளங்கள் சூழ்ந்த |
| வதரி வணங்குதும் | ஸ்ரீபதரியை வணங்குவோம். |

* * *—[பீளைசோர.] கிழத்தனத்தில் கண்கள் சுருங்கிப்போய் அவற்றில் நின்று பிளிச்சை பெருகவும், பித்தம் மேலிட்டுத் தலைசுற்றித் தள்ளம்பாறி நடக்கவும் நேர்தல் இயல்வு. அப்படி நேர்ந்தகாலத்து வதரி வணங்குதல் முடியாத காரியமாதலால் அப்படி நேருவதற்கு முன்னமே அதனை வணங்குதல் நன்று.

பீளை—கண்ணழுக்கு. இடுங்குதல்—சுருங்குதல். பித்து—'பித்தம்' என்ற வடசொற்சிதைவு. தாள்கள் தம்மில்முட்டுதலாவது = இரண்டுகால்களும் அடைவே நடக்கமாட்டாமையாலே ஒரு முழந்தாளை மற்றொரு முழந்தாள் தாக்குதல்.

காளை =" காளையே எருது பாலைக்கதிபன் நல்லிளையோன் பேராம்" என்பது நிகண்டு. காளையாகிக் கன்று மேய்த்தது கிருஷ்ணாவதாரத்தில். குன்றெடுத்துநின்ற வரலாறு:—திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்களெல்லாரும் கண்ணபிரானுடைய அற்புத சரிதைகளைக்கண்டு 'இவனே நம் குலக்கொழுந்து, இவன் சொற்படி நடப்பதே நமது கடமை' என்று தீர்மானித்திருந்தார்கள். இருக்கையில் சரத்காலம் வந்தது; அப்போது இடையர்கள்

வருஷந்தோறும் நடத்துவதுபோல் இந்திரனுக்குப் பூசை செய்யப் பலபல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜைப் பொருள்களையும் அமைப்பதைக்கண்டு கண்ணபிரான் 'ஓ பெரியோர்களே! இவை எதுக்காக' என்றான்; அதற்கு அவர்கள் 'அப்பா! தேவேந்திரனுடைய அநுக்ரஹத்தினால் காலங்களில் தகுதியாக மழைபெய்து அதனால் பசுக்களும் நாமும் ஸுகமே வாழ்கின்றோம்; இனி எப்போதும் அந்த இந்திரன் நம்மை இப்படியே ரக்ஷிக்கவேணு மென்கைக்காக அவனுக்கு வருஷத்துக்கு ஒரு முறை பொங்கலிடுவதுண்டு; அதற்காக இவையெல்லாம் சேர்த்து வைத்தோம்' என்றனர். கண்ணன் அதுகேட்டு 'நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கின்றோமோ அதற்கன்றோ பூஜை செய்யவேண்டும்; இக் கோவர்த்தன மலையன்றோ பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பிரயோஜனமுண்டு? இதையெல்லாம் நீங்கள் இந்த மலைக்கே பலியிடுங்கள்' என்ன, இடையர்கள் அப்படியே செய்யத் துணிந்து மலைக்கே பலியிட்டவளவில், கண்ணபிரான் தான் அம்மலையில் ஆவேசித்து அவற்றையெல்லாம் தானே அமுதுசெய்திட்டான். பின்பு பூஜையிழந்த இந்திரன் சீற்றமுற்றுத் தன் பரிஜனங்களான மேகங்களையழைத்து 'இடைக்குலத்துக்குப் பெருந்தீங்கு விளையும்படி விடாமழை பெய்யுங்கள்' என்று சொல்லிக் கட்டளையிடவே அம்மேகங்கள் அப்படியே வந்து ஏழுநாள் விடாமழை பெய்ய, இடையரும் பசுக்களுமெல்லாம் கதறிக்கதறிக் கண்ணனையே சரணமடைய, கண்ணபிரான் அபயமளித்து அந்த மலையைப் பிடுங்கிக் குடையாகத் தூக்கித் தாங்கி, கோகுலத்தைச் சேர்ந்த ஸகல பிராணிகளையும் அதன்கீழ் அழைத்துக் கொண்டு சிறிதும் அபாயமின்றிக் காப்பாற்றியருளினன். ஏழுநாள் இடைவிடாது கல்மாரி பெய்தும் யாருக்கும் எவ்விதமான பாதையும் நேரிடாமையைக் கண்ட இந்திரன் பராத்பரனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமைக்கு வியந்து கீழ் இறங்கி வந்து பணிந்து அபராதக்ஷாமணம் பண்ணிக்கொண்டு போய்ச் சேர்ந்தான். ... ... ... ... ... ... ... (௪)

பண்டுகாம ரானவாறும் பாவையர் வாயமுதம்
உண்டவாறும் * வாழ்ந்தவாறும் ஒக்க வுரைத்திருமி*
தண்டுகாலா வூன்றியூன்றித் தள்ளி நடவாமுன்*
வண்டுபோடும் தண்டுழாயான் வதரி வணங்குதுமே. (௫)

| | |
|---|---|
| பண்டு | இளம்பிராயத்தில் |
| காமர் ஆன ஆறும் | மாதர்கள் விரும்புதற்கு உரியராக இருந்தபடியையும் |
| பாவையர் வாய் அமுதம் உண்ட ஆறும் | அம்மாதர்களுடைய வாயமுதத்தைப் பருகினபடியையும் |
| வாழ்ந்த ஆறும் | சிற்றின்பங்களில் அழிந்தபடியையும் |
| ஒக்க உரைத்து இருமி | சொல்லுவது இருமுவது, மறுபடியும் சொல்லுவது இருமுவது ஆக இப்படியாகி |
| தண்டு காலா | தடியைக் காலாகக் கொண்டு |

| | |
|---|---|
| ஊன்றி ஊன்றி | (அசக்தியினல் ஓரிடத்திலேயே) பலதடவை ஊன்றி |
| தள்ளி | தடுமாறி |
| நடவா முன் | நடக்க நேருவதற்கு முன்னே |
| வண்டு பாடும் தண் துழாயான் | (மதுவுக்காக வந்து) வண்டுகள் பாடுகிற திருத்துழாய் மாலையையுடையனை எம்பெருமானை |
| வதரி வணங்குதும் | ஸ்ரீபதரியை வணங்குவோம். |

* * *—[பண்டு காமர்.] ஸம்ஸாரிகளுடைய காலக்ஷேபக்ரமத்தைப் பேசுகிறார். உடலில் வலிவு இருந்தகாலத்தில் ஒரு நல்ல காரியம் பண்ணியறியார்கள்; விஷய போகங்கள் செய்வதற்கு எவ்வளவு நிஷித்த காரியங்கள் செய்ய வேணுமோ அவ்வளவும் செய்து தீருவர்கள்; இப்படியாக யௌவனபருவத்தைக் கழித்துவிட்டுக் கிழத்தனத்தில் வந்தவாறே அப்போதாவது இழந்த நாளைக்கு அநுதாபப்பட்டு ஏதாவது நன்மை தேடிக்கொள்ள விரும்புவார்களோ; அது கிடையாது; பின்னை என் செய்வார்களென்னில்; தங்கள் உடம்பு கட்டுக்குலைந்தபடியையும் ரூபலாவண்யங்கள் மங்கிப்போனபடியையும் விஷயபோகங்கள் செய்யமுடியாதபடியையும் நினைந்து நினைந்து வருந்தி "ஐயோ! இளமையில் அப்படியிருந்தேனே; என்னைக் கண்டு காமுறுதவர்களே கிடையாதே; எத்தனையோ மாதர்களை அநுபவித்தேனே; எப்படியோ வாழ்ந்தேனே; இப்போது ஒன்றுக்குமுதவாத காஷ்ட்ட லோஷ்ட்டத்துக்குங் கடைகெட்டவனாய் விட்டேனே!" என்று கதறியழுவதும் நடுநடுவே லொக்கு லொக்கென்று இருமுவதும் செய்வர்கள். அப்போதாவது ஆசையற்று வாளா கிடப்பர்களோ? கிடவார்கள்; தண்டு காலா ஊன்றியூன்றித் தள்ளிநடந்து செல்லப் பார்ப்பர்கள்; (எங்கே? —பாவையர் வாயமுதமுண்ட விடத்திற்கு.)

அப்படிப்பட்ட நிலைமை நேருவதற்கு முன்னே, தோளிணைமேலும் நன்மார்வின்மேலுஞ் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மானெழுந்தருளியிருக்கிற வதரியை வணங்குதல் நன்று.

பாவையர்வாயமுதம் என்றதும், வாழ்ந்தவாறும் என்றதும் ஸம்ஸாரிகளுடைய சொலவை அநுவதித்தபடி. பிளிச்சைக்கண்ணிகளைப் பாவையரென்பதும், அவர்களது ஊத்தைவாயில்நீரை அமுதமென்பதும், அவர்களோடு கலந்து கெட்டுப்போனதை வாழ்ச்சியென்பதும் ஸம்ஸாரிகளுடைய சொல்லேயன்றி ஆழ்வாருடைய நெஞ்சிலும் அப்படியில்லையிறே. பாவையர் = பதுமைபோல் அழகியவர்கள் என்றபடி.

ஒக்கவுரைத்திருமி = உரைப்பதும் இருமுவதும் ஒரே காலத்திலாம். நாலு பதங்களைச் சேர்த்துச் சொல்ல சக்தியற்று எப்போதும் இருமிக்கிடக்குங் காலத்திலே வாயாற் சொல்லமுடியுந்தனையும் சில பகவந்நாமங்களைச் சொல்லிப் போதுபோக்கலாமாயிருக்க அப்போதும் பழைய கெட்டகாரியங்களையே அநுவாதஞ் செய்துகொண்டு பாழாய்ப் போவர்கள் ஸம்ஸாரிகள். ... (ரு)

எய்த்தசொல்லோ டீளையேங்கி இருமி யிளைத்துடலம் *
பித்தர்போலச் சித்தம்வேறாய்ப் பேசி யயராமுன் *
அத்தனெந்தை யாதிமூர்த்தி ஆழ்கடலைக் கடைந்த *
மைத்தசோதி யெம்பெருமான் வதரி வணங்குதுமே. (௬)

| | |
|---|---|
| எய்த்த சொல்லோடு | பலஹீனமான பேச்சுடனே |
| ஈளை ஏங்கி | கோழைவந்து தங்கப்பெற்று |
| இருமி | இருமி |
| உடலம் இளைத்து | சரீரம் மெலிந்து |
| பித்தர் போல | பைத்தியம் பிடித்தவர்கள் போல |
| வேறு சித்தம் ஆய் பேசி | விகாரப்பட்ட மனமுடையராய் வார்த்தைசொல்லி |
| அயரா முன் | தளருவதற்கு முன்னே,— |
| அத்தன் | ஸர்வஸ்வாமியாய் |
| எந்தை | எமக்குத் தந்தையாய் |
| ஆதி மூர்த்தி | உலகத்திற்கு மூலக்கடவுளாய் |
| ஆழ் கடலை கடைந்த | (ஒரு காலத்தில் தேவர்களுக்காக) ஆழ்ந்த கடலைக் கடைந்தவனாய் |
| மைத்த சோதி | மைபோல் சாமமான புகரை யுடையனான |
| எம்பெருமான் | எம்பெருமானுடையதான |
| வதரி வணங்குதும் | ஸ்ரீ பதரியை வணங்குவோம். |

* * *—[எய்த்த சொல்லோடு.] கிழத்தனத்தில் ஒருவார்த்தை சொல்ல ஆரம்பிக்கும்போதே தட்டித் தடுமாறிக் குதலைச் சொல்லாக வரும்; அத்தோடு கூடவே கபமும் வந்து விழும்; கூடவே இருமலும் வந்து சேரும்; ஆக இவ்வளவால் சரீரமானது இன்னமும் அதிகமாக பலஹீனப்பட்டுவிடும். அவ்வளவிலும் வாயை மூடிக்கொண்டு வெறுமனிருக்கமாட்டார்களாகையால் பைத்தியம் பிடித்தவர்கள் போல் சித்தம் ஸ்வாதீனமல்லாமல் எதையாவது தத்தக பித்தகவென்று பேசுவார்கள்; அந்தப் பேச்சும் பொறாமல் ஆயாஸம் அதிகரித்துவிடும். அப்படிப்பட்ட நிலைமையில் நாமெங்கே? வதரி யெங்கே? நெஞ்சால் நினைக்கத்தான் முடியுமோ? ஆகையாலே இப்போதே வதரியை வணங்குவோம் என்றாராயிற்று.

**அத்தன்** என்பதனால், பொதுப்படையாக உலகத்துக்கெல்லாம் ஸ்வாமி என்பதும், **எந்தை** என்பதனால், விசேஷித்துத் தமது ஸ்வாமி என்பதும் சொல்லப்பட்டதாம்.

ஆழ்கடலைக் கடைந்தது கூர்மாவதாரத்தில். அந்த வரலாற்றை மேலே கூர்மாவதாரப்ரஸங்கம் வருமிடத்து வரைவோம். .... ... ... (௬)

பப்பவப்பர் மூத்தவாறு பாழ்ப்பது சீத்திரளை
யொப்ப * ஐக்கள் போதவுந்த உந்தமர் காண்மினென்று *
செப்புநேர்மென் கொங்கைநல்லார் தாம்சிரி யாதமுன்னம் *
வைப்பும்நங்கள் வாழ்வுமானான் வதரி வணங்குதுமே. (௭)

| | |
|---|---|
| சீத் திரளை ஒப்ப | சீயின் திரட்சிபோல |
| ஐக்கள் | கோழையானது |
| போத உந்த | மிகவும் அதிகரிக்க, (அந்த நிலைமையைக் கண்டு) |
| செப்பு நேர் மென் கொங்கை நல்லார் தாம் | செப்புப் போன்ற மெல்லிய முலைகளையுடைய மங்கைமார்கள் |
| பப்ப | " அப்பப்ப ! |
| அப்பர் மூத்த ஆறு பாழ்ப்பது | இந்த சாமியார் கிழத்தன மடைந்த விதம் மிகவும் பொல்லாது" (என்று தங்களில் சொல்லிக் கொண்டும்) |
| உம் தமர் காண்மின் என்று | " அடா! உங்களோடு உறவுள்ள ஐயங்காரைப் பாருங்கள் " என்று (அயற்பெண்களோடே ஏளனமாகச் சொல்லியும்) |
| சிரியாத முன்னம் | சிரிப்பதற்கு முன்னமே,— |
| நங்கள் வைப்பும் வாழ்வும் ஆனான் வதரி வணங்குதும் | நமக்கு நிதி போன்றவனும் நம்மை வாழ்விப்பவனுமான எம்பெருமானது ஸ்ரீபதரியை வணங்குவோம். |

* * *—[பப்பவப்பர்.] உலகில் விசித்திரமானதொன்றைப் பார்க்கும்போதும் விகாரமானதொன்றை பார்க்கும்போதும் கண்கூசி அப்பப்ப! என்று மெய் சிலிர்த்துக் கூறுவது வழக்கம். கிழவர்கள் தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளி நடந்துகொண்டு, தாம் நெடுநாள் பழகின மின்னிடை மடவார் வீதியேறச் சென்றவாறே அளவு கடந்த கிழத்தன விகாரங்களைக்கண்டு அந்த மாதர்கள் 'அப்பப்ப!' என்று தங்களுக்குள்ளே அதிசயித்து, 'உலகில் எல்லாரும் கிழத்தன மடைவதுண்டு; இதென்னடோயப்பா!' 'இப்படிப்பட்ட கிழத்தனம் எங்குங் கண்டதில்லை. மிகவும் பொல்லாத கிழத்தனமாயிருக்கின்றதே இது;' என்று சொல்லிச் சிரிப்பர்கள்; அவ்வளவோடு நில்லாமல் அண்டைவீட்டுக்காரிகளை யழைத்து 'உங்கள் எஜமானர் வந்திருக்கிற அழகைப்பாருங்கள்' என்று காட்டியும் சிரிப்பர்கள்; அப்படிப்பட்ட பரிஹாஸங்களுக்கு ஆளாவதற்கு முன்னே வதரி வணங்குதல் நன்று.

ஐ என்றும் ஐக்கள் என்றும் ஐயார் என்றும் கோழைக்குப் பெயர். உந்தமர் காண்மின்=உண்மையில் தாங்கள் விரும்பி ஆதரித்திருந்த புருஷர்களாயிருந்தாலும் அப்போதைய நிலைமையைக்கண்டு வெறுத்துத் தங்களுக்கொரு உறவு சொல்லிக்கொள்ள வெள்கி அயற்பெண்டுகளை யழைத்து 'உங்களவர் வந்தார், பாருங்கள்' என்று சொல்லி ஏசிச் சிரிப்பர்களாம் செப்பு நேர்மென் கொங்கை நல்லார்தாம். இவ்விடத்தில் வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்;—"இவன் பக்கல் யௌவனமும் கையில் வீசமும் உள்ளவன்று எல்லாருமொக்க என்தமர் என்தமர் என்பர்கள்; கையில் வீசமும் போய் 'இவனோட்டை ஸம்பந்தம் நமக்கு அவத்யாவஹம்' என்று தோற்றும்படி யௌவனமும் போனவாறே உன்னுடையவன் என்றும், மற்றையவளும் 'உன்னோடேயன்றோ அவனுக்கு உறவு' என்றும் தங்களோடே தொற்றறச் சொல்லிப் பிணங்கா நிற்பர்கள்."

செப்புநேர்மென் கொங்கைநல்லார் என்று விசேஷித்ததற்கு விநோதமாகக் கருத்து அருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை ;—" இவனைக்கொண்டு போது போக்குகைக்காக முலைக்கச்சை நெகிழ்த்தி முலையினுடைய ஸந்நிவேசத்தைக் காட்டுவர்கள் ; இவன் கண்ணை விடுத்து எழப் பார்க்கும் ; அதைக்கண்டு 'பிள்ளாய் ! இவன் இவற்றோடு என்ன உறவுண்டாய்ப் பார்க்கிறான் ! ஐயோ !' என்று சிரிப்பர்களாயிற்று."

நங்கள்வைப்பும் வாழ்வுமானான் = எம்பெருமானே உபாயம், அவனே உபேயம் என்கிற அர்த்தம் சொல்லுகிறது. வைப்பு என்று உபாயத்வமும், வாழ்வு என்று உபேயத்வமுஞ் சொல்லிற்றாம். (எ)

ஈசிபோமி னீங்கிரேன்மின் இருமியிளைத்தீர் * உள்ளம்
கூசியிட்டீ ரென்றுபேசும் குவளையங் கண்ணியர்பால் *
நாசமான பாசம்விட்டு நன்னெறி நோக்கலுறில் *
வாசம்மல்கு தண்டுழாயான் வதரி வணங்குதுமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| இருமி இளைத்தீர் | " (ஐயங்கார்களே !) இருமலும் இளைப்புமாக ஆனீர்கள் ; | குவளை அம் கண்ணியர் பால் | கருநெய்தல் போன்ற அழகியகண்ணையுடைய மாதர்களிடத்து |
| உள்ளம் கூசியிட்டீர் | நெஞ்சு கூசப் பெற்றீர்கள் ; | நாசம் ஆன பாசம் விட்டு | ஸ்வரூபநாசத்தை விளைக்க வல்ல ஆசாபாசத்தை விட்டுத் தொலைத்து |
| போமின் | அப்பால் ஒழிந்து போங்கள் ; | நல் நெறி நோக்கல் உறில் | நல்வழி போகப் பார்க்கும் பக்ஷத்தில் |
| ஈசி | சீ சீ ; | | |
| ஈங்கு இரேல்மின் | இங்கே இருக்கக்கூடாது ;" | வாசம் மல்கு தண் துழா யான் வதரி வணங்குதும் | பரிமளம் மிக்குக் குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடைய எம்பெருமானது ஸ்ரீபதரியை வணங்குவோம். |
| என்று பேசும் | என்றிப்படி அவமரியாதையாகப் பேசுகிற | | |

* * *[ஈசிபோமின்.] * முற்ற மூத்துக் கோல்துணையா முன்னடி நோக்கி வளைந்து சென்று குறடேறும்போதே, "சீ சீ, நட, நட" என்று துரத்தியடிப்பர்கள்; வாசலை விடமாட்டாத சாபல்யத்தாலே 'அம்மா! நான் உள்ளே வரவில்லை; தெருத்திண்ணையிலேயே கிடந்து போகிறேன்' என்று விநயமாகச் சொல்லி உட்காரப் பார்த்தவளவில், 'ஈங்கிரேல்மின்' என்று வெருட்டுவர்கள்; பண்டெல்லாம் 'என்னைவிட்டுப் பிரியக்கூடா'தென்று சொல்லிக்கொண்டிருந்த நீங்கள் இன்று இங்ஙனே வெருட்டுவானேன் என்று கேட்டால், இருமி இளைத்தீர், உள்ளம் கூசியிட்டீர் என்பர்கள். அப்படி சொல்லி வெருட்டும்போதும் பாவக் கொடுமையாலே அந்தப் பிளிச்சைக்கண்ணிகளிடத்துப் பாசம் ஒழியாது மயங்கி நிற்குங்கள் கிழப்பிணங்கள்; ஆசாபாசம் விடவொண்ணாதே. அந்த ஆசாபாசம் ஸ்வரூப நாசத்துக்கே உறுப்பாகையாலே அதனை விட்டொழித்து நல்வழிசேர நினைவுண்டாகில் வதரி வணங்குதல் நன்று.

ஈசி-'சீ சீ' என்ற இழிவுரையின் விகார அநுகாரம். குவளையங்கண்ணி யர் என்றது-கண்ணழகிலே துவண்டு நிற்கும் கிழப்பிணங்களின் கருத்தாலே யாம். நாசமான என்றது-நாச ஹேதுவான என்றபடி. பாசம்-அன்பு. நன் னெறி— அர்ச்சிராதி மார்க்கம் என்னலாம். ... ... ... (அ)

புலன்கள்நைய மெய்யில்மூத்துப் போந்திருந் துள்ளமெள்கி *
கலங்கவைக்கள் போதவுந்திக் கண்ட பிதற்றாமுன் *
அலங்கலாய தண்டுழாய்கொண் டாயிரநாமம் சொல்லி *
வலங்கொள்தொண்டர் பாடியாடும் வதரி வணங்குதுமே. (கூ)

மெய்யில் — சரீரத்தில்
புலன்கள் நைய — செவி வாய் கண் முதலிய இந்திரியங்களெல்லாம் சிதிலமாம்படி
மூத்து — கிழத்தன மடைந்து
போந்து இருந்து — (நால்வரிருக்குமிடத்தில் தலைகாட்டக்கூசி ஏகாந்த ஸ்தலத்திலே) போயிருந்து
உள்ளம் எள்கி கலங்க — நெஞ்சு விகாரப்பட்டுக் கலங்க
ஐக்கள் போத உந்தி — கோழைகளை அதிகமாக உமிழ்ந்து கொண்டு
கண்ட — நெஞ்சில் தோன்றின வற்றை யெல்லாம்
பிதற்றாமுன் — பிதற்றுவதற்கு முன்னே,—
வலம் கொள் தொண்டர் — சிறந்த பக்தர்கள்
அலங்கல் ஆய தண் துழாய் கொண்டு — மாலையாகத் தொடுக்கப்பட்ட குளிர்ந்த திருத்துழாயைக் கையிற் கொண்டு
ஆயிரம் நாமம் சொல்லி — ஸஹஸ்ரநாமங்களை அநுஸந்தித்து
பாடி ஆடும் — பாடுதலும் ஆடுதலும் செய்யப்பெற்ற
வதரி வணங்குதும் — ஸ்ரீபதரியைவணங்குவோம்.

* * *—[புலன்கள் நைய.] கருமேந்திரியங்களென்றும் ஜ்ஞானேந்திரியங்க ளென்றும் இந்திரியங்கள் இருவகைப்படும். வாய் கை கால் குதம் குறி என்பன கருமேந்திரியங்கள்; நாக்கு மூக்கு கண் காது உடல் என்பன ஞானேந்திரியங் கள். இவை யெல்லாம் சிதிலமாவது கிழத்தனத்தில். கண் தெரியாதபடியும் காது கேளாதபடியும் அடியெடுத்து வைக்க முடியாதபடியும் கிழத்தனம் அதி கரித்து ஒரு மூலையிலே கிடந்து கண்டபடி பிதற்ற நேருங்காலத்தில் வதரியை ஸ்மரிக்கத்தான் யோக்யதை ஏது? அப்போதைக் கிப்போதே வதரிவணங்குதல் நன்று.

"கண்ட பிதற்றாமுன்" என்றவிடத்து கண்ட=பலவின்பால் வினையா லணையும் பெயர்; இரண்டாம் வேற்றுமைத் தொகை: கண்ட வார்த்தைகளையும் என்றபடி.

வலங்கொள் தொண்டர்= ಬಲ [பலம்] என்ற வடசொல் வலமெனத் திரிந்ததாகக் கொண்டால் 'வலங்கொள்' என்றது 'ப்ரபலர்களான' என்றபடி: பகவானை அநுபவிப்பதில் கைதேர்ந்தவர்களான என்கை. வலங்கொள்ளுதல் என்று பிரதக்ஷிணஞ் செய்தலைச் சொல்லிற்றாகவுமாம். ... ... (கூ)

வண்டுதெண்டேனுண்டுவாழும் வதரிநெடுமாலை *
கண்டல்வேலிமங்கைவேந்தன் கலியனொலிமாலை *
கொண்டுதொண்டர்பாடியாடக் கூடிடில் நீள்விசும்பில் *
அண்டமல்லால்மற்றவர்க்கோ ராட்சியறியோமே. (௰)

| பதம் | பொருள் |
|---|---|
| வண்டு | வண்டுகளானவை |
| தண் தேன் உண்டு வாழும் வதரி | குளிர்ந்த தேனைப் பருகிக் களித்து வாழுமிடமான ஸ்ரீபதரியில் எழுந்தருளி யிருக்கிற |
| நெடு மாலை | ஸர்வேச்வரன் விஷயமாக, |
| கண்டல் வேலி மங்கை வேந்தன் கலியன் | தாழைகளை வேலியாகக் கொண்ட திருமங்கைக் குத் தலைவரான ஆழ்வார் |
| ஒலி | அருளிச் செய்த |
| மாலை கொண்டு | இந்த சொல் மாலையைக் கொண்டு |
| தொண்டர் | பக்திமான்கள் |
| பாடி ஆட கூடிடில் | பாடிக்கொண்டும் ஆடிக் கொண்டும் அநுபவிக்கப் பெற்றால் |
| அவர்க்கு | அப்படிப்பட்ட மஹான்களுக்கு |
| நீள் விசும்பில் அண்டம் அல்லால் | பரமாகாசத்திலேயுள்ள பரமபதத்தைத் தவிர |
| மற்று ஓர் ஆட்சி அறியோம் | வேறொரு லோகமாளப் பெறுதல் இல்லை. |

* * *—[வண்டுதெண்டேன்.] இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிற பாசுரம் இது. வண்டுகள் தேனைப் பருகிக் களித்து வாழுமிடமான ஸ்ரீபதரியிலே எழுந்தருளியிருக்கின்ற ஸர்வேச்வரன் விஷயமாகத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்த இந்த ஸ்ரீஸூக்திகளாலே அப்பெருமானைப் பாடி, பாட்டுக்குத் தகுதியாக ஆடி அநுபவிக்கப்பெற்றால் அவர்கள் ஸாக்ஷாத் பரமபதத்தை ஆளப் பெறுவர்களேயன்றி அல்பங்களாயும் அஸ்திரங்களாயுமுள்ள உலகங்களிற் சென்று துவளமாட்டார்களென்றதாயிற்று.

ஒவ்வொரு பாட்டிலும் வதரிவணங்குதுமே என்று தலத்தைப்பற்றிச் சொல்லிவந்தவர் இப்பாட்டில் வதரிநெடுமாலை என்று தலைக்கட்டுகையாலே வதரிநாராயணனை உத்தேசித்தே வதரி வணங்கினு ரென்னுமிடம் வ்யக்தமாகிறது.

இத்திருமொழியில் ஒவ்வொரு பாட்டிலும் இளையாமுன், ஏசாமுன், நடுங்காமுன், தள்ளிநடவாமுன், பேசிஅயராமுன், சிரியாதமுன்னம் என்று அருளிச் செய்து வந்தாரே; 'இப்படிப்பட்ட அசக்திகாலம் உங்களுக்கு நேருவதற்கு முன்னே வதரியைப்போய் வணங்குங்கள்' என்று பிறர்க்கு உபதேசித்தாரா? அன்றி, அசக்திவருவதற்கு முன்னே ஆழ்வார் தாம் வதரியை வணங்கப் பாரித்தாரா? என்று கேள்விகேட்பர் சிலர். வணங்குதும் என்று தன்மையாகச்சொல்லியிருக்கிறரேயன்றி "வணங்குமினே" என்று முன்னிலையாகச் சொல்லவில்லை; ஆகையாலே பிறர்க்கு உபதேசிக்கிறரென்னப் போகாது; தாம் பாரிக்கிறார்

என்றே சொல்லவேண்டும். ஆனாலும், "பண்டு காமரானவாறும் பாவையர் வாயமுதமுண்டவாறும் வாழ்ந்தவாறும் ஒக்கவுரைத்திருமி" "பப்பவப்பர் மூத்தவாறு பாழ்ப்பது சீத்திரளை யொப்ப, ஐக்கள் போதவுந்த உன்தமர் காண்மினென்று, செப்பு நேர்மென் கொங்கை நல்லார் தாம் சிரியாத முன்னம்" "ஈசி போமினீங்கிரேன்மின்" இத்யாதி பாசுரங்களின் போக்கை நோக்குமிடத்து ஆழ்வார் இங்ஙனே தம்மைப்பற்றிச் சொல்லிக் கொள்ளமாட்டாரென்று தோன்றுகிறது. விஷயாந்தரங்களைக் காரியுமிழ்ந்து மறந்தொழிந்த இவர் மறுபடியும் தமக்கு அப்படிப்பட்ட ஸம்பவங்கள் நேரிடுமென்று நினைப்பதுகூடாது. ஆகையாலே இத்திருமொழி பரோபதேசமும் ஸ்வாநுபவமும் கலந்த அருளிச்செயல் என்றே நிச்சயிக்க வேண்டும். "தில்லைத்திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்களே" என்றும் "திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே" என்றும் பரோபதேசமாய் முன்னிலையாகச் சொல்லுமிடங்களில் ஸ்வாநுபவத்திற்கும் குறையில்லாதாப் போலே வணங்குதும் என்று ஸ்வாநுபவமாய்த் தன்மையாகச் சொன்ன இவ்விடத்திலும் ஸ்வாநுபவத்தோடு கூடவே பரோபதேசமும் நிகழ்கின்றதென்று கொள்ளக்கடவது. பிறரை நோக்கிச் சொல்ல வேண்டிய வார்த்தைகளையும் தன்மையாகவே சொல்லிவிடுவதும் ஒரு வழக்கமுண்டு. ... ... (ய.)

அடிவரவு:—முற்ற முதுகு உறிகள் பீளை பண்டு எய்த்த பப்ப ஈசி புலன்கள் வண்டு ஏனம்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

**ஜீயர் திருவடிகளே சரணம்.**



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—நான்காந்திருமொழி.

# ஏனமுனாகி.



அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் வதரிவணங்குதுமே என்று ஸ்ரீ பதரிகாச்ரமத்திற்கு ஆதாரமான திருமலையை வணங்கப் பாரித்தார்; பதரீநாதன் எழுந்தருளியிருக்கும் ஸந்நிதிமாத்திரம் இவர்க்கு உத்தேச்யமன்று; அந்த ஸந்நிதிக்கு ஆதாரமான திருமலை முழுதுமே உத்தேச்யமாகையாலே அது தன்னைப் பேசினர் கீழே. வழியடைவே மலையுச்சியிற்சென்று பதரிகாச்ரமமென்னும் ஸந்நிதியையும் அதில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ நரநாராயணப் பெருமாளையும் அநுபவித்துப் பேசுகிறதாயிருக்கிறது இத்திருமொழி. "தாட்கடிமையென்று தமையுணரார்க் கெட்டெழுத்துங், கேட்க வெளியிட்டருளுங் கேசவனை—வேட்கையொடு, போவதரிதானாலும் போய்த் தொழுவோம் நெஞ்சமே, மாவதரியாச்சிரமத்து." என்ற நூற்றெட்டுத் திருப்பதியந்தாதிப் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது. முன்னொரு காலத்தில் குரு சிஷ்யக்ரமத்தை உலகத்தில் அனைவர்க்கும் நன்கு விளக்குவதற்காக நரனென்னும் சிஷ்யனும் நாராயணனென்னும் குருவுமாக ஸ்ரீபதரிகாச்ரமத்தில் எம்பெருமான் அவதரித்து, சிஷ்யனுக்குக் குரு திருமந்திரத்தை உபதேசித்தருளினவிடம் இது—என்பது ஸம்ப்ரதாயம்............

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஏனமுனாகி யிருநிலமிடந்து அன்
றிணையடி யிமையவர்வணங்க *
தானவனாகம் தரணியில் புரளத்
தடஞ்சிலைகுனித்த வென்தலைவன் *
தேனமர்சோலைக் கற்பகம்பயந்த
தெய்வநன்னறுமலர்கொணர்ந்து *
வானவர்வணங்கும்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிரமத்துள்ளானே. (க)

| | |
|---|---|
| முன் அன்று | முன்னொரு காலத்தில், |
| இணை அடி | (தனது) உபயபாதங்களை |
| இமையவர் வணங்க | தேவர்கள் வந்து வணங்குமாறு |
| ஏனம் ஆகி | மஹாவராஹரூபியாகி |
| இரு நிலம் இடந்து | விசாலமான பூமண்டலத்தைக் கோட்டு நுனியாற் குத்தியெடுத்தவனும், |
| தானவன் ஆகம் | இராவணனுடைய சரீரமானது |
| தரணியில் புரள | பூமியிலே (செத்துப்) புரளும்படியாக |
| தட சிலை குனித்த | பெரிய வில்லை வளைத்தவனுமிருக்கிற |
| என் தலைவன் | அஸ்மத் ஸ்வாமி (எங்கே யுள்ளான் என்னில்;) |

| | |
|---|---|
| வானவர் | தேவர்கள், |
| தேன் அமர் சோலை கற்பகம் பயந்த | தேன் நிறைந்த நந்தன வனத்திலேயுள்ள கல்ப வ்ருக்ஷங்கள் கொடுத்த |
| தெய்வம் நல் நறு மலர் | திவ்யமாய் நல்ல மணம் மிக்க பூக்களை |
| கொணர்ந்து | கொண்டு வந்து ஸமர்ப்பித்து |
| வணங்கும் | வணங்குமிடமாய் |
| கங்கையின் கரை மேல் | கங்கையின் கரையிலுள்ள தான |
| வதரி ஆச்சிராமத்து | ஸ்ரீபதரிகாச்ரமத்திலே |
| உள்ளான் | எழுந்தருளியிருப்பவன். |

* * *:—[ஏனமுனாகி.] ஸ்ரீதேவிபூதேவிகட்காக அரிய பெரிய காரியஞ் செய்த மஹாநுபாவன் எழுந்தருளியிருக்குமிடம் ஸ்ரீபதரிகாச்ரமம் என்கிறார். முதலடியில் பூதேவிக்குக் காரியஞ் செய்தமையும், இரண்டாமடியில் ஸ்ரீதேவிக்குக் காரியஞ் செய்தமையுஞ் சொல்லுகிறது. பூமியைப் பாயாகச் சுருட்டி எடுத்துப் போன ஹிரண்யாக்ஷனைக் கொன்று பூமியைக் கொணர்ந்து பழையபடி விரிப்பதற்காகவும், பூமிக்கு நேர்ந்த பிரளயாபத்தைப் போக்கியருளுதற்காகவும் திருமால் வராஹாவதாரம் செய்தருளினதை முதலடியிற் கூறினர். ஸ்ரீ தசரத ராமனாய்த் தோன்றி இராவணனை ஸம்ஹரித்து ஸ்ரீ தேவியின் காரியம் செய்தமையை இரண்டாமடியிற் கூறினர். இமையவர்வணங்க என்பது நடுநிலைத் தீபகமாய் முன்னும் பின்னும் அந்வயிக்கும். "இமையவர் வணங்க ஏனமாகி" என்றும் "இமையவர் வணங்கத் தடஞ்சிலை குனித்த" என்றும் அந்வயிப்பது. தேவர்கள் வணங்கும்படியாக அவதரித்தவன் என்றும், தேவர்கள் வணங்கி வேண்டிக்கொண்டதனாலே அவதரித்தவன் என்றும் இருவகையும் பொருள் படும்.

தானவனாகம் தரணியில்புரள= இங்கே தானவன் என்று ராக்ஷஸராஜனாகிய இராவணனைச் சொல்லுகிறது. கெட்டகாரியஞ் செய்பவர்களை யெல்லாம் ஆஸுரயோனிகளென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே இராவணனைத் தானவனென்னக் குறையில்லை. "தையலாள் மேல் காதல்செய்த தானவன் வாளரக்கன்" என்று மேலேயும் அருளிச் செய்வர். "ஏனமுனாகி" என்றெடுத்த வராஹாவதாரப்ரகரணத்திற்குச் சேர, தானவன் என்பதற்கு ஹிரண்யாக்ஷனென்கிற அஸுரனை அர்த்தமாகச் சொல்லலாமாயினும் தடஞ்சிலைகுனித்த என்ற ஸ்வாரஸ்யம் பொருந்துகைக்காக இராவணனையே அர்த்தமாக அருளிச் செய்தார் பெரியவாச்சான் பிள்ளையும். இப்படி நிலமகளிருவர்க்கும் காரியஞ்செய்த பெருமான் தான் என்றைக்கும் அஸ்மதாதிகளுக்கும் காரியஞ் செய்வதற்காக ஸ்ரீபதரிகாச்ரமத்திலே நித்ய ஸந்நிதிபண்ணி எழுந்தருளியிருக்கிறானென்கிறார். இந்திரன் முதலிய தேவர்கள் தேனொழுகுகின்ற கற்பக நறுமலர்களைக் கொணர்ந்து வணங்குமிடமாயும் கங்கைக் கரையிலுள்ளதாயுமிருக்கிற ஸ்ரீபதரிகாச்ரமத்திலே வாழ்பவன்.

வணங்கும் என்ற அடைமொழி கங்கையிலே அந்வயிக்கவுமாம் வதரியாச்சிரமத்திலே அந்வயிக்கவுமாம். "வதரியாச்சிராமத்துள்ளானே" என்று

எங்கும் பாடம் வழங்கி வருகின்றது. ரா என்று நீட்டவேண்டிய காரண மொன்றுமில்லை. 'பதரிகாச்ரமம்' என்ற வடசொல் 'வதரியாச்சிரமம்' என்று திரியுமேயன்றி ரகரம் நீண்டுவரக் காரணமில்லை. "வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல், விரித்தல் தொகுத்தல் வருஞ் செய்யுள் வேண்டுழி" என்ற நன்னூற் சூத்திரத்தைக் கொண்டு நீட்டலுக்கு உபபத்தி சொல்லவேண்டும். வேண்டுழி என்றுராகலின் அந்த நீட்டல் இங்கு வர ப்ரஸக்தியில்லை. 'வதரியாச்சிரமத் துள்ளானே' என்ற பாடத்தில் குற்றங்குறையொன்று மில்லாதிருக்க நீட்டல் விகாரம் ஏதுக்கு? ஆயினும் எங்குமுள்ள பெரியோர்களெல்லாரும் ஒருமிடறாக நீட்டியே ஓதுகின்றனராதலால் அப்பாடத்தை இன்று நாம் மறுப்பது தகுதியன் றென்று கொண்டு யாமும் அப்பாடத்தையே ஆதரிக்க முற்பட்டோம். கற்று ணர்ந்த பெரியோர்கள் இதனை விமர்சிக்கக் கடவர்கள். ... .. (க)

கானிடையுருவைச்சுடுசரம்துரந்து
கண்டுமுன்கொடுந்தொழிலுரவோன் ✻
ஊனுடையகலத் தடுகணைகுளிப்ப
உயிர்கவர்ந்துகந்தவெம்மொருவன் ✻
தேனுடைக்கமலத்தயனொடுதேவர்
சென்றுசென்றிறைஞ்சிட ✻ பெருகு
வானிடைமுதுநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே (உ)

| | |
|---|---|
| கானிடை | காட்டிலே |
| உருவை | (மாரீசனாகிய) மாயா மிருகத்தை |
| முன் கண்டு | கண்ணெதிரில் பார்த்து (அதன் பின்னே சென்று) |
| சுடு சரம் துரந்து | (அதன்மேல்) தீக்ஷ்ணமான பாணத்தைப் பிரயோகித்தவனும் |
| கொடு தொழில் உரவோன் | கொடுமையான தொழிலையுடையனாய் பலசாலியான வாலியினுடைய |
| ஊன் உடை அகலத்து | மாம்ஸளமான மார்விலே |
| அடு கணை குளிப்ப | தீக்ஷ்ணமான பாணத்தை அழுத்தி |
| உயிர் கவர்ந்து | (அவனது) பிராணனை அபஹரித்து |
| உகந்த | மகிழ்ந்தவனுமான |
| எம் ஒருவன் | விலக்ஷணனான அஸ்மத்ஸ்வாமி (எவ்விடத்திலுள்ளானென்றால்) |
| தேன் உடை கமலத்து அயனொடு | தேனையுடைய (திருநாபிக்) கமலத்தில் பிறந்த பிரமனோடுகூட |
| தேவர் | மற்றுமுள்ள தேவர்களும் |
| சென்று சென்று | பலகால் வந்து |
| இறைஞ்சிட | வணங்கப் பெற்றதும் |
| பெருகு வானிடை முது நீர் கங்கையின் கரை மேல் | பெருகுகின்ற புராதனமான ஆகாசகங்கைக் கரைமீது உள்ளதுமான |
| வதரி ஆச்சிராமத்து | ஸ்ரீபதரிகாச்ரமத்திலே |
| உள்ளான் | எழுந்தருளியிருக்கிறான். |

✻ ✻ ✻ [கானிடையுருவை.] பெருமாளையும் பிராட்டியையும் பிரிப்பதற்கு மாயமான் வடிவுகொண்டு வந்த மாரீசனை ஒழித்தபடியையும், ஆச்ரிதனான

ஸுக்ரீவனுக்கு விரோதியான வாலியை ஒழித்தபடியையும் முன்னடிகளில் அருளிச் செய்கிறார்.

இராமபிரானும் ஸீதாபிராட்டியும் பஞ்சவடியில் எழுந்தருளியிருக்கும்போது சூர்ப்பணகையின் கெட்ட நடத்தை காரணமாக ஜநஸ்தாநத்திலுள்ள அரக்கர்களை யெல்லாம் இராமன் வேரறுக்க நேர்ந்தகாலத்து அங்கு இராம பாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளித்து ஓடிப்போன அகம்பநன் இலங்கைக்குச் சென்று ஜநஸ்தானமடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ஒருவராலும் வெல்லமுடியாதவ னென்பதையும் சொல்லி 'ஸீதையை அபஹரித்துக் கொண்டு வந்தால் அந்த வருத்தத்தினால் இராமன் முடிந்து விடக்கூடும்' என்றான். இராவணன் அவனது சொற்படியே 'ஸீதையைக் கொள்ளை கொள்ள உபாயமென்?' என்று யோசித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்து 'நீ எனக்கு ஒருதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் நினைவை வெளியிட, அது கேட்ட மாரீசன் 'அப்பா இராவணா! அந்த மஹாநுபாவனுடன் உனக்குத்வேஷம் உதவாது; இந்த இராமன் சிறு பிள்ளையாயிருக்கும்பொழுதே விச்வாமித்ரயாகத்தில் அவருடைய பாணத்துக்கு இலக்காகி நான்பட்டபாடு இன்னும் மறக்கமுடியவில்லை; அத்திருநாமம் செவிப்படும்போதே என் உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று ஒழுங்காக உபதேசிக்க, அதைக்கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான். பிறகு சூர்ப்பணகை சென்று தான் மூக்கறுப்புண்டபடியையும், தாசரதிகளுடைய ஸௌந்தர்ய பராக்ரமாதிகுணங்கள் எல்லையற்றிருக்கிறபடியையும் ஸீதையின் இருப்பையுஞ் சொல்லி 'இராகவனை நீ எவ்விதத்திலாவது பங்கஞ்செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே யல்ல' என்று கூறி இராவணனை நிந்தித்துக்கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடஞ் சென்று நயபயங்களினால் அவனைத் தன் சொல்வழிப்படுத்திக்கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டு வந்து தான் ஓரிடத்தில் ஒளித்திருந்தான். மாரீசன் தனது மாயாசக்தியினால்பொன்மானின் வடிவுஎடுத்துக்கொண்டு ஸீதையின் பார்வையில் மேயத் தொடங்கினான். அப்பொன்மானை ஸீதை கண்டு அதைப் பிடித்துத் தரவேணுமென்று ஓரே பிடிவாதமாக இராமனிடம் சொன்னாள். அதற்கு இணங்கிய இராகவன் இளையோனைப் பிராட்டிக்குக் காவலாக வைத்துவிட்டுத் தான் வில்லையும் அம்புகளையும் எடுத்துக்கொண்டு மானின் பின்னே போக அந்தமான் கொஞ்சங்கொஞ்சமாக ஒதுங்கி ஒதுங்கிப்போய் அக்காட்டில் நெடுந்தூரம் இராகவனை இழுத்துக்கொண்டு போய்விட்டது. அப்பொழுது இராகவன் 'இவன் யாரோ அரக்கன்' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனால் அடியுண்ட மாரீசன் மானுருவைவிட்டு நிஜரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவனைப்போல் கூச்சலிட்டுக்கொண்டு மரணமடைந்தான் என்றவரலாறு இங்கு அறியத்தக்கது.

கானிடை உருவை=தண்டகாரண்யத்தில் வந்த மானை என்றபடி. உரு என்று மானுக்குப்பெயர். கோடுந்தொழிலுரவோன் என்று வாலியை நினைக்கிறது. இராமன், தன் விஷயத்தில் யாதொரு அபராதமும் செய்தறியாத வாலியைக் கொன்றது பிசகு என்று சொல்லுமவர்கட்கும் ஸமாதாநம் சொல்லுகிறவர் போல் கோடுந்தொழில் என்று வாலிக்கு அடைமொழி கொடுக்கிறார். வாலி இராமன் விஷயத்தில் தீங்கு ஒன்றும் செய்யாவிடினும் கொடியவர்களைத் தண்டித்தல் கொற்றவனுடைய கடமையாதலால் தண்டித்தனனென்க. எவ்வகைப் பெருந் தீங்கு செய்திருந்தாலும் சரணமடைந்தால் அவர்களைப் பாதுகாக்க வேண்டியதென்கிற சிறந்த தருமத்தை ஸுக்ரீவன் விஷயத்தில் வாலி கைவிட்டதனாலும், பிறன் மனைவியைக் காதலித்துக் கவர்தல், தம்பியினிடம் பகைபாராட்டுதல், வலியழிந்து புறங்கொடுத்து ஓடுகின்றவனைத் துரத்தித் துரத்திக்கொல்லத் தொடங்குதல் முதலிய தீச்செயல்கள் வாலியிடம் இருந்ததனாலும்—சரணாகதரக்ஷணத்தையே விரதமாகக் கொண்டவனும் ஏகபத்நீ விரதமுடையவனும் தம்பியைத் தன்னுயிர்போலக் கொள்பவனும், வலியிழந்த பகைவனை 'இன்று போய் நாளைவா' என்று அன்போடு சொல்லி விடுத்தருளும் மஹாவீரனுமான சக்ரவர்த்தித் திருமகன் வாலியை அழிக்கலானான் என்று காட்டுகிறார் கோடுந்தொழிலுரவோன் என்பதனால்.

உரவோன்=உரம் என்று வலிவுக்குப் பெயர்; பலசாலிகளில் மிகப் பிரசித்தனாதலால் 'உரவோன்' என்ற சொல்லைக்கொண்டே வாலியைக் குறிப்பிடுகிறார். உத்தரஸ்ரீராமாயணத்தில் முப்பத்தொன்பதாவது ஸர்க்கத்தில் வாலியினது வலியின்பெருமை விசித்திரமாக விவரிக்கப்பட்டுள்ளது. அதனை இங்கே சுருக்கியுரைப்போம்;—

பலசாலிகளைப் பலாத்காரமாகச் சண்டைக்கழைத்து வெற்றிபெறவேணுமென விரும்பி பூமிமுழுமையும் திரியத்தொடங்கின இராவணன் கிஷ்கிந்தையிற்சென்று வாலியைத் தன்னுடன் போர் புரிய விளித்தனன்; அப்போது அங்கு வாலியில்லாமையால் அங்கிருந்த ஒரு வாநரன் வந்து, "அமர்புரிய ஆவல்கொண்ட அரக்கர் தலைவரே! உமக்கு எதிர்நிற்கவல்ல வாலி இப்பொழுது இங்கில்லை; நான்கு ஸமுத்ரமுஞ் சென்று ஸந்தியோபாஸநஞ் செய்து இன்னுமொரு முஹூர்த்தத்திற்குள் இவ்விடம் திரும்பிவருவார்; அதுவரை இங்கே காத்திரும். அவர் வந்தவுடனே உமக்கு மரணம் ஸித்தம்; அதற்குள்ளேயே மரணமடைய விரும்பி விரைகுவீராகில் உடனே தென்கடலுக்குச் செல்லுக; அங்கு நிலத்திலெழுந்த நெருப்புப்போலே வாலி வீற்றிருக்கக் காண்பீர்" என்று கூறினன். அதனைச் செவியுற்ற இராவணன் உடனே விமானமேறித் தென்கடலை நோக்கிச்சென்று அங்கு அந்தி தொழுதலில் ஏகாக்ரமாக நின்ற வாலியைக்கண்ணுற்று விமானத்தினின்றுமிறங்கி அப்படியே வாலியைப் பிடித்துக்கொள்ளவேண்டுமென்றெண்ணி அடி ஓசைப்படாது விரைவாக நடந்து சென்றனன். இதனைக் கீழ்க்கண்ணாற் கண்ட வாலி சலியாது அங்ஙனமே நிற்க இரா

வணன் மெல்ல அருகில் வந்தவுடனே தன்னைப் பிடிக்கக் கைநீட்டிய அவனைத் தான் முன்னே பற்றிப் பிடித்தெடுத்துக் கக்ஷத்திலிடுக்கிக்கொண்டு அப்படியே ஆகாயத்தில் எழும்பி அதிகவேகமாகச் சென்று மற்ற மூன்று கடல்களிலும் வைதிகச்சடங்குகளைச் செய்துமுடித்து இராவணனைச் சுமந்தவாறே புறப்பட்டுக் கிஷ்கிந்தாபுரி சேர்ந்து ஒரு தோப்பில் இறங்கினதும் இராவணனைக் கக்ஷத்தினின்றும் கீழேவிடுத்து நகைத்து 'ஓகோ! தாங்கள் எங்கிருந்து இப்பொழுது வருவது?' என வினவினான். வாலியினது செய்கையால் மிக்க வியப்புற்ற ராவணன் மிகவுமிளைப்புற்றுக் கண்களை வெருள வெருள விழித்து நோக்கி 'உனது வலியே வலி; உனது வீரியமே வீரியம்' என்று பலவாறு புகழ்ந்து பேசி அவனோடு ஸ்நேஹஞ் செய்து கொண்டான். இப்படிப்பட்ட பெருவீரனான வாலியை உரவோன் என்றல் மிகப் பொருந்துமன்றே. அவனுடைய மாம்ஸப்ரசுரமான மார்விலே கொலையம்பு அழுந்தும்படிபண்ணி அவ்வழியாலே அவனுயிரை நீக்கி 'ஆச்ரிதனான ஸுக்ரீவனுடைய விரோதியைப் போக்கப்பெற்றோம்' என்று மனமகிழ்ச்சி கொண்ட மஹாநுபாவன் எழுந்தருளியிருக்குமிடம் ஸ்ரீபதரிகாச்ரமம். தாமரையிற் பிறந்த நான்முகன் முதலிய தேவர்கள் 'நான் முன்னே, நான் முன்னே' என்று ஸ்பர்த்தித்து அவகாஹிக்கப் பெற்றதும் மேன்மேலனப் பெருகிவருகின்ற தீர்த்தத்தையுடையதுமான கங்கையாற்றின் கரையிலுள்ளதாம் அந்த ஆச்ரமம். "பெருகுவானிடை முதுநீர்க்கங்கையின் கரைமேல் வதரியாச்சிரமத்து—தேனுடைக்கமலத் தயனொடு தேவர் சென்று சென்றிறைஞ்சிட உள்ளான்" என்று அந்வயிப்பதும் பொருந்தும். அயன்=அஜன்; அ—திருமாலிடத்தினின்று, ஜன்—தோன்றினவன். முதுநீர்=புதிதாகச் சுரந்த நீர் அல்ல; "ఇమం మే గఙ్గే యమునే సరస్వతి"—[இமம் மே கங்கே யமுநே ஸரஸ்வதி] என்று உபநிஷத்திலே சொல்லப்பட்டுள்ளமையால் வேதம் போலவே நித்யமான நதி என்க. ... ... ... (உ)

இலங்கையும்கடலுமடலருந்துப்பின்
இருநிதிக்கிறைவனும் * அரக்கர்
குலங்களும்கெடமுன்கொடுந்தொழில்புரிந்த
கொற்றவன், கொழுஞ்சுடர்சுழன்ற *
விலங்கலிலுரிஞ்சிமேல்நின்றவிசும்பில்
வெண்துகிற்கொடியெனவிரிந்து *
வலந்தருமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௩)

முன் — ஸ்ரீராமாவதாரத்தில்
இலங்கையும் — லங்காபுரியென்ன
கடலும் — (அதற்கு அகழான) தெற்கு ஸமுத்ரமென்ன
அடல் அருதுப்பின் இரு நிதிக்கு இறைவனும் — ஒருவராலும் வெல்லமுடியாத பலத்தை யுடையனாய் பெரிய நிதிகளுக்கு ஸ்வாமியான ராவணனென்ன

| | | | |
|---|---|---|---|
| அரக்கர் குலங்களும் கெட | ராக்ஷஸஜாதியென்ன ஆகிய இவையெல்லாம் ஒழியும் படியாக | வெண் கொடி துகில் என விரிந்து | வெளுத்த த்வஜபடமென்னலாம்படி பரந்து |
| கொடு தொழில் புரிந்த கொற்றவன் | கடுமையான காரியங்களைச் செய்தருளின மஹாப்ரபு (எவ்விடத்திலுள்ளா னென்னில்) | வலந்தரும் | (வேகத்தாலே) மிடுக்கை யுடையதும் |
| | | மணி நீர் | அழகிய தீர்த்தத்தை யுடையதுமான |
| கொழு சுடர் சுழன்ற விலங்கலில் உரிஞ்சி | ஸூர்யன் சுழன்று வரப் பெற்ற (மேரு) மலை வரைக்கும்சென்று முட்டி | கங்கையின் | கங்காநதியினுடைய |
| | | கரை மேல் | கரையின்மேலுள்ள |
| | | வதரியாச்சிராமத்து | ஸ்ரீபதரிகாச்ரமத்திலே |
| மேல் நின்ற விசும்பில் | மேலேயிருக்கிற ஆகாசத்திலே | உள்ளான் | எழுந்தருளியிருப்பவன். |

* * *:—[இலங்கையுங் கடலும்.] ஒருவரால் அழிக்கவொண்ணாத லங்காபுரியும் அதற்கும் அகழாகி ரக்ஷகமாயிருந்த தெற்கு ஸமுத்ரமும், இராவணனும், அவனுக்குத் துணையாயிருந்த ராக்ஷஸஜாதியடங்கலும் நாசமடையும்படி தனது கொடுமையான பராக்கிரமத்தைச் செலுத்திக் காரியஞ்செய்த ராஜாதி ராஜன் எழுந்தருளியிருக்குமிடம் வதரியாச்சிரமம். இலங்கையும் இராவணனும் அரக்கர் குலங்களும் கெட்டது உண்மை; கடல் கெடவில்லையே; "கடலும் கெட" என்று இங்கே அருளிச்செய்தது என்? என்னில்; கடலரசனை நோக்கி 'இலங்கைக்குச் செல்ல வழிவிட வேணும்' என்று சரணாகதிபண்ணி வேண்டின போது அவன் அஹங்கரித்திருக்கவே "సాగరం శోషయిష్యామి—ஸாகரம் சோஷயிஷ்யாமி=கடலைவற்றச் செய்துவிடுகிறேன்" என்று சீறிச்சிவந்த கண்ணினனாய் அம்புதொடுத்தனனாதலால் "கடல்கெடக் கொடுந்தொழில் புரிந்த கொற்றவன்" என்னக்குறையில்லை யென்க. கடலிடையே அணைகட்டின அருந்தொழிலைக் கூறியவாறுமாம்.

அடலருந்துப்பின் இருநிதிக்கிறைவன்=துப்பு—ஸாமர்த்தியம்; வரபலத்தாலும் புஜபலத்தாலும் 'எனக்காரும் நிகரில்லை' என்று செருக்குற்றுத்திரிந்தவன் என்றுகருத்து. குபேரனிடமிருந்த சங்கநிதி பத்மநிதிகளை இராவணன் கவர்ந்து கொண்டதுபற்றி இருநிதிக்கிறைவனாயினான்.

இப்படிப்பட்ட ராவணாதிகளை அழித்தவனான பெருமான் எழுந்தருளியிருக்குமிடமாகிய வதரியாச்சிரமம் கங்கையின் கரைமேலுள்ளது; அக்கங்கை எப்படிப்பட்டதென்னில்; கொழுஞ்சுடர் சுழன்ற விலங்கலிலுரிஞ்சி மேல் நின்ற விசும்பில் வெண்துகிற் கொடியென விரிந்து வலந்தரு மணிநீருடையது; (அதாவது)—கொழுஞ்சுடர் என்று ஸூர்யனைச் சொல்லுகிறது; விலங்கல் என்று மலைக்குப் பெயர்; கொழுஞ்சுடர் சுழன்ற விலங்கலாவது மேருமலை; மேரு பர்வதத்தைச் சுற்றித்திரிவானிறே ஸூர்யன். [ஸ்ரீவிஷ்ணுபுராணம் இரண்டாவது அம்சத்தில் எட்டாவது அத்தியாயம் நோக்கத்தக்கது.] அந்த மேருமலை தேவலோகத்தை அளாவியிருப்பதனாலும், "మేరుపృష్ఠే పతత్యుచ్చైః నిష్క్రాన్తా శశిమణ్డలాత్। జగతః పావనార్థాయ యా ప్రయాతి చతుర్దిశమ్—மேரு

ப்ருஷ்டே பதித்வோச்சை: நிஷ்க்ராந்தா சசிமண்டலாத்-ஜகத: பாவனார்த்தாய யா ப்ரயாதி சதுர்த்திசம்." என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் [2-8-112.] சொல்லியிருப்பதனாலும் "கொழுஞ்சுடர் சுழன்ற விலங்கலி லூரிஞ்சி" எனப்பட்டது.

மேல்நின்ற விசும்பில் வெண்துகில்கோடியேன விரிந்து = வெண்ணிறமான கங்கை நீர் விசும்பின்மீது ப்ரவஹிப்பதைப் பார்த்தால்—மாடமாளிகைகளின் உச்சியில் நாட்டப்படுகிற த்வஜங்களில் கட்டப்பட்டுள்ள வெளுத்த துணிகள் காற்றில் அசைந்து பரம்புவது போலிருக்கின்றதென்று உத்ப்ரேக்ஷிக்கிறபடி. ... ... ... ... ... ... ... ... (௩)

துணிவினியுனக்குச்சொல்லுவன்மனமே!
தொழுதெழுதொண்டர்கள்தமக்கு *
பிணியொழித்தமரர்பெருவிசும்பருளும்
பேரருளாளனெம்பெருமான் *
அணிமலர்க்குழலாரரம்பையர்துகிலும்
ஆரமும்வாரிவந்து * அணிநீர்
மணிகொழித்திழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௪)

மனமே — நெஞ்சமே',
இனி — இதுமுதலாக
உனக்கு துணிவு சொல்லுவன் — உனக்கு இருக்கவேண்டிய உறுதியைச் சொல்லுகிறேன் (கேள்);
தொண்டர்கள் தமக்கு — ஆச்ரிதர்களுக்கு
பிணி ஒழித்து — வியாதிகளைப்போக்கி
அமரர் பெரு விசும்பு அருளும் — நித்ய ஸூரிகளுடையதான பரமபதத்தை (அவர்கட்கு) அளித்தருளாநின்ற
பேர் அருள் ஆளன் — பரமதயாளுவான
எம் பெருமான் — ஸர்வேச்வரனை
தொழுது எழு — வணங்கி உஜ்ஜீவிக்கக் கடவை;
(அப்பெருமான் எவ்விடத்திலுள்ளானென்னில்;)
அணி நீர் — (கங்கையிலுள்ள) அழகிய ஜலமானது
மலர் அணி குழலார் அரம்பையர் — புஷ்பங்களை யணிந்த கூந்தலையுடைய அப்ஸரஸ் ஸ்த்ரீகளினுடைய
துகிலும் — சேலைகளையும்
ஆரமும் — ஹாரங்களையும்
வாரி வந்து — திரட்டிக்கொண்டுவந்தும்
மணி கொழித்து — ரத்னங்களைத் தள்ளிக்கொண்டு வந்தும்
இழிந்த — ப்ரவஹிக்கப்பெற்ற
கங்கையின் — கங்காநதியினுடைய
கரை மேல் — கரைமேலுள்ள
வதரி ஆச்சிராமத்து — ஸ்ரீபதரிகாச்ரமத்திலே
உள்ளான் — எழுந்தருளியிருக்கிறான்.

* * *—[துணிவினியுனக்கு.] நெஞ்சே! இப்போது உனக்கு உறுதியாக ஒரு நல்வார்த்தை சொல்லுகிறேன் கேள். அதுயாதெனில்; தொண்டர்களுடைய விரோதியைப் போக்கிப் பரமபதத்தை அளிக்கின்ற பேரருளாளன் ஸ்ரீபதரிகாச்ரமத்தில் எழுந்தருளியிராநின்றான்; அங்கே சென்று அவனை நீ வணங்கி உஜ்ஜீவிக்கக்கடவை; இதுவே உனக்கு நான் உரைக்கும் உறுதிச்சொல்.

அந்த வதரியாச்சிரமம் கங்கைக்கரையிலுள்ளது ; கங்கை எப்படிப்பட்டதென்னில் ; கண்ணன் செய்கிற காரியமெல்லாம் செய்யும் அக்கங்கைதானும் ; அவன் § "ஆற்றிலிருந்து விளையாடுவோங்களைச், சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு, காற்றிற் கடியனாய் ஓடி" என்றபடி ஆய்ச்சிகளின் துகில்களையும் ஹாரங்களையும் வாரிக்கொண்டு ஓடுவது போல், மேலுலகத்து மாதர்களுடைய வஸ்த்ரங்களையும் முக்தாஹாரம் முதலியவற்றையும் வாரிக்கொண்டும் பல பல ரத்னங்களையும் தள்ளிக்கொண்டும் பெருகி ஓடுகின்றதாம் கங்கை. பெரிய ஆறுகள் தம்மிடத்து நீராடிக் கொண்டிருப்பவர்களுடைய வஸ்த்ரபூஷணாதிகளை அடித்துக்கொண்டுவருதல் இயல்பு. அரம்பையர்—தெய்வப் பெண்கள். ஆரம்—ஹாரம் என்ற வடசொல் திரிபு. ... ... ... ... ... (௪)

பேயிடைக்கிருந்துவந்தமற்றவள் தன்
பெருமுலைசுவைத்திட * பெற்ற
தாயிடைக்கிருத்தலஞ்சுவனென்று
தளர்ந்திடவளர்ந்தவென்தலைவன் *
சேய்முகட்டுச்சியண்டமுஞ்சுமந்த
செம்பொன்செய்விலங்கலிலிலங்கு *
வாய்முகட்டிழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௫)

| | |
|---|---|
| வந்த | (யசோதையின் வேஷங் கொண்டு) வந்தவளான |
| பேய் | பூதனையினுடைய |
| இடைக்கு இருந்து | இடுப்பிலே யிருந்து கொண்டு |
| அவள் தன் | அப் பேய்மகளுடைய |
| பெரு முலை | பெரிய முலையை |
| சுவைத்திட | ருசிபார்த்து உண்ண |
| பெற்ற தாய் | (அதைக்கண்ட) யசோதை யானவள் |
| இடைக்கு இருத்தல் அஞ்சுவன் என்று தளர்ந்திட | ('நான் இனி இவனை) இடுப்பிலே எடுத்துக்கொள்ள அஞ்சுகிறேன்' என்று சொல்லிக் கூசும்படியாக |
| வளர்ந்த | வளர்ந்தவனான |
| எம் தலைவன் | அஸ்மத் ஸ்வாமி |
| | (எவ்விடத்திலுள்ளானென்னில் ;) |

| | |
|---|---|
| சேய் முகடு உச்சி | உயர்ந்த கொடுமுடியின் உச்சியிலே |
| அண்டம் சுமந்த | அண்டத்தைச் சுமக்கிற |
| செம் பொன் செய் விலங்கலில் | மேரு பர்வதத்திலே |
| இலங்கு | விளங்குகின்ற |
| வாய் | விசாலமான |
| முகடு | சிகரத்தில் நின்றும் |
| இழிந்த | ப்ரவஹிக்கின்ற |
| கங்கையின் | கங்காநதியினுடைய |
| கரை மேல் | கரைமீதுள்ள |
| வதரியாச் சிராமத்து | ஸ்ரீபதரிகாச்ரமத்திலே |
| உள்ளான் | எழுந்தருளியிருப்பவன். |

* * *:—[பேயிடைக்கிருந்து.] கீழ்ப்பாட்டில் "அணிமலர்க்குழலாரரம்பையர் துகிலும் ஆரமும் வாரிவந்து" என்ற சொற்போக்கில் கண்ணபிரானு

§ பெரியாழ்வார் திருமொழி. 2-10-1.

டைய திருவிளையாடல் ஆழ்வார்க்கு நினைவுக்கு வரவே, மற்றொரு க்ருஷ்ண சேஷ்டிதத்தை ஸ்மரித்துப்பேசுகிறார் இதில் பெற்றதாய் போல் வந்த பேய்ச்சி பெருமுலையுண்டு அவளை முடித்தவரலாறு கீழ்த்திருமொழி முதல்பாட்டினுரையிற் கூறப்பட்டது. வந்த பேயிடைக்கிருந்து அவள் தன் பெருமுலை சுவைத்திட என்று அந்வயம். யசோதையைப்போலவே வடிவு கொண்டு வந்த பூதனையினுடைய மடியிலே நன்மகன் போல இருந்து அவளது முலையையுண்டு அவளை முடிப்பதுஞ்செய்த ஸ்ரீ க்ருஷ்ணசிசுவைக் கண்ட தாயானவள், 'அப்பப்ப! இனி இப்பிள்ளையை மடியிலெடுத்துக்கொள்ளக்கூடாது! முலையுண்கிறபாவனையில் உயிரை முடிக்கும் பிள்ளை இது; இதன் இயல்வுக்கு அஞ்சவேண்டியிருக்கிறது' என்று கூசும்படியாக அவ்வளவு சூரனாய்வளர்ந்த தலைவன் எழுந்தருளியிருக்குமிடம் வதரியாச்சிரமம்.

பெற்றதாய் இடைக்கிருத்தலஞ்சுவனென்று தளர்ந்திட = இப்பிள்ளையை நாம் மடியிலே வைத்து முலைகொடுத்துப் பழக்கினபடியாலன்றோ இவன் கண்டார் மடியிலும் பொருந்தி முலையுண்கிறது; இனி நாம் இவனை இடுப்பிலெடுத்துக் கொள்ளவேகூடாது என்று கூசினாள் யசோதை என்னவுமாம்.

வதரியாச்சிரமம் கங்கையின் கரையிலுள்ளது; அக்கங்கை எப்படிப்பட்டதென்னில்; ஓங்கியிருந்துள்ள சிகரத்தின் உச்சியிலே அண்டத்தைத் தரிக்கிற செம்பொன்மலை யாதொன்றுண்டு-மேருபர்வதம்; அதிலே விளங்குகின்ற விசாலமான சிகரத்தினின்றும் இழிந்ததாம். அண்டம்-மேலுலகம்.

அண்டமும் என்ற விடத்து உம்மை-இசை நிறை. ... ... (ரு)

தேரணங்கல்குல்செழுங்கயற்கண்ணி
திறத்தொருமறத்தொழில்புரிந்து *
பாரணங்கிமிலேறேழு முன்னடர்த்த
பனிமுகில்வண்ண னெம்பெருமான் *
காரணந்தன்னால்கடும்புனல்கயத்த
கருவரைபிளவெழக்குத்தி *
வாரணங்கொணர்ந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (சா)

தேர் அணங்கு அல்குல் — தேர்போன்ற அழகிய நிதம்பத்தை யுடையளும்
செழு கயல் கண்ணி திறத்து — அழகிய கயல்போன்ற கண்களை யுடையளுமான நப்பின்னைக்காக
ஒரு மறத் தொழில் புரிந்து — கோர்ப்பம் மிக்க செயலைச் செய்து
பார் அணங்கு இமில் — பூமியிலுள்ளா ரெல்லாரும் நடுங்கும்படியான முசுப்பையுடைய
ஏறு எழும் — எழு எருதுகளையும்
முன் அடர்த்த — கண்முன்னே வலியடக்கின
பனி முகில் வண்ணன் — குளிர்ந்த மேகம்போன்ற வடிவை யுடையனுமான

| | | | |
|---|---|---|---|
| எம் பெருமான் | எம்பெருமான் (எங்கே எழுந்தருளியிருக்கிறு னென்றால்) | வாரணம் கொணர்ந்த | (அங்குள்ள) யானைகளைத் தள்ளிக்கொண்டுவந்து ப்ரவஹித்ததுமான |
| காரணம் தன்னால் | பகீரதப்ரயத்நமாகிற காரணத்தினால் | கங்கையின் | கங்காநதியினுடைய |
| கடு புனல் கயத்த | வேகமாகப் பெருகுகின்ற ஜலம் நிறைந்த பள்ளங் களையுடையதும் | கரை மேல் | கரையின்மீதுள்ள |
| கரு வரை பிளவு எழ குத்தி | பெரியதொரு மலை பிளந்து போம்படி (அம்மலையை) உடைத்துக்கொண்டு | வதரியாச் சிராமத்து உள்ளான் | ஸ்ரீபதரிகாச்ரமத்திலே உள்ளான். |

* * *—[தேரணங்கல்குல்.] கண்ணபிரான் தொட்டிற்பருவத்திற் செய்த சேஷ்டிதமொன்றைக் கீழ்ப்பாட்டி லருளிச்செய்தார்; யௌவனப்பருவத்திற் செய்ததோர் செயலைச் சொல்லுகிறாரிதில். கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாயும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் 'நீளா' என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யார்க்கும் அடங்காத அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக் கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ் செய்து கொண்டனன். அப்பெருமான் வதரியாச்சிரமத்துள்ளான்.

தேரணங்கல்குல் = அல்குலுக்குத் தேரை உவமை கூறுதல் கவிமரபு. அணங்கு என்று அழகுக்கும் பேராகையாலே 'தேர்போன்று அழகிய' என்று உரைக்கப்பட்டது. இனி, அணங்கென்று வருத்தத்திற்கும் வாசகமாதலால் தேரை வருத்துகின்ற அல்குல் என்னவுமாம். தேர் இதற்கு உவமையாக முடியாது வருந்துகின்றதென்க.

மறத்தொழில்புரிந்து = எருதுகளின்மேல் கோபாவேசத்தைக் காட்டி என்றவாறு. "பாரணங்கிமில்" என்ற விசேஷணம் அவ்வெருதுகளின் பயங்கரத் தன்மையைக் காட்டுதற்காம். பார்—பூமியிலுள்ளார்க்கு ஆகுபெயர். இமில்—முசுப்பு. பெருமிடுக்குடைய எருதுகளோடு போர் செய்தவளவிலும் திருமேனி நிறத்திற்குச் சிறிதும் வாட்டமுண்டாகவில்லை யென்பது விளங்க "ஏறேழு மடர்த்த பனி முகில்வண்ணன்" என்றார்.

இப்படிப்பட்ட எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடமான ஸ்ரீபதரிகாச்ரமம் எவ்விடத்துள்ளது?—கங்கையின் கரைமேலுள்ளது. அக்கங்கை எப்படிப்பட்டது?—காரணந்தன்னால் கடும்புனல் கயத்த கருவரை பிளவெழக் குத்தி வாரணங் கொணர்ந்ததாம். இதன் கருத்து யாதெனில்; (ஸகரசக்ரவர்த்தி அச்வமேதயாகஞ் செய்தது, ஸகரகுமாரர்கள் கபிலமாமுனியால் நீறு யொழிந்தது, அம்சுமான் ஸகரனது யாகக் குதிரையைக் கொண்டு வந்தது, பகீரதன் கங்கைக்காகத் தவஞ் செய்து அதனைக் கொண்டுவந்தது—இந்த வரலாறுகள் ஸ்ரீராமாயணம் பாலகாண்டத்தில் 38 + 43. ஸர்க்கங்களிற் காணத்தக்

கன.) பகீரதன் கங்கையை அவதரிப்பிக்கிறபோது நடுவழியிலே ஒரு மலை தகைந்துகொண்டு நின்றதாகவும், கங்காப்ரவாஹமானது மிக்க வேகமாக வரும் போது விசையினால் அந்த மலையை இரண்டு பிளவாம்படி குத்திப் புறப்பட்டு அம்மலையிலிருந்த யானைகளையும் தள்ளிக்கொண்டு வந்திழிந்ததாகவும் சில புராணங்களில் சொல்லப்படுகிறதாம். மற்றொரு விதமாகவும் சொல்லுவதுண்டு ;— பகீரதன் கொணர்ந்த கங்காப்ரவாஹத்தை மலை தகைந்தவளவிலே அவன் இந்திரனை நோக்கித் தவம்புரிந்தனனும்; தபஸ்ஸினால் ப்ரஸந்நனான இந்திரன் தனது யானையை அனுப்பி அம்மலை இருபிளவாம்படி குத்துவித்ததாகவும், பிறகு அந்த யானை கங்காப்ரவாஹத்தைத் தட்டுத் தடங்கலின்றிக் கொண்டு புறப்பட்டதாகவும் புராணப்ரஸித்தியுண்டாம். இவ்விரண்டு வகையான யோஜனைகளும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் அருளிச் செய்யப்பட்டவை. முதல் யோஜனையில், வாரணங்கொணர்ந்த என்றது—(கங்கையைத் தகைந்த மலையிலிருந்த) யானைகளை உருட்டிக்கொண்டு வந்திழிந்த என்றபடி. இரண்டாம் யோஜனையில், (இந்திரனுடைய) யானையினால் மலையைப்பிளந்து கொண்டு வரப் பட்ட என்றபடி.

காரணந்தன்னால் = கபிலமாமுனியின் சாபத்தால் நீறாய்க்கிடந்த தன் பாட்டன்மாரை சுத்தி செய்தற்காகக் கங்கையைப் பெறவேணுமென்று பகீரதன் தவம்புரிந்தமையாகிற காரணத்தினால் என்றபடி. கங்கையைக் கொண்டுவருகிற போது மலை தகைந்த வளவிலே இந்திரனை நோக்கித் தவம்புரிந்த காரணத்தினால் என்னவுமாம். கடும்புனல்கயத்த என்றவிடத்து, கயத்த என்பதற்கு "தகைந்த" என்று சிலர் பொருள் கூறுவர் ; அஃது ஆதாரமற்றதாகும். கைத்த என்று பாடமிருப்பின் அப்பொருள் கொள்ளலாகும். கயத்த என்றே எங்கும் பாடம் வழங்குகின்றது. பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வியாக்கியானத்தில்—" பகீரதன் கங்கையை அவதரிப்பிக்கிறபோது நடுவழியிலே ஒரு மலை தகைந்துகொடு நின்றதாய் அத்தை இரண்டு பிளவாம்படி குத்தி யானைகளையு முருட்டிக்கொண்டு இவ்வருகே போந்து இழிந்ததாகச் சொல்லக் கடவது" என்றருளிச் செய்திருப்பதைக்கண்டு, கயத்த என்பதற்குத் தகைந்த என்று சிலர் பொருள் வரைந்திட்டனர்; மலையைக் குத்திக்கொண்டு இழிவதற்கு ப்ரஸக்தியை நிரூபணம் செய்வதற்காகப் பெரியவாச்சான் பிள்ளை ஒரு மலை தகைந்துகொண்டு நின்றதாக அருளிச்செய்தாரேயன்றி, கயத்த என்பதற்கு அது பொருள் என்று உரைத்தாரல்லர். ஆகையாலே கயத்த என்பதற்குத் தகைந்த என்று பொருள்கொள்ள வழியுமில்லை ; அவசியமுமில்லை. கயத்த என்றது கயத்தையுடைய என்றபடி. கயமாவது தண்ணீர் தேங்கும் பள்ளம். வெகு வேகமாகப் பெருகுகின்ற தண்ணீர் நிறைந்த பள்ளங்களையுடைய என்று பொருளாயிற்று. இது கங்கைக்கு விசேஷணமாகவுமாம் ; கருவரைக்கு விசேஷணமாகவுமாம். கருவரை என்ற விடத்துக் கருமையாவது பெருமை. பெரியமலை என்றபடி. வரை என்பது பால்பகாஅஃறி

ணைப் பெயராதலால் 'மலைகள்' எனப் பன்மைப் பொருள்பட்டு, கங்கை பெருகி வரும்போது வழியில் பல பல மலைகள் நேர்படுமாதலால் அவற்றையெல்லாம் தன் வேகத்தாலே பேதித்துக்கொண்டு அங்குள்ள யானைகளையும் உருட்டிக் கொண்டு ப்ரவஹித்ததாக உரைத்தலும் பொருந்தும். ... ... (சு)

வெந்திறல்களிறும்வேலைவாயமுதும்
விண்ணொடுவிண்ணவர்க்கரசும் *
இந்திரற்கருளியெமக்குமீந்தருளும்
எந்தையெம்மடிகளெம்பெருமான் *
அந்தரத்தமரரடியிணைவணங்க
ஆயிரமுகத்தினாலருளி *
மந்தரத்திழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (எ)

| பதம் | பொருள் | பதம் | பொருள் |
|---|---|---|---|
| வேலைவாய் | கடலில் நின்றுமுண்டான | அந்தரத்து அமரர் | ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்களெல்லோரும் |
| வெம் திறல் களிறும் | மிக்க மிடுக்கையுடைய ஐராவத மென்கிற யானையையும் | அடி இணை வணங்க | எம்பெருமானுடைய திருவடிகளை ஸேவித்துப் பிரார்த்திக்க |
| அமுதும் | அம்ருதத்தையும் | ஆயிரம் முகத்தினால் அருளி | (அவர்களது வேண்டுகோளின்படி) பலமுகமாகப் பிரவஹிக்கும்படி (கங்கையை நோக்கி) நியமித்தருள |
| விண்ணொடு | ஸ்வர்க்க லோகத்தையும் | மந்தரத்து இழிந்த | (அவ்வண்ணமாகவே) மந்தரமலையினின்றும்பெருகின |
| விண்ணவர்க்கு அரசும் | தேவர்களுக்கெல்லாம் அரசனாயிருக்குந் தன்மையையும் | கங்கையின் கரை மேல் | கங்கையின் கரைமீதுள்ள |
| இந்திரற்கு அருளி | இந்திரனுக்குக் கொடுத்தருளி | வதரியாச்சிராமத்து உள்ளான் | ஸ்ரீபதரிகாச்ரமத்திலே உள்ளவன். |
| எமக்கும் ஈந்தருளும் | நமக்கும் வேண்டிய அருளைச் செய்கிற | | |
| எந்தை எம் அடிகள் எம் பெருமான் | ஸர்வேச்வரன் (எங்கே எழுந்தருளியிருக்கிறானென்னில்) | | |

* * *—[வெந்திறற்களிறும்.] திருமால் தேவர்களின் பிரார்த்தனைக் கிணங்கிக் கடல்கடைந்தருளின காலத்து, கடையப்பட்ட அக்கடலினின்று ஐராவதயானை, உச்சைச்ச்ரவஸ் என்னுங் குதிரை, விஷம், சந்திரன், கல்ப வ்ருக்ஷம், அமுதம் முதலியன உண்டாயினவென்று புராணங்கள் கூறும். அவற்றில் தேவேந்திரனுக்கு ஐராவதயானையையும் அமிருதத்தையும் தேவர்கட்குத் தலைவனாயிருக்கும் ஸாம்ராஜ்யத்தையும் கொடுத்தருளி, அந்தரங்க அடியவர்களான நமக்குத் தன்னையே கொடுத்தருளி உபகரித்த எம்பெருமான் வதரியாச்சிரமத்துள்ளான்; அவ்வாச்சிரமம் எங்குள்ளது?—கங்கையின் கரைமேலுள்ளது. அக்கங்கை எப்படிப்பட்டது?—அந்தரத்தமரரடியிணைவணங்க

ஆயிரமுகத்தினாலருளி மந்தரத் திழிந்தது. அதாவது—கங்கையானது ஒரு முகமாக வந்து இழிந்தால் பெரிய விசையோடே வருகிறமிடுக்கைக் கடல் பொறு தென்று தேவர்கள் எம்பெருமான் திருவடிகளைப் பணிந்து ‘கங்கை பல முகமாகப் பெருகும்படி அருள்புரியவேணும்’ என்று பிரார்த்திக்க, அவன் ‘அப்படியே ஆகுக’ என்று அருள்கூர்ந்து கங்கையை நியமித்தவளவிலே கங்கை பல முகமாகப் பெருகிற்றும். “அந்தரத்தமரர் அடியிணை வணங்க” என்று இன்னாருடைய அடியை வணங்கினராகச் சொல்லாமையால், எம்பெருமானுடைய அடியிணையை வணங்கினராகக் கொள்ளப்பட்டது. அன்றி, கங்காதேவியின் திருவடிகளிலேயே வணங்கிப் பிரார்த்தித்தனரென்றுங் கொள்ளலாம். “அன்றிக்கே, கங்கைதன்னை யாச்ரயிக்க அதுதானநுகூலையாகவுமாம்” என்றார் பெரியவாச்சான்பிள்ளையும். எம்பெருமானடியிணையை வணங்கினராகக் கொள்ளும் யோஜனையில், மூன்றாமடியின் இறுதியிலுள்ள அருளி என்றதை எச்சத்திரிபாகக் கொள்ளவேணும்; ஆயிரமுகத்தினால் பிரவஹிக்கும்படி அருள என்றபடி. ஆயிரமுக மென்றது அநேகப்ரகாரமாக என்றபடியாமத்தனை. “மேருவிலே யிழிந்து மந்தரத்திலே யிழிந்து ஹிமவானிலே யிழிந்து இங்ஙனே பலவகைகளாலே வரும்படியைச் சொல்லக் கடவதிறே” என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க. (எ)

மான்முனிந்தொருகால்வரிசிலைவளைத்த
மன்னவன் பொன்னிறத்துரவோன் *
ஊன்முனிந்தவனதுடலிருபிளவா
உகிர்நுதிமடுத்து * அயனரனைத்
தான்முனிந்திட்ட வெந்திறல்சாபம்
தவிர்த்தவன் * தவம்புரிந்துயர்ந்த
மாமுனிகோணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (அ)

| | |
|---|---|
| ஒருகால் | (பஞ்சவடியில் எழுந்தருளியிருந்த) ஒரு ஸமயத்தில் |
| மான் முனிந்து | மாரீசமாயமானின் மேற் சீறி |
| வரி சிலை வளைத்த மன்னவன் | அழகிய வில்லை (அந்த மான் மேலே) வளைத்தெறிந்த செருக்கனும் |
| பொன் நிறத்து உரவோன் | பொன்போன்ற நிறத்தையுடைய ஹிரண்யனென்னுமொரு பலிஷ்டனுடைய |
| ஊன் முனிந்து | உடலை ஒழித்து விடுவதாகச் சீற்றங்கொண்டு |
| அவனது உடல் | அவ்வசுரனுடைய சரீரம் |
| இரு பிளவு ஆ | இரண்டு பிளவாம்படி |
| உகிர் நுதி மடுத்து | நகங்களின் நுனியை (வுடலில்) அழுத்தினனும், |
| அயன் தான் அரனை முனிந்து | நான்முகக் கடவுள் சிவன் மேல் சீறி |
| இட்ட | (அவனுக்குக்) கொடுத்த |
| வெம் திறல் சாபம் தவிர்த்தவன் | மிகவும் க்ரூரமான சாபத்தைப் போக்கினவனுமுள்ள எம்பெருமான் (எங்குள்ளானென்னில்;) |

| | | | |
|---|---|---|---|
| தவம் புரிந்து உயர்ந்த மா முனி கொணர்ந்த | தபஸ்விகளில் தலைவரான பகீரதர் கொண்டுவந்த | கங்கையின் கரை மேல் | கங்கையின் கரைமீதுள்ள |
| | | வதரியாச் சிராமத்து உள்ளான் | ஸ்ரீபதரிகாச்ரமத்திலுளன். |

* * * [மான்முனிந்தொருகால்.] மாரீசனென்கிற மாயமான்மேலே அம்பு எய்து அதனை முடித்தவனும், பரமபக்தனான ப்ரஹ்லாதனுக்குக் கொடுமையியற்றி மஹாத்ரோஹியான ஹிரண்யகசிபுவின் மார்பைப் பிளந்தொழித்தவனும், பிரமனால் சிவனுக்கு நேர்ந்த ப்ரஹ்மஹத்திசாபத்தைத் தொலைத்தருளினவனுமான எம்பெருமான் வதரியாச்சிரமத்துள்ளான்.

அயனரனைத்தான் முனிந்திட்ட வெந்திறல்சாபந்தவிர்த்த வரலாறு :—ஒரு காலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளுதலும், அவன் 'இதற்கு என்செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந் தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்: என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சை யேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒரு நாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்பதாம்.

தவம்புரிந்துயர்ந்தமாமுனிகொணர்ந்த என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் கூறுவர் ;— விச்வாமித்ரன் க்ஷத்ரியனாயிருக்கச் செய்தேயும் தவம் புரிந்து ப்ரஹ்மர்ஷித்வமாகிற உயர்த்தி பெற்றானாகையாலே தவம்புரிந்துயர்ந்த மாமுனி யென்று விச்வாமித்ரனைச் சொல்லுகிறது. அவன் கொணர்ந்த கங்கை யென்றது—ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தன்னுடைய யஜ்ஞரக்ஷணார்த்தமாக அழைத்துக்கொண்டு போனபோது கங்கையின் வரலாறுகளைச் சொல்லிக்கொண்டே கங்கைக்கரைமேல் அழைத்துக்கொண்டு போயினனாதலால். தவம்புரிந்துயர்ந்த மாமுனியினால் (ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தன் கரைமீது) கொண்டு வரப்பெற்ற கங்கை என்றதாயிற்று. இப்பொருள் கொள்வது அரியவழி யென்றெண்ணின ஸ்ரீபராங்குச தாஸரென்பவர் "மாமுனி புகன்ற கங்கையின் கரை மேல்" என்று பாடத்தைத் திருத்திக்கொண்டால் நன்றாகுமே என்றாராம்; அதை நம்பிள்ளை கேட்டருளி "உள்ள பாடத்திற்கு நாம் பொருளுரைக்கக் கடமைப் பட்டிருக்கிறோமேயன்றி இல்லாததொரு பாடத்தைக் கற்பிக்க வல்லோமல்லோம்" என்றருளிச் செய்தாராம்.

இனி, தவம்புரிந்துயர்ந்தமாமுனி என்று பகீரதமுனியையே சொல்லிற்றாய், அவனால் கொண்டுவரப்பட்ட கங்கை யென்று உரைத்தலும் ஒன்று. ... (அ)

கொண்டல்மாருதங்கள்குலவரைதொகுநீர்க்
குரைகடலுலகுடனனைத்தும் ※
உண்டமாவயிற்றோனொண்சுடரேய்ந்த
உம்பருமூழியுமானான் ※
அண்டமூடறுத்தன்றந்தரத்திழிந்து
அங்கவனியாளலமர ※ பெருகும்
மண்டுமாமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௬)

| | |
|---|---|
| கொண்டல் | மேகங்களையும் |
| மாருதங்கள் | வாயுஸமூஹத்தையும் |
| குலம் வரை | குலபர்வதங்களையும் |
| தொகு நீர் குரை கடல் | நீர் நிறைந்து கோஷம் செய்கிற கடல்களையும் |
| உலகு அனைத்தும் | மற்றுமெல்லா வுலகங்களையும் |
| உடன் | ஏககாலத்தில் |
| உண்ட | அமுதுசெய்த |
| மா வயிற்றோன் | பெரிய திருவயிறுடையனும், |
| ஒண் சுடர் ஏய்ந்த உம்பரும் ஊழியும் ஆனான் | சந்திரஸூர்யர்கள் பொருந்தியிருக்கிற மேலுலகத்திற்கும் காலம் முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் நிர்வாஹகனுமான எம்பெருமான் (எங்குளன் எனில்) |
| அன்று | பகீரதன் கங்கையை அவதரிப்பித்த அப்போது |
| அண்டம் ஊடு அறுத்து | ப்ரஹ்மலோகத்தை இடைவெளி யாக்கிக்கொண்டு |
| அந்தரத்து இழிந்து | ஆகாசத்தில் வந்திழிந்து |
| அங்கு | அங்கு நின்றும் |
| அவனியாள் அலமர பெருகும் | பூமி நடுங்கும்படியாக (பூமியிலே) ப்ரவஹித்ததும் |
| மண்டு மா மணி நீர் | நெருங்கி நிறைந்து தெளிந்த ஜலத்தையுடையதுமான |
| கங்கையின் கரைமேல் | கங்கையின் கரைமேலுள்ள |
| வதரியாச்சிராமத்து உள்ளான் | ஸ்ரீபதரிகாச்ரமத்திலுள்ளான் |

※ ※ ※ [கொண்டல்மாருதங்கள்.] ஸகல பதார்த்தங்களையும் பிரளயங் கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து நோக்கினவனும் உபயவிபூதி நாதனுமான எம்பெருமான் வதரியாச்சிரமத்துள்ளான்.

"ஒண்சுடரேய்ந்த உம்பருமூழியுமானான்" என்றது உபயவிபூதி நாதத்வத்தைச் சொன்னபடி. எங்ஙனே யென்னில்; உம்பரும்ஆனான் என்பதனால் மேலுலகத்திற்கு நிர்வாஹகனாயிருக்குந்தன்மை சொல்லிற்று. ஊழியுமானான் என்பதனால், "న కాల స్తత్ర వై ప్రభుః = ந காலஸ் தத்ர வை ப்ரபு:" என்னப்பட்ட விண்ணுலகுக்குப் பிரதிகோடியாய், காலம் நடமாடக் கடவதான இவ்வுலகுக்கு நிர்வாஹகனாயிருக்குந் தன்மை சொல்லிற்று. (ஊழி—காலம்.)

[அண்டமூடறுத்து இத்தியாதி.] அண்டமென்று ப்ரஹ்மலோகத்தைச் சொல்லுகிறது; அதை ஊடறுத்து—நடுவே வழிபண்ணிக்கொண்டு, அந்தரத்து இழிந்து—அதற்குக் கீழ்ப்பட்ட அந்தரிக்ஷலோகத்திலே வந்திழிந்து, அங்கு

அவனியாள் அலமரப் பெருகும்—அங்கு நின்றும், பூமிப்பிராட்டி பொறுக்க மாட்டாமல் தடுமாறும்படி (பூமியிலே வந்து) பெருகுகின்றதாம். அப்படிப்பட்ட கங்கையின் கரைமேலுள்ளது வதரியாச்சிரமம்.

மாருதம், அண்டம், அவநி—வடசொற்கள். ... ... ... (கூ)

வருந்திரைமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானை *
கருங்கடல்முந்நீர்வண்ணனையெண்ணிக்
கலியன்வாயொலிசெய்தபனுவல் *
வரஞ்செய்தவைந்துமைந்தும்வல்லார்கள்
வானவருலகுடன்மருவி *
இருங்கடலுலகமாண்டுவெண்குடைக்கீழ்
இமையவராகுவர்தாமே. (ய)

| | |
|---|---|
| வரும் திரை மணி நீர் | (பெரிய வேகத்தோடு) வருகிற அலைகளை யுடைத்தாய் தெளிந்த ஜலத்தை யுடைத்தான |
| கங்கையின் கரை மேல் | கங்கையின் கரைமேலே |
| வதரியாச்சிராமத்து உள்ளானை | ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் எழுந்தருளியிருக்கிற |
| கரு முந்நீர் கடல் வண்ணனை | கறுத்த மூன்றுவகைப்பட்ட நீரையுடைய கடல் போன்ற நிறத்தனான ஸ்ரீமந்நாராயணனை |
| எண்ணி | அநுஸந்தித்து |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| வாயொலிசெய்த | திருவாய்மலர்ந்தருளிய |
| பனுவல் | பாசுரமாய் |
| வரம் செய்த | சிறந்ததான |
| ஐந்தும் ஐந்தும் | இப்பத்துப்பாட்டுகளையும் |
| வல்லார்கள் தாம் | ஓதவல்லவர்கள் |
| வெண் குடை கீழ் | வெண் கொற்றக் குடையின்கீழ் வாழ்ந்து கொண்டு |
| இரு கடல் உலகம் ஆண்டு | பெரிய கடல்சூழ்ந்த இப்பூமியை ஆண்டபின் |
| உடன் | அடுத்தபடியாக |
| வானவர் உலகு மருவி | ப்ரஹ்மலோக நிர்வாஹகராக இருந்து |
| இமையவர் ஆகுவர் | (அதன்பிறகு) நித்யஸூரிகளாகவும் ஆவர்கள். |

* * * [வருந்திரைமணிநீர்.] இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டும் பாசுரம் இது. பெரிய வேகத்தோடு வருகிற அலைகளையுடைத்தாய் தெளிந்த தீர்த்தத்தையுடைத்தான கங்கையின் கரைமேலே ஸ்ரீபதரிகாச்ரமத்திலே யெழுந்தருளியிருக்கிற கடல்வண்ணனான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைச் சிந்தித்துத் திருமங்கையாழ்வாரருளிச்செய்த சிறந்த இப்பாசுரங்களை ஓதவல்லவர்கள், கடல்சூழ்ந்த மண்ணுலகத்தை நெடுநாள் ஆண்டபின் ப்ரஹ்மபதத்தை நிர்வஹித்து அதன்பிறகு நித்யஸூரிகளோடே ஒரு கோஷ்டியாக இருக்கப் பெறுவர்.

"ஏராரின்னிசை மாலை வல்லார் இருடீகேசனடியாரே" "வைகுந்தமேறுவரே" என்றாற்போலே பரமபுருஷார்த்தத்தையே பலனாகச் சொல்லவேண்டியிருக்க, இருங்கடலுலகமாள்வதான க்ஷுத்ர புருஷார்த்தத்தைப் பலனாகச்

சொல்வதேன்? என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்டார்; அதற்கு அவர் ரஸோக்தியாக ஒரு உத்தரம் அருளிச்செய்தாராம்; அதாவது—"திருமங்கையாழ்வார் அவதரித்த பின்பு த்யாஜ்யமான ஐச்வர்யமும் பரம புருஷார்த்தமாய் விட்டது காணும்; பணமுள்ள விடங்களிற் சென்று கொள்ளையடித்து பகவத் பாகவத கைங்கரியங்கள் பண்ணுகிறவராகையாலே ஹேயமான ஐச்வரியமும் இவ்வாழ்வார் திருவுள்ளத்தால் உத்தேச்யமாய் விட்டதிறே" என்றாராம். ஆரார் எந்த எந்த பலன்களை விரும்பினாலும் அந்த அந்த பலன்கள் இவ்வருளிச் செயல் மூலமாகக் கிடைக்குமென்பது உண்மைப்பொருள். "இத்தால் சொல்லிற்றாய்த்து—இவன் அபிஸந்தி பண்ணினவற்றை யெல்லாம் தருமென்றபடி." என்ற பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியும் காண்க.

கருங்கடல்முந்நீர்வண்ணனை என்றவிடத்து முந்நீர் என்பது கருங்கடலுக்கு விசேஷணம். முந்நீர்—ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூன்றுவகை நீரையுடையது எனப் பண்புத்தொகையன்மொழியாகிய காரணப்பெயரென்பது பழைய கொள்கை. இதனைமறுத்துக் கூறுகின்றார் அடியார்க்கு நல்லார். ஆற்றுநீரென்பது மழைநீரே யாகையாலும், இவ்விரண்டு மில்லாதபோது ஊற்றுநீருமில்லையாகையாலும் இவற்றை முந்நீரென்பது பொருந்தாது என்று சொல்லி வேறு பொருள் கூறுகிறார்; அதாவது—முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பதாம். முச்செய்கையாவது—மண்ணைப் படைத்தலும் மண்ணை யழித்தலும் மண்ணைக் காத்தலுமாம். நீரினின்று நிலம் பிறந்ததென வேதமோதுதலால படைத்தலும், நீரின்றி உலகம் பிழையாதாதலால் காத்தலும், இறுதியில் நீரினால் மூடப்பட்டு உலகம் அழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்களும் கடலுக்கு உரியனவாம். நச்சினார்க்கினியர் கருத்தும் இதுவே. நம் பூருவாசாரியர்கள் மூன்றுவகை நீரையுடையதென்னும் பொருளையே ஆதரிப்பர். முன்னீர் என றன்னகரமாகப் பாடமோதி, பழைய நீர் என்றுரைப்பாருமுண்டு: ஆதியிற் கடவுள் நீரையே படைத்தாரென்று புராணங்கூறும்.

பனுவல்—சாஸ்த்ரம்; சொல்லுமாம். வரஞ்செய்த—வரமென்று பகவத்ப்ரஸாதத்தைச் சொல்லிற்றாய், தம்முடைய கவனஸாமர்த்தியத்தாலன்றிக்கே எம்பெருமானுடைய இன்னருளால் செய்யப்பட்ட பாசுரமென்றபடி. வடமொழியில் வரமென்று ச்ரேஷ்ட்ட வாசகமுமாகையாலே சிறந்ததாகச் செய்யப்பட்ட என்ற பொருளும் கொள்ளற்பாலதே. ... ... ... (ய)

அடிவரவு—ஏனம் கானிடை இலங்கை துணிவு பேய் தேர் வெந்திறல் மான் கொண்டல் வருந்திரை கலை.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி—முதற்பத்து.

## ஐந்தாந்திருமொழி—கலையுங்கரியும்.



அவதாரிகை:—வாடினேன்வாடி யென்கிற முதல்திருமொழியிலே, தமக்குத் திருமந்திரம் லபித்தபடியைப் பேசினார். அந்தத் திருமந்திரத்தின் அர்த்தத்தையும் கூடவே ஆராய்ச்சி செய்தருளி திருமந்த்ரார்த்தத்துக்கு எல்லை நிலமான திவ்ய தேசங்களிலே சென்று எம்பெருமானை ஸேவிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருமந்திரத்தை வெளியிட்டருளின எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடமான ஸ்ரீபதரிகாச்ரமத்தைத் தேடி வடக்கே எழுந்தருளின வளவில் திருப்பிரிதி என்னும் திவ்யதேசம் நேர்பட, இரண்டாந் திருமொழியால் அதனை அநுபவித்து, அதன் பிறகு வதரியை வணங்கி, அதற்குப் பிறகு ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் ஸந்நிதி பண்ணி யெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைக் கீழ்த்திருமொழியால் மங்களாசாஸநஞ் செய்து, இனி எங்குச் செல்லவேண்டுமென்று யோசித்து நின்றவளவில், ஸ்ரீஸாளக்ராம மென்னும் திவ்யதேசத்திலே தான் எழுந்தருளியிருந்து அடியார்கட்குக் காட்சி தந்தருளுகிறபடியை எம்பெருமான் ஆழ்வாரது ஞானக்கண்ணுக்குத் தோற்றுவிக்க, ஆழ்வாரும் தமது திருவுள்ளத்தை யழைத்து 'நெஞ்சே! சாளக்கிராமத்தைச் சென்று சேருவோம், வா' என்கிறார் இத்திருமொழியில்.

ஸௌபரி என்கிற ஒரு மாமுனிவன் நீர்நிலையிலிருந்து கொண்டு தவம் புரியா நின்றவளவில் அங்கு மீன்களெல்லாம் கூடிக்களித்து விளையாடா நின்றமையைக் கண்ணுற்று 'நாமும் இப்படி குடும்ப வாழ்க்கையிற் கூடிநின்று சிற்றின்பம் நுகர்ந்து களிக்கவேணும்' என்று ஆவல் கொண்டு மாந்தாதா என்னும் அரசனுக்குப் பல பெண்கள் இருப்பதாக உணர்ந்து அவனிடஞ்சென்று தனக்குக் கன்னிகாதானஞ் செய்யுமாறு வேண்ட, அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையுங் கண்டு இசையகில்லாமல் 'பெண் கொடுக்கமுடியாதென்று நம் வாயாற் சொன்னால் முனிவர் முனிந்து சபித்துவிடக்கூடும்; பெண்களிருக்குமிடத்திற்கு இவரை அனுப்புவோம்; இவரைக் கண்டு பெண்கள் காமுற்றார்களாகில் விவாஹம் செய்துகொள்ளட்டும்; இல்லையாகில் அவர்களே மறுத்து விடட்டும்; நம் தலையில் பழி வேண்டா' என்றெண்ணி முனிவரைப் பெண்களிருக்குமிட மனுப்ப, முனிவர் அங்குச் செல்லும்போதே தமது தவ வலிமையால் திவ்ய ஸௌந்தரமான ரூபத்தை ஏன்று கொண்டு போய் அவர்கள் முன்னே நின்றவளவில் அங்கிருந்த ஐம்பது பெண்களும் 'நானே இவரை மணந்துகொள்வேன், நானே இவரை மணந்துகொள்வேன்' என்று போட்டி

போட்டுக்கொண்டு மேல்விழுந்தவாறே, முனிவர் அத்தனை பெண்களையும் மணந்துகொள்ள விரும்பித் தமது தவவலிமையால் ஐம்பது வடிவமெடுத்து அப்பெண்களனைவரையும் விவாஹஞ் செய்துகொண்டு மகிழ்ந்திருந்தாரென்று புராணங்களில் இதிஹாஸமுண்டு. அதுபோலவே எம்பெருமானும் ஆச்ரிதர்களான அஸ்மதாதிகளை அநுபவிப்பதற்காகப் பல பல திவ்யமங்களவிக்ரஹங்களைப் பரிக்ரஹித்து, திவ்ய தேசங்கள்தோறும் ஸந்நிதி பண்ணியிருக்கிறானாகையாலே ஆழ்வார் எங்கும் புகுந்து மங்களாசாஸநம் செய்ய விரும்பி ஸ்ரீஸாளக்ராமத்திலே செல்லுகிறாராயிற்று.

“ஸௌபரி போகத்துக் குறுப்பாக அநேகம் வடிவு கொண்டாற்போலே ஆச்ரிதரை அநுபவிக்கைக்கு உறுப்பாக உகந்தருளின நிலங்களெங்கும் புகுந்து ஸந்நிதி பண்ணினானாயிற்று அவன்; இனி இவர்தாமும் * தானுகந்த ஊரெல்லாம் தன்தாள்பாடி எங்கும் புக்கு அநுபவிக்கையிலேயாய்த்து அபேக்ஷை பண்ணியிருப்பது” என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியையும் இங்கே அநுஸந்திப்பது. ... ... ... ... ... ... ...

கலையும்கரியும்பரிமாவும் திரியும்கானம்கடந்துபோய் *
சிலையும்கணையும்துணையாகச் சென்றான்வென்றிச்செருக்களத்து *
மலைகொண்டலைநீரணைகட்டி மதிள்நீரிலங்கைவாளரக்கர்
தலைவன் * தலைபத்தறுத்துகந்தான் சாளக்கிராமமடைநெஞ்சே! (க)

பதவுரை.

| | |
|---|---|
| கலையும் | மான்களும் |
| கரியும் | யானைகளும் |
| பரிமாவும் | குதிரைகளுமாகிய மிருகங்கள் |
| திரியும் | திரியுமிடமான |
| கானம் | காட்டை |
| கடந்து போய் | தாண்டிச் சென்று |
| சிலையும் கணையும் துணை ஆக | வில்லும் அம்பும் துணையாகக் கொண்டு |
| வென்றி செரு களத்து சென்றான் | (தனக்கு) வெற்றியை விளைக்கவல்ல போர்க்களத்திலே எழுந்தருளினவனும், |
| அலை நீர் | அலைக்கின்ற நீரையுடைய கடலிலே |
| மலை கொண்டு | மலைகளாலே |
| அணை கட்டி | ஸேது கட்டி |
| மதிள் நீர் இலங்கை | மதிளையும் ஸமுத்ரத்தையும் காப்பாக உடைத்தான இலங்கையிலுள்ள |
| வாள் | வாளை ஆயுதமாகக் கொண்ட |
| அரக்கர் தலைவன் | இராவணனுடைய |
| பத்து தலை | பத்துத் தலைகளையும் |
| அறுத்து | அறுத்துத்தள்ளி |
| உகந்தான் | (ஆச்ரிதவிரோதி தொலைந்தானென்று) திருவுள்ள முகந்தவனுமான எம்பெருமானுடைய திவ்யதேசமாகிய |
| சாளக்கிராமம் | ஸ்ரீஸாளக்ராமத்தை |
| நெஞ்சே அடை | மனமே! சென்றுசேர். |

* * *—[கலையுங்கரியும்.] நெஞ்சே! நீ ஸ்ரீஸாளக்ராமமென்னும் திவ்ய தேசத்தை அடைந்திடு. அத்திருப்பதி யாருடையது?—இராவணனது தலை

கள் பத்தையும் அறுத்துகந்த இராமபிரானுடையது. இராவணன் தலைகளை யறுப்பதற்காக அப்பெருமான் என்னகாரியஞ் செய்தான்?—பலபல மிருகங்கள் நிறைந்து கிடந்த கொடிய காட்டைக் கடந்து சென்று வில்லையும் அம்புகளையும் துணையாகக் கொண்டு யுத்தபூமிக்கு வருமளவில் கடலைக்கடந்து வரவேண்டிற் றுனபடியால் மலைகளைக்கொண்டு கடலிலே ஸேதுகட்டி அவ்வழியாலே இலங்கை வந்து சேர்ந்தானுயிற்று. இப்படி ஆச்ரிதவிரோதிகளை அழிப்பதற்கு அருந்தொழில்கள் செய்யுமவனுன பரமபுருஷன் நம்போல்வாருடைய விரோதி களையும் தொலைப்பதற்குச் சாளக்கிராமத்திலே வந்து நிற்கிறுன்; அங்குச் செல் வோம், வா நெஞ்சே! என்றுராயிற்று.

காட்டின் கொடுமையைச் சொல்லவேண்டில், யானை சிங்கம் புலி முதலிய துஷ்ட மிருகங்களையன்றோ முன்னே கூறவேண்டும்; கலையும் என்று ஸாதுவான மான்களை முன்னே கூறுவானேன்? என்னில்; மாரீசன் மாயமானுகவந்து செய்த கொடுமை வலிதாயிருந்ததனுல் அந்த மான்சாதியை முன்னே கூறின ரென்க. பிராட்டி இராமனைப் பிரிந்து பட்ட வருத்தங்கட்கெல்லாம் மூலகார ணம் மாரீசனுகிற மாயமானே யாதலால் கொடிய மிருகங்களில் மான் முற்பட வுரியதேயாம்.

இங்கு மானை முற்கூறியதற்கு வேறொரு வகையான காரணமுங்கூறலாம். அதாவது—மான்சாதியில் மிக நன்றிபாராட்டி முற்கூறுகின்றுரென்னலாம். மஹாத்ரோஹியான மாரீசனிடத்தில் நன்றிபாராட்டுதல் ஏதுக்கென்னில்; கேண்மின். சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு, ஜனஸ்தானத்திலிருந்த தன் தமைய னுகிய கரன்பக்கல் சென்று இச்செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக் குக் கோபத்தை உண்டாக்கினவளவில் அக்கரன் பதினுலாயிரம் சேநாதிபதி களையும் ஸேனைகளையும் இராமபிரானேடு போர் செய்ய அனுப்ப, இராமன் அவர்களத்தனை பேரையும் தாம் ஒருவராகவே கொன்று வென்றிட்டு, பிறகு வந்த கரனையும் கொன்றுவிட்டு ஜனஸ்தானத்தை சூந்யமாக்கினபோது அங்கு இராமபாணத்துக்குத் தப்பிப்பிழைத்து ஒளித்துஓடிப்போன அகம்பநன் இலங்கைக்குச் சென்று ஜநஸ்தானமடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ஒருவராலும் வெல்ல முடியாதவனென்பதையும் சொல்லி 'ஸீதையை அபஹரித்துக் கொண்டு வந்தால் அந்த வருத்தத்தினுல் இராமன் முடிந்து விடக் கூடும்' என்று தெரிவிக்க, இராவணன் அவனது சொற்படியே 'ஸீதை யைக் கொள்ளை கொள்ள உபாயமென்?' என்று யோசித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்து 'நீஎனக்கு ஒருதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் கருத்தை வெளியிட, அதுகேட்ட மாரீசன் 'அப்பா இராவணு! அந்த மஹாநுபாவனுடன் உனக்கு த்வேஷம் உதவாது; இந்த இராமன் சிறுபிள்ளையாயிருக்கும்பொழுதே விச்வாமித்ரயாகத்தில் அவருடைய பாணத்துக்கு இலக்காகி நான்பட்டபாடு இன்னும் மறக்கமுடியவில்லை; அத் திருநாமம் செவிப்படும்போதே என்உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டு விடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று யுக்தமாக உபதேசிக்க அதைக்

கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான். பிறகு சூர்ப்பணகை இலங்கைக்குச் சென்று, தான் மூக்கறுப்புண்டபடியையும் தாசரதிகளுடைய ஸௌந்தர்ய பராக்ரமாதி குணங்கள் எல்லையற்றிருக்கிறபடியையும் ஸீதையின் இருப்பையுஞ் சொல்லி 'இராகவனை நீ எவ்விதத்திலாவது பங்கஞ் செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்ல' என்று கூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடஞ்சென்று நயபயங்களினால் அவனைத் தன் சொல்வழிப்படுத்திக் கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டு வந்து தான் ஓரிடத்தில் ஒளித்திருந்தான். மாரீசன் இராவணனுடைய வலிகட்டாயம் பொறுக்கமாட்டாமல் மனம் நொந்துகொண்டே உடன்பட்டு வந்தானேயன்றி இராமபிரானிடத்தில் கறுக்கொண்டு வந்தானில்லை; படுபாவியான இவ்விராவணனுக்கு உடன்பட்டு நாம் காரியஞ் செய்யாவிடில் இவன் நம்மைக் கொலைசெய்யப்போகிறான். இவனுக்கு உடன்பட்டுக் காரியஞ்செய்தோமாகில் இராமபிரான் நம்மைக் கொன்றுவிடப்போகிறார்; இப்பாவியின்கையில் நாம் கொலையுண்பதிற் காட்டிலும் அப்பரமபுருஷன் கையிற் கொலையுண்பது நற்கதிக்கு ஹேதுவாம்' என்றெண்ணித் தன் மரணத்தைத் தீர்மானித்துக் கொண்டே வந்தானத்தனை. பிறகு மாரீசன் பொன்மானின் வடிவெடுத்துக் கொண்டு ஸீதையின் பார்வையில் மேயத்தொடங்கி அக்காட்டில் நெடுந்தூரம் இராகவனை இழுத்துக்கொண்டு போய்விட்டான். அப்பொழுது இராகவன் 'இவன்யாரோ அரக்கன்' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனால் அடியுண்ட மாரீசன் மானுருவைவிட்டு நிஜரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவனைப்போல் கூச்சலிட்டுக்கொண்டு மரணமடைந்தான். இங்கு நாம் ஆலோசிக்கவேண்டிய தென்னவென்றால், இப்படி இவன் கூச்சலிட்டது இராவணனுக்கு உபகாரஞ் செய்ய வேணுமென்கிற எண்ணத்தினாலா? அல்லது அபகாரஞ் செய்யவேணுமென்கிற எண்ணத்தினாலா? என்று ஆராயவேண்டும். 'இராவணன்கையாற் கொலையுண்பதை விட இராமபாணத்தாற் கொலையுண்டு முடிதல் நன்று' என்கிற எண்ணத்தோடு வந்த மாரீசனுக்கு இராவணன் திறத்தில் உபகாரஞ் செய்ய வேணுமென்கிற எண்ணமுண்டாக ப்ரஸக்தியில்லை; 'நாம் மாண்டொழிவது போல் அவனையும் மாண்டொழியச் செய்துவிடவேண்டு' மென்ற எண்ணங்கொண்டே இராகவனைப்போல் கூச்சலிட்டான்; மாரீசன் இப்படி கூச்சலிடாமல் வெறுமனே செத்திருப்பானாகில், பிராட்டி லக்ஷ்மணனைப்பிரிய நேர்ந்திராது; இராவணன் பிராட்டியைக் கவர்ந்துகொண்டு போகவும் அது நிமித்தமாகத் தான் மாண்டுபோகவும் நேர்ந்திராது; தேவர்களின் பிரார்த்தனை ஈடேறவும் வழியிராது. மரணகாலத்தில் மாரீசன் போட்ட கூச்சலே ராவணஸம்ஹாரத்திற்கு மூலகாரணமாக நின்றமையால் ஸ்ரீராம விஷயத்திலே மாரீசன் உபகாரகனேயன்றி அபகாரகனல்லன் என்று நினைக்கத் தக்கது. இப்பெருநன்றியைப் பாராட்டி இங்குக் "கலையும்" என்று மான்சாதியை முற்படக் கூறுகின்றார் ஆழ்வார் என்று கொள்க.

கரியும்— கரீ என்ற வடசொல் யானைக்குப் பெயர். பரி என்றும் பரிமா என்றும் குதிரைக்குப் பெயர். கலை, கரி, பரிமா என்பன பால்பகாஅஃறிணைப் பெயர்களாதலால் கலைகளும் கரிகளும் பரிமாக்களும் எனப் பன்மைப் பொருள் படும். கானநம் என்றவடசொல் கானம் எனச் சிதைந்தது

கானங்கடந்துபோய் என்ற சொல்லாற்றலால்—ஒரு காட்டிலிருந்து மற்றொரு காடு, அந்தக் காட்டிலிருந்து மற்றொருகாடு என்றிப்படி காடுகளின்மேற் காடாக எழுந்தருளினமை தோற்றும். வழியில் ஒரு குக்ராமமும் இல்லை யென்ற படி. "తే వనేన వనం గత్వా = தே வநேந வநம் கத்வா" என்றார் வான்மீகியும்.

சென்றான் வென்றிச் செருக்களத்து = அயோத்தியை விட்டுப் புறப்பட்ட பிறகு யுத்தம் நடந்த இடங்களெல்லாவற்றையும் நினைத்து "செருக்களத்துச் சென்றான்" என்கிறார். கரதூஷண யுத்தம் முதலிய இடைப்போர்கள் பலவுண்டே. ஒவ்வொரு யுத்தத்திலும் பெருமாளுக்கு விஜயமே கிடைத்ததுபற்றி "வென்றிச் செரு" என்றார். யுத்தங்களில் இளையபெருமாளும் மற்றும் வானர வீரர்களும் துணைவர்போல இருந்தாலும் தனிவீரனான தாசரதிக்கு எந்தத் துணையும் அபேக்ஷிதமல்ல என்பது தோன்ற சிலையுங்கணையுந் துணையாக என்றார். "சிலையும் கணையுந் துணையாகக் கானம் கடந்துபோய் மலைகொண்டலை நீரணைகட்டி வென்றிச் செருக்களத்துச் சென்றான்" என்றும் அந்வயிக்கலாம். வாளரக்கர்தலைவன் தலைபத்தறுத்துஉகந்தான்="ஒரு தேவதையை ஆச்ரயித்து அதன் பக்கலிலே ஒரு வாளைப்பெற்று அதைத் தனக்கு அரணாக நினைத்திருப்பானைப் தூர்வர்க்கத்துக் கெல்லாம் நியாமகனாயிருக்கிற ராவணனுடைய தலைகள் பத்தையுமறுத்து 'தேவர்களும் தந்தாமுடைய குடியிருப்புப் பெற்றார்கள்; ரிஷிகளும் தந்தாமுடைய ஆச்ரமங்களிலேயிருந்து தபஸ்ஸு பண்ணப்பெற்றார்கள்' என்று உகந்தவன்; அப்படி ஆச்ரிதவிரோதியைப் போக்கிப் பிற்பட்டார்க்கு முகவுகைக்காக வந்து வர்த்திக்கிற ஸ்ரீஸாளக்ராமத்தை ஆச்ரயிக்கப் பாராய் நெஞ்சே யென்கிறார்" என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி அறிக. ... ... ... ... ... (க)

கடம்சூழ்கரியும்பரிமாவும் ஒலிமாந்தேரும்காலாளும் *
உடன்சூழ்ந்தெழுந்தகடியிலங்கைபொடியாவடிவாய்ச்சரம்துரந்தான் *
இடம்சூழ்ந்தெங்குமிருவிசும்பில் இமையோர்வணங்கமணம்கமழும் *
தடம்சூழ்ந்தெங்குமழகாய சாளக்கிராமமடைநெஞ்சே! (உ)

| | | | |
|---|---|---|---|
| கடம் சூழ் கரியும் | மதஜலத்தையுடைய யானைகளும் | உடன் சூழ்ந்து | ஒன்றாகத் திரண்டு |
| பரிமாவும் | குதிரைகளும் | எழுந்த | கிளர்ந்து தோற்றின |
| ஒலி மா தேரும் | ஒலியையுடைய மஹாரதங்களும் | கடி இலங்கை | அரணையுடைத்தான லங்கை |
| காலாளும் | காலாட்களும் | பொடி ஆ | பொடிபடும்படியாக, |
| | | வடி வாய் | கூர்மையானவாயையுடைய |

சரம் அம்புகளே

துரந்தான் { பிரயோகித்தவனுன இராம பிரான் (எழுந்தருளி யிருக்குமிடமான)

[சாளக்கிராமம் அடை நெஞ்சே!-]
(அது எப்படிப்பட்டதென்றால்)

இருவிசும்பில் இமையோர் { விசாலமான ஸ்வர்க்கத்தி லுள்ள தேவர்கள்

இடம் எங்கும் சூழ்ந்து { பூமியெங்கும் வந்து பரவி

வணங்க ஆச்ரயிக்கத்தக்கதாய்

மணம் கமழும் தடம் { புஷ்பவாஸனேகள் வீசுகின்ற தடாகங்களாலே

சூழ்ந்து சூழப்பட்டு

எங்கும் அழகு ஆய { எல்லாப்பக்கங்களிலும் அழகையுடைத்தாயிருக்கிற

சாளக்கிராமம்—*.

* * * [கடஞ்சூழ்கரியும்.] நெஞ்சே! சாளக்கிராமத்தைச் சென்று சேர்; அத்திவ்யதேசம் யாருடையது?—கடஞ்சூழ்கரியும் பரிமாவு மொலிமாந்தேருங் காலாளுமுடன் சூழ்ந்தெழுந்த கடியிலங்கை பொடியாவடிவாய்ச் சரந்துரந்த பெருமானுடையது;—மதஜலத்தையுடையனவாய் மலேகள் வடிவெடுத்து நடந்தாற் போன்றுள்ள யானேத்திரள்களும், குதிரைத்திரள்களும், கோஷத்தையுடைய பெரிய தேர்களும் காலாட்களும் ஆகிய இவையெல்லாம் ஒன்றாகத் திரண்டு பெரியகிளர்ச்சியோடே தோற்றின இலங்கை சுடுகாடாம்படியாகத் தீக்ஷ்ணமான அம்புகளைப் பிரயோகித்த சக்ரவர்த்திதிருமகன் எழுந்தருளியிருக்கு மிடமென்கை.

தேவர்களும் இங்குவந்து ஸேவிக்கும்படியாய் அழகான ஸந்நிவேசங்களேயுடையது என்கிறார் பின்னடிகளில். நிலத்தில் எவ்வளவு அவகாசமுண்டோ அவ்வளவும் வந்து சூழ்ந்துகொண்டு சுவர்க்கத்திலுள்ள தேவர்கள் வணங்கப் பெற்றதும், பரிமளம் வீசுகின்ற பொய்கைகள் சூழ்ந்ததும் அழகியதுமான சாளக்கிராமத்தை நெஞ்சே! அடை. ... ... ... ... (உ)

உலவுதிரையுங்குலவரையும் ஊழிமுதலாவெண்திக்கும் *
நிலவும்சுடருமிருளுமாய் நின்றான்வென்றிவிறலாழி
வலவன் * வானோர்தம்பெருமான் மருவாவரக்கர்க்கெஞ்ஞான்றும்
சலவன் * சலம்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே! (ங)

உலவு திரையும் { உலாவுகின்ற அலேகளே யுடைய கடலும்

குலம்வரையும் குலபர்வதங்களும்

ஊழி முதலா எண் திக்கும் { காலம் முதலாகவுள்ள ஸகல பதார்த்தங்களும் எட்டுத் திசைகளும்

நிலவும் சந்திரனும்

சுடரும் ஸூர்யனும்

இருளும் இருட்டும்

ஆய் நின்றான் { ஆகிய இப்பொருள்களுக்கெல்லாம் அந்தர்யாமியாயிருப்பவனும்

வென்றி விறல் ஆழி வலவன் { வெற்றியையும் மிடுக்கையுமுடைய திருவாழியை வலத்திருக்கையிலே யுடையவனும்

வானோர் தம் பெருமான் { தேவாதிதேவனும்

மருவா அரக்கர்க்கு { (தன்னை) ஆச்ரயியாத ராக்ஷஸர்கள் விஷயத்தில்

எஞ்ஞான்றும் சலவன் { எப்போதும் நன்மைசெய்யாதவனுமாகிய எம்பெருமான் (எழுந்தருளியிருக்குமிடமாய்)

சலம் சூழ்ந்து அழகு ஆய { நீர் நிலங்களால் சூழப்பட்டு அழகு பொருந்தியதான

சாளக்கிராமம் நெஞ்சே! அடை.

* * * [உலவுதிரையும்.] $ "பண்டைநான்மறையும் வேள்வியும் கேள்விப் பதங்களும் பதங்களின் பொருளும், பிண்டமாய்விரிந்த பிறங்கொளியனலும் பெருகிய புனலொடு நிலனும், கொண்டல்மாருதமும் குரைகடலேழும் ஏழுமா மலைகளும் விசும்பும், அண்டமுந்தானாய் நின்ற வெம்பெருமான்" என்னுமா போலே ஜகத்ஸ்வரூபியாய் நிற்கும் நிலையைச் சொல்லுகிறார் ஒன்றரையடிகளால். "సర్వం ఖల్విదం బ్రహ్మ = ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம." என்று சுருதியும் சொல்லிற்று. ஸகல பதார்த்தங்களையும் சரீரமாகவுடையவன் என்றபடி. வென்றி விறலாழிவலவன் என்பதனால் அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹமுடைமை சொல்லுகிறது. அடியவர்களைக் காத்தருள்வதற்கு உறுப்பான ஸ்ரீ ஸுதர்சநாயுதத்தை வலத்திருக்கையிலே யுடையவன். வென்றி விறலாழி=எங்குப் போனாலும் ஜயத்துடன் திரும்பி வருவது; அதற்கு அநுகூலமான பராக்ரமமுடையது.

மருவாஅரக்கர்க்கு எஞ்ஞான்றும் சலவன்=பகவத் பாகவத விஷயமென்றால் பொறுக்கமாட்டாத ஆஸுரப்ரக்ருதிகளுக்கு எப்போதும் தீங்கு செய்பவன். சலத்தையுடையவன் சலவன்; சலம்—தீராக்கோபம், வஞ்சம், பொய். நல்லார்க்கு மெய்யனாய் தீயார்க்குப் பொய்யனாயிருக்கும் எம்பெருமானுடைய சாளக்கிராமத்தை நெஞ்சே! அடைந்திடு. ... ... ... ... (௩)

ஊரான்குடந்தையுத்தமன் ஒருகாலிருகால்சிலைவளைய *
தேராவரக்கர்தேர்வெள்ளம்செற்றான் வற்றாவருபுனல்சூழ்
பேரான் * பேராயிரமுடையான் பிறங்குசிறைவண்டறைகின்ற
தாரான் * தாராவயல்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே! (௪)

- ஊரான் — திருவூரகமென்னும் திவ்ய தேசத்தை இருப்பிடமாக வுடையவனும்
- குடந்தை உத்தமன் — திருக்குடந்தையிலே எழுந்தருளியிருக்கிற புருஷோத்தமனும்,
- ஒருகால் — முன்னொரு காலத்தில் (ஸ்ரீராமாவதாரத்தில்)
- சிலை இரு கால் வளைய தேரா அரக்கர் தேர் வெள்ளம் செற்றான் — வில்லினுடைய இரண்டு நுனிகளையும் வளைத்து அவிவேகிகளான ராக்ஷஸர்களுடைய சேனைத் தொகையைச் சிதைத்தவனும்
- வற்றா வரு புனல் சூழ் பேரான் — ஒருநாளும் வற்றாமல் மேன்மேலும் பெருகி வருகின்ற காவிரிநீர் சூழ்ந்த திருப்பேர்நகரில் கண்வளர்ந்தருள்பவனும்
- பேர் ஆயிரம் உடையான் — ஸஹஸ்ரநாமங்களை யுடையவனும்
- பிறங்கு சிறை வண்டு அறைகின்ற தாரான் — நெருங்கி யிருக்கிற சிறகுகளையுடைய வண்டுகள் ஆரவாரிக்கின்ற (திருத்துழாய்) மாலையையுடையவனுமான எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
- தாரா வயல் சூழ்ந்த சாளக் கிராமம் — தாரா என்னும் நீர்ப்பறவைகள் நிறைந்திருக்கிற வயல்களாலே சூழப்பட்ட ஸ்ரீஸாளக்ராமத்தை

நெஞ்சே! அடை—.

* * *—[ஊரான்குடந்தை.] 'ஊரகம்' என்கிற சொல் ஊர் என்று விகாரப்பட்டதாகக்கொண்டு ஊரகமென்கிற திவ்ய தேசத்தைத் தனக்கு இருப்பிட

$ பெரிய திருமொழி 5—7—1.

மாகவுடையவன் என்று பொருளுரைப்பது ஒருவழி. கச்சியில் உலகளந்த பெருமாள் ஸந்நிதிக்குத் திருவூரக மென்று திருநாமம். ஊரான் என்பதைக் குடந்தையோடே அந்வயித்துக் குடந்தையூரான் என்று கொண்டு திருக்குடந்தையை இருப்பிடமாகவுடையவன் என்றுரைத்தலும் ஒரு வழி. உத்தமன்—இப்படி திவ்ய தேசங்களிலே வந்து அனைவர்க்கும் எளியனாக எழுந்தருளியிருப்பது காரணமாகத் திருக்குணங்கள் சிறப்புறப் பெற்றவன் என்றவாறு.

தேரா அரக்கர்=தேர்தலாவது ஆராய்தல்; ஆராய்ச்சியற்ற அரக்கர் என்றது- 'ஸாக்ஷாத் பரமபுருஷனான பெருமானோடு நாமோ எதிரிடுவது' என்று விவேகிக்கமாட்டாமல் அறிவு கெட்டு எதிரிட்ட அரக்கர் என்றபடி. அவர்களுடைய தேர் வெள்ளங்களைச் செற்றானென்றது—ஜநஸ்தானத்திற் செய்த கரவதத்தைச் சொல்லவுமாம்; இலங்கையிற் செய்த ராவணவதத்தைச் சொல்லவுமாம்.

வற்றாவருபுனல்சூழ்பேரான் = பேர்—திருப்பேர்நகர்; அப்பக்குடத்தான் ஸந்நிதி எனவும் 'கோயிலடி' எனவும் வழங்கப்படும். இத்தலம் காவிரிக்கரையிலுள்ளமை பற்றி 'வற்றா வருபுனல் சூழ்' எனப்பட்டது. உள்ள நீர் வற்றாமல் மேன்மேலும் பெருகி வருகின்ற நீர் சூழ்ந்த திருப்பேர் நகரைத் தனக்கு வாஸஸ்தலமாக வுடையவன் என்கை. பேராயிரமுடையான்—தன்னுடைய குணங்களையும் சரிதங்களையும் விளக்குகின்ற பல பல திருநாமங்களையுடையவன் என்கை. பிறங்குசிறைவண்டறைகின்றதாரான்—பிறங்குதல்—பிரகாசித்தலும் நிறைந்திருத்தலும். பிறங்கு என்பதை சிறைக்கு விசேஷணமாக்கி உரைக்கவுமாம், தார்க்கு விசேஷணமாக்கி உரைக்கவுமாம்.

தாராவயல் சூழ்ந்த=தாரா என்று ஒரு பக்ஷிஜாதி; அது நீர் நிலங்களில் வாழ்வது. வடநூலார் பொதுப்படையாக ஸாரஸபக்ஷியென்பர். ... (௪)

அடுத்தார்த்தெழுந்தாள்பிலவாய்விட்டலற அவள்மூக்கயில்வாளால்
விடுத்தான் * விளங்குசுடராழி விண்ணோர்பெருமான், நண்ணார்முன் *
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக் கல்லொன்றேந்தியினநிரைக்காத்
தடுத்தான் * தடம்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே! (௫)

அடுத்து ஆர்த்து எழுந்தாள் { மேல்விழுந்து வந்துகிட்டி ஆரவாரஞ்செய்து கிளர்ந்தவளான சூர்ப்பணகை,
பிலம் வாய் விட்டு அலற { பிலம்போன்ற வாயைத் திறந்துகொண்டு கதறும்படியாக
அவள் மூக்கு அயில் வாளால் விடுத்தான் { அவளுடைய மூக்கை கூர்மையான வாளாலே (இளையவனைக் கொண்டு) அறுத்தவனும்
விளங்கு சுடர் ஆழி { பிரகாசிக்கின்ற ஒளியையுடைய திருவாழியையுடையவனும்
விண்ணோர் பெருமான் { நித்ய ஸூரிகளுக்குத் தலைவனும்

கடுத்து ஆர்த்து எழுந்த பெரு மழையை நண்ணார் முன் இனம் நிரைக்கா கல் ஒன்று ஏந்தி தடுத்தான் { வேகத்துடன் ஆரவாரஞ் செய்துகொண்டு கிளர்ந்துவந்த கனத்த மழையை எதிரிகளான இந்திராதிகளின் கண்ணெதிரில் பசுக்கூட்டங்களை ரக்ஷிப்பதற்காக, (கோவர்த்தனமென்கிற) ஒரு மலையை ஏந்தித் தடுத்தவனுமான எம் பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
தடம் சூழ்ந்து அழகாய சாளக்கிராமம் { தடாகங்களால் சூழப்பெற்று அழகாயிருக்கிற ஸாளக்ராமத்தை
நெஞ்சே! அடை.

* * *—[அடுத்தார்த் தெழுந்தாள்.] அடுத்தார்த்தெழுந்தாளவள் பிலவாய் விட்டலற அவள் மூக்கை அயில்வாளால் விடுத்தான் என்று சூர்ப்பணகையின் மூக்கறுத்தமை சொல்லுகிறது. ஸ்ரீராமன் ஒரு வருஷகாலம் பஞ்சவடியில் எழுந்தருளியிருக்கும்போது ஹேமந்தகாலத்தில் சூர்ப்பணகை என்னொரு அரக்கி அழகிய வடிவமெடுத்து வந்து இராகவனைக்கண்டு காமவிகாரமடைந்து தன்னை மனைவியாகக் கொள்ளுமாறு விரும்ப, இராகவன் 'எனக்கு ஒரு மனைவி இருக்கிறாள்; என் தம்பியாகிய லக்ஷ்மணனை அடைந்தாயாகில் ஸுகமடையலாம்' என்று சொல்ல, அப்படியே அவள் லக்ஷ்மணனிடம் செல்ல, 'நான் ஒருவர்க்கு வேலைக்காரன், என்னை யடைந்தால் நீயும் வேலைக்காரியாவாய்; ஆகையால் அவரையே அடைவது உனக்கு நலம்' என்று லக்ஷ்மணன் சொல்ல; இப்படி அங்குமிங்குமாய்த் திரிந்து இஷ்டத்தைப் பெறாமல் 'நம் இஷ்டத்தை இந்த ஸீதை நிறைவேற வொட்டாமல் செய்கிறாளாகையால் இவளைத் தின்று விடுவோம்' என்று அவ்வரக்கி ஸீதாதேவியிடம் ஓட, உடனே இலக்குமணன் இராமபிரானது ஆஜ்ஞையினால் அவளைத் தகைந்து காதையும் மூக்கையும் அறுத்து அங்கபங்கஞ் செய்திட்டார் என்ற வரலாறு அறியத்தக்கது. இவளை அங்கபங்கஞ் செய்தது இளையபெருமாளின் செய்கையாயினும் இதனை இராமபிரான் மேலேற்றி ஆழ்வார்கள் அநுஸந்திப்பர்கள். உலகில் ஒரு காரியம் செய்வித்தவனை அது செய்தவனாகவே சொல்லுவதுண்டு; அது போலக் கொள்க. அன்றியும், "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றபடி இராமபிரானுக்கு லக்ஷ்மணன் வலக்கை யெனப்படுதலால் அங்ஙனம் கையாகிய லக்ஷ்மணனுடைய செயலை அவயவியான இராமன் செய்ததாகச் சொல்லுதலும் தகுதியே. பலராமன் செய்தருளிய ப்ரலம்பாஸுரவதத்தைக் கண்ணபிரான் செய்தருளியதாக அநுஸந்திப்பதும் இது போன்றதேயாம்.

பிலவாய்விட்டலற=முதலில் ஜநஸ்தானத்திற் சென்றும், பிறகு இலங்கையிற் சென்றும் வாய்விட்டுக் கதறியழுதபடியைச் சொல்லுகிறது. "கலையலங் குமகலல்குலரக்கர் குலக்கொடியைக் காதொடு மூக்குடனரியக் கதறியவளோடித், தலையில் அங்கை வைத்து மலையிலங்கை புகச்செய்த தடந்தோளன்" என்று மேலே அருளிச் செய்வது காண்க. அயில்—கூர்மை.

கடுத்து ஆர்த்து எழுந்த பெருமழையை இனநிரைக்கா கல்லொன்றேந்தித் தடுத்தான்=இந்திரன் பசிக்கோபத்தால் ஏழுநாள் விடாமழை பெய்விக்க, கண்ணபிரான் கோவர்த்தனத்தைக் குடையாக வெடுத்துக் கோநிரைகளைக் காத்தபடி சொல்லுகிறது. கோவர்த்தனம் பெரியமலையா யிருக்கச் செய்தேயும் அதனைச் சிறியவொரு கல் எடுப்பது போலவே எளிதில் எடுத்தானென்பது தோன்றக் கல்லொன்றேந்தி என்றார். இப்படிப்பட்ட எம்பெருமானுடைய சாளகிராமத்தை நெஞ்சே! அடை. ... ... ... ... (நி)

தாயாய்வந்தபேயுயிரும் தயிரும்விழுதுமுட்னுண்ட
வாயான் * தூயவரியுருவிற்குறளாய்ச்சென்று மாவலியை
ஏயானிரப்ப * மூவடிமண்ணின்றேதாவென்றுலகேழும்
தாயான் * காயாமலர்வண்ணன் சாளக்கிராமமடைநெஞ்சே! (கூ)

| | |
|---|---|
| தாய் ஆய் வந்த பேய் உயிரும் | தாய்வடிவு கொண்டுவந்த பூதனையின் உயிரையும் |
| தயிரும் | தயிரையும் |
| விழுதும் | வெண்ணெயையும் |
| உடன் உண்ட வாயன் | ஒன்று சேர்த்து அமுது செய்தவனும், |
| ஏயான் | (யாசிப்பதற்குத்) தகாதவனை தான் |
| தூய வரி உருவின் குறள் ஆய் மாவலியை சென்று | பரிசுத்தமும் ஸுந்தரமுமான ரூபத்தையுடைய வாமநனாகி மாவலியிடம் சென்று |
| இன்றே மூ அடி மண் தா என்று இரப்ப | இப்போதே (எனக்கு) மூன்றடி நிலம் கொடு என்று யாசிக்க, |
| | (அவன் நீர் வார்த்துத் தந்தவுடனே) |
| உலகு ஏழும் தாயான் | எல்லாவுலகங்களையும் தாவி யளந்து கொண்டவனும் |
| காயா மலர் வண்ணன் சாளக்கிராமம் | காயாம் பூப்போன்ற நிறமுடையனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற ஸாளக்ராமத்தை |
| | நெஞ்சே! அடை—. |

* * *—[தாயாய்வந்த.] கண்ணபிரானுக்குத் தயிர் பால் வெண்ணெய் முதலியன எப்படி போக்யமாயிருந்தனவோ, அப்படியே, தன்னைக் கொல்ல வந்த பூதனையின் உயிரும் போக்யமாயிருந்ததென்பது தோன்ற அருளிச் செய்கிற அழகு காண்மின். "తస్యాః స్తనం పపౌ కృష్ణః ప్రాణైస్సహ ననాద చ। స్తన్యం తద్విషసమ్మిశ్రం రస్యమాసీజ్జగద్గురోః = தஸ்யாஸ் ஸ்தநம் பபௌ க்ருஷ்ண: ப்ராணைஸ் ஸஹ நநாத ச — ஸ்தந்யம் தத் விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீத் ஜகத்குரோ:" என்று ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டது. $ "பெருமாவஞ்சப் பேய்வீயத் தூய குழவியாய் விடப்பாலமுதாவமுதுசெய்திட்ட மாயன்" என்றார் நம்மாழ்வாரும்.

ஏயான் தூயவரியுருவிற்குறளாய்ச் சென்று மூவடிமண் இன்றேதாவென்று மாவலியை இரப்ப=ஏயானென்றது தகாதவனென்றபடி; யாசிக்கத் தகாதவனென்கை. உலகங்கட்கெல்லாம் ஒருதனி முதல்வனாயிருந்து வைத்து, * அலம்புரிந்த நெடுந் தடக்கையனாயிருந்து வைத்து யாசகனாய்ச் சல்வது தகுதியன்றே. ஆயினும் உபாயமறிந்து காரியஞ் செய்பவனாதலால் இவ்வுபாயத்தாலல்லது மாவலியின் மதத்தை அடக்க வொண்ணாமைபற்றி யாசகனாய்ச் சென்றபடி. இரப்ப என்றதற்கு மேல் 'அவனும் மூவடிமண் தாரைவார்த்துக் கொடுக்க' என்று கூட்டிக் கொள்வது. "மாவலியையே யான் இரப்ப" என்று பதம்பிரித்து உரைப்பதும் ஒன்றுண்டு. மாவலியையே நோக்கி 'யான் இரப்ப மூவடிமண் இன்றே தா' என்று சொல்லி உலகேழும் தாவியளந்தவன் என்றவாறு. "மாவலியை ஏ! யான் இரப்ப" என்றும் பிரிக்கலாம். ஏ!—அடா மாவலீ!, என்றபடி. ... ... ... ... ... (சு)

ஏனோரஞ்சவெஞ்சமத்துளரியாய்ப்பரியவிரணியனை *
ஊனாரகலம்பிளவெடுத்த ஒருவன்தானேயிருசுடராய் *
வானாய்த்தீயாய்மாருதமாய் மலையாயலைநீருலகனைத்தும்
தானாய் * தானுமானான்தன் சாளக்கிராமமடைநெஞ்சே! (எ)

$ திருவாய்மொழி 1—5—9.

| | |
|---|---|
| ஏனோர் அஞ்ச | சத்துருக்களான அஸுரர்கள் பயப்படும்படியாக |
| அரி ஆய் | நரசிங்கமூர்த்தியாகி |
| பரிய இரணியனை | தடித்த சரீரத்தை யுடையனை ஹிரண்யனை |
| வெம் சமத்துள் | கடுமையான போர்க்களத்திலே |
| ஊன் ஆர் அகலம் பிளவு எடுத்த ஒருவன் | மாம்ஸம் நிறைந்த மார்பு கிழியும்படி செய்தவொருவனும், |
| தானே | இப்படி செய்தருளினவன் தானே |
| இரு சுடர் ஆய் | சந்த்ர ஸூர்யர்களாயும் |
| வான் ஆய் | ஆகாசமாயும் |
| தீ ஆய் | அக்நியாயும் |
| மாருதம் ஆய் | காற்றாயும் |
| மலை ஆய் | மலைகளாயும் |
| அலை நீர் உலகு அனைத்தும் தான் ஆய் | கடல் சூழ்ந்த உலகங்கள் யாவுமாய் இருப்பவனும் |
| தானும் ஆனான் தன் சாளக்கிராமம் | அஸாதாரணமான திவ்ய மங்கள விக்ரஹத்தை யுடையனுமான எம்பெருமானுடைய ஸாளக்ராமத்தை |

நெஞ்சே! அடை—.

* * *—[ஏனோரஞ்ச வெஞ்சமத்துள்.] கீழ்ப்பாட்டில் "உலகேழும் தாயான்" என்று ஸர்வலோக வ்யாபகத்வம் சொன்னவுடனே, முன்பு ப்ரஹ்லாதன் 'எம்பெருமான் ஸர்வ வ்யாபகன்' என்று சொன்னதும் இரணியன் அதை மறுத்துச் சொன்னதும் முதலிய கதைகள் நினைவுக்குவந்து ஹிரண்ய வத வ்ருத்தாந்தத்தை அருளிச் செய்கிறாரிதில்.

வெஞ்சமத்துள் ஏனோரஞ்ச அரியாய் = சமம்—யுத்தம். இரணியனைக் கொன்ற இடத்தை வெஞ்சமமென்கிறார். ஏனோரென்றது ஏனையோரென்றபடி. மற்றவர்கள் என்று பொருள். அன்பர் தவிர மற்றபேர்கள் என்றபடியாய் சத்துருக்களைச் சொல்லுகிறது. இரணியனும் அவனுக்குப் பக்கபலமாயிருந்த மற்றும் பல ஆஸுரப்ரக்ருதிகளும் ஏனோர் எனப்படுகின்றனர். அவர்கள் நரசிங்கமூர்த்தியைக் கண்டவாறே குடல் குழம்பிப் போயினரென்க.

பரிய—பருமை என்னும் பண்படியாப் பிறந்த பெயரெச்சம்: ஸ்தூலகாயனை என்றபடி.

இருசுடராய் என்று தொடங்கி உலகனைத்தும்தானாய் என்னுமளவும்—ஸகல வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாயிருக்கும் நிலைமை சொல்லுகிறது. தூணில் நின்றுந் தோன்றியது சொன்ன ப்ரஸங்கத்திலே இதுவும் சொல்லத்தக்கதிறே. தானுமானான் என்பதனால்—அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹமுடைமை சொல்லுகிறது. இப்படிப்பட்ட எம்பெருமானுடைய சாளக்கிராமத்தை நெஞ்சே! அடை. ... ... ... ... ... ... (எ)

வேந்தாரேன்பும்சுடுநீறும் மெய்யில்பூசிக்கையகத்து * ஓர்
சந்தார்தலைகோண்டுலகேழும் திரியும்பெரியோன்தான்சேன்று * என்
எந்தாய்! சாபம்தீரேன்ன இலங்கமுதநீர்திருமார்பில்
தந்தான் * சந்தார்பொழில்சூழ்ந்த சாளக்கிராமமடைநேஞ்சே! (அ)

வெந்தார் என்பும் — செத்து வெந்துபோன ப்ரேதங்களின் எலும்பு கனையும்

சுடு நீறும் — சுட்ட சாம்பலையும்

மெய்யில் பூசி — சரீரத்தில் தரித்துக்கொண்டு

சந்து ஆர் ஓர் தலை கையகத்து கொண்டு — சந்துகள் நிறைந்த ஒரு மண்டையோட்டைக் கையிலே எடுத்துக் கொண்டு

உலகு எழும் திரியும் — எல்லாவுலகங்களிலும் திரிந்தவனை

பெரியோன் தான் — பரமசிவன்

சென்று — கிட்டவந்து

என் எந்தாய் சாபம் தீர் என்ன — 'என் ஸ்வாமீ! (எனக்கு நேர்ந்திருக்கிற) சாபத்தை நீக்கியருள வேணும்' என்று பிரார்த்திக்க,

திருமார்பில் இலங்கு அமுதம் நீர் தந்தான் — தனது திருமார்பில் விளங்குகின்ற அம்ருதஜலத்தை அளித்தவனை எம்பெருமான்

(நித்யவாஸம் பண்ணுமிடமான)

சந்து ஆர் பொழில் சூழ்ந்த சாளக் கிராமம் — சந்தனமரங்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த ஸாளக்ராமத்தை

நெஞ்சே! அடை—.

* * *—[வேந்தா ரேன்பும்.] சிவபிரானுடைய ஆபரணங்களையும் அலங்காரங்களையும் பேசுகிறார். செத்துப்போனவர்களைப் பொசுக்கினபிறகு சுடுகாட்டில் விழுந்துகிடக்கிற எலும்புகளை மாலையாகத் தொடுத்து அணிந்துகொண்டும், சாம்பலை உடம்பிலே பூசிக்கொண்டும், தந்தையின் தலையைக் கிள்ளியதனால் கையிலொட்டிக்கொண்ட கபாலத்துடன் உலகமெங்குந் திரிந்து பிச்சையெடுத்த பரமசிவன் கடைசியாக எம்பெருமானிடம் வந்து 'ஸ்வாமீ! என்னுடைய ப்ரஹ்மஹத்தி சாபத்தைத் தீர்த்தருளவேணும்' என்று பிரார்த்திக்க, திருமார்பிலிருந்து வேர்வை நீரையெடுத்துக் கபாலத்திலேயிட்டு நிறைத்து சாபம் தீர்த்தவனை எம்பெருமானுடைய சாளக்கிராமத்தை நெஞ்சே! அடை.

என்பு—எலும்பு. சந்தார்தலை—எல்லா நரம்புகளும் வந்து கூடின விடத்திலே தலையைக் கிள்ளினனதலால், சந்துகள் நிறைந்த தலை எனப்பட்டது. திரியும் பெரியோன்தான் சென்று—தனக்குமேல் பெரியவனில்லையென்று மார்பு நெறித்துக் கிடந்தவனுக்கு இந்தக்கதி நேர்ந்ததென்று ஏசியவாறு. இவ்விடத்தில் வியாக்கியான ஸ்ரீஸூக்தி:—"கூறுசெய்த வூரிலே கையும் கைத்தளையுமாய்த் திரிவாரைப் போலே ஈச்வராபிமானியாய்த் தன் ஆஜ்ஞை நடத்திப் போந்தவிடத்திலே கையும் ஓடுமாய்த் திரிந்த துர்மாநியானவன்" என்று. ["கூறுசெய்த வூரிலே"—தான் அரசாண்ட வூரிலே. கைத்தளை—கைவிலங்கு.] ... ... ... ... ... ... ... ... (அ)

தொண்டாமினமுமிமையோரும் துணைநூல்மார்பினந்தணரும் *
அண்டாவெமக்கேயருளாயென்று அணையும்கோயிலருகெல்லாம் *
வண்டார்பொழிலின்பழனத்து வயலினயலேகயல்பாய *
தண்தாமரைகள்முகமலர்த்தும் சாளக்கிராமமடைநெஞ்சே! (கூ)

| | |
|---|---|
| தொண்டு ஆம் இனமும் | தொண்டு செய்பவர்களான பாகவதர்களுடைய ஸமூஹமும் |
| இமையோரும் | நித்யஸூரிகளும் |
| துணை நூல் மார்வில் அந்தணரும் | யஜ்ஞோபவீதத்தோடு கூடின மார்வையுடைய பிராமணர்களும் |
| அண்டா எமக்கே அருளாய் என்று அணையும் கோயில் | 'தேவனே! எங்களுக்கே அருள் புரிய வேணும்' என்று சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்து நிற்கிற கோவிலாயும், |
| அருகு எல்லாம் | சுற்றுப்பிரதேசங்க ளெங்கும் |
| வண்டு ஆர் | வண்டுகள் நிறைந்திருக்கப் பெற்ற |
| பொழிலின் | சோலைகளிலுண்டான |
| பழனத்து | நீர் நிலங்களில் |
| வயலின் அயலே கயல் பாய | கழனிகளிடத்துள்ள கயல் மீன்கள் வந்து துள்ள (அதனால்) |
| தண் தாமரைகள் முகம் மலர்த்தும் | குளிர்ந்ததாமரை மொக்குகள் முகம் விகஸிக்கப் பெற்றதாயுமுள்ள |
| சாளக்கிராமம் | ஸாளக்ராமத்தை |

நெஞ்சே! அடை—.

* * *:—[தொண்டாமினமும்.] "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்று இடைவிடாது கைங்கரியம் பண்ணப்பாரித்திருக்கின்ற ஸ்ரீ வைஷ்ணவர்களின் கோஷ்டி ஒரு பக்கத்திலும், பரமபதத்தில் பரத்வத்தை அநுபவிப்பதிற் காட்டிலும் இங்குள்ள ஸௌசீல்ய ஸௌலப்யங்களை அநுபவிப்பதில் மிக்க ஆவல் கிளர்ந்து இங்கே வந்து திரண்ட நித்ய ஸூரிகளின் கோஷ்டி ஒருபக்கத்திலும், 'நாம் உத்தமகுலத்திலே பிறந்தவர்கள், ஸாமாந்யரோடு நாம் சேரலாகாது' என்று கொண்டு ஒதுங்கி நிற்கும் யஜ்ஞோபவீத தாரிகளான பிராமணர்களுடைய கோஷ்டி ஒருபக்கத்திலும் ஆக இப்படி பலதிரள்களாக இருந்துகொண்டு ஒவ்வொரு கூட்டத்தாரும் 'ஸ்வாமிந்! எமக்கே அருள்புரியவேணும்; ஸ்வாமிந்! எமக்கே அருள்புரியவேணும்' என்று துதித்துக்கொண்டு அணைந்து நிற்கிற கோயில்—சாளக்கிராமம்.

அது இன்னமும் எப்படிப்பட்டது?—அருகெல்லாம் வண்டார் பொழிலின்பழனத்து வயலினயலேகயல்பாயத் தண்டாமரைகள் முகமலர்த்தப் பெற்றதுமாம். அதாவது—ஸாளக்ராம க்ஷேத்ரத்தைச் சுற்றி, வண்டுகள் களித்து வாழும்படியான பூஞ்சோலைகள் இருக்கின்றனவாம்; அவற்றுள் அச்சோலைக்குத் தாரகங்களான நீர்நிலைகள் விசேஷமாக இருக்கின்றனவாம்; அவற்றின் ஸமீபத்தில் கயல்மீன்கள் நிறைந்த கழனிகள் உள்ளனவாம்; அங்கிருந்து அக்கயல் மீன்கள் துள்ளிப்பாய்ந்து சோலைகளிலுள்ள நீர்நிலைகளிலேயுள்ள தாமரை மொக்குகளின்மேல் விழுகின்றனவாம்; அதனால் அந்த மொக்குகள் விகஸித்து விளங்குகின்றனவென்று நிலவள நீர்வளங்களைச் சொன்னராயிற்று.

"வயலினயலே கயல்பாய" என்றவிடத்து, "அயல்வயலின் கயல்பாய" என்று அந்வயித்து, ஸமீபத்திலுள்ள கழனிகளிலிருந்து கயல்கள் பாய எனப் பொருளுரைத்தலுமாம். அயல்—அருகும் இடமும். ... ... ... (௯)

தாராவாரும் வயல்சூழ்ந்த சாளக்கிராமத் தடிகளை*
காரார்புறவின் மங்கைவேந்தன் கலியனொலிசெய் தமிழ்மாலை *
ஆராருலகத் தறிவுடையார் அமரர்நன்னாட் டரசாள *
பேராயிரமு மோதுமின்கள் அன்றியிவையே பிதற்றுமினே. (௰)

| | | | |
|---|---|---|---|
| உலகத்து | இவ்வுலகத்திலே | கார் ஆர் புறவில் மங்கை வேந்தன் கலியன் | மேகங்கள் படிந்துள்ள தோட்டங்களையுடைய திருமங்கை நாட்டுக்குத் தலைவரான திருமங்கையாழ்வார் |
| அறிவு உடையார் ஆரார் | விவேகமுள்ளவர்கள் ஆரார் இருக்கிறீர்களோ (அவர்களெல்லீரும்) | தாரா ஆரும் வயல் சூழ்ந்த சாளக்கிராமத்து அடிகளை | ஸாரஸபக்ஷிகள் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட ஸ்ரீஸாளக்ராமத்திலே எழுந்தருளியிருக்குமெம்பெருமான் விஷயமாக |
| அமரர் நல் நாடு அரசு ஆள | நித்யஸூரிகளுடைய விலக்ஷணமான ஸ்ரீவைகுண்டத்தை அரசாளும் படியாக | ஒலி செய் | அருளிச்செய்த |
| பேர் ஆயிரமும் ஓதுமின்கள் | (ஸ்ரீ வைகுண்டநாதனுடைய) ஆயிரந் திருநாமங்களையும் ஓதுங்கள்; | தமிழ் மாலை இவையே | தமிழ் மாலையாகிய இப்பாசுரங்களையே |
| அன்றி | அல்லது, | பிதற்றுமின் | வாய்வந்தபடி சொல்லுங்கள். |

* * *—[தாராவாரும்.] எம்பெருமானுடைய ஸஹஸ்ரநாமங்களை ஸங்கீர்த்தனம் பண்ணுவதும் இந்தத் திருமொழியைக் கற்பதும் துல்ய பலமென்கிறார். வானவர் நாடாகிய ஸ்ரீவைகுண்டத்தை ஸ்வாதீநமாக ஆளவேணுமென்னும் விருப்பமுடையீர்! ஸஹஸ்ரநாமங்களை ஓதினீர்களாகில் உங்களுடைய விருப்பம் நிறைவேறும்; முரட்டு ஸம்ஸ்க்ருத பாஷையிலே அமைந்துள்ள அவற்றை உருச்சொல்லித் தரித்து ஓத வல்லமையில்லையேல் எளிதான செந்தமிழிலமைந்த இந்தப் பாசுரங்களை ஓதுங்கள்; பேற்றில் குறையில்லை என்றாராயிற்று.

“அன்றியிவையே ஓதுமினே” என்னாமல் பிதற்றுமினே என்றருளிச்செய்தமையால், “சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெடநில்லாது” [முமுக்ஷுப்படி.] என்றாற்போலே இப்பாசுரங்களை வாயில்வந்தபடி தப்புந்தவறுமாகச் சொன்னாலும் அமையும் என்றதாயிற்று. ... ... (௰)

அடிவரவு:—**கலை கடம் உலவு ஊரான் அடுத்து தாய் ஏனோர் வெந்தார் தொண்டு தாரா வாணிலா.**

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

**ஜீயர்திருவடிகளே சரணம்.**

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—ஆறாந்திருமொழி.

# வாணிலாமுறுவல்.

அவதாரிகை :—ஸ்ரீ நைமிசாரண்யத்தெம்பெருமான் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாகச் சரணம் புகுகிறார் இத்திருமொழியில். பகவானிடத்தில் சரணாகதி செய்யுமிடத்து அவனுடைய மேன்மைகளையும் தன்னுடைய தாழ்வுகளையும் வெளியிட்டுக்கொண்டே செய்ய வேணுமென்று விதியிருப்பதாலும், ஆர்த்தியின் கனத்தாலே தம்முடைய தோஷங்களெல்லாம் நினைவுக்கு வந்தே தீருமாகையாலும், இவ்வாழ்வார்தாமும் தம்முடைய குற்றங்குறைகளை யெல்லாம் விரிவாகப் பேசிக்கொண்டு சரணாகதி பண்ணுகிறார்.

சாஸ்த்ரங்களிற் செய்யவேண்டிய கருமங்களென்று விதிக்கப்பட்ட நற்கருமங்களைச் செய்யாதொழிகையும், செய்யலாகாதென்று மறுக்கப்பட்ட தீவினைகளைச் செய்கையும் என்று இருவகையாம் குற்றங்கள். அவ்விருவகைக் குற்றங்களும் நம்மிடத்தில் நிறைந்து கிடப்பனவாகச் சொல்லிக்கொள்ளுகிறார் இதில். ஸ்ரீ விபீஷணாழ்வான் கடற்கரையிலே இராமபிரானிடம் வந்து சரணாகதி செய்யும்போது "രാവണോ നാമ ദുർവൃത്തഃ = ராவணோநாம துர்வ்ருத்த:" [இராவணனென்று ஒரு துஷ்டன் உண்டு] என்று அடியேதொடங்கித் தன்னுடைய தாழ்வைச் சொல்லிக்கொண்டு அடைக்கலம் புகுந்ததை இங்கே நினைப்பது.

ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தங்களுடைய ஸ்ரீஸூக்திகளில் தங்களுடைய தோஷங்களை அடிக்கடி வெளியிட்டுக் கொள்ளுகிறார்களே, மாஜ்ஞானிகளென்று கொண்டாடப்படுகின்ற அவர்களுக்கும் தோஷங்கள் இருக்குமோ? என்று சிலர் கேட்பதுண்டு. இதற்குப் பலவகையான ஸமாதானங்கள் சொல்வதுமுண்டு. ஒன்றான எம்பெருமான்தானும் இவ்விருள் தருமா ஞாலத்திலே வந்து திருவவதரித்தால் சோகம் மோஹம் முதலானவை அகில ஹேயப்ரத்யநீக கல்யாண குணைகதானனுக்கும் தோன்றுவதாக சாஸ்த்ரங்களிற் சொல்லுகிறபடியால் அதுபோல, மாஜ்ஞானிகளான ஆழ்வாராசாரியர்களுக்கும் இந்தப் பிரகிருதி வாஸனையின் கொடுமையினால் சில தோஷங்கள் ஸம்பவிப்பதுண்டு; ஸ்வல்பமான தோஷங்களை நைச்யாநுஸந்தாந ரீதியிலே பெருக்கடித்துப் பேசுகிறார்கள்—என்று சிலர் நிர்வஹிப்பார்கள். 'பகவத் ஸந்நிதியில் நம்முடைய தோஷங்களைச் சொல்லிக்கொள்ள வேண்டியது ஆவச்யகம்' என்கிற சாஸ்த்ர மரியாதையைக் காட்டுவதற்காகவே பூருவர்கள் தோஷாநுஸந்தாநம் செய்து கொண்டனர்—என்று நிர்வஹிப்பர் சிலர். உண்மையில் மஹான்

களான பூருவர்களுக்கு தோஷம் இருந்தனவா ? இல்லையா ? என்கிற விசாரம் நாம் பண்ண வேண்டியதே அநாவச்யகம்; தோஷமே வடிவெடுத்த நமக்கு ஸ்வரூபாநுரூபமாக அநுஸந்திப்பதற்குப் பாங்கான பாசுரங்களை அருளிச் செய்து வைத்தார்களத்தனை—என்று கொள்வதே சிறக்கும்.

நைமிசாரணியமென்பது வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. ஸ்ரீ புஷ்கரமென்கிற க்ஷேத்ரத்தில் எம்பெருமான் தீர்த்தரூபியாகவே ஸேவை ஸாதிப்பது போல ஸ்ரீ நைமிச க்ஷேத்ரத்தில் அரண்ய ரூபியாகவே ஸேவை ஸாதிக்கிறான் என்று பெரியோர் சொல்லுவர்கள். ஒரு காலத்தில் முனிவர்கள் பிரமனை நோக்கித் ‘தவஞ் செய்தற்குச் சிறந்த இடம் நிலவுலகத்தில் யாது?’ என்று தங்களுக்கு விளக்கிக் காட்டுமாறு வேண்ட, அப்போது அம்முனிவர்க்கு அப்பிரமதேவன் தான் ஒரு தர்ப்பத்தை ஆழியாகச் செய்து மண்ணுலகத்திலுருட்டி அது சென்று நின்ற இடத்தையே சிறந்ததென்று காட்டினனாதலால், அதற்கு இடமான இத்தலம் நைமிசமெனப் பெயர்பெற்றது. நைமிசம்—நேமி விழுந்த இடம். அரணியம்—காடு.

பிராட்டியை முன்னிட்டு சரணாகதி செய்வது ஸ்வரூபமாகையாலே இவரும் “தேனுடைக்கமலத் திருவினுக்கரசே!......திருவடி யடைந்தேன்” என்று லக்ஷ்மீ ஸம்பந்தத்தை முன்னிட்டு ப்ரபத்தி பண்ணுகிறார் என்றுணர்க. ... *

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாணிலாமுறுவல் சிறுநுதல் பெருந்தோள்
மாதரார் வனமுலைப் பயனே
பேணினேன் * அதனைப்பிழையெனக் கருதிப்
பேதையேன் பிறவிநோ யறுப்பான் *
ஏணிலேனிருந்தே னெண்ணினே னெண்ணி
இளையவர் கலவியின்திறத்தை
நாணினேன் * வந்துன்திருவடி யடைந்தேன்
நைமிசாரணியத்துளேந்தாய் ! (க)

| | |
|---|---|
| நைமிசாரணியத்துள் எந்தாய் | நைமிசாரண்யத்திலெழுந்தருளியிருக்கிற ஸ்வாமீ !, |
| பேதையேன் | அறிவு கெட்டவனான அடியேன், |
| வாள் நிலா முறுவல் | ஒளி பொருந்திய புன்சிரிப்பையும் |
| சிறு நுதல் | சிறிய நெற்றியையும் |
| பெரு தோள் | பெரிய தோள்களையும் உடையரான |
| மாதரார் | பெண்களினுடைய |
| வனம் முலையே | அழகிய முலைகளையே |
| பயன் | பரம புருஷார்த்தமாக |
| பேணினேன் | (நெடுநாள் வரை) ஆதரித்திருந்தேன் ; |
| அதனை | அப்படி ஆதரித்திருந்த நிலைமையை |
| பிழை என கருதி | தப்பென்று நினைத்து |

| | | | |
|---|---|---|---|
| பிறவி நோய் அறுப்பான் ஏண் இலேன் இருந்தேன் | ஸம்ஸாரமாகிற வியாதியை அறுத்துக்கொள்ள எண்ணமில்லாதவ னாகவே இருந்திட்டேன்; | இளையவர் கலவியின் திறத்தை நாணினேன் | விஷயாந்தர போகங்களைக் காறியுமிழ்ந்தேன் ; |
| எண்ணினேன் | ஸ்வரூபத்தை ஆராயத் தொடங்கினேன் ; | வந்து உன் திரு அடி அடைந்தேன் | இன்றுஉன் திருவடிகளை வந்து பணிந்தேன். |
| எண்ணி | ஆராயவே, | | |

* * *—[வாணிலாமுறுவல்.] எம்பெருமானே ! சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள கருமங்களைக் குறையற அனுட்டித்து ஜிதேந்த்ரியர்களாய் என்னை அடிபணியவேண்டும் என்று நீ சொல்லிவைத்திருக்கிறாய் ; என்னுடைய நிலைமையோ அதற்கு நேர்மாறாக இராநின்றது. மாதர்களுடைய முறுவலழகையும் நெற்றியழகையும் தோளழகையும் முலையழகையும் வாய்வெருவிக்கொண்டு அந்த விஷயானுபவமே நமக்குப் பரமபுருஷார்த்தமென்று கொண்டு நெடுநாள் வரையில் சபலனாய்த் திரிந்தேன். அப்படி திரிந்துகொண்டிருக்கவே இந்த ஸம்ஸார நோயைத் தீர்த்துக் கொள்வதற்கு வழி தேடாமலேயிருந்துவிட்டேன்; *'மாதரார் வனமுலைப்பயனே பேணிக் கொண்டிருக்கு மிருப்பு பிசகு' என்று நெஞ்சில் பட்டாலன்றோ பிறவி நோயறுத்துக்கொள்ள எண்ணமுண்டாகும். இப்படியே நெடுநாள் கழிந்தவாறே "ஐயோ ! நாமிருக்க வேண்டிய நிலைமை என்ன ? இப்போது நாமிருக்கிற நிலைமை என்ன ?" என்று சிறிது ஸ்வரூப ஸ்திதியை ஆராயத் தொடங்கினேன் ; தொடங்கவே, நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தால் விஷய போகங்களில் அருவருப்பு உண்டாயிற்று ; அவற்றைக் காறியுமிழ்ந்து இன்று உன் திருவடிகளிலே வந்து சேரப்பெற்றேன் என்று நைமிசாரணியத்து ளெந்தையை நோக்கி விண்ணப்பஞ் செய்தாராயிற்று.

வாள்நிலா முறுவல்—வாள் என்று ஒளிக்குப் பெயர் ; ஒளி நிலாவுகின்ற முறுவல் என்க. ஒளி வீசுகின்ற நிலாப்போன்ற முறுவல் என்றுரைப்பாரு முண்டு. சிறுநுதல்—நெற்றி சிறிதாயிருந்தால் அவலக்ஷணமாயிராதோவென்று சிலர் நினைப்பதுண்டு ; அங்ஙனல்ல ; மாதர்களின் அவயவலக்ஷணம் வருணிக்குமிடத்து [கலித்தொகை 108,] "நகிலந்தோள் கண்ணென மூவழிப் பெருகி" [முலை தோள் கண் இம்மூன்று அவயவங்களும் பெரிதாயிருக்கை அழகு] என்றும், "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" [நெற்றி பாதம் இடை என்ற மூன்று அவயவங்களிலும் சிறுத்திருக்கை அழகு] என்றும் சொல்லியிருப்பதால் அழகு குன்றாத சிறுமை நெற்றிக்கு ஸுலக்ஷணமேயென்க. "நெற்றி சிறுத்திருக்கையில்லையாகில் பும்ஸ்த்வகந்தியாயிருக்குமிறே" என்ற பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தியும் நோக்குக.

பெருந்தோள்—அநுபவிப்பவர்களினுடைய ஆசையினும் விஞ்சிக் கரை புரண்ட தோள் என்க. விஷய போகங்களைக் காறியுமிழ்ந்து பகவத் விஷயத்திலே வந்து சேர்ந்த ஆழ்வார் ஹேயமான அவ்விஷயங்களைப் பற்றி வாணிலா

முறுவலென்றும் சிறுநுதலென்றும் பெருந்தோளென்றும் வனமுலையென்றும் வருணித்துப் பேசுவது எதுக்காக? என்று கேட்கக்கூடும்; இதற்கு நம் ஆசார்யர்கள் அருளிச் செய்வதாவது:—உலகத்தில் வாக்குப் படைத்தவர்கள் பல வகைப் படுவர்; சிலர் உள்ளதை உள்ளபடியே பேசுவர்கள்; சிலர் சிறந்த விஷயத்தைப்பற்றிப் பேசத் தொடங்கினாலும் தங்களுடைய வாக்கின் திறமை போராமையினால் குறைபடப் பேசுவர்கள்; சிலர் நாவீறுடைமையினால் அற்ப விஷயங்களையும் கனக்கப் பேசுவர்கள்; இப்படி பேச்சில் பலவகைகளுண்டு. பேசுகிறவர்களின் வாக்கின்போக்கை அநுஸரித்து விஷயங்கள் சிறுத்துப்போவதும் பெருத்துப்போவதுமுண்டு. திருமங்கையாழ்வாருடைய நாவீறு லோகவிலக்ஷணமாகையால் அற்ப விஷயங்களைப்பற்றிப் பேசும்போதும் பெருக்காறு பெருகுமாபோலே யிருக்குமேயன்றி அவ்விஷயங்களின் சிறுமைக்குத் தக்கபடி சிறுத்திராது இவருடைய சொற்போக்கு. ஆகவே, விஷயங்கள் அற்பமென்பதில் தடையில்லை; இவருடைய வாக்கு கம்பீரமாகையால் அற்ப விஷயத்தையும் கனக்கப் பேசுகின்றது—என்று நம் ஆசிரியர்கள் அருளிச் செய்வர்கள். மேல் ஆரும்பத்தில் "துறப்பேனல்லேன்" என்னுந் திருமொழியில் "சாந்தேந்துமென் முலையார் தடந்தோள் புணரின்ப வெள்ளத் தாழ்ந்தேன்" என்ற நான்காம் பாட்டின் வியாக்கியானத்தில் இக்கருத்துப்படப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்துள்ளமை காண்க.

பயனே என்ற விடத்திலுள்ள ஏகாரத்தைப் பிரித்து முலையோடு கூட்டி "வனமுலையே பயன்பேணினேன்" என்றுரைக்கப்பட்டது. "அதனைப் பிழையெனக் கருதிப் பிறவிநோயறுப்பானேணிலேன்" என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறலாம். "நான் கோவிலுக்குப் போய்ப் பெருமாளை ஸேவிக்கவில்லை" என்றால், 'நான் கோவிலுக்கும் போகவில்லை, பெருமாளையும் ஸேவிக்கவில்லை' என்றும் பொருள்படும்; 'நான் கோவிலுக்குப் போயிருந்தும் பெருமாளை ஸேவியாமல் வந்து விட்டேன்' என்றும் பொருள்படும். அதுபோல இங்கும் 'நான் விஷய போகங்களைப் பிழையெனக் கருதவுமில்லை; பிறவிநோயறுக்க எண்ணமும் கொள்ளவில்லை; இப்படியே நெடுநாளிருந்துவிட்டேன்' என்கிற ஒரு பொருளும், "விஷயபோகங்களைப் பிழையெனக் கருதிய பின்பும் நடுவில் சிலநாள் பிறவிநோயறுக்க வழிதேடாமலே யிருந்துவிட்டேன்" என்கிற ஒரு பொருளும், ஆக இருவகையான பொருள்கள் இங்கே கொள்ள இடமுண்டு.

ஒருவன் செய்கிற காரியம் உண்மையில் கெட்டதாயிருந்தாலும் சாஸ்த்ரங்களில் நம்பிக்கைக் குறையினால் 'புண்யபாபவிபாகமே பொய், எல்லாம் நன்றுதான்' என்கிற பிடிவாதத்தினால் கெட்ட காரியத்தையும் நல்ல காரியமென்றே நினைத்துக்கொண்டு செய்வதுண்டு; போகப்போக சாஸ்த்ரங்களில் நம்பிக்கை பிறந்து 'நாம் செய்வது கெட்ட காரியந்தான்' என்று நெஞ்சிற் பட்டாலும் அக்காரியத்தை விரைவில்விட முடிகிறதில்லை;

பகவத்கடாக்ஷம் பரிபக்குவமாக ஆகிறபோதுதான் அவ்விழிதொழிலை விட்டொழித்துப் பிறவிநோயறுக்க எண்ணமுண்டாகும். இதைத்தான் இங்கு ஆழ்வார் அருளிச் செய்கிறார்—; நான் நெடுநாள் வரையில் சாஸ்த்ரங்களில் நம்பிக்கை யென்பதே யில்லாமல், விஷயாநுபவத்திற்கு மேற்பட்ட புருஷார்த்தமே உலகில் கிடையாது என்று அத்யவஸாயங்கொண்டு அதில் ஆழ்ந்து கிடந்தேன்; அதற்குப் பிறகு சாஸ்த்ர விச்வாஸமுண்டாகி ‘விஷயபோகம் பிசகு’ என்கிற புத்தி மாத்திரம் பிறந்தது; ஆனால் அதை விட்டொழித்து நல்வழி போகப்பெற்றிலேன்; அந்த இரண்டு அவஸ்தைகளையும் நீங்கி இன்று விஷயபோகங்களைக் காறியுமிழ்ந்து பிறவிநோயறுக்கும் வழியிலே வந்து நின்றேன் என்றாராயிற்று. ... ... ... ... ... ... (க.)

சிலம்படியுருவிற் கருநெடுங்கண்ணார்
திறத்தனா யறத்தையே மறந்து *
புலம்படிந்துண்ணும் போகமே பெருக்கிப்
போக்கினேன் பொழுதினை வாளா *
அலம்புரி தடக்கை யாயனே மாயா!
வானவர்க்கரசனே! * வானோர்
நலம்புரிந் திறைஞ்சுன்றிருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (உ)

- சிலம்பு அடி உருவின் — சிலம்புகளை அணிந்த கால்கள் அழகாயிருக்கப் பெற்றவர்களும்
- கரு நெடு கண்ணார் திறத்தன் ஆய் — கறுத்து நீண்ட கண்களை யுடையவர்களுமான மாதர்களிடத்திலேயே ஆஸக்தனாய்
- அறத்தையே மறந்து — தருமங்களை மறந்து
- புலன் படிந்து உண்ணும் போகமே பெருக்கி — இந்திரியங்கள் பொருந்தி அநுபவிக்கிற விஷய போகங்களையே மேன்மேலும் அதிகப்படுத்திக் கொண்டு
- பொழுதினை வாளா போக்கினேன் — வாழ்நாளை வீணாகக் கழித்தேன்;
- அலம் புரி தட கை — போதும் போதுமென்று சொல்லும்படியாக தானஞ்செய்கிற பெரிய திருக்கையையுடைய
- ஆயனே — கோபல க்ருஷ்ணனே!
- மாயா — ஆச்சரியமான செய்கைகளை யுடையவனே!
- வானவர்க்கு அரசனே — தேவாதிதேவனே!
- நைமிசாரணியத்துள் எந்தாய்!—;
- வானோர் — நித்யஸூரிகள்
- நலம் புரிந்து — அன்பு பூண்டு
- இறைஞ்சு — ஆச்ரயிக்கப்பெற்ற
- உன் திருஅடி அடைந்தேன் — உன் திருவடிகளிலே இன்று வந்து கிட்டப் பெற்றேன்.

* * *—[சிலம்படி யுருவின்.] எம்பெருமான் பக்கல் வந்துசேர்ந்தவுடனே, கீழ்க்கழிந்த காலத்துக்கு அநுதாபம் பிறப்பது வழக்கம். இப்படி பகவத் விஷயத்திலீடுபட்டு ஆநந்தமயமாகப் போதுபோக்கவேண்டி யிருக்க, அந்தோ! விஷயாந்தரங்களில் ஈடுபட்டுத் தருமத்தை அடியோடு மறந்து எவ்விதத்திலா

வது இந்திரியங்களுக்கு த்ருப்தியை உண்டாக்குவதே வேண்டியது என்று கொண்டு அருமந்த காலத்தை அநியாயமாகப் போக்கினேனே! என்று கழி விரக்கங் காட்டுகின்றார் முன்னடிகளில்.

தாம் முன்பு மாதர்களிடத்து ஈடுபட்டிருந்த காலத்து அவர்களது சிலம் பணிந்த காலழகிலும் கரிய பெரிய கண்ணழகிலும் தோற்று அவற்றையே வாய் வெருவிக் கொண்டிருந்தமை தோன்றச் சிலம்படி யுருவிற் கருநெடுங்கண்ணார் திறத்தனாய் என்கிறார். அடி உருவின்=உரு என்று அழகுக்குப் பெயர்; செம் பஞ்சுச்சாறு முதலியவற்றைப் பூசிக் காலை அழகு பெறுத்துவர்கள் மாதர்கள்; அந்தச் செயற்கை யழகைச் சொல்லுகிறதென்க. மாதர்கள் ஒருகால் என்னைக் கண்ணாலே நோக்கிவிட்டால் பின்னை அவர்கள் காலிலேயே விழுந்துகிடப்பேன் என்பதுதோன்ற இங்கு அடியையும் கண்ணையும் எடுத்துக் கூறுகின்றார்.

அறத்தையே மறந்து என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்வது பாரீர்;—"ஸ்த்ரீகளுக்கு வழிபறித்திடுமது மறக்கவொண்ணாதே; தன்னுடைய உஜ்ஜீவநத்துக்கு உபாயமானத்தையேயாய்த்து வருந்தி மறப்பது." என்று. (இதன் கருத்தாவது—) விஷயபோகத்தில் ஈடுபட்டவன் பல வகைப் பாவங்களையுஞ் செய்து பொருளை யீட்டிக் கொணர்ந்து மாதர்களை உகப்பிக்கவேண்டியது அவசியமாதலால் பாவத்தை மறக்கமுடியாது, புண்ணிய மொன்றையே மறக்கலாம்; நானும் அந்தப் புண்ணியத்தை மாத்திரமே மறந்தேன் என்பதுதோன்ற "அறத்தையே" என்று ஏகாரம் பிரயோகிக்கப்பட்டதென்றவாறு. பாவங்களைச் செய்துசெய்து பணங்களைத் திரட்டி இந்திரியங்கள் உண்டுகளிக்கும்படியான துர்விஷயங்களை அநுபவித்து இப்படியே பலபகலும் பழுதே போக்கினேன்.

இன்று சதிர்த்தேனென்கிறார் பின்னடிகளில். அலம்புரிதடக்கை என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர். அலம் என்று வடமொழியில் ஒரு அவ்யயமுண்டு; போதும் என்று பொருள்; யாசகர்கள் 'போதும்போதும்' என்று சொல்லும்படியாக ஸர்வஸ்வதானம் பண்ணுகிற திருக்கை என்னலாம்; ஹலம் என்ற வடசொல் கலப்பையென்று பொருள்படும்; அஃது அலமெனத் திரியும்; கலப்பையைத் தரித்த திருக்கையையுடையவன் என்றும் உரைக்கலாம். இதனால் பலராமாவதாரத்தைப் பேசினபடி. பலராமனுக்குக் கலப்பையும் உலக்கையும் முக்கிய ஆயுதங்கள். அதனால் அவ்விராமனுக்கு ஹலாயுதன், ஹலீ, முஸலீ என்ற திருநாமங்கள் வழங்கும். ஒரு காலத்தில் பலராமர், பக்கத்தில் ஓடுகின்ற யமுனாநதியை நோக்கி 'ஓ யமுனாய்! நீ இங்கே வா; நான் நீராட வேண்டும்' என்றருளிச் செய்ய, அவ்யமுனை அவர் மதுபான மயக்கத்தினால் இப்படிச் சொல்லுகின்றாரென்று அவரது வார்த்தையை அவமதித்து அங்கே வரவில்லையாக, அதுகண்டு அவர் வெகுண்டு தமது கலப்பையைக் கையிலெடுத்து அதன் நுனியாலே அந்நதியை இழுக்க, அந்நதி தான்போகும் வழியை விட்டு அவரெழுந்தருளியிருக்கும் வனத்தில் வந்து பெருகியதன்றியும், தன்னுடைய

சரீரத்தோடு அவர்க்கெதிரில் வந்து பயத்தினாலே மிகவும் நடுநடுங்கி விசேஷமாக வேண்டிக்கொள்ள, பின்பு அந்நதியை க்ஷமித்து அதில் நீராடினரென்றும்,—ஒருகால் ஹஸ்திநா பட்டணத்தில் துரியோதனன் தன் மகளான லக்ஷணைக்கு ஸ்வயம்வரங் கோடிக்க, அக்கன்னிகையை ஸ்ரீக்ருஷ்ணனது மஹிஷிகளுளொருத்தியாகிய ஜாம்பவதியின் குமாரனான ஸாம்பனென்பவன் பலாத்காரத்தால் தூக்கிக்கொண்டுபோக, துரியோதனாதியர் எதிர்த்து யுத்தஞ்செய்து அவனைப் பிடித்துக் காவலிலிட்டுவைக்க, அச்செய்திகேட்ட பலராமர், தான் அவனை விடுவித்து வருவதாய்ச் சொல்லிப் புறப்பட்டு அஸ்தினபுரத்திற் கெழுந்தருளி 'நம்முடைய ஸாம்பனை விடவேண்டும்' என்றருளிச் செய்ய, அக்கௌரவர் யாவரும் 'துஷ்ட காரியஞ்செய்த அவனை நாங்கள் விடமாட்டோம்' என்று ஒரே கட்டுப்பாடுடையவர்களாய் இகழ்ந்துபேச, பலராமர் அளவுகடந்த கோபங்கொண்டு எழுந்திருந்து 'குருகுலத்தார் வாஸஞ்செய்துகொண்டிருக்கின்ற இந்நகரத்தைக் கங்கையிற் கவிழ்த்துவிட்டு பூமியிற் கௌரவப்பூண்டில்லாமற் செய்துவிடுகிறேன் பாருங்கள்' என்று சொல்லி, தமது கலப்பையை மதிலின் மேலுள்ள நாஞ்சிலென்னும் உறுப்பில் மாட்டியிழுக்க, அதனால் அப்பட்டண முழுவதும் அசைந்து சாயவே, அது கண்ட கௌரவரெல்லாரும் மனங்கலங்கி ஸாம்பனை லக்ஷணையோடும் பல சிறப்புக்களோடும் கொண்டுவந்து ஸமர்ப்பித்து வணங்கி வேண்ட, இராமபிரான் அவ்வளவோடு கலப்பையை வாங்கியருளினன் என்றும் உள்ள பல கதைகளினால் ஸ்ரீராமனது கலப்பையின் ஆற்றல் அறியத்தக்கது. பலராமாவதாரமும் ஸ்ரீதசரதராமாவதாரம்போல் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் முக்க்ய ப்ராதுர்ப்பாவமாதல் அறியத்தக்கது.

நான்காமடியில், "நலம்புரிந்திறைஞ்சும் திருவடி" என்றும், "இறைஞ்சுன் திருவடி" என்றும் பாடபேதமுண்டு. "இறைஞ்சு உன் திருவடி" எனப் பிரிக்க. .. ... ... ... ... ... ... (உ)

சூதினைப்பெருக்கிக் களவினைத் துணிந்து
சுரிகுழல் மடந்தையர்திறத்து*
காதலேமிகுத்துக் கண்டவா திரிந்த
தொண்டனேன், நமன்தமர்செய்யும் *
வேதனைக் கொடுங்கி நடுங்கினேன்
வேலைவெண்டிரை யலமரக் கடைந்த
நாதனே! *வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய்! (ந)

| | |
|---|---|
| வேலை | கடலிலேயுள்ள |
| வெண் திரை | வெளுத்த அலைகள் |
| அலமர | கலங்கும்படி |
| கடைந்த | (தேவர்களுக்காகக்) கடைந்தருளின |

நாதனே!
நைமிசாரணியத்துள் எந்தாய்!—;
சூதினை பெருக்கி } அதிகமாகச் சூதாடியும்

| | |
|---|---|
| களவினை துணிந்து | களவுசெய்வதில் துணிந்தும் |
| சுரி குழல் மடந்தையர் திறத்து காதலே மிகுத்து | சுருண்ட கூந்தலையுடைய ஸ்த்ரீகள் விஷயத்திலே மிக்க ஆசைகொண்டு |
| கண்ட ஆ திரிந்த | கண்டபடியெல்லாம் தட்டித்திரிந்த |
| தொண்ட னேன் | அடியேன் |
| நமன் தமர் செய்யும் வேதனைக்கு | யமபடர்கள் செய்யப்போகிற ஹிம்ஸைகளை நினைத்து |
| ஒடுங்கி நடுங் கினேன் | உடல்குன்றி நடுங்கினவனாய் |
| வந்து உன் திருஅடி அடைந்தேன் | இன்று வந்து உன் திருவடிகளைச் சேர்ந்துவிட்டேன். |

* * *—[சூதினைப் பெருக்கி.] "போக்கினேன் பொழுதினைவாளா" என்று வீண்போது போக்கினதாகக் கீழ்ப்பாட்டிலருளிச் செய்தார்; எவனும் ஏதாவதொரு காரியத்தைச் செய்துகொண்டே போதுபோக்குவனே யொழிய வெறுமனிருந்து போதுபோக்கான்; கைகால் முதலிய உறுப்புகள் எப்போதும் ஏதாவதொரு வேலையைச் செய்துகொண்டே யிருக்கும்; ஆகையாலே வீணுகப் பொழுது கழியமாட்டாதே என்று சிலர் கேட்க; வீணான காரியங்களைச்செய்து பொழுதைப் போக்கினேனாகையால் வீண்போது போக்கினதாகச் சொன்னேனத்தனை; வெறுமனிருந்து போதைப் போக்கியிருந்தால் பாதகமில்லையே; செய்யத்தகாத காரியங்களைச் செய்தே காலத்தைக் கழித்தேனென்கிறார் முன்னடிகளில்.

முதலிலே சூதாட்டம் ஆடத் தொடங்கினேன்; பகல் முழுதும் சூதாடுவேன்; அதில் என்னோடு ஆடித் தோற்றவன் குறைவின்றிப் பொருள்கள் கொடுக்கக் கண்டேன்; 'இவன் பெரிய பணக்காரனாகையாலன்றோ இப்படி சூதாடி ஏராளமான பொருளை இழக்கிறான்; இன்றிரவு இவன் வீட்டிற் புகுந்து பெருங்கொள்ளையடிக்கவேண்டியது' என்று நிச்சயித்து அப்படியே அன்றிரவு அவன் வீட்டிற் புகுந்து கொள்ளையடித்தேன்; இப்படியே பலபலநாள் செய்து சூதனைக் கள்வனாகி அளவற்ற பொருளைத் திரட்டியபின்னர் அப்பொருளைச் செலவிடவேண்டிச் சுரிகுழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்தவனானேன்; பல வருஷங்களில் சூதாடிக் களவாடித் திரட்டின பொருள்களடங்கலும் சுரிகுழல் மடந்தையர் திறத்தில் வந்தவாறே ஒரு நொடிப் பொழுதில் செலவழிந்துவிடுமே; மறுநாள் வெறுங்கையனாய் அங்குச் சென்றால் முகம் நோக்குவாரில்லையே; அதற்காக மீண்டும் பொருளீட்டத் தொடங்கி 'இன்னவழியில்தான் பொருள் சேர்ப்பது' என்று ஒரு வ்யவஸ்தை யில்லாமல் மனம் போனபடியெல்லாம் செய்துதீர்த்தேன்; அப்போது பரலோக சிந்தனை யென்பது எள்ளளவுமின்றிக் கண்டபடி திரிந்தேனாகிலும், இப்போது அந்த சிந்தனைதோன்றி "ஐயோ! யமபடர்கள் கையிலே சிக்கி வருந்த வேணுமே!" என்று இன்று நடுநடுங்கி, உன் திருவடிகளை அண்டைகொண்டால் யமபடர்களின் தலையிலே காலைவைத்துக் கூத்தாடலாம் என்று பெரியோர் சொல்லக்கேட்டு வந்து உன் திருவடிகளைப் பணிந்தேன்காண் என்கிறார்.

இவ்விடத்தில் சூது என்றதற்கும் களவு என்றதற்கும் வேறொருவகையாகவும் பொருள் கூறுவர்; விவேகியாயிருப்பானொருவன் "எம்பெருமானுக்கு சேஷபூதனான ஆத்மா உண்டு; ஸர்வசேஷியான ஈச்வரனுண்டு; புண்யபாப வகுப்பு உண்டு; பரலோகமுண்டு; சாஸ்த்ரங்களெல்லாம் ஸத்யம்" என்று சொன்னால் மாயச் சொற்களாலே அவனை மயக்கி நாஸ்திகனாக்கித் தன் வகுப்பில் அவனையும் சேர்த்துக் கொள்ளுகை சூது; எம்பெருமானுக்கு சேஷமாய் கௌஸ்துப ஸ்தாநீயனான ஆத்மாவைத் தன்னதென்றிருக்கை களவு; இவ்விரண்டாலும், எம்பெருமானுடைய அலம்புரிந்த நெடுந்தடக்கைக்கும் எட்டாமல் நெடுந்தூரம் அகன்றுவிட்டேன் என்கிறார்போலும். "சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடிசைந்தகாலம், மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை" என்ற திருமாலைப் பாசுரத்தை இங்கே நினைப்பது.

"கண்டவாதிரிந்த தொண்டனேன்" என்றவிடத்து, தொண்டனேன் என்றது—அந்த ஸ்த்ரீகளுக்கே தொண்டுபட்டுக் கிடந்தேன் என்றபடியாகலாம்; அன்றி, எம்பெருமானை உனக்குத் தொண்டனாகிய நான் கண்டபடி திரிந்து கிடந்தேன் என்றபடியுமாகலாம். ... ... ... ... (௩)

வம்புலாங் கூந்தல் மனைவியைத்துறந்து
பிறர்பொருள் தாரமென் றிவற்றை *
நம்பினா ரிறந்தால் நமன்தமர்பற்றி
எற்றிவைத் தெரியெழுகின்ற *
செம்பினா லியன்ற பாவையைப்
பாவீ ! தழுவென மொழிவதற் கஞ்சி *
நம்பனே ! வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய் ! (௪)

| | |
|---|---|
| வம்பு உலாம் கூந்தல் | பரிமளம் வீசாநின்ற கூந்தலை யுடையளான |
| மனைவியை | தாலிகட்டின பெண்சாதியை |
| துறந்து | உபேக்ஷித்துவிட்டு |
| பிறர்பொருள் தாரம் என்று இவற்றை | பிறருடைய பொருள், பிறருடைய மனைவி என்னும்படியான பரத்ரவ்யங்களை |
| நம்பினர் | விரும்பினவர்கள் |
| இறந்தால் | இறந்துபோனால் |
| நமன் தமர் | யமபடர்கள் |
| பற்றி | பிடித்துக்கொண்டு |
| எற்றி | துன்பப்படுத்தி |
| வைத்து | (தங்களுக்கும் கைசலித்தவாறே) ஓரிடத்தில் போட்டுவைத்து, |
| பாவீ | "பெரும்பாவங்களைச் செய்து இவ்விடம் வந்து சேர்ந்தவனே ! |
| செம்பினால் இயன்ற எரி எழுகின்ற பாவையை தழுவு என | செம்பினால் செய்யப்பட்ட தாய் நெருப்புப்பற்றி யெரிகின்றதான இந்த ஸ்த்ரீப்ரதிமையைத் தழுவிக்கொள்" என்று |
| மொழிவதற்கு அஞ்சி | சொல்லப்போகிறார்களே ! யென்று பயப்பட்டு |
| நம்பனே | ஆச்ரிதர்களுக்கு நம்பத் தகுந்தவனே ! |

நைமிசாரணியத்துள் எந்தாய் !
வந்து உன் திருவடி அடைந்தேன்—,

* * *—[வம்புலாங் கூந்தல்.] அக்நிஸாக்ஷிகமாகத் தாம் விவாஹம் செய்து கொண்ட பெண்டிர்களை அலக்ஷியஞ் செய்து விட்டிட்டுப் பிறருடைய மனைவி யையும் பொருளையும் கைப்பற்றி இவ்வுலகில் மனம் போனபடி திரிந்தவர்கள் அந்தப் பாவங்களின் பலனை அநுபவிப்பதற்கு யமலோகஞ் சென்றவாறே அங்கு யமபடர்கள் வந்து பிடித்துக்கொண்டு சக்தி யுள்ளவளவும் புடைத்துத் தங்க ளுக்கும் இளைப்பு உண்டானவாறே 'இங்கே கிடவுங்கள்' என்று ஒரு மூலை யில் தள்ளிவைத்து, செம்பினால் செய்யப்பட்டு நெருப்பிலேபழுக்கப் பழுக்கக் காய்ச்சப்பட்டு எரி வீசுகின்ற பதுமையைக் கொணர்ந்து முன்னே நிறுத்தி, "பாவீ! முன்னே பிறர் மனைவியை அணைந்தாயே; இப்போது இந்தப் பது மையை அணைந்து கொள்" என்று சொல்லி அணைவித்துத் துன்பப்படுத்து வர்கள்—என்கிற விஷயத்தைக் கேள்விப்பட்டது முதல் அஞ்சி நடுங்குகின் றேன்; உன்னைச் சரணமடைந்தால் எல்லா அச்சமும் நீங்கிவிடும் என்று இப் போது உன்னைச் சரணமடைந்திட்டேன் என்றாராயிற்று.

இவ்வித தண்டனைகளுக்கு உரிய பாவங்களை ஆழ்வார் நெஞ்சாலும் நினைத் திலரேயாகிலும் அப்படிப்பட்ட பாவங்களைக் கூசாமல் செய்து திரிகின்ற நம் போலியர் வாயில் இப்பாசுரங்கள் நுழைந்து புறப்படுவதற்காகவே ஆழ்வார் இங் ஙனமருளிச் செய்து வைத்தார் என்று உணர்க.

தன் மனைவியைச் சொல்லும்போது "வம்புலாங் கூந்தல் மனைவி" என்று சிறப்பித்துக் கூறியும், பிறர் மனைவியைச் சொல்லும்போது அங்ஙனம் சிறப்பித் துக் கூறுதலின்றியே "பிறர் பொருள் தாரம்" என்று சாதாரணமாகக் கூறியும் உள்ளதற்குப் பெரியவாச்சான் பிள்ளை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் காண் மின்:—"விஷயாந்தரங்களிலே ஸ்ப்ருஹையைப் பண்ணுமே; அவற்றில் வந் தால் வம்புலாங் கூந்தலாகவும் வேண்டாவாய்த்து; பிறரதாமித்தனையேயாய்த்து ஆதரிக்கைக்கு வேண்டுவது." என்று. தான் தாலிகட்டிக் கைக்கொண்ட மனைவி திரிலோக ஸௌந்தரியாயிருந்தாலும் 'தன்னுடையவள்' என்கிற காரணம் பற் றியே அவளைக் கைவிட்டிடுவான் என்பதும், பிறர் மனைவி பிளிச்சைக் கண்ணி யாயிருந்தாலும் 'பிறருடையவள்' என்கிற காரணம்பற்றியே அவளை உகந்திடு வான் என்பதும் சொல் நயத்தில் தோற்றுகின்றமை காண்க.

நம்பினேனிறந்தால் என்றவிடத்து நம்புதலாவது ஆசைப்படுதல். "நம்பும் மேவும் நசையாகும்மே." "நமன்தமர்பற்றி" இத்யாதிக்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் மிக்க ரஸமாயிருப்பதால் அவற்றை இங்கே உதாஹரிப்போம்;—"அவர்கள் தாங்கள் [—யமபடர்கள்] ஒரு கைக்கு ஆயிரம் பேராக வந்து பற்றுவர்களாய்த்து; பின்னை இவனுடம்புதன்னோடே எற்றுவர் கள்; அநந்தரம் தங்கள் கை சலித்தவாறே பொகட்டிட்டு வைப்பர்கள். 'இவர் இத்தனைபோது ஸ்த்ரீகளையொழிய இருக்கவல்லரோ!; அவளையழைப்பியும்.' என்பர்கள். இவனும் 'நம்மை நலிவதெல்லாம் நலிந்தார்களாகிலும் இனி அவளை அழைக்கிறார்களிறே' என்று குறுவிழிக்கொண்டு கிடக்கும். எரியெழா நிற்ப

தாய் செம்பாலே செய்யப்பட்ட பாவையைப் பாவீ! தழுவு என்பர்களாய்த்து. கெடுவாய்! அவர்களொழிச்சினவன்றாகிலும் அநுதாபம் பிறந்து உகந்தருளின தொரு திருவாசலிலே ஒதுங்கினையாகில் இன்று எங்களுக்குக் கைசலியாதொழிய லாமே என்பர்களாய்த்து. அவர்கள் பண்ணும் நலிவைப் பொறுக்கலாம்; க்ரூர மான பேச்சாய்த்துப் பொறுக்கப் போகாதது.” ... ... (சு)

இடும்பையா லடர்ப்புண் டிடுமினோ துற்றென்று
இரந்தவர்க் கில்லையே யென்று *
நெடுஞ்சொலால் மறுத்த நீசனேனந்தோ!
நினைக்கிலேன் வினைப்பயன் தன்னை *
கடுஞ்சொலார் கடியார் காலனார் தமரால்
படுவதோர் கொடுமிறைக் கஞ்சி *
நடுங்கி நான் வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய்! (ரு)

| | |
|---|---|
| இடும்பையால் | ஏழ்மைத்தனத்தினால் |
| அடர்ப்புண்டு | கஷ்டப்பட்டு |
| ஓ! துற்று இடுமின் என்று | “ஐயோ! ஒரு கவளம் இடுங்கோள்” என்று கதறி |
| இரந்தவர்க்கு | பிச்சை கேட்டவர்களுக்கு |
| இல்லையே என்று | இல்லவேயில்லை யென்று சொல்லி |
| நெடு சொலால் மறுத்த | நீண்ட சொல்லாலே திரஸ்கரித்த |
| நீசனேன் நான் | நீசனாகிய நான் |
| அந்தோ | ஐயோ! |
| வினை பயன் தன்னை நினைக்கிலேன் | பாபங்களுக்கு நேரக் கூடிய பலன்களை நெஞ்சாலும் நினைக்க மாட்டாதவனா யிருக்கின்றேன்; |
| கடு சொலார் கடியார் காலனார் தமரால் படுவது ஓர் கொடு மிறைக்கு அஞ்சி நடுங்கி | க்ரூரமான சொற்களை யுடையராய் க்ரூர மான செய்கை களையுமுடையரான யமபடர்களாலே உண்டாகக்கூடிய கடினமான ஹிம்ஸை களை நினைத்து அஞ்சி நடுங்கி |

நைமிசாரணியத்துள் எந்தாய்! வந்து உன் திருவடி அடைந்தேன்—.

* * *—[இடும்பையாலடர்ப்புண்டு.] விஷயபோகங்களைச்செய்து திரிபவர் களும் ஏழைகளைக் கண்டால் ஐயோ! என்று இரங்குவதுண்டு; அந்த இரக்க மும் எனக்கு இல்லாமல் போயிற்றே! என்று அநுதாபப்படுகிறார்.

இடும்பையாவது ஏழையாயிருக்கை. ஏழைமையினால் வருத்தப்பட்டுக் கொண்டு வந்து ‘ஐயா! ஒரு கவளம் சோறு இடுங்கள்’ என்று பல்லைக்காட்டி இரந்தவர்களுக்கு ஒரு பிடிசோறு இடமாட்டாமல் ‘கிடையாது, போ’ என்று சொல்லித் திரஸ்கரித்த பாவியன்றோ நான்; இப்படிப்பட்ட பாவத்திற்கு நேரக் கூடியபலனை அந்தோ! நெஞ்சாலும் நினைக்ககில்லேன். மேலுலகத்தில் யமபடர் களால் கொடிய ஹிம்ஸைகள் நேரப்போகின்றன என்று பொதுப்படையாகத் தெரிந்திருப்பதனால் அந்த ஹிம்ஸைகளை நினைத்து அஞ்சிநடுங்கி இன்று உன்னை வந்து பணிந்தேன்.

துற்று=ஒரு கவளம். "நினைக்கிலேன் வினைப்பயன்தன்னை" என்பதற்கு, "பாவங்களுக்குப் பலனுண்டு என்பதை அப்போது எண்ணாமல் பாவத்தைச் செய்துவிட்டேன் ; இப்போது தவிக்கின்றேன்" என்பதாகவும் கருத்துரைக்கலாம். யமபடர்கள் செய்கிற ஹிம்ஸைகளைக் காட்டிலும் அவர்கள் சொல்லுகிற சொற்கள் மிகக்கடினமானவை என்பது தோன்றக் கடுஞ்சொலார் என்று முற்கூறினர். காலனார்—யமதர்மராஜன். கோடிமிறை=கொடிய வருத்தங்கள். (ரு)

கோடிய மனத்தால் சினத்தொழில் புரிந்து
திரிந்து நாயினத்தோடுந் திளைத்திட்டு *
ஓடியுமுழன்று முயிர்களே கொன்றேன்
உணர்விலேனாதலால் * நமனார்
பாடியைப் பெரிதும் பரிசழித்திட்டேன்
பரமனே ! பாற்கடல்கிடந்தாய் ! *
நாடிநான்வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய் ! (சு)

பரமனே — புருஷோத்தமனே !
பாற்கடல் கிடந்தாய் — திருப்பாற்கடலில் திருக்கண் வளர்ந்தருளுமவனே !
நைமிசாரணியத்து ளெந்தாய் !—;
கோடிய மனத்தால் — கோணலான நெஞ்சோடே
சினம் தொழில் புரிந்து — பிறர்க்கு விரோதமான காரியங்களைச் செய்து
நாய் இனத் தொடும் திரிந்து திளைத்திட்டு — நாய் முதலிய துஷ்ட ஜந்துக்களோடு கூடித் திரிந்து வேட்டையாடிக் களித்து
ஓடியும் உழன்றும் — இங்குமங்கும் ஓடித்திரிந்தும்
உயிர்களே கொன்றேன் — பிராணி ஹிம்ஸையையே செய்துகொண்டிருந்தவனாய்
உணர்வு இலேன் நான் — விவேக சூந்யனாயிருந்த நான்
நாடி உன் திருவடி வந்து அடைந்தேன் ஆதலால்— ;
நமனார் பாடியை பெரிதும் பரிசு அழித்திட்டேன் — யமபட்டணமான நரகத்தின் நிலைமையை மிகவும் அழித்துவிட்டேன்.

* * *—[கோடியமனத்தால்.] ஜீவஹிம்ஸைகள் பண்ணித் திரிந்ததற்கும் எல்லையில்லையென்கிறார். கோடியமனமாவது வழியைவிட்டுவிலகினமனம்; ருஜுவான வழியில்போகாமல் கோணலாகச் செல்லுகின்ற மனம் என்றபடி. புத்திகெட்டுச் சினத்தொழில்களைச் செய்தேனென்கிறார். சினமாவது கோவம். கோவத்தினால் செய்யும் தொழிலாவது ஜீவஹிம்ஸை முதலியன. "நாயினத்தோடும்" என்றவிடத்து, நாய் என்பதற்கு நாய்என்றே பொருள்கொண்டு, நாய் முதலிய கொடிய மிருகங்களைத் துணைகொண்டு வேட்டையாடி ஜீவஹிம்ஸைகளைப் பண்ணித்திரிந்தேன் என்பதாகக் கொள்வதுமுண்டு ; அன்றி, நாய் என்று—நாய் போன்ற நீசர்களைச் சொல்லிற்றாய், நீசஸஹவாஸம் பண்ணித் திரிந்தேன் என்பதாகக் கொள்வதுமுண்டு. ஓடியுமுழன்றும்=பதின்காதவழி ஓடினால் ஒரு பிராணியைக் கொல்லலாம் என்று ஒருவன் சொன்னால் மயங்காமல்

ஓடினேனென்கிறார் போலும். "உயிர்களே கொன்றேன்" என்றவிடத்து ஏகாரத்தினால்—துணிதுப்புகளைப் பிடுங்கிக்கொண்டு உதைத்துத் துரத்திவிடுதல் செய்கையின்றியே உயிர்க்கொலையளவுஞ் செய்தேன் என்று காட்டுகிறார். "ஸர்வேச்வரனுண்டு, பரலோகமுண்டு" என்கிற துளி ஞானமில்லாமையினால் இவ்வளவுஞ் செய்தேனென்பார் உணர்விலேன் என்கிறார்.

"ஆதலால் நமனார்பாடியைப் பெரிதும் பரிசழித்திட்டேன்" என்றவிடத்திற்கு இரண்டுவகையான யோஜனைகள் உண்டு. "உயிர்களை கொன்றேனாய் உணர்விலேனான நான் வந்து உன் திருவடியடைந்தேனாதலால் நமனார் பாடியைப் பெரிதும் பரிசழித்திட்டேன்" என்று அந்வயித்து, இனி யமபுரத்தில் யமனுடைய ஆணை செல்லாதபடி அத்தை வென்றுவிட்டேன் என்பதாக ஒரு யோஜனை. "உணர்விலேனாதலால் நமனார்பாடியைப் பெரிதும் பரிசழித்திட்டேன்" என்று உள்ளபடியே அந்வயித்து, இப்படிப்பட்ட கொடிய பாவங்களை நான் செய்திருக்கிறபடியால் 'இப்போதிருக்கிற யமனால் இக்கலியனைத் தண்டிக்க முடியாது; இந்த யமபுரம் உபயோகமற்றது; இனி வேறு யமனும் வேறு யமபுரமும் ஏற்படுத்த வேணும்' என்று சொல்லும்படி மஹாபாபியானேன் என்பதாகக் கொள்வது மற்றொரு யோஜனை. ... ... (சு)

நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும்
நீதியல்லாதன செய்தும் *
துஞ்சினார் செல்லுந் தொல்நெறி கேட்டே
துளங்கினேன் விளங்கனி முனிந்தாய்! *
வஞ்சனேனடியேன் நெஞ்சினிற்பிரியா
வானவா! தானவர்க்கென்றும்
நஞ்சனே! * வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய்! (எ)

**விளங்கனி முனிந்தாய்** — விளாம்பழமாய் வந்து தோன்றின அஸுரனைச் சீறித் தொலைத்தவனே!

**வஞ்சனேன் அடியேன் நெஞ்சினில் பிரியா வானவா** — வஞ்சகனான என்னுடைய நெஞ்சினுள்ளும் புகுந்து பிரியாதிருக்கிற தேவனே!

**தானவர்க்கு என்றும் நஞ்சனே** — அசுரர்களுக்கு எப்போதும் மிருத்யுவாயிருப்பவனே!

**நைமிசாரணியத்துள் எந்தாய்!**—;

**நீதி அல்லாதன** அநீதியான ஒழுக்கங்களை

**நெஞ்சினால் நினைந்தும்** — (முதலில்) நெஞ்சாலே நினைத்தும்

**வாயினால் மொழிந்தும்** — (பிறகு) வாயாலே சொல்லியும்

**செய்தும்** — (பிறகு) செய்கையினால் அனுட்டித்தும்

**துஞ்சினார்** முடிந்தவர்கள்

**செல்லும்** அடையத்தக்க

**தொல் நெறி** நரகமார்க்கத்தை

**கேட்டே** — (கற்றுணர்ந்த பெரியோர் சொல்லக்) கேட்ட மாத்திரத்திலே

**துளங்கினேன்** நடுங்கினவனாய்க்கொண்டு

உன் திருஅடி அடைந்தேன்—.

* * *—[நெஞ்சினால் நினைந்தும்.] மனமொழி மெய்கள் மூன்றாலும் பாவங்களையே செய்து செத்தவர்கள் போகிற வழியின் கொடுமையைக் கேள்விப்பட்ட மாத்திரத்திலே நடுநடுங்கி வந்து உன் திருவடிகளைப் பற்றினேன் என்கிறார்.

சிலர் பாவஞ் செய்யவேணுமென்று முன்னாடி நெஞ்சால் நினையாமலும் வாயால் சொல்லாமலுமிருந்தாலும் திடீரென்று விதிவசமாகப் பாவஞ்செய்து விட நேருவதுண்டு; அப்படிப்பட்டவர்களுடைய பாவங்கள் பொறுமைக்கு விஷயமாகவுங்கூடும்; அங்ஙனன்றிக்கே, ‘நாம் கட்டாயம் பாவஞ் செய்ய வேணும்’ என்று நெடுநாளாகவே நெஞ்சில் பாரித்துக் கொண்டு அதை அடிக்கடி வாயாலுஞ் சொல்லிக் கொண்டிருந்து அப்படியே செய்கையிலும் செய்து தீர்ப்பவர்களுடைய பாவங்கள் அநுபவித்தே தீரவேண்டியவையாகையால் “நீதியல்லாதன நெஞ்சினாற் நினைந்தும் வாயினால் மொழிந்தும் செய்தும்” என்றார். இங்ஙனே செய்து செத்தவர்கள் செல்லுகிற தொன்னெறியாவது நரகமார்க்கம். தொல் நெறி=அநாதியான வழி; பகவத்கீதையில் எட்டாவது அத்யாயத்தில் “శుక్లకృష్ణగతీ హ్యేతే జగతశ్శాశ్వతే మతే। ఏకయా యాత్యనావృత్తిమన్యయావర్తతే పునః = சுக்லக்ருஷ்ணகதீ ஹ்யேதே ஜகதச் சாச்வதே மதே—ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயாவர்த்ததே புநஃ.” [சுக்லகதியென்கிற அர்ச்சிராதிமார்க்கமும் க்ருஷ்ணகதியென்கிற தூமாதிமார்க்கமும் உலகத்திற்கு சாச்வதமாய் ஏற்பட்டவைகள்; இவற்றுள் சுக்லகதியாற் சென்றவன் மறுபடியும் இவ்வுலகத்திற்குத் திரும்பி வருகிறதில்லை; க்ருஷ்ணகதியாற் செல்லுமவன் திரும்பிவிடுகிறான்] என்னும்போது அர்ச்சிராதிமார்க்கம் போலவே தூமாதி மார்க்கமும் நித்தியம் என்றமையால் இங்குத் தொன்னெறி என்றது பொருந்துமென்க. சாச்வதம் என்கிற விஷயத்தில் இரண்டு மார்க்கங்களும் ஒத்திருந்தாலும் அர்ச்சிராதிமார்க்கம் பெரும்பாலும் புல்மூடிக்கிடக்கும்; தூமாதிமார்க்கம் இடையறாத ஆட்களையுடைத்தாய் வழி தேய்ந்திருக்குமென்று வாசி காண்க.

விளங்கனிமுனிந்த வரலாறு வருமாறு:—கண்ணபிரானைக் கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட அஸுரர்களில் கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய் கண்ணன் தன்கீழ்வரும்பொழுது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்க, அதையறிந்த க்ருஷ்ணபகவான், அவ்வாறே தன்னைக் கொல்லும் பொருட்டுக் கன்றின்வடிவங்கொண்டு வந்த வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின் மேலெறிய, இருவரும் இறந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்தனரென்பதாம்.

“அடியேன்” என்று கபடமாக ஒருவார்த்தை சொன்னாலும் அதை மெய்யன்போடு சொன்ன சொல்லாகத் திருவுள்ளம்பற்றி நெஞ்சைவிட்டு அகலாது நெஞ்சிலேயே குடிகொண்டிருப்பன் என்கிற ஸௌசீல்ய குணத்தைப்பேசுகிறார் வஞ்சனேனடியேன் னெஞ்சினிற்பிரியாவானவா என்று. இப்படிப்பட்ட ஸௌசீல்யம் பிரதிகூலர்பக்கலிலும் இருக்குமாகில் அநர்த்தமாகுமே; அப்படியில்லை என்கிறார் தானவர்க்கு என்றும் நஞ்சனே! என்று. .... (எ)

ஏவினார் கலியார்நலிக வென்றேன் மேல்
　　எங்ஙனே வாழுமாறு? * ஐவர்
கோவினார் செய்யுங்கொடுமையை மடித்தேன்
　　குறுங்குடி நெடுங்கடல் வண்ணா! *
பாவினாரின்சொல் பன்மலர் கொண்டுன்
　　பாதமேபரவி நான்பணிந்து * என்
நாவினால் வந்துன் திருவடியடைந்தேன்
　　நைமிசாரணியத்து ளெந்தாய்! (அ)

குறுங்குடி { திருக்குறுங்குடியிலெழுந்தருளியிருக்கிற
நெடு கடல் வண்ணா { பெரிய கடல் போன்ற திருநிறமுடையவனே
நைமிசாரணியத்துள் எந்தாய்—;
கலியார் { கலிபுருஷனென்கிற ஒரு மஹாப்ரபுவானவர்
நலிக என்று { "இந்தத் திருமங்கை மன்னனை ஹிம்ஸியுங்கோள்" என்று சொல்லி
என் மேல் — என் மேலே
ஐவர் ஏவினார் { பஞ்சேந்திரியங்களையும் ஏவிவிட்டார்;
எங்ஙனே வாழும் ஆறு { அந்தக் கலிபுருஷர் இனி பிழைக்க வழி ஏது? (ஏனென்னில்;)

நான் — அடியேன்
கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன் { குறும்பர்களான அந்த இந்திரியங்கள் செய்யத்தக்க கொடுமைகளை அப்புறப்படுத்தி விட்டேன்;
(அதுதானெப்படி செய்தீரென்னில்;)
என் நாவினால் — எனது நாவினாலே
பா ஆர் இன் சொல் பல் மலர்கொண்டு { நல்ல சந்தங்கள் நிறைந்த இனிய சொற்களாகிற புஷ்பங்கள் பலவற்றையுங் கொண்டு
உன் பாதமே பரவி { உன் திருவடிகளையே தோத்திரஞ் செய்து
பணிந்து — கீழே விழுந்து
உன் திருவடி வந்து அடைந்தேன்—.
[ஆதலால் கலியை வென்றேனென்றபடி.]

* * *—[ஏவினார் கலியார்.] கலி புருஷன் என்னைத் துன்பப்படுத்த நினைத்துத் தனக்குக் கையாட்களான இந்திரியங்களையழைத்து 'நீங்கள் திருமங்கையாழ்வாரை நன்றாக ஹிம்ஸித்துவிடுங்கள்' என்று ஏவினான்; நான் இத்தனை நாளும் இருந்தபடியே இருந்தேனாகில் அவற்றால் மிகவும் துன்பப்பட்டிருப்பேன்; தைவாதீநமாக நான் பழைய நிலைமையில் நின்றும் நீங்கி உன் திருவடிகளில் புஷ்பங்களை ஸமர்ப்பித்தும் நமஸ்காரஞ்செய்தும் தோத்திரங்கள் பண்ணியும் வருகிறேனாகையால் இந்திரியங்களின் செங்கோன்மை என்னிடம் செல்லவொண்ணாதபடி தடுத்துவிட்டேன்; கலிபுருஷனுடைய கட்டளை பாறிப்பறந்து போயிற்று; அந்தக்கலிபுருஷன் இனி இவ்வுலகில் வாழ்வதற்கே வழியில்லை— என்று திருவுள்ளமுவந்து அருளிச் செய்கிறாராயிற்று.

கலியார்=பெருமைப்படுத்திச் சொல்லுகிற வார்த்தையன்று; கோவமும் பகையும் இழிவுந்தோற்றச் சொல்லுகிறபடி. "வினையார்" என்று பாவங்களைச் சொல்வதுபோல. நலிக=வியங்கோள் வினைமுற்று. "எங்ஙனே வாழுமாறு" என்

பதற்கு 'இனி நான் எப்படி வாழ்வேன்' என்று ஆழ்வார் இந்திரியங்களுக்கோ கலிபுருஷனுக்கோ அஞ்சி நடுங்கிச் சொல்லுகிறதாகப் பொருள் கூறுவர் சிலர்; அது பிரகரணத்திற்குச் சேராது. "கோவினர் செய்யுங் கொடுமையை மடித்தேன்" என்று உடனே அருளிச் செய்கிருராகையாலே, தாம் அஞ்சினதாகப் பொருள்கொள்ள வொண்ணுது. அந்தக் கலிபுருஷன் இனி வாழ்வதற்கு வழியுண்டோ? என்பதாகவே கொள்க. ... ... ... (அ)

ஊனிடைச் சுவர் வைத்தென்புதூண் நாட்டி
உரோமம் வேய்ந்தோன்பது வாசல் *
தானுடைக் குரம்பை பிரியும்போதுன்றன்
சரணமே சரணமென்றிருந்தேன் *
தேனுடைக் கமலத் திருவினுக் கரசே!
திரைகொள்மா நெடுங்கடற் கிடந்தாய்! *
நானுடைத் தவத்தால் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்து ளெந்தாய்! (கூ)

| | |
|---|---|
| தேன் உடை கமலம் திருவினுக்கு அரசே | தேன் நிறைந்த தாமரைப் பூவிற்பிறந்த பெரிய பிராட்டியார்க்குப் பதியானவனே |
| திரை கொள்மா நெடு கடல் கிடந்தாய் | அலைகள் நிரம்பிய மிகப் பெரிய திருப்பாற் கடலில் கண்வளர்ந்தருளுமவனே |
| நைமிசாரணியத்துள் எந்தாய்!—; | |
| ஊன் | மாமிசத்தை |
| இடை சுவர் வைத்து | நடுநடுவே சுவராக வைத்து |
| என்பு | எலும்புகளை |
| தூண் நாட்டி | கம்பங்களாக நட்டு |
| உரோமம் வேய்ந்து | மயிர்களை மேலே மூடி |
| ஒன்பது வாசல்தான் உடை | நவத்வாரங்களையுடையதாகச் செய்யப்பட்ட |
| குரம்பை | குடிசை போன்ற இந்த சரீரத்தை |
| பிரியும் போது | விட்டுப்பிரியுங்காலத்தில் |
| உன்தன் | உன்னுடைய |
| சரணமே | திருவடிகளே |
| சரணம் என்று இருந்தேன் | ரக்ஷகமாக வேணுமென்று நினைத்திருந்தேன்; |
| நானுடை தவத்தால் திருஅடி அடைந்தேன் | (இப்போது) என்னுடைய பாக்கியத்தினால் திருவடிவாரத்தில் வந்து சேரப்பெற்றேன். |

* * *—[ஊனிடைச்சுவர் வைத்து.] தம்முடைய அத்யவஸாயத்தை வெளியிடுகிருரிதில். சரீரத்தை ஒரு குடிசையாக உருவகப்படுத்துகின்ருர். குடிசையில் இடையிடையே சுவர்கள் வைக்கப்பட்டிருக்கும்; இவ்வுடலில் மாம்ஸபிண்டங்கள் சுவர்போலிருக்கின்றன; குடிசையில் தூண்கள் நாட்டப்பட்டிருக்கும்; இதில் எலும்புகள் தூண்கள்போன்றுள்ளன. குடிசையில் பல வாசல்களுண்டு; உடலிலும் நவத்வாரங்கள் ப்ரத்யக்ஷமே. குடிசை ஓலைக்கொத்து முதலியவற்ருல் மூடப்பட்டிருக்கும்; இதுவும் உரோமங்களால் மூடப்பட்டிராநின்றது. ஆக இவ்வகைகளாலே ஒரு குடிசை யென்னலாம்படி யிராநின்றதிறே இவ்வுடல்;

குடிசையிலே நாம் வாழ்வதுபோல் இவ்வுடலில் ஆத்மா வாழ்கின்றான்; இவ்வுடலைவிட்டு ஆத்மா வெளிக்கிளம்புங்காலமே மரணமெனப்படும். அப்படி மரணம் நேர்ந்தபிறகு இவ்வாத்மா போய்ச் சேரவேண்டிய இடம் எம்பெருமான் திருவடிகளே—என்கிற அத்யவஸாயம் தமக்கு இருக்கிறபடியை முன்னடிகளால் அருளிச் செய்தாராயிற்று. யமபடர்கள் வந்து என்னைப்பற்றியிழுத்துக் கொண்டு போய்ப் பலவகையான ஹிம்ஸைகளைச் செய்வதற்கு உறுப்பான பாவங்களை நான் வேண்டியபடி செய்து வைத்திருந்தாலும், இன்று தேனுடைக்கமலத்திருவாகிய பெரிய பிராட்டியாரை முன்னிட்டு உன்னைச் சரணமடையும்படியான பாக்கியம் எனக்கு நேர்ந்ததனால் இனி நான் யமபுரம் சென்று வருந்தவேண்டிய ப்ரஸக்தியில்லை; உன் திருவடிகளையே கிட்டி ஆநந்திக்க வழி ஏற்பட்டுவிட்டது என்று தம்முடைய மகிழ்ச்சியை வெளியிட்டாரென்றுணர்க.

“நானுடைத் தவத்தால்” என்றது என்னுடைத்தவத்தால் என்றபடி. இவருடைய தவமாவது என்ன? என்றால், எம்பெருமானுடைய திருவருளையே தம்முடைய தவமாகச் சொல்லிக்கொள்வர்கள் ஆழ்வார்கள். உன்னருளாலே உன்னடி வந்து பணிந்தேனென்றபடி. ... ... ... (௯)

ஏதம் வந்தணுகா வண்ண நாமெண்ணி
யெழுமினோ தொழுதுமென்று * இமையோர்
நாதன் வந்திறைஞ்சும் நைமிசாரணியத்
தெந்தையைச் சிந்தையுள்வைத்து *
காதலேமிகுத்த கலியன் வாயொலிசெய்
மாலைதாம் கற்று வல்லார்கள் *
ஓதநீர் வையகமாண்டு வெண்குடைக்கீழ்
உம்பருமாகுவர் தாமே. (௧௦)

| பதம் | பொருள் |
|---|---|
| ஏதம் வந்து அணுகா வண்ணம் | “துக்கங்கள் நம்மிடம் வந்து சேராத வகையை |
| நாம் எண்ணி | நாம் எண்ணியிருப்போமாகில் |
| தொழுதும் எழுமின் என்று | (நைமிசாரண்யத்திலே போய்த்) தொழுவோம் வாருங்கள்” என்று சொல்லி |
| | (தேவர்களெல்லாரையுங் கூட்டிக் கொண்டு) |
| இமையோர் நாதன் வந்து | தேவேந்திரன் வந்து |
| இறைஞ்சும் | ஆச்ரயிக்கப்பெற்ற |
| நைமிச அரணியத்து எந்தையை | நைமிசாரண்யத்தி லெழுந்தருளியிருக்கிற எம்பெருமானை |
| சிந்தையுள் வைத்து | தியானம் செய்து |
| காதல் மிகுத்த | பகவத்பக்தி அதிகரிக்கப் பெற்ற |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| வாய் ஒலி செய் மாலை | அருளிச் செய்த இச்சொல் மாலையை |
| கற்று வல்லார்கள் தாம் | அப்யஸித்துத் தேறினவர்கள் |
| ஓதம்நீர் வையகம் | கடல் சூழ்ந்த இப்பூமண்டலத்தை |
| வெண் குடை கீழ் ஆண்டு | வெளுத்த குடை நிழலின் கீழே இருந்து கொண்டு அரசாட்சி செய்தபின்பு |
| உம்பரும் ஆகுவர் | நித்யஸூரிகளோடும் சேரப்பெறுவர்கள். |

* * *—[ஏதம் வந்தணுகா வண்ணம்.] இமையோர் நாதனுகிய இந்திரன் தனது பரிவாரங்களை யெல்லாம் அழைத்து 'நாம் எல்லாரும் நைமிசாரணியத்துள் சென்று எம்பெருமானை ஸேவிப்போம் வாருங்கள் ; ஸேவித்தோமாகில் நம்முடைய ஏதங்களெல்லாம் ஓடிப்போய்விடும்' என்று சொல்லி எல்லாரையும் கூட்டிக்கொண்டு வந்து ஸேவித்திருக்குமிடமாம் நைமிசாரணியம். அவ்விடத்தில் அரண்யரூபியாக ஸேவைஸாதிக்கின்ற எம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வாரருளிச் செய்த இச் சொல்மாலையை ஓதவல்லவர்கள், இவ்வுலகத்து அநுபவங்களில் விருப்பமுண்டாகில் அவற்றை உண்டுகளித்தபின் நித்யஸூரிகளின் கோஷ்டியிலும் சென்று சேர்ந்து நித்யாநந்தம் அநுபவிக்கப்பெறுவர்கள் என்று இத்திருமொழி கற்றூர்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டிஞராயிற்று. ... ... ... ... ... ... (கo)

அடி வரவு:—வாணிலா சிலம்பு சூதினை வம்பு இடும்பையால் கோடிய கொஞ்சிஞல் ஏவிஞர் ஊன் ஏதம் அங்கண்.

ஆருந்திருமொழி உரை முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—ஏழாந்திருமொழி.

# அங்கண் ஞாலமஞ்ச.

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில், தாம் செய்த பலபல பாவங்களை யெடுத்துரைத்து, 'அந்தோ! இப்படி கணக்கில்லாத பாவங்களைச் செய்துவிட்டேனே!; யமலோகத்திலே யமபடர்களால் நேரக்கூடிய கொடுமைகளை நினைக்குங்கால் அளவற்ற அச்சமும் நடுக்கமும் உண்டாகின்றதே!' என்று பலவாறுகச் சொல்லித் தம்முடைய அநுதாபந் தோற்றக் கதறினார். அப்படி கதறின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், "ஆழ்வீர்! நம்முடைய பக்தனை ப்ரஹ்லாதன் உமக்குத் தெரியுமே; யமகிங்கரர்களாலும் செய்யமுடியாத துன்பங்களை அவனுக்கு அவனுடைய தகப்பனை ஹிரண்யகசிபு என்பவன் செய்வித்தானென்பதும் உமக்குத் தெரியுமே. அப்படி பல்வகைத் துன்பங்களுக்கு ஆளான அந்த ப்ரஹ்லாதனை நாம் ரக்ஷிக்க வேண்டி ஆச்சரியமான ஒரு அவதாரம் செய்ததும் உமக்குத் தெரியுமே. அந்த நரஸிம்ஹாவதாரம் பிற்பட்டவர்களுக்குப் பயன் படாமற் போயிற்றேயென்று வயிறெரியவும் வேண்டாதபடி நாம் சிங்கவேள் குன்றமென்னும் விலக்ஷணமான திவ்ய தேசத்திலே நித்யஸந்நிதியும் பண்ணி வைத்திருக்கிறோமே. ஆச்ரிதர்களின் விஷயத்தில் நாம் இவ்வளவு பரிந்து காரியஞ் செய்வோம் என்பது உமக்குத் தெரியாதோ? ஏன் நீர் வருந்துகின்றீர்?" என்றருளிச் செய்ய, ஆழ்வாரும் பரமஸந்தோஷமடைந்து அந்த நரஸிம்ஹாவதாரத்தையும் அந்த திவ்யதேசத்தையும் அநுபவித்து இனியராகிறார் இத்திருமொழியில்.

கீழ்த்திருமொழியில் ஒன்பதாம் பாட்டிலே "தேனுடைக் கமலத்திருவினுக்கரசே!" என்று பெரிய பிராட்டியாரை முன்னிட்டுச் சரணாகதி செய்தது போலவே இத்திருமொழியிலும் ஒன்பதாம் பாட்டில் "அல்லிமாதர்புல்க நின்ற ஆயிரந்தோளன்" என்று லக்ஷ்மீஸம்பந்தத்தை முன்னிட்டே அநுபவிக்கிறார்.

இத்திருமொழியில் எட்டாம்பாட்டுவரையில் ஒவ்வொருபாட்டிலும் முன்னடிகளில் நரஸிம்ஹாவதார வ்ருத்தாந்தமும் பின்னடிகளில் சிங்கவேள்குன்றத்தின் நிலைமையும் வருணிக்கப்படுகின்றன. இத்திருப்பதியின் திருநாமம் அஹோபிலம் என வழங்கப்படும். இது வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. 'சிங்கவேள்குன்றம்' என்றும் 'சிங்கவேழ்குன்றம்' என்றும் இதனை வழங்குவதுண்டு. சிங்கம்—நரஸிம்ஹ ஸ்வரூபியாய், வேள்—யாவராலும் விரும்பப்படுகின்ற கட்டழகுடையவரான பெருமான் எழுந்தருளிய, குன்றம்—திருமலை எனவும்;

நரஸிம்ஹமூர்த்தி யெழுந்தருளியிருக்கின்ற ஏழு குன்றங்களையுடைய தலம் எனவும் பொருள்படுமாறு காண்க. இத்தலம், சிங்கம் புலி முதலிய பயங்கரமான விலங்குகள் ஸஞ்சரிக்கப்பெற்ற கல்லும் புதரும் முள்ளும் முரடுமான கொடிய அரணியமாக இப்போது இருப்பது போலவே ஆழ்வார்காலத்திலும் இருந்த தென்பது இத்திருமொழியில் வர்ணனைகளால் நன்கு விளங்கும்.

இப்படிப்பட்ட பயங்கரமான துஷ்ட மிருகங்களும் கொடிய வேடர் முதலானவர்களும் அத்தலத்தின்கண் இருப்பதும்—மங்களாசாஸநபரர்களான நம் ஆழ்வார்களுக்கு ஒருவகையான ஆநந்தத்திற்கு ஹேதுவாகின்றது போலும்; எல்லாரும் எளிதாக வந்து அணுகக்கூடிய தேசமாயிருந்தால் ஆஸுரப்ரக்ருதிகளும் பலர் வந்து எம்பெருமானுக்கு ஏதாவது தீங்கு இழைக்கக்கூடுமேயென்கிற அச்சத்திற்கு அவகாசமில்லாமல் “தெய்வமல்லால் செல்ல வொண்ணா” என்னும்படி கஹநமாயிருப்பது மங்களாசாஸநருசியுடையார்க்கு மகிழ்ச்சியேயிறே.

(கலிநிலைத்துறை.)

அங்கண் ஞாலமஞ்ச வங்கோ ராளரியாய் * அவுணன்
பொங்கவாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம் *
பைங்கணானைக் கொம்புகொண்டு பத்திமையால் * அடிக்கீழ்ச்
செங்கணாளி யிட்டறைஞ்சும் சிங்கவேள்குன்றமே. (க)

- அங்கு — (‘நீ சொல்லுகிற விஷ்ணு இங்கில்லை’ என்று இரணியன் சபதஞ் செய்த) அவ்விடத்திலே
- அம் கண் ஞாலம் அஞ்ச ஓர் ஆள் அரி ஆய் — அழகியதாய் விசாலமான பூமியிலுள்ளாரெல்லாரும் பயப்படும்படியான ஒப்பற்றநரசிங்கமூர்த்தியாய் (எம்பெருமான் தோன்றினதைக்கண்டு)
- அவுணன் பொங்க — இரணியன் கிளர்ந்த வளவிலே,
- ஆகம் — அவனது உடலை
- வள் உகிரால் — கூர்மையான நகங்களாலே
- போழ்ந்த — இருபிளவாகப் பிளந்த
- புனிதன் இடம் — பரம பரிசுத்தனான எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமாவது ;—
- செம் கண் ஆளி — (சீற்றத்தால்) சிவந்த கண்களையுடைய சிங்கங்களானவை
- பை கண் ஆனை கொம்பு கொண்டு — பசுமையான கண்களையுடைய யானைகளின் தந்தங்களைக் கொணர்ந்து
- பத்திமையால் — பக்தியினாலே
- அடி கீழ் — (பகவானுடைய) திருவடிகளிலே
- இட்டு — ஸமர்ப்பித்து
- இறைஞ்சும் — ஆச்ரயிக்கப்பெற்ற
- சிங்கவேள் குன்றம் — சிங்கவேள்குன்றமாம்.

* * *—[அங்கண்ஞாலமஞ்ச.] கீழ் இரண்டாந் திருமொழியின் நான்காம் பாட்டின் உரையில் நரஸிம்ஹாவதார ப்ரமேயங்களை மிக்க விரிவாக வரைந்தோமாதலால் அங்கே கண்டு கொள்வது. பக்தசிரோமணியான ப்ரஹ்லாதனுக்கு நேர்ந்த துன்பங்களை ஸஹிக்கமுடியாமையினாலே எம்பெருமான் அளவற்ற சீற்றங்கொண்டு பயங்கரமான வொரு திருவுருவத்தை ஏறிட்டுக்கொண்டான் ;

அந்தச் சீற்றம் ப்ரஹ்லாத விரோதியான இரணியனளவில் மாத்திரமே உண்டானாலும், அளவு மீறியிருந்ததனால் 'உலகங்கட்கெல்லாம் இப்போதே உப ஸம்ஹாரம் விளைந்திடுமோ!' என்று அனைவரும் அஞ்சி நடுங்கும்படி யிருந்ததுபற்றி அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய் என்றார். இவ்விடத்திலே வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க:—"நரஸிம்ஹமாயிற்றுத்தான் ஜகத்ரக்ஷணத்துக்காகவிறே; அங்ஙனேயிருக்கச் செய்தேயும் விளைவதறியாமையாலே ஜகத்தாக நடுங்கிற்றாயிற்று. இது எவ்வளவாய்த் தலைக்கட்டுகிறதோ! என்றிருந்ததாயிற்று."

இனி, அங்கண்ஞால மஞ்ச என்பதற்கு—இரணியனுடைய ஒப்பற்ற தோள் வலியைக் கண்டு உலகமெல்லாம் அஞ்சிக்கிடந்த காலத்திலே என்று பொருளுரைப்பாருமுளர்.

அங்கு என்றது—1. "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்து, இங்கில்லையாலென்று இரணியன் தூண்புடைப்ப, அங்கு அப்பொழுதே அவன் வீயத் தோன்றிய என் சிங்கப்பிரான்" எனறபடியே இரணியன் எந்த இடத்தில் எம்பெருமானில்லை யென்று தட்டினானோ அந்த இடத்திலேயே என்றபடி. 2. "அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே வளர்ந்திட்டு வாளுகிர்ச்சிங்க வுருவாய்" என்றார் பெரியாழ்வாரும்.

அவுணன் பொங்க=அசுரர்கட்கு அவுணர் என்று பெயர். இங்கு ஹிரண்யாஸுரனைச் சொல்லுகிறது. இவன் அன்று வரையில் தனக்கு விரோதியாகத் தன் முன்னே வந்து தோற்றின ஒருவனையும் கண்டறியாமல் அன்றுதான் புதிதாக நரசிங்கமூர்த்தியாகிய எதிரியைக்கண்டபடியால் கண்டகாட்சியிலே கொதிப்படைந்தனனும். அப்படி அவன் கொதிப்படைந்தவளவிலே அவனது ஆகத்தை [மார்வை] தீக்ஷ்ணமான திருநகங்களாலே கிழித்தெறிந்தனன் எம்பெருமான். பொங்க என்பதை ஆகத்துக்கு அடைமொழியாக்கி, அவுணனுடைய அகன்ற மார்பை என்றுரைப்பர் சிலர்.

போழ்ந்த புனிதன்=புனிதனென்றால் பரிசுத்தன் என்றபடி. இரணியனது மார்பைப் பிளந்ததனால் என்ன பரிசுத்தி உண்டாயிற்று என்று கேட்கக்கூடும்; ஜகத்தைஸ்ருஷ்டித்தல் முதலிய தொழில்களில் பிரமன் முதலானவர்களை ஏவிக் காரியம் நடத்திவிடுவது போல் ப்ரஹ்லாதனை ரக்ஷிப்பதிலும் ஒரு தேவதையை ஏவிவிடாமல் தானே நேராக வந்து தோன்றிக் கைதொட்டுக் காரியஞ்செய்தமையே இங்குப் பரிசுத்தியெனக்கொள்க. இப்படி பரிசுத்தனான எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் எதுவென்றால், சிங்கவேள்குன்றமென்னும் திருப்பதியாம். அஃது எப்படிப்பட்ட தென்னில்; சிங்கம் யானை முதலிய பிரபல ஜந்துக்கள் திரியுமிடம் அது என்பதைக் காட்டுகிறார் பின்னடிகளில். பகவானுடைய ஸந்நிதாநமஹிமையினால் அவ்விடத்து மிருகங்களும் பகவத்பக்தி மிக்கிருக்கின்றன வென்கிறார். சிங்கங்கள் யானைகளைக் கொன்று அவற்றின் தந்தங்களைப் பிடுங்கிக் கொண்டு வந்து பெருமாள் திருவடிகளிலே ஸமர்ப்பித்து

1. திருவாய்மொழி 2—8—9. 2. பெரியாழ்வார் திருமொழி 1-6-9.

வணங்குகின்றனவாம். 1. " 𑌯𑌦𑌨𑍍𑌨𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌦𑌨𑍍𑌨𑌾𑌸𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃—யதந்நஃ புருஷோபவதி ததந்நாஸ் தஸ்ய தேவதாஃ" [எந்தெந்த உயிர்கட்கு எது எது ஆஹாரமோ, அந்தந்த உயிர்கள் அந்த ஆஹாரத்தைக் கொண்டு தம் தேவதைகளை ஆராதிக்கும்] என்பது சாஸ்த்ரமாதலால் யானைகளின் அவயவங்களை ஆஹாரமாகவுடைய சிங்கங்களும் யானைத்தந்தங்களைக் கொண்டு பகவதாராதநம் நடத்துகின்றனவென்க.

ஆளி என்று சிங்கத்துக்கும் யாளிக்கும் பெயர்; இங்கே சிங்கத்தைச் சொல்லுகிறது. செங்கண்=(இங்கே வியாக்கியான ஸ்ரீஸூக்தி:—) "இவற்றுக்கு ஆனைகளின் மேலே சீற்றம் மாறாதேயிருக்கச் செய்தேயும் பகவத்பக்தி ஒரு படிப்பட்டுச் செல்லுமாயிற்று; சீற்றம் விக்ருதியாய் பகவத்பக்தி ப்ரக்ருதியாயிருக்குமாயிற்று." ... ... ... ... ... (க)

அலைத்த பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய்* அவுணன்
கொலைக்கையாளன் நெஞ்சிடந்த கூருகி ராளனிடம் *
மலைத்த செல்சாத் தெறிந்தபூசல் வன்துடிவாய் கடுப்ப *
சிலைக்கைவேடர் தெழிப்பறாத சிங்கவேள் குன்றமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அலைத்த பேழ் வாய் | (சீற்றத்தாலே) நாக்கு அலையாநின்றுள்ள பெரிய வாயையும் | மலைத்த | (வேடர்களாலே) ஆக்கிரமிக்கப்பட்ட |
| வாள் எயிறு | ஒளி பொருந்திய பற்களையுமுடையதாய் | செல் சாத்து | வழிப்போக்கு ஜனங்களின் ஸமூஹத்தாலே |
| ஓர் | ஒப்பற்றதாய் | எறிந்த | (பிரதியாகச்) செய்யப்பட்ட |
| கோள் | மிடுக்கையுடையதான | பூசல் | சண்டையிலே |
| அரி ஆய் | நரஸிம்ஹமாய்க்கொண்டு | வல் துடி வாய் கடுப்ப | கடூரமான தொனியையுடைத்தான பறையானது கோஷம் செய்ய, |
| கொலை கையாளன் அவுணன் நெஞ்சு இடந்த | ஜீவ ஹிம்ஸையில் கைகாரனான இரணியனுடைய மார்வைக் கிழித்தெறிந்த | சிலை கை வேடர் | வில்லைக் கையிலேயுடைய வேடருடைய |
| கூர் உகிராளன் இடம் | கூர்மையான நகங்களையுடைய எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமாவது:— | தெழிப்பு | ஆரவாரமானது |
| | | அறாத | எப்போதும் மாறாத |
| | | | சிங்கவேள்குன்றம்—. |

* * *—[அலைத்த பேழ்வாய்.] சீற்றத்தாலே கடைவாயுடனே நாக்கை எற்றிக்கொள்ளுகிற பெரிய வாயையுடைய நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி, பரஹிம்ஸையே போது போக்கான இரணியனுடைய மார்பைப்பிளந்த பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் சிங்கவேழ்குன்றம்.

1. ஸ்ரீராமாயணம் அயோத்யா காண்டம் 103–30.

அவ்விடத்தின் நிலைமையைப் பேசுகிறார் பின்னடிகளில்; தீர்த்தயாத்திரையாகப் பலர் அங்குச் செல்லுகின்றனராம்; அவர்களை அவ்விடத்து வேடர்கள் வந்து தகைந்து சண்டை செய்வர்கள்; பரஸ்பரம் பெருஞ்சண்டை நடக்கும்; அந்தச் சண்டையிலே வேடர்களின் பறையோசையும் வில்லோசையும் இடைவிடாது இருந்துகொண்டேயிருக்கும். இதுவே அத்தலத்தின் நிலைமை—என்கிறார். உள்ளதை உள்ளபடி சொல்லவேண்டுமிறே.

மலைத்த செல்சாத்து=மலைத்தலாவது ஆக்கிரமித்தல்; வேடர்களாலே ஆக்கிரமிக்கப்பட்ட என்றாவது, வேடர்களை எதிரிட்டு ஆக்கிரமித்த என்றாவது பொருள் கொள்ளலாம். வேடர்கள் வந்து பொருகிறபோது தாங்கள் வெறு மனிராார்களே; தாங்களும் ப்ரதியுத்தம் செய்வர்களே, அதைச் சொல்லுகிறதென்னலாம். [செல் சாத்து.] வடமொழியில் ஸார்த்தம் என்ற பதம் ஸமூஹமென்னும் பொருளது; அப்பதமே இங்கே சாத்து என விகாரப்பட்டிருக்கின்றது. செல்கின்ற சாத்து எனவே யாத்திரை செய்பவர்களின் கூட்டம் என்று பொருள் கிடைத்தது. பூசல் என்றபதத்திற்கு யுத்தம் என்றும், பெரிய கோஷம் போடுதல் என்றும் பொருளுண்டு. இரண்டு பொருளும் இங்குக் கொள்ளலாம். வேடர்களாலே ஆக்கிரமிக்கப்பட்ட வழிப்போக்கர்கள் போடும் கூசலானது பெரிய பறையடித்தாற் போல ஒலிக்கின்றது என்றும், வேடர்கள் வழிப்போக்கர்களை மறித்துச் செய்கிற சண்டையிலே வேடர்களுடைய பறைகள் கர்ணகடூரமாக ஒலிக்கின்றன என்றும் கருத்தாகலாம். ... ... (௨)

ஏய்ந்த பேழ்வாய் வாளேயிற்றோர் கோளரியாய் * அவுணன்
வாய்ந்தவாகம் வள்ளுகிரால் வகிர்ந்த வம்மானதிடம் *
ஓய்ந்தமாவு முடைந்தகுன்று மன்றியும் நின்றழலால் *
தேய்ந்தவேயு மல்லதில்லாச் சிங்கவேள்குன்றமே. (௩)

ஏய்ந்த பேழ் வாய் — (வடிவுக்குத்) ப்ருதியாகப் பெருத்த வாயையும்
வாள் எயிறு — வாள் போன்ற பற்களையுமுடையதாய்
ஓர் — ஒப்பற்றதாய்
கோள் — மிடுக்கையுடையதான
அரி ஆய் — நரசிங்கமாகி
அவுணன் — இரணியாசுரனுடைய
வாய்ந்த ஆகம் — வளர்ந்த உடலை
வள் உகிரால் — கூர்மையான நகங்களாலே
வகிர்ந்த — கிழித்தெறிந்த
அம்மானது இடம் — ஸ்வாமி எழுந்தருளியிருக்கிற இடமாவது:—

ஓய்ந்த மாவும் — (கடினமான நிலங்களில் அங்குமிங்கும் திரிந்து அலைந்ததனால்) களைத்துப்போன மிருகங்களும்
உடைந்த குன்றும் — உடைந்துபோன சிறு மலைகளும்
அன்றியும் — இன்னமும்
நின்று அழலால் தேய்ந்த வேயும் அல்லது — இருந்தபடியே நெருப்பாலே குறைக்கொள்ளியாய்க்கிடக்கிற மூங்கிலும் ஆகிய இவைகள் தவிர
இல்லா — வேறொன்றுமில்லாத
சிங்கவேள்குன்றம்—

* * *—[ஏய்ந்த பேழ்வாய்.] வடிவின் பெருமைக்குத் தகுதியாகப் பெரிய வாயையும், ஒளி பொருந்திய (அல்லது, வாள் போன்ற) கோரப்பற்களையு முடைய நரசிங்கமாகத் தோன்றி இரணியனுடைய மாம்ஸஞ் செறிந்த மார்வைப் பிளந்த பெருமான் உறையுமிடம் சிங்கவேள்குன்றம்.

1. "நறிய மலர்மேல் சுரும்பார்க்க எழிலார் மஞ்ஞை நடமாட, பொறி கொள் சிறைவண் டிசைபாடும்" என்றும், 2. "வண்டினமுரலுஞ்சோலை மயிலின மாலுஞ்சோலை, கொண்டல்மீ தணவுஞ்சோலை குயிலினங் கூவுஞ்சோலை" என்றும் வருணிக்கத் தக்க நிலைமையோ அவ்விடத்தது என்றால்; இல்லை, அந்த ஸந்நிவேசம் வேறுவகையானது என்கிறார். ஆனை குதிரை சிங்கம் புலி முதலிய மிருகங்கள் இங்குமங்கும் ஓடியலைந்து ஓய்ந்து நிற்கக் காணலாம்; உடைந்து கிடக்கும் கற்பாறைகளைக் காணலாம்; இன்னமும் சில காணவேண்டுமானால், மூங்கில்கள் நெருப்புப்பற்றி யெரிந்து குறைக் கொள்ளியாயிருக்குமாற்றை விசேஷமாகக் காணலாம்; இவை யொழிய வேறொன்றும் காண்பதற்கில்லையாம் அங்கு. இவையெல்லாம் இவ்வாழ்வார்க்கு வண்டினமுரலுஞ் சோலை போலே தோற்றுகின்றன வென்பர் பெரியவாச்சான்பிள்ளை. 3. "அது விது வுது என்ன லாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும்" என்றபடி எம்பெருமானுடைய சரித்திரம் எதுவாயிருந்தாலும் எல்லாம் ஆழ்வார்களுடைய நெஞ்சைக் கவர்வது போல், அப்பெருமான் உகந்தருளின நிலங்களில் உள்ளவைகளும் எதுவாயிருந்தாலும் 'அவ்விடத்தவை' என்கிற காரணத்தினால் எல்லாம் இவர்க்கு உத்தேச்யம் என்பது அறியத்தக்கது. "பிறர்க்குக் குற்றமாய்த் தோற்றுமவையும் உபாதேயமாய்த் தோற்றுகையிறே ஒரு விஷயத்தை உகக்கையாகிறது" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியுங் காண்க.

ஓய்ந்தமாவும் என்பதற்கு—நிலத்தின் வெப்பத்தினால் பட்டுப்போன மா மரங்களும் என்றும் பொருள் கொள்ளலாம். ... ... (௩)

எவ்வம்வெவ்வேல் பொன்பெயரோ னேதலனின்னுயிரை
வவ்வி * ஆகம்வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம் *
கவ்வுநாயும் கழுகுமுச்சிப்போதோடு கால்சுழன்று *
தெய்வமல்லால் செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே. (௪)

| | | | |
|---|---|---|---|
| எவ்வம் வெம் வேல் | துன்பத்தை விளைப்பதாய் தீக்ஷ்ணமான வேலாயுதத்தை யுடையனாய் | ஆகம் | (அவனுடைய) சரீரத்தை |
| ஏதலன் | பாகவத விரோதியான | வள் உகிரால் | கூர்மையான நகங்களாலே |
| பொன் பெயரோன் | இரணியனுடைய | வகிர்ந்த அம்மானது இடம் | கிழித்தெறிந்த பெருமான் எழுந்தருளியிருக்குமிடமாவது:— |
| இன் உயிரை | இனிமையான பிராணனை | கவ்வும் நாயும் | (கண்டவர்களை) யெல்லாம் கவர்கின்ற நாய்களும் |
| வவ்வி | அபஹரித்து | | |

1. பெரிய திருமொழி 5-1-1. 2. திருமாலை. 14.
3. திருவாய்மொழி 5-10-2.

| | | | |
|---|---|---|---|
| கழுகும் | கழுகுகளும் (நிறைந்திருப் பதனாலும்) | தெய்வம் அல்லால் செல்லவொண்ணா | தேவதைகள் தவிர மற்றையோர் சென்று கிட்ட முடியாததான |
| உச்சிப் போதொடு கால் சுழன்று | கொழுத்த வெய்யிலும் சுழல் காற்றும் எப்போது மிருப்பதனாலும் | | சிங்கவேள்குன்றம்—. |

* * *—[எவ்வம் வெவ்வேல்.] கையும் வேலுமாயிருக்கிற விருப்பைக் கண்ட காட்சியிலே எல்லாரையும் துக்கப்படுத்தவல்லவனான இரணியனுடைய உயிரைக் கவர்ந்து அவனது மார்வைப் பிளந்தருளின பெருமான் உறையுமிடமாவது சிங்கவேழ்குன்றம்.

வேற்றுமனிசரைக் கண்டபோதே வந்து தொடைகளிலே கவ்விக் கடிக்கிற நாய்களும், அப்படி கடிக்கப்பட்டு மாண்டொழிந்த பிணங்களைக் கவ்வுகின்ற கழுகுகளும் ஆங்கு மிகுதியாகக் காணப்படுமாம். செடி மரமொன்று மில்லாமையினாலே நிழலென்பது காணவே முடியாது; உச்சிவேளையில் எப்படிப்பட்ட வெய்யில் காயுமோ, அதுவே எப்போதும் காய்கின்றது; சுழல்காற்றுகள் சுழன்றபடியே யிராநின்றன. இப்படி யிருக்கையினாலே ஸாமாந்யரான மனிசர் அங்குச் சென்று கிட்டுதல் அரிது; மிக்க சக்தி வாய்ந்த தேவதைகளே அங்குச் செல்லுதற்கு உரியர்; இங்ஙனே கஹநமான தலமாயிற்று இது.

எவ்வும் என்றும் எவ்வம் என்றும் பாடபேதம். போன் பெயரோன்= ஹிரண்யம் என்ற வடசொல் பொன் என்னும் பொருளுடையதாதலால் ஹிரண்யாஸுரனைப் பொன்பெயரோனென்பது. ஏதலன் என்று சத்ருவுக்குப் பெயர்; ஸர்வபூதஸுஹ்ருத்தான எம்பெருமானுக்கு இவன் நேரே சத்ருவல்லனாகிலும் பாகவதசிரோமணியான ப்ரஹ்லாதாழ்வானுக்கு சத்ருவான முறைமையாலே பகவானுக்கும் சத்ருவாயினன். ஆச்ரிதர்களின் விரோதிகளைத் தன் விரோதிகளாக நினைத்துப் பேசுமவனிறே எம்பெருமான். "ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்து இன்னுயிரை வவ்வினான்" என்று—மார்வைப் பிளந்தது முன்னமும் உயிரைக் கவர்ந்தது அதன்பின்புமாகச் சொல்லவேண்டியிருக்க இங்கு மாறுடிச் சொன்னது—இரணியன் நரசிங்க மூர்த்தியைக் கண்ட க்ஷணத்திலேயே செத்தபிணமாக ஆய்விட்டானென்ற கருத்தைக் காட்டுதற்கென்க.

"கவ்வுநாயுங் கழுகும் உச்சிப்போதொடு கால் சுழன்று" என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறலாம். உச்சிப்போது என்று ஸூர்யனையே சொல்லுகிறதாகக் கொண்டு, நாய்களும் கழுகுகளுங்கூட அவ்விடத்தில் நடக்கும்போது தரையின் வெப்பம் பொறுக்கமுடியாமல் கால்தடுமாறி திண்டாடுகின்றன; அப்படியே ஸூர்யனும் அவ்விடத்திலே வந்தால் அவனுக்கும் இதுவே கதி; தன்னுடைய தாபத்தைத் தானே பொறுக்கமாட்டாமல் அவனும் கால்தடுமாறிப் பரிதபிப்பன் என்றவாறுமாம்.

இத்திருப்பதியிற் சென்று ஸேவிக்க விருப்பமுடையரான இவ்வாழ்வார் "தெய்வமல்லால் செல்ல வொண்ணா" என்று அருமை தோன்ற அருளிச்

செய்யலாமோ? எனில்; நரஸிம்ஹமூர்த்தியின் அழகைக்கண்டு அஸூயைப் படுவதற்கும் அவனுக்கு ஏதேனும் அவத்யத்தை விளைப்பதற்கும் உறுப்பாக ஆஸுரப்ரக்ருதிகள் அங்குச் செல்லமுடியாது; எம்பெருமானுடைய ஸம்ருத்தியைக்கண்டு உகந்து பல்லாண்டு பாடவல்ல ஆழ்வார் போல்வார்க்குத்தான் அவ்விடம் அணுகக் கூடியது என்ற கருத்துத் தோன்ற அருளிச் செய்கிறாரென்க. ... ... ... ... ... ... ... (ச)

மென்ற பேழ்வாய் வாளேயிற்றோர் கோளரியாய் * அவுணன்
பொன்றவாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம் *
நின்றசெந்தீ மோண்டுசூறை நீள்விசும்பூ டிரிய *
சென்றுகாண்டற் கரியகோயில் சிங்கவேள்குன்றமே. (ரு)

| | |
|---|---|
| மென்ற பேழ் வாய் | (சீற்றத்தாலே) மடித்த பெரிய வாயையும் |
| வாள் எயிறு | வாள்போன்ற பற்களையுமுடையதாய் |
| ஓர் | ஒப்பற்றதாய் |
| கோள் | மிடுக்கையுடையதான |
| அரி ஆய் | நரசிங்கமாகி |
| பொன்ற அவுணன் | (தன்னைக்கண்ட மாத்திரத்திலே) செத்துப்போன இரணியனுடைய |
| ஆகம் | உடலை |
| வள் உகிரால் | கூர்மையான நகங்களாலே |
| போழ்ந்த | பிளந்திட்ட |
| புனிதன் இடம் | பரிசுத்தனான பகவான் எழுந்தருளியிருக்குமிடமாவது:— |
| சூறை | சுழல்காற்றானது |
| நின்ற செம் தீ மொண்டு | குறைவில்லாமலிருக்கிற சிவந்த நெருப்பை வாரிக்கொண்டு |
| நீள் விசும்பூடு இரிய | விசாலமான ஆகாசமடங்கலும் ஓடிப்பரவுகிறபடியாலே |
| சென்று காண்டற்கு அரிய கோயில் | கிட்டிச் சென்று ஸேவிக்க முடியாத கோயிலான |
| | சிங்கவேள்குன்றம்—. |

* * *—[மென்ற பேழ்வாய்.] சீற்றத்தாலே பல்லோடு நாக்கைச் செலுத்தி மென்றுகொண்டேயிருக்கிற பெரிய வாயையும் ஒளிவிடுகிற எயிற்றையும் மிடுக்கையுமுடைய நரசிங்கமாய்த் தோன்றி இரணியன் உயிர்மாளும்படியாக அவனது மார்வைப் பிளந்த பெருமானெழுந்தருளியிருக்குமிடம் சிங்கவேழ்குன்றம். அஃது எப்படிப்பட்டது? மாறுமல் நின்று எரிகிற அக்நியைச் சுழல்காற்றானது முகந்துகொண்டு ஆகாயமெங்கும் பரவி வீசி யெறிகையாலே சென்று காண்பதற்கு அருமைப்படும் கோயில்.

"அவுணன்பொன்றவாகம்" என்ற விடத்திற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறலாம். நரசிங்கத்தைக் கண்டவுடனே இரணியன் பொன்ற—முடிந்துபோக, முடிந்தபிறகு அந்தப் பிணத்தைக் கிழித்துப்போட்டான் என்னலாம் இது அதிசயோக்தி. அன்றி, அவுணன் பொன்றும்படியாக [முடியும்படியாக] அவனது உடலைக் கிழித்தானென்னவுமாம்.

சூறை—சூறுவளிக்காற்று எனப்படும். அக்காற்று செந்தீயை மொண்டு கொண்டு ஆகாயத்திலே ஓடுகின்றதாம். "நீள்விசும்பூடு எரிய" என்றும் பாடமருளிச்செய்வர், ஆகாயத்திலே போய் ஜ்வலிக்க என்றபடி.

சென்று காண்டற்கரிய கோயில் என்றவிடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க :—"இப்படி யிருக்கையாலே ஒருவர்க்கும் சென்று காண்கைக்கு அரிதா யிருக்குமாயிற்று. பரமபதம்போலே இந்நிலத்துக்கும் நாம் பயப்படவேண்டா என்று ஹ்ருஷ்டராகிறார்" என்று. ... ... ... (ரு)

எரிந்தபைங்க ணிலங்குபேழ்வா யெயிற்றொடிதெவ்வுருவென்று *
இரிந்து வானோர் கலங்கியோட விருந்த வம்மானதிடம் *
நெரிந்தவேயின் முழையுள்நின்று நீணெறிவாயுழுவை *
திரிந்தவானைச் சுவடுபார்க்கும் சிங்கவேள்குன்றமே. (சா)

| | | | |
|---|---|---|---|
| எரிந்த | (சீற்றத்தாலே) ஜ்வலிக்கின்ற | இருந்த | எழுந்தருளியிருந்த |
| பை கண் | பசுமைதங்கிய கண்களோடும் | அம்மானது இடம் | ஸர்வேச்வரனுடைய இடமாவது :— |
| இலங்கு பேழ் வாய் எயிற்றொடு | விளங்காநின்ற பெரிய வாயில் பற்களோடும் கூடியிருக்கிற | உழுவை | புலிகளானவை |
| இது | இந்த நரசிங்கத் திருக்கோலமானது | நெரிந்த வேயின் முழையுள் நின்று | நெருக்கமான மூங்கிற் புதர்களினின்றும் |
| எவ்வுரு என்று | என்ன பயங்கரமான ரூபம்! என்று அஞ்சி | நீள் நெறி வாய் | பெரியவழியிலே (வந்து) |
| வானோர் | தேவர்கள் | திரிந்த ஆனை சுவடு பார்க்கும் | காட்டில் திரிகின்ற யானைகள் போன அடையாளத்தை ஆராய்ந்து பார்க்குமிடமான |
| இரிந்து கலங்கி ஓட | அங்குமிங்கும் சிதறிக்கால் தடுமாறி ஓடும்படியாக | | சிங்கவேள்குன்றம்—. |

* * *—[எரிந்தபைங்கண்.] சீற்றத்தாலே அக்நிஜ்வாலைபோலே ஜ்வலிக்கிற சிவந்த கண்ணையும் ஒளிவிடாநின்ற பெரிய வாயையும் கோரப்பற்களையும் கண்டு 'அப்பப்ப! இதென்ன உரு!' என்று பயப்பட்டு தேவர்கள் அங்குமிங்கும் கால்தடுமாறிச் சிதறி ஓடும்படியாக நரசிங்கவுருக்கொண்டு எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் சிங்கவேழ்குன்றம்.

அஃது எப்படிப்பட்ட இடமென்னில்; மூங்கில் புதர்களினின்றும் புலிகள் பெருவழியிலே வந்துசேர்ந்து 'இங்கு யானைகள் நடமாடின அடையாளமுண்டோ?' என்று பார்க்கின்றனவாம். யானைகளை யடித்துத் தின்பதற்காக அவை உலாவின இடங்களைத் தேடித்திரிகின்ற புலிகள் நிறைந்ததாம் அத்தலம். ... ... ... ... ... ... ... (சா)

முனைத்த சீற்றம் விண்சுடப்போய் மூவுலகும் பிறவும் *
அனைத்துமஞ்ச வாளரியா யிருந்த வம்மானதிடம் *
கனைத்த தீயும் கல்லுமல்லா வில்லுடை வேடருமாய் *
தினைத்தனையும் செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| முனைத்த சீற்றம் | மிக்க கோபமானது | கனைத்த தீயும் | ஒலி செய்கின்ற நெருப்பும் |
| போய் | வளர்ந்து சென்று | கல்லும் | (அந்த நெருப்பினால் வேகின்ற) கற்களும் |
| விண் சுட | ஆகாயத்தைக் கொளுத்தவும் | அல்லா வில் உடை வேடரும் ஆய் | உலகத்தில் கண்டறியாத விற்களையுடைய வேடர்களும் நிறைந்திருப்பதனாலே |
| மூ உலகும் பிறவும் | மூன்று லோகங்களும் மற்றுமுள்ளவைகளும் | | |
| அனைத்தும் | எல்லாம் | தினை தனையும் செல்ல ஒண்ணா | க்ஷணகாலமும் கிட்ட வொண்ணாததான |
| அஞ்ச | பயப்படவும் | | |
| ஆள்அரியாய் இருந்த அம்மானது இடம்:— | | சிங்கவேள்குன்றம்—. | |

* * *—[முனைத்தசீற்றம்.] நரசிங்கமூர்த்தி இரணியன்மீது கொண்ட கோபம் அளவற்றிருந்ததனால் அந்தக் கோபாக்நி மேலுலகமளவும் போய்ப் பரவி எங்கும் தஹிக்கப்புகவே ஸர்வலோக ஸம்ஹாரஸமயம் பிறந்துவிட்டதென்று மூவுலகத்திலுள்ளோரும் அஞ்சி நடுங்கும்படியா யிருந்ததாம். அப்படிப்பட்ட உக்ர நரஸிம்ஹன் எழுந்தருளியிருக்குமிடம் சிங்கவேள்குன்றம்.

அவ்விடம் எப்படிப்பட்டது ?; எரிகிறபோதுண்டான வெடுவெடென்கிற ஓசையையுடைத்தான நெருப்பும், அந்த நெருப்பிலே வைக்கோல் போர்போலே வேகின்ற கல்லுகளும், இவற்றிற்காட்டிலும் கொடியவர்களான கையும் வில்லுமாய்த் திரிகின்ற வேடர்களும் அங்கு நிறைந்திருப்பதனாலே ஒரு நொடிப்பொழுதும் சென்று கிட்டமுடியாத தலமாம் அது.—"உகவாதார்க்குக் கண்ணாலே காணலாம்படி சென்றுகிட்டிக் கண்ணெச்சில்பட வொண்ணாதபடி யிருந்த தேசமாயிற்று" என்ற பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி இங்கு நோக்கத் தக்கது.

தினைத்தனையும்=தினை என்று ஒரு சிறிய தானியத்திற்குப் பெயர்; அவ்வளவும் என்றது—ஸ்வல்பகாலமும் என்றபடி. 1. "எட்டனைப்போது" என்றவிடத்து எள் என்ற தானியத்தை யெடுத்துக்காட்டினதொக்கும் இது. (எ)

நாத்தழும்ப நான்முகனு மீசனுமாய் முறையால்
ஏத்த * அங்கோராளரியா யிருந்த வம்மானதிடம் *
காய்த்தவாகை நெற்றொலிப்பக் கல்லதர் வேய்ங்கழைபோய் *
தேய்த்ததீயால் விண்சிவக்கும் சிங்கவேள்குன்றமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| நான்முகனும் ஈசனும் ஆய் | பிரமனும் சிவனும் கூடிக்கொண்டு | ஓர் ஆள்அரிஆய் இருந்த அம்மானது இடம்—; | |
| நா தழும்ப | நாக்குத் தடிக்கும்படி | காய்த்த | காய்கள் நிறைந்த |
| முறையால் ஏத்த | கிரமப்படி ஸ்தோத்ரம் பண்ண | வாகை | வாகை மரங்களினுடைய |

1. திருநெடுந்தாண்டகம்—11.

| | | | |
|---|---|---|---|
| நெற்று | நெற்றுகளானவை | தேய்த்த | (மூங்கில்கள் ஒன்றோ டொன்று) உராய்கை யினுலுண்டான |
| ஒலிப்ப | சப்திக்க, | | |
| கல் அதர் | கல்வழிகளிலேயுண்டான | தீயால் | நெருப்பினுல் |
| வேய் கழை | குழல் மூங்கிற் செடிகள் | விண் சிவக்கும் | ஆகாசம் சிவந்திருக்கப் பெற்ற |
| போய் | ஆகாசத்தை யளாவிப்போய் | சிங்கவேள்குன்றம்— | |

*, * *—[நாத்தழும்ப நான்முகனும்.] நான்முகக் கடவுளாகிய பிரமனும் சிவனும் முறைவழுவாது துதிக்கும்படியாக விலக்ஷணமான நரசிங்கவுருக் கொண்டு எம்பெருமானெழுந்தருளியிருக்குமிடம் சிங்கவேள்குன்றம். அஃது எப்படிப்பட்டது?—காய்கள் காய்த்துத் தொங்கப் பெற்ற வாகைமரங்களின் நெற்றுக்களானவை காற்றடித்துக் கலகலென்றொலிக்கின்றனவாம் சில விடங்க ளில். மற்றுஞ் சில விடங்களிலோவென்னில்; ஆகாசத்தளவும் ஓங்கி வளர்கின்ற மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்ந்து நெருப்புப்பற்றி யெரிந்து விண்ணுல கத்தையும் சிவக்கடிக்கின்றனவாம்.

நாத்தழும்ப என்றதனுல் இடைவிடாது அநவரதமும் துதிக்கின்றமை தோன்றும். முறையால் ஏத்த என்பதற்கு மாறிமாறித் துதிக்க என்றும் பொருள் கொள்ளலாம். ஒருசந்தை நான்முகனும் மற்றொருசந்தை சிவனு மாக இப்படியே மாறிமாறி ஏத்துகின்றமையைச் சொன்னபடி.

நெற்று—உலர்ந்த பழம். அதர்—வழி. வேய்+கழை=வேய்ங்கழை. (அ)

நல்லைநெஞ்சே! நாந்தொழுதும் நம்முடை நம்பெருமான் *
அல்லிமாதர் புல்கநின்ற வாயிரந்தோளனிடம் *
நெல்லிமல்கிக் கல்லுடைப்பப் புல்லிலையார்த்து * அதர்வாய்ச்
சில்லிசில்லென் றொல்லறாத சிங்கவேள்குன்றமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | ஓ மனமே! | கல் உடைப்ப | பாறைகளை உடைக்கவும் |
| நல்லை | நீ மிகவும் நல்லவன்; | புல் இலை ஆர்த்து | பனையோலைகள் ஒலி செய்யவும் |
| நம்முடை நம்பெருமான் | நமக்கு ஸ்வாமியாய் | அதர் வாய் | வழிகளிலே |
| அல்லி மாதர் புல்க நின்ற | பெரிய பிராட்டியாரை அணைத்துக் கொண்டிருப்பவனும் | சில்லி | சுவர்க்கோழிகளினுடைய |
| ஆயிரம் தோளன் இடம் | ஆயிரந்திருத்தோள்களை யுடையனுன எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடமாய், | சில் என்று ஒல் அறாத | சில் என்கிற ஒலி இடைவிடாமல் ஒலிக்கவும் பெற்ற |
| நெல்லி | நெல்லி மரங்கள் | சிங்க வேள் குன்றம் | சிங்கவேள்குன்றத்தை |
| மல்கி | நிறைந்து (கற்களினுள்ளே வேரோட்டத்தினுல்) | நாம் தொழுதும் | நாம் ஸேவிப்போம். |

* * *—[நல்லைநெஞ்சே!.] கீழ்ப்பாட்டுகளில் "தெய்வமல்லால் செல்ல வொண்ணா" என்றும், "சென்று காண்டற்கு அரிய கோயில்" என்றும், "தினைத்தனையுஞ் செல்லவொண்ணா" என்றும் இத்திவ்ய தேசத்தின் அருமையைச் சொல்லிவந்தாரே; அந்த அருமை ஆஸுரப்ரக்ருதிகளான பகவத் விரோதிகளுக்கேயொழிய, உகந்திருக்கும் அடியவர்களுக்கு அன்றே. அதனை இப்பாட்டில் வெளியிடுகிறார். பெரிய பிராட்டியாரை முன்னிட்டுக்கொண்டு நாம் அஞ்சாமல் சிங்கவேள்குன்றத்திலே சென்று தொழுவோம் நெஞ்சமே! என்கிறார். அல்லிமாதரான பிராட்டியோடே அணைந்திருப்பதனாலே நரசிங்க மூர்த்தியின் கோபாக்நிக்கு நாம் அஞ்சவேண்டியதில்லையென்றும், அவன்தான் நம்முடை நம்பெருமானாகையாலே அந்நிலத்தின் கொடுமைக்கும் அஞ்ச வேண்டிய தில்லையென்றும் குறிப்பிட்டபடி. நம்பெருமான் என்றாலே போதுமாயிருக்க "நம்முடை நம்பெருமான்" என்றது அடியார் திறத்தில் அவன் மிகவும் விதேயனாயிருக்கும்படியைக் காட்டும்.

அல்லிமாதர்புல்க நின்ற ஆயிரந்தோளன் என்ற சொல் நயத்தால்—பிராட்டியை அணைக்கும்போது எம்பெருமானுக்கு ஸந்தோஷ மிகுதியினால் தழுவுதற்கு உறுப்பான தோள்கள் ஸஹஸ்ரமுகமாக வளர்கின்றமை விளங்கும். "இவளணைத்தால் இவளைக் கட்டிக்கொள்ள ஆயிரம்தோள் உண்டாமாயிற்று" என்பர் பெரியவாச்சான் பிள்ளையும். 1. "தாள்களை யெனக்கே தலைத்தலைச் சிறப்பத்தந்த பேருதவிக்கைம்மாறாத், தோள்களையாரத் தழுவியென்னுயிரை அறவிலை செய்தனன்" என்று ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினத்தாலுண்டான ஸந்தோஷத்தினால் 1. "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணை மலர்க் கண்களாயிரத்தாய், தாள்களாயிரத்தாய் பேர்களாயிரத்தாய்" என்னும்படியானால் பிராட்டியின் சேர்த்தியினால் உண்டாகக் கூடிய உடல் பூரிப்பு சொல்ல வேணுமோ ?.

[நெல்லி மல்கி இத்யாதி.] நெல்லி மரங்களானவை கல்லிடைகளிலே முளைத்து வளர்ந்து கல்லிடைகளிலே வேரோடுகையாலே அந்த வேர்கள் பருத்துப் பாறைகளைப் பேர்க்கின்றனவாம். பெரியவாச்சான்பிள்ளையும் "நெல்லி மரங்கள் வேரோடிக் கற்களையுடையப் பண்ணும்" என்றே அருளிச் செய்கிறார்; இங்கே சிலர் சொல்லும் பொருளாவது—நெல்லி மரங்களிலிருந்து இற்றுவிழுகின்ற நெல்லிக்காய்கள் பாறைகளின் மீது விழுந்து கற்களையுடைக்கின்றன என்பதாம். அப்போது, நெல்லி என்றது ஆகுபெயரால் நெல்லிக்காய்களைச் சொல்லவேண்டும்.

புல்லிலை யார்த்து=மூங்கிலிலைகளின் ஓசையைச் சொல்லிற்றாகவுமாம். பனையோலைகளின் ஓசையைச் சொல்லிற்றாகவுமாம். ஆர்த்தல்—ஒலித்தல்.

சில்லி சில்லென்றொல்லறாத=வடமொழியில் சுவர்க்கோழிக்கு 'ஜில்லிகா' என்று பெயர்; அச்சொல்லே இங்குச் சில்லி யென்றுகிடக்கிறது. "நல்லை நெஞ்சே" "நல்ல நெஞ்சே" என்பன பாட பேதங்கள். ... (௩)

---

1. திருவாய்மொழி 8—1—10.

சேங்கணுளி யிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றுடைய *
எங்களீச னெம்பிரானை யிருந்தமிழ் நூற்புலவன் *
மங்கையாளன் மன்னுதோல்சீர் வண்டறைதார்க் கலியன் *
சேங்கையாளன் சேஞ்சோல்மாலை வல்லவர் தீதிலரே. (ய)

| | |
|---|---|
| செம் கண் ஆளி | சிவந்த கண்களையுடைய சிங்கங்கள் |
| இட்டு | (தமக்குக் கிடைத்த யானைத் தந்தம் முதலியவற்றைத்) திருவடிகளிலே ஸமர்ப்பித்து |
| இறைஞ்சும் | வணங்குமிடமான |
| சிங்க வேழ் குன்று உடைய | சிங்கவேழ்குன்றத்தை இருப்பிடமாகவுடையனாய் |
| எங்கள் ஈசன் | ஸம்ஸாரிகளான நமக்கெல்லார்க்கும் ஸ்வாமியாய் |
| எம் பிரானை | நமக்கு உபகாரகனாயுமுள்ள ஸ்ரீநரஸிம்ஹமூர்த்தி விஷயமாக, |
| இரு தமிழ் நூல் புலவன் | பெரிய தமிழ் சாஸ்த்ரத்தில் வல்லவராய் |
| மங்கை ஆளன் | திருமங்கை நாட்டுக்குத் தலைவராய் |
| மன்னு தொல் சீர் | நித்யஸித்தமான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியையுடையவராய் |
| வண்டு அறை தார் | வண்டுகள் படிந்து ஒலி செய்கின்ற மாலையையணிந்தவராய் |
| செம் கை ஆளன் | மிக்க உதாரரான |
| கலியன் | ஆழ்வாரருளிச்செய்த |
| செம் சொல் மாலை | செவ்விய இச்சொல் மாலையை |
| வல்லவர் | ஓதவல்லவர்கள் |
| தீது இலர் | தீமையொன்றுமின்றி நன்மை பெற்றவராவர். |

* * *—[சேங்கணுளி.] வீரலக்ஷ்மி விளங்குங் கண்களையுடைய சிங்கங்களானவை யானைக்கோடு முதலியவற்றைக் கொண்டு ஸமர்ப்பித்து வணங்குமிடமான சிங்கவேழ்குன்றத்திலே யெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான் விஷயமாகத் திருமங்கைமன்னன் அருளிச்செய்த சொல்மாலையை ஓதவல்லவர்கள் தீங்கின்றி வாழ்வார்கள் என்று—இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

சேங்கணுளியிட்டிறைஞ்சும் என்றவிடத்து—" నవం శవమిదం . పుణ్యం వేదపారగమచ్యుత!। యజ్ఞశీలం మహాప్రాజ్ఞం బ్రాహ్మణం శవముత్తమమ్—நவம் சவமிதம் புண்யம் வேதபாரகமச்யுத—யஜ்ஞசீலம் மஹா ப்ராஜ்ஞம் ப்ராஹ்மணம் சவ முத்தமம்" என்ற கண்டாகர்ணனுடைய வசனம் நினைக்கத்தகும். அவன், தனக்கு உணவாகிய பிணங்களை எம்பெருமானுக்கு நிவேதநஞ் செய்து உண்டதுபோல, சிங்கங்களும் செய்கிறபடி. ... ... ... ... (கo)

அடிவரவு:—அங்கண் அலை ஏய்ந்த எவ்வம் மென்றெரி முனைத்த கா நல்லை செங்கண் கொங்கு.

ஏழாந்திருமோழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—எட்டாந்திருமொழி.

# கொங்கலர்ந்த மலர்க்குருந்தம்.

அவதாரிகை:—கீழ்த் திருமொழியில், "நின்ற செந்தீமொண்டு சூறை நீள் விசும்பூடிரிய" என்றும், "தேய்த்த தீயால் விண் சிவக்கும்" என்றும் "கனைத்த தீயும் கல்லுமல்லா வில்லுடை வேடருமாய்" என்றும் சிங்கவேள்குன்றத்தின் நிலை வெம்மையை அநுஸந்தித்துப் பேசின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! 'தெய்வமல்லால் செல்ல வொண்ணா' என்றும் 'சென்று காண்டற்கரிய கோயில்' என்றும் சொல்லிக்கொண்டு சிங்கவேள்குன்றத்திலே ஏன் துவளுகிறீர்? "தெழிகுரலருவித் திருவேங்கடம்" "சிந்துபூ மகிழுந் திருவேங்கடம்" "தெண்ணிறைச்சுனைநீர்த்திருவேங்கடம்" "மொய்த்த சோலை மொய்பூந்தடந்தாழ்வரே" என்று நெஞ்சு குளிரப் பேசும்படியான திருவேங்கடமாமலையிலே நாம் அனைவர்க்கும் எளிதாக ஸேவை ஸாதிக்கிறோம், அங்கே வந்து தொழுது ஆநந்தமடைவீர்' என்றருளிச் செய்ய அங்கே போய் அநுபவிக்கத் தொடங்குகிறார். இத்திருமொழியும் இதற்கு மேலுள்ள மூன்று திருமொழிகளும் ஆக நாற்பது பாசுரங்கள் திருவேங்கட மலை விஷயமானவை. தமிழ்ப்பாஷை நடையாடுகிறவிடத்திற்கு எல்லையாயிருக்குமிறே இத்திருமலை. ...

கொங்கலர்ந்த மலர்க்குருந்த மொசித்த கோவல னெம்பிரான் *<br>
சங்குதங்கு தடங்கடல் துயில்கொண்ட தாமரைக்கண்ணினன் *<br>
பொங்கு புள்ளினைவாய்பிளந்த புராணர்தம்மிடம் * பொங்குநீர்ச்<br>
செங்கயல் திளைக்குஞ்சுனைத் திருவேங்கட மடைநெஞ்சமே! (க)

| பதம் | பொருள் |
|---|---|
| கொங்கு அலர்ந்த மலர் குருந்தம் ஒசித்த | பரிமளம் வீசுகின்ற பூக்கள் நிறைந்த குருந்த மரத்தை முறித் தழித்த |
| கோவலன் | கோபால க்ருஷ்ணனாய் |
| எம்பிரான் | அஸ்மத்ஸ்வாமியாய் |
| சங்கு தங்கு தட கடல் துயில் கொண்ட | சங்குகள் தங்கியிருக்கிற பெரிய கடலிலே திருக்கண் வளர்கின்ற |
| தாமரை கண்ணினன் | புண்டரீகாக்ஷனாய், |
| பொங்கு புள்ளினை வாய் பிளந்த | செருக்குடன் கிளர்ந்து வந்த பகாஸுரன் வாயைக் கிழித்தெறிந்த |
| புராணர்தம் இடம் | புராண புருஷனான ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்குமிடமாயும் |
| பொங்கு நீர் | நீர்வளமுடையதாய் |
| செம் கயல் திளைக்கும் | சிவந்த மீன்கள் களித்து வாழப்பெற்ற |
| சுனை | சுனைகளையுடையதாயுமிருக்கிற |
| திருவேங்கடம் | திருமலையை |
| நெஞ்சமே அடை | நெஞ்சே! நீ அடைந்திடு. |

* * *—[கோங்கலர்ந்த மலர்.] கொங்கலர்ந்த மலர்க்குருந்த மொசித்த கோவலனாய் எம்பிரானாய் சங்குதங்கு தடங்கடல் துயில்கொண்ட தாமரைக் கண்ணினனாய் பொங்குபுள்ளினை வாய் பிளந்த புராணனான எம்பெருமானது இருப்பிடமாகிய பொங்கு நீர் செங்கயல் திளைக்குஞ்சுனைத் திருவேங்கடத்தை நெஞ்சமே! அடை என்கிறார்.

குருந்தமொசித்தவரலாறு:—கிருஷ்ணனைக் கொல்லும் பொருட்டுக் கம்ஸனால் ஏவப்பட்ட பல அசுரர்களில் ஒருவன் அக்கண்ணபிரான் மலர் கொய்தற் பொருட்டு விரும்பியேறும் பூத்த குருந்த மரமொன்றில் பிரவேசித்து, அப்பெருமான் வந்து தன்மீது ஏறும்போது தான் முறிந்து வீழ்ந்து அவனை வீழ்த்திக் கொல்லக் கருதியிருந்தபோது, மாயவனான கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற்பிடித்துத் தன் வலிமைகொண்டு முறித்து அழித்தனனென்பதாம். குருந்தமரமே குந்தமரமென்றும் சொல்லப்படும். விபவாவதாரத்தில் விரோதிகளை ஒழித்தது போலவே அர்ச்சாவதாரத்திலும் விரோதிகளை ஒழிக்க வல்லன் என்று காட்டுகிறார் இதனால். கோவலன்='கோபாலஃ' என்றவடசொல் கோவலனெனத்திரிந்தது. இனி. கோ—பசுக்களை மேய்ப்பதில், வலன்—வல்லன், ஸமர்த்தன் என்றும் உரைப்பர் சிலர்.

சங்குதங்கு தடங்கடல் துயில்கொண்ட=சங்கு என்று ஸாதாரணமான சங்குகளைச் சொல்லவுமாம், சங்கநிதி பத்மநிதி முதலிய நிதிகளைச் சொல்லவுமாம். சங்குகளையுடைய விசாலமான திருப்பாற்கடலிலே சயனித்திருக்கின்ற புண்டரீகாக்ஷன் " ఏష నారాయణః శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః। నాగపర్యఙ్కముత్సృజ్య హ్యాగతో మధురాం పురీమ్॥ ஏஷ நாராயணச் ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதநஃ— நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்" என்றபடி திருப்பாற்கடல் நாதனே கண்ணபிரானாக வந்து அவதரித்தான், அவனே திருவேங்கடமுடையானாகவும் வந்து ஸேவைஸாதிக்கிறான் என்று ஐக்கியம் காட்டுகிறபடி.

புள்ளினைவாய்பிளந்த வரலாறு:—ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்து வளர்கின்ற கண்ணபிரான்மீது கறுக்கொண்ட கம்ஸனால் கண்ணனை நலியுமாறு நியமிக்கப்பட்ட ஓரஸுரன் கொக்கின் உருவங்கொண்டு சென்று யமுனைக்கரையில் கண்ணபிரானை விழுங்கிவிட, அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போல எரிக்கவே, அவன் பொறுக்கமாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் குத்த நினைக்கையில், கண்ணன் அவன் வாயலகுகளைத் தனது இருகைகளினாலும்பற்றி கிழித்திட்டனன் என்பதாம்.

புராணர் என்றது பழையவர் என்றபடி. இப்படி விரோதிகளை யொழிப்பது இன்று நேற்று அல்ல; பழையகாலமே பிடித்து இப்படியே செய்துபோருகிறவர் என்பது கருத்து. அப்படிப்பட்ட பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் பரமபோக்யமான திருமலை; அவ்விடத்துச் சென்று சேர் நெஞ்சே! என்றாராயிற்று. ... ... ... ... ... (க)

பள்ளியாவது பாற்கடலரங்கமிரங்க வன்பேய்முலை *
பிள்ளையா யுயிருண்டவெந்தை பிரானவன் பெருகுமிடம் *
வெள்ளியான் கரியான் மணிநிறவண்ண னென்றெண்ணி * நாடோறும்
தெள்ளியார் வணங்குமலைத் திருவேங்கடமடை நெஞ்சமே! (உ)

| | |
|---|---|
| வன் பேய் | கல்நெஞ்சை யுடைய ளான பூதனை யென்பவள் |
| இரங்க | கதறும்படியாக |
| முலை | (அவளது) முலையை |
| பிள்ளை ஆய் | சிறு குழந்தையாயிருக்கச் செய்தே |
| உயிர் | உயிருடன் |
| உண்ட | உறிஞ்சி அமுதுசெய்த |
| எந்தை பிரான் | ஸ்ரீக்ருஷ்ணபகவான் |
| பள்ளி ஆவது | பள்ளிகொள்ளுமிட மாவது |
| பாற்கடல் அரங்கம் | திருப்பாற்கடலும் திருவரங்கமுமாம்; |
| அவன் | அப்பெருமான் |
| பெருகும் இடம் | வளருகிற இடமாயும், |
| தெள்ளியார் | தெளிந்த ஞானிகள், |
| வெள்ளியான் கரியான் மணி நிறம் வண்ணன் என்று எண்ணி | (கிருதயுகத்தில்) வெளுத்த நிறத்தனும் (கலியுகத்தில்) கறுத்த நிறத்தனும் (த்வாபர யுகத்தில்) சாமநிறத்த னுமிருப்பவன் என்று தியானித்துக்கொண்டு |
| நாள் தொறும் | ஒவ்வொரு நாளும் |
| வணங்கும் | வணங்கப்பெற்றதாயு முள்ள |
| திருவேங்கடம் மலை | திருமலையை |
| நெஞ்சமே அடை | மனமே! ஆச்ரயி. |

* * *—[பள்ளியாவதுபாற்கடல்.] கம்ஸனால் ஏவப்பட்டு முலை கொடுக்கிற வியாஜத்தாலே ஸ்ரீ க்ருஷ்ண சிசுவை முடித்திடவேணுமென்று முலையிலே விஷம் தடவிக்கொண்டு தாய்போல வந்த பூதனையென்னும் பேய்ச்சியானவள் கதறும்படியாக அவளுடைய முலையையும் உயிரையும் உறிஞ்சியுண்ட பெருமான்; பிரமன் முதலியோர்க்கு முகங்கொடுப்பதற்காகப் பள்ளி கொண்டருளுமிடம் திருப்பாற்கடல்; அவ்வளவுதூரம் சென்று கிட்டமாட்டாத ஸம்ஸாரிகளுக்கும் முகம்கொடுப்பதற்காகப் பள்ளிகொண்டருளுமிடம் திருவரங்கம் பெரியகோயில். [பூதனையை முடித்தது தொட்டில் பருவமாக இருந்த ஸமயத்திலாதலால் உட்காரவும் நிற்கவும் மாட்டாமல் சயனமேயான அந்த நிலைமையைத் திருப்பாற்கடலிலும் திருவரங்கத்திலும் ஸேவிக்கலா மென்கை.] அதற்குப் பிறகு, நிற்கக் கற்ற நிலைமை திருவேங்கடமலையிலே காணத்தக்கதா யிராநின்றது என்கிறார்—அவன் பெருகுமிடம் திருவேங்கடம்மலை என்று. பெருகுதலாவது-முன்னின்ற நிலைமையிற்காட்டிலும் அபிவிருத்தி பெறுதல்; சயன நிலைமையிற்காட்டிலும் பெருக்கமடைகிற நிலைமை—தரையில் காலூன்றி நிற்கும் நிலைமையாதலால் இங்கே பெருகுமிடம் என்றது நிற்குமிட மென்றபடி. "தொட்டிற்பிள்ளை பேயுயிருண்டபின்பு நிற்கக் கற்றது திருமலையிலேயென்று கருத்து" என்றார் அரும்பதவுரைகாரரும்.

அந்தத் திருமலை எப்படிப்பட்டதென்னில்; நாள்தோறும் தெள்ளியார் வந்து வணங்கும்படியானது. தெள்ளியார் என்றது வேறொரு பலன்களை விரும்

பாத ஸ்வரூபத் தெளிவுடைய பரமைகாந்திகளைச் சொன்னபடி. அவர்கள் எவ்விதமாக தியானித்துக்கொண்டு வணங்குகின்றனரென்றால், 1. பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம் போலுநீர்மை” இத்யாதியிற் சொல்லுகிறபடியே-கிருதயுகத்தில் வெளுத்த நிறத்தையுடையனாய், கலியுகத்தில் கறுத்த நிறத்தையுடையனாய் த்வாபரயுகத்தில் ச்யாமமான நிறத்தையுடையனாயிருப்பவன் என்று இவ்வடிவுகளை அநுஸந்தித்துக்கொண்டு வந்து வணங்குகின்றனராம். அப்படி அவர்கள் வந்து வணங்குதற்கிடமான திருமலையை நெஞ்சே! அடைந்திடு என்றாராயிற்று. ... ... ... (உ)

நின்ற மாமருதிற்றுவீழ நடந்த நின்மலன் நேமியான் *
என்றும் வானவர்கைதொழு மிணைத்தாமரை யடியெம்பிரான் *
கன்றிமாரி பொழிந்திடக் கடிதாநிரைக் கிடர்நீக்குவான் *
சென்று குன்றமெடுத்தவன் திருவேங்கடமடை நெஞ்சமே! (௩)

| | |
|---|---|
| நின்ற | பேராமல் நின்று கொண்டிருந்த |
| மா மருது | பெரிய மருதமரங்களிரண்டும் |
| இற்று வீழ | முறிந்து விழும்படியாக |
| நடந்த | நடைகற்ற |
| நின்மலன் | நிர்மலனும், |
| நேமியான் | திருவாழியை யுடையவனும், |
| என்றும் | எப்போதும் |
| வானவர் | நித்யஸூரிகள் |
| கை தொழும் | ஸேவிக்கப்பெற்ற |
| தாமரை அடி இணை எம்பிரான் | இரண்டு திருவடித் தாமரைகளையுடைய ஸ்வாமியும், |
| கன்றி | (இந்திரன்) கோபங்கொண்டு |
| மாரி | மழையை |
| பொழிந்திட | பெய்வித்தவளவிலே |
| கடிது | உடனே |
| ஆ நிரைக்கு | பசுக்கூட்டங்களுக்கு |
| இடர் நீக்குவான் | துன்பம் தொலைப்பதற்காக |
| சென்று | போய் |
| குன்றம் எடுத்தவன் | கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற |
| திரு வேங்கடம் | நெஞ்சமே! அடை—. |

* * *—[நின்றமாமருது.] சயனித்தருளும்படியையும் நின்றருளும்படியையும் கீழ்ப்பாட்டில் அநுஸந்தித்தார்; நடந்தருளும்படியை இப்பாட்டில் அநுஸந்திக்கிறார். கண்ணன் குழந்தையாயிருக்குங் காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவ

1. திருச்சந்தவிருத்தம் 44.

ரும் சாபந்தீர்ந்து சென்றனர். இந்த குபேரபுத்திரர்கள் முன்பு ஒருகாலத்தில் பல அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்துகொண்டிருக்கையில் நாரதமாமுனிவர் அங்கு எழுந்தருள, மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடை யெடுத்து உடுத்து நீங்க, இந்த மைந்தர் மாத்திரம் மதுபான மயக்கத்தினால் வஸ்த்ரமில்லாமலேயிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள் போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வணங்கி வேண்டிக் கொண்டதற்கு இரங்கி 'நெடுங்காலஞ் சென்ற பின்பு திருமால் உங்களருகே நெருங்குஞ் சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னைய வடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடை கூறிப் போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில் கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அஸுரர்களும் ஆவேசித்துக் கிடந்தனர் என்று கொள்ளல்வேண்டும்; "ஒருங்கொத்த இணை மருதம் உன்னிய வந்தவரை" என்றும், "பொய்ம்மாய மருதான வசுரரை" என்றும் பெரியாழ்வாரருளிச் செய்திருத்தலால்.

குன்றமெடுத்தவரலாறு வருமாறு:—கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்தவேஷங்களைக் கண்டு ஆயர்களனைவரும் 'இவனே நம் குலக்கொழுந்து; இவன் கட்டளைப்படியே நாம் நடக்கவேண்டும்' என்று நிச்சயித்திருந்தனர்; இங்ஙனமிருக்கையில் சரத்காலம் வந்தது; அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜை செய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாதிரவ்யங்களுமாகிய இவற்றைச் சேகரிப்பதைக் கண்டு கிருஷ்ணன் 'ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜை செய்வது தகுதி; இக்கோவர்த்தநகிரியே பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீருங் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை; ஆகையால் நீங்கள் இப்பூசனையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக் கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்தருள, அவ்விந்திரன் மிக்க கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல்மழையை ஏழு நாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணபிரான் கோவர்த்தனமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லா வுயிர்களையுங் காத்தருளினன்.

மருதமரங்கள் இற்று முறிந்து விழும்படி நடைகற்றவனும், அப்போது தன்மேல் சிறிதும் தோஷம் தட்டாதபடி தான் குறையொன்றுமின்றிக்கே விளங்கினவனும், திருவாழியைக் கையிலேயுடையவனும், எப்போதும் நித்யஸூரிகள் வந்து தொழப்பெற்ற திருவடித்தாமரைகளை யுடையவனும், இந்திரன் பசிக்கோபங்கொண்டு மழை பெய்வித்த காலத்திலே ஆநிரைகளின் துன்பத்தை

ஒரு நொடிப்பொழுதிலே போக்குவதற்காகக் கோவர்த்தன மலையைக் குடையாக ஏந்தி நின்றவனுமான பெருமானுடைய திருவேங்கடமலையை நெஞ்சமே! அடைந்திடு என்றாராயிற்று. ... ... .... (௩)

பார்த்தற்காயன்று பாரதம் கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர் *
கோத்தங்காயர்தம் பாடியில் குரவைபிணைந்த வெங்கோவலன் *
ஏத்துவார்தம் மனத்துள்ளா னிடவெந்தை மேவிய வெம்பிரான் *
தீர்த்த நீர்த்தடஞ் சோலைசூழ் திருவேங்கடமடை நெஞ்சமே! (௪)

| | |
|---|---|
| அன்று | முற்காலத்தில் |
| பார்த்தற்கு ஆய் | அர்ஜுநனுக்காக |
| பாரதம் | பாரத யுத்தத்திலே |
| கை செய்திட்டு | கையும் அணியும் வகுத்து |
| வென்ற | வெற்றிபெற்ற |
| பரம் சுடர் | பரஞ்சோதியானவனும், |
| அங்கு ஆயர் தம் பாடியில் | அங்கே திருவாய்ப் பாடியிலே |
| குரவை கோத்து பிணைந்த | ராஸக்ரீடை செய்தருளின |
| எம் கோவலன் | நமது கோபாலனும், |
| ஏத்துவார் தம் | தன்னைத் துதிப்பவர் களுடைய |
| மனத்து | நெஞ்சிலே |
| உள்ளான் | வஸிப்பவனும் |
| இடவெந்தை | திருவிடவெந்தையிலே |
| மேவிய | பொருந்திய |
| எம்பிரான் | அஸ்மத் ஸ்வாமியுமான வன் எழுந்தருளி யிருக் கப் பெற்றதும் |
| தீர்த்தம் நீர் தட சோலை சூழ் | புண்ய தீர்த்தங்களாலும் பெரிய சோலைகளாலும் சூழப்பெற்றதுமான |

திருவேங்கடம் நெஞ்சமே! அடை—.

* * *—[பார்த்தற்காயன்று.] பாண்டவர்களுக்காகப் பாரதயுத்தம் நடத்தி வெற்றி பெற்றவனும், இப்படி ஆச்ரிதர்களுக்காகக் காரியஞ் செய்யப்பெற்றதனால் திருமேனி மிக விளங்கப் பெற்றவனும், இடைச்சிகளோடு ராஸக்ரீடையென்கிற குரவைக்கூத்து ஆடினவனும், தன்னைத் துதிப்பவர்களின் நெஞ்சை விட்டுப் பிரியாதே யிருப்பவனும், இடவெந்தை யென்கிற திவ்யதேசத்திலே இனிதாக எழுந்தருளி யிருப்பவனுமான எம்பெருமானுடையதாய், பலபல புண்ய தீர்த்தங்களாலும் பெரிய பூஞ்சோலைகளாலும் சூழப்பட்டதான திருவேங்கட மலையைச் சென்று சேர் மனமே!.

கண்ணபிரான், பாண்டவர் துர்யோதநாதியர் என்ற இருவகுப்பினரையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துரியோதநாதியரிடம் தூதாகச் சென்று பாண்டவர்களும் நீங்களும் பகைமை கொள்ள வேண்டா; ராஜ்யத்தில் இருவர்க்கும் பாகமுண்டு; ஆதலால் ஸமபாகமாகப் பிரித்துக்கொண்டு ஸமாதாநமாக அரசாட்சி செய்து வாழுங்கள்' என்று பலபடியாக அருளிச் செய்ய, அந்தச் சொல்லுக்குச் சிறிதும் ஸம்மதியாமல் 'பராக்ரமமிருந்தால் போர் செய்து ஜயித்துக்கொள்ளட்டும்; இந்தப் பூமி வீரர்க்கே உரியது' என்று மிக்க செருக்குத் தோற்றச் சொல்லவே, தான் பாண்டவபக்ஷபாதியாயிருந்து எதிரிகளைத் தோற்பித்தனனென்க. பாரதம்கைசெய்திடுதலாவது—பாரதயுத்தத்திலே அணிவகுத்தல் முதலிய வேண்டிய ஸஹாயங்களைச் செய்தல்.

ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஸ்ரீ பாகவதம் முதலியவற்றில் ராஸக்ரீடை எனப் படுவது தமிழில் 'குரவைக் கூத்து' எனப்படும்; "అంగనామంగనామంతరే మాధవః మాధవం మాధవంచాంతరేణాంగనా = அங்கநாமங்கநா மந்தரே மாதவ: மாதவம் மாதவஞ் சாந்தரே ணங்கநா" என்றபடி ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணபிரானைப் பல உருவெடுத்துக் கை கோத்தாடும் கூத்து. ... ... ... .... ... (ச)

வண்கையா னவுணர்க்கு நாயகன் வேள்வியில்சென்று மாணியாய் *
மண்கையா லிரந்தான் மராமர மேழுமெய்த வலத்தினன் *
எண்கையா னிமயத்துள்ளா னிருஞ்சோலை மேவியவெம்பிரான் *
திண்கைம்மா துயர்தீர்த்தவன் திருவேங்கட மடை நெஞ்சமே! (ரு)

| | |
|---|---|
| வண் கையான் | விசேஷமாக தானஞ்செய்கிற கையையுடையவனாய் |
| அவுணர்க்கு நாயகன் | அசுரர்கட்குத் தலைவனான மாவலியினது |
| வேள்வியில் | யாக பூமியிலே |
| மாணி ஆய் சென்று | பிரமசாரி வேஷத்துடன் எழுந்தருளி |
| கையால் | தனது திருக்கையாலே |
| மண் இரந்தான் | பூமியை யாசித்தவனும் |
| மராமரம் ஏழும் | ஏழு மராமரங்களையும் |
| எய்த | துளைபடுத்தின |
| வலத்தினன் | வலிவையுடையவனும் |
| எண் கையான் | அஷ்ட புஜங்களையுடையவனும் |
| இமயத்து உள்ளான் | இமயமலையின்கண் (திருப்பிரிதியிலே) எழுந்தருளியிருப்பவனும் |
| இரு சோலை | திருமாலிருஞ் சோலையிலே |
| மேவிய | பொருந்திய |
| எம்பிரான் | ஸ்வாமியும் |
| திண் கை மா | திடமான துதிக்கையையுடைய கஜேந்திரனது |
| துயர் | துன்பத்தை |
| தீர்த்தவன் | போக்கினவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற |

திருவேங்கடம் நெஞ்சமே! அடை—.

* * *—[வண்கையான்.] வேண்டினார்க்கு வேண்டினபடியே தானஞ் செய்கிற அஸுர சக்ரவர்த்தியான மஹாபலியினுடைய யாகபூமியிலே வாமனப்பிரமசாரியாய்ச் சென்று கை நீட்டி மூவடிமண் தாவென்று இரந்தவனும், ஸுக்ரீவனுக்கு நம்பிக்கையுண்டாவதற்காக ஸப்த ஸாலவ்ருக்ஷங்களைத் துளைபடுத்தின மஹா பலமுடையவனும், ஆச்ரிதரக்ஷணார்த்தமாகத் திவ்யாயுதங்களைத் தரிப்பதற்கான பல திருக்கைகளையுடையவனும், (அல்லது) கச்சிமாநகரிலுள்ள அஷ்டபுஜகரம் என்கிற திவ்ய தேசத்திலே அஷ்டபுஜனாக ஸேவை ஸாதிப்பவனும், இமயமலையில் திருப்பிரிதியென்னும் திருப்பதியிலே யெழுந்தருளியிருப்பவனும், திருமாலிருஞ்சோலையிலே வந்து நிற்பவனும், முதலைவாயிலே அகப்பட்டுத் துடித்த ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய துன்பத்தைத் தொலைத்தவனுமான பெருமானுடைய திருவேங்கட மலையைச் சென்று சேர் மனமே!.

[மராமரமேழுமெய்த வலத்தினன்.] ஸுக்ரீவன் இராமனால் அபயப்ரதானஞ்செய்யப்பெற்ற பின்பும் மனம் தெளியாமல் வாலியின் பேராற்றலைப்பற்றிப் பலவாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும், துந்துபியின் உடலெலும்பை ஒருயோஜனை தூரம் தூக்கி யெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக் கூறி, இவ்வாறு பேராற்றலமைந்தவனை வெல்வது ஸாத்யமாகுமோ? என்று சொல்ல, அது கேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு விச்வாஸம் இல்லையாயின் இப்போது என்ன செய்ய வேண்டுவது?' என்ன, ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறு பூத்த நெருப்புப்போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது ஸந்தேஹமுண்டாகின்றது; ஏழு மராமரங்களையும் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விரற்கடை தூரம் தூக்கியெறிந்தால் எனக்கு நம்பிக்கையுண்டாகும்' என்று சொல்ல; ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாக்குமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக்குவியலைத் தனது காற்கட்டைவிரலினால் இலேசாய்த் தூக்கிப்பத்துயோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக் கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கி யெறிந்தான்; இப்போது உலர்ந்து போன இதனைத் தூக்கி யெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மராமரங்களின் மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையும் துளைத்துச் சென்று மீண்டு அம்பறாத்தூணியை அடைந்தது. (மராமரம்—ஆச்சாமரம்.) ... ... (ரு)

எண்டிசைகளு மேழுலகமும் வாங்கிப் பொன்வயிற்றில் பெய்து *
பண்டோராலிலைப் பள்ளிகொண்டவன் பான்மதிக் கிடர்தீர்த்தவன் *
ஒண்டிறலவுண னுரத்துகிர் வைத்தவனொள்ளெயிற்றொடு *
திண்டிறலரியாயவன் திருவேங்கடமடை நெஞ்சமே! (சு)

| | |
|---|---|
| பண்டு | முன்னொருகால், |
| எண் திசைகளும் | எட்டுத் திக்குகளையும் |
| ஏழ் உலகமும் | ஸப்த லோகங்களையும் |
| வாங்கி | (பிரளயம் கொள்ளாதபடி) எடுத்து |
| பொன் வயிற்றில் | (தனது) அழகிய திரு வயிற்றிலே |
| பெய்து | இட்டு வைத்து |
| ஓர் ஆல் இலை | ஒரு ஆலந்தளிரிலே |
| பள்ளி கொண்டவன் | சயனித்தருளினவனும் |
| பால் மதிக்கு | வெளுத்த சந்திரனுக்கு |
| இடர் | க்ஷயரோகமாகிற துக்கத்தை |
| தீர்த்தவன் | போக்கினவனும், |
| ஒள் எயிற்றொடு | ஒளி பொருந்திய கோரப் பற்களோடு கூடி |
| திண் திறல் அரி ஆயவன் | மிக்க வலிவுடைய நரசிங்க மூர்த்தியாகத் தோன்றினவனாய் |
| ஒண் திறல் அவுணன் | மஹா பலசாலியான இரணியாசுரனுடைய |
| உரத்து | மார்பிலே |
| உகிர் | (திருக்கை) நகங்களை |
| வைத்தவன் | வைத்து அழுத்தினவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற |

திருவேங்கடம் நெஞ்சமே! அடை—.

* * *—[எண்டிசைகளும்.] உலகங்களெல்லாம் பிரளயத்திலே அழுந்திப் போகாதபடி அவற்றைத் தனது திருவயிற்றிலே வைத்து நோக்கி ஓராலந்தளிரிலே பள்ளிகொண்டவனும், சந்திரனுக்கு நேர்ந்த க்ஷயரோகத்தைப் போக்கியருளினவனும், "அழகியான் தானே அரியுருவன் தானே" என்கிறபடியே அழகிய கோரப்பற்களுடனே மஹாபலசாலியான நரசிங்கமாய்த் திருவவதரித்து, தன் வலிவோடு ஒத்தவலிவுடையனான ஹிரண்யனுடைய மார்பிலே நகங்களை யூன்றி அவ்வுடலைப் பிளந்தவனுமான பெருமானுடைய திருவேங்கடத்தைச் சென்று சேர் மனமே!. எண் திசைகளும்=கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு என்ற நான்கு திசைகளும், வடகிழக்கு தென்கிழக்கு வடமேற்கு தென்மேற்கு என்கிற நான்கு திசைமூலைகளும் சேர்ந்து எண்டிசைகள் என வழங்கப்படும். நமது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் திக்கு என்று தனியே ஒரு பதார்த்தம் ஒப்புக்கொள்வதில்லை. இங்கே திசைகளைத் திருவயிற்றில் பெய்ததாகச் சொன்னது அவ்வவ்விடங்களிலுள்ள பொருள்களைச் சொன்னபடி. ... (சு)

பாருநீரெரி காற்றினோ டாகாசமுமிவை யாயினான் *
பேருமாயிரம் பேசநின்ற பிறப்பிலி பெருகுமிடம்
காரும்வார்பனி நீள்விசும்பிடைச் சோருமாமுகில் தோய்தர *
சேரும் வார்பொழில்சூழெழில் திருவேங்கடமடை நெஞ்சமே! (எ)

| | |
|---|---|
| பாரும் நீர் எரி காற்றினோடு ஆகாசமும் இவை ஆயினான் | பூமி ஜலம் தேஜஸ் வாயு ஆகாசம் என்கிற பஞ்சபூத ஸ்வரூபியானவனும் |
| ஆயிரம் பேரும் பேச நின்ற | ஸஹஸ்ரநாமங்களாலும் பிரதிபாதிக்கப்படா நிற்பவனும் |
| பிறப்பு இலி | (கருமமடியாகப்) பிறத்தல் இல்லாதவனுமான எம்பெருமான் |
| பெருகும் இடம் | வளருகிற இடமானதும்,— |
| நீள் விசும்பிடை | பெரிய ஆகாசத்தினின்றும் |
| காரும் வார் பனி | மழை நீரும் மிக்க பனித்துளியும் |
| சோரும் | பெய்யப் பெற்றதும் |
| மா முகில் தோய்தர | (மேலுள்ள) காளமேகங்கள் வந்துபடியும்படியாக |
| சேரும் | பொருத்தமான |
| வார் | உயரவோங்கியிருக்கிற |
| பொழில் | சோலைகளாலே |
| சூழ் | சூழப்பெற்றதும் |
| எழில் | அழகியதுமான |

திருவேங்கடம் நெஞ்சமே! அடை—.

* * *—[பாருநீரெரி.] ப்ருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்கிற பஞ்சபூத ஸ்வரூபியாக நிற்பவன் என்று சொன்னது—ஸகல லோகங்களும் தானிட்ட வழக்காயிருக்குமவன் என்றபடி. அப்படிப்பட்டவனும் ஸஹஸ்ரநாமங்களால் துதிக்கப்படுபவனும் கருமங்களுக்கு வசப்படாதவனுமான எம்பெருமான் தன்னுடைய பெருமையெல்லாம் தோற்ற எழுந்தருளியிருக்குமிடம் திருவேங்கடம்; அது எப்படிப்பட்டதென்றால்; ஆகாசத்தில் நின்றும் மழை பெய்யவும் பனி பெய்யவும் பெற்றது; மேகங்கள் வந்து படியும்படியான [மேகமண்டலம்வரையில் ஓங்கின] உயர்த்தியையுடைய சோலைகளாலே சூழப்பட்டது. அதனைச் சென்று சேர் நெஞ்சே! ... ... ... (எ)

அம்பர மனல்கால் நிலம் சலமாகிநின்ற வமரர்கோன் *
வம்புலா மலர்மேல் மலிமட மங்கைதன் கொழுநனவன் *
கொம்பினன்ன விடைமடக் குறமாதர் நீளிதணந்தோறும் *
செம்புனமவை காவல்கொள் திருவேங்கடமடை நெஞ்சமே! (௮)

அம்பரம் அனல் கால் நிலம் சலம் ஆகி நின்ற — ஆகாயம் நெருப்பு காற்று பூமி ஜலம் ஆகிய பஞ்ச பூதஸ்வரூபியும்

அமரர் கோன் — நித்ய ஸூரிகட்குத் தலைவனும்

வம்பு உலாம் மலர் மேல் மலி மட மங்கை தன் — பரிமளம் உலாவுகின்ற தாமரை மலரின் மேலே பொருந்திய பெரிய பிராட்டியாருக்கு

கொழுநன் அவன் — நாயகனுமான எம்பிரான் எழுந்தருளியிருக்கப் பெற்றதும்,

நீள் இதணம் தொறும் — உயர்ந்த பரண்கள் தோறும்

கொம்பின் அன்ன இடை — வஞ்சிக் கொம்போடு ஒத்த (நுண்ணிய) இடுப்பையுடைய

மட குற மாதர் — மடமை தங்கிய குறப் பெண்கள்

செம்புனம் அவை காவல் கொள் — செவ்விய வயல்களைக் காவல் செய்து கொண்டிருக்கப்பெற்றதுமான

திருவேங்கடம் நெஞ்சமே! அடை—.

* * *—[அம்பரமனல்கால்நிலம்.] கீழ்ப்பாட்டில் "பாருநீரெரி காற்றினோடு ஆகாயமுமிவையாயினான்" என்ற முதலடியிற் சொன்ன அர்த்தமே இப்பாட்டிலும் முதலடியிற் சொல்லப்படுகிறது. அம்பரம்—ஆகாயம்; தற்சம வடசொல். பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்கிற பஞ்சபூதஸ்வரூபியானவனும், நித்யஸூரிகளுக்குத் தலைவனும், அலர்மேல்மங்கைக்குத் துணைவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கப்பெற்ற திருமலையைச் சென்று சேர்மனமே!.

அஃது எப்படிப்பட்டதென்னில்; கொம்பினன்னவிடை மடக்குறமாதர் நீளிதணந்தோறும் செம்புனமவை காவல்கொள்ளப்பெற்றது. குறத்திகள் மலைகளிலே வாஸஞ் செய்பவர்கள்; புனங்காத்தல் அவர்களது தொழிலாகும்; (அதாவது-பட்டிமேய வொண்ணாதபடி நிலங்களைக் காப்பாற்றுதல்.) உயரமான பரண்களை அமைத்துக்கொண்டு அவற்றிலே கிடந்து காப்பர்கள்; இதனை ஸ்வபாவோக்தியாக இங்கு அருளிச் செய்தாராயிற்று. 'இதணம்' என்றும் 'இதண்' என்றும் காவற்பரணுக்குப் பெயர். ... ... ... (௮)

பேசுமின் திருநாமமெட்டெழுத்தும் சொல்லிநின்று, பின்னரும் *
பேசுவார்தமை யுய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம் *
வாசமாமலர் நாறுவார்பொழில் சூழ்தரு முலகுக்கெலாம்
தேசமாய்த் திகழும்மலைத் திருவேங்கட மடைநெஞ்சமே! (௯)

| | |
|---|---|
| பேசும் | எல்லாராலும் அநுஸந்திக்கத் தக்கதும் |
| இன் | போக்யமுமான |
| திரு நாமம் எட்டு எழுத்தும் | திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தை |
| சொல்லி நின்று | அநுஸந்தித்து |
| பின்னரும் | மேன்மேலும் |
| பேசுவார் தம்மை | (அதனையே) அநுஸந்திப்பவர்களை |
| உய்யவாங்கி | உஜ்ஜீவிக்கச்செய்து |
| பிறப்பு அறுக்கும் பிரான் இடம் | (அவர்களது) ஸம்ஸாரத்தைத் தொலைக்கும் எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமானதும்,— |
| வாசம் மா மலர் நாறும் | மணம்மிக்க சிறந்த புஷ்பங்கள் பரிமளிக்கப்பெற்ற |
| வார் பொழில் | விசாலமான சோலைகளாலே |
| சூழ்தரும் | சூழப்பட்டதும், |
| உலகுக்கு எல்லாம் | எல்லா வுலகங்களுக்கும் |
| தேசம் ஆய் திகழும் | திலகம்போன்று விளங்குவதுமான |
| திரு வேங்கடம் மலை | திருமலையை |
| நெஞ்சமே அடை | மனமே! அடைந்திடு. |

* * *—[பேசுமின் திருநாமம்.] இத்திருமொழியில் கீழ்ப்பாசுரங்களெல்லாவற்றிலும் ஆழ்வார் தமது திருவுள்ளத்தை நோக்கிக் கூறுதலொன்றேயுள்ளது; பரோபதேசமென்பது இல்லை. இப்பாசுரம் "பேசுமின் திருநாமமெட்டெழுத்தும்" என்று தொடங்கப்படுகிறது. பேசுமின் என்றால், 'சொல்லுங்கள்' என்று பொருள்படுகையாலே முன்னடிகளிரண்டும் பரோபதேசமென்றும் பின்னடிகளிரண்டும் ஸ்வாத்மோத்போதநமென்றும் கொள்க.

இப்பக்ஷத்தில், அந்வயிக்கவேண்டுவது எங்ஙனே யென்னில்; "திருநாமமெட்டெழுத்தும் சொல்லிநின்று, பின்னரும் பேசுவார் தம்மை உய்ய வாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம் பேசுமின்" என்று முன்னடிகளை அந்வயிப்பது. திருவஷ்டாக்ஷரத்தை அநுஸந்தித்து, ஒருகால் அநுஸந்தித்தாயிற்றென்று த்ருப்திபெற்று ஓய்ந்துவிடாமல் மேன்மேலும் அத்திருமந்திரத்தையே பேசிக்கொண்டிருப்பவர்களை உஜ்ஜீவிக்கச் செய்து, அவர்களுக்கு ஸம்ஸார ஸம்பந்தத்தைப் போக்கித் திருநாட்டிலே நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்யமளிக்கும் பெருமான் எழுந்தருளியிருக்குமிடத்தை, முமுக்ஷுக்களே! நீங்களெல்லாரும் சொல்லுங்கள்; 1. "திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே" என்னும்படியாக நீங்களெல்லாரும் 'திருவேங்கடம் திருவேங்கடம்' என்று சொல்லுங்கள்—என்றபடி. "திருநாமமெட்டெழுத்தும் பேசுமின்; சொல்லிநின்று பின்னரும், பேசுவார் தம்மை உய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம் பேசுமின்" என்று—பேசுமினென்ற வினைமுற்றை இரண்டிடத்தில் அந்வயித்து உரைப்பதுமுண்டு.

இங்ஙனே பரோபதேசமாக யோஜிப்பதுதவிர மற்றொருவகையாகவும் யோஜிப்பதுண்டு; பேசுமின் என்று வினைமுற்றாகக் கொள்ளாமல், "பேசும்

1. திருவிருத்தம்—59.

இன்" என்று பிரித்து இவ்விரண்டு பதங்களையும் 'திருநாமமெட்டெழுத்தும்' என்பதற்கு விசேஷணமாக்கி, பேசும்—எல்லாரும் பேசுகைக்கு உரியதாய், இன்-பரமபோக்யமான, திருவஷ்டாக்ஷரத்தைச் சொல்லிநின்று பின்னையும் பேசுமவர்களை உஜ்ஜீவிப்பிக்கவல்ல எம்பெருமானுக்கு இருப்பிடமானதும், மணம்மிக்க சிறந்த புஷ்பங்கள் பரிமளிக்கப்பெற்ற பரந்தபொழில்களாலே சூழப்பட்டதும், உலகுக்கெல்லாம் திலகமாக விளங்குவதுமான திருவேங்கடமலையைச் சென்று சேர்மனமே! என்று ஏகவாக்கியமாக உரைப்பதாம்.

இவ்விடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த வியாக்கியானத்தில்—"[பேசுமினித்யாதி.] ஓர் அதிகாரஸம்பத்தி வேண்டாவிறே பெற்ற தாய் பேர் சொல்லுவார்க்கு; அப்படியே இடர்வந்தபோது எல்லாருமொக்கச் சொல்லிக்கொடு போரக்கடவதான இனிய திருநாமமான எட்டெழுத்தையும் சொல்லிநின்று." என்றருளிச் செய்யப்பட்டுள்ள ஸ்ரீஸூக்திகள் நோக்கத்தக்கன. "ஓம் நமோ நாராயணாய" என்கிற ஆநுபூர்வியையுடைய திருவஷ்டாக்ஷரம் ப்ரஹ்மக்ஷத்ரிய வைச்யர்களான த்ரைவர்ணிகர்களோடு சூத்ரர்களோடு ஸ்த்ரீகளோடு வாசியற முமுக்ஷுத்வமுடையாரனைவர்க்கும் அதிகரிக்க அர்ஹமானதென்னுமிடம் வேதவேதாந்த வேதாங்கங்களிலும் அவற்றை அநுஸரித்த பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளிலும் இவையித்தனைக்கும் மூலமான சிஷ்டாநுஷ்டாந பரம்பரையிலும் ஸுவ்யக்தமாயிருக்கச் செய்தேயும், நெடுநாளாகவே சிலர் இதில் விப்ரதிபத்திகொண்டு கிடப்பர்கள்.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்குரிய பஞ்ச ஸம்ஸ்காரத்திலே முதலில் திருவிலச்சினையிட்டுப் பிறகு திருமண்காப்பு சாத்தி அதன் பிறகு தாஸ்ய நாமமிட்டுப் பிறகு நான்காவது ஸம்ஸ்காரமாக மந்த்ரோபதேசம் செய்யுமிடத்து ஸ்த்ரீகளுக்கும் சூத்ரர்களுக்கும் பிரணவமென்கிற ஓங்காரத்தைச் சேர்த்து மந்த்ரோபதேசம்செய்வது பொல்லாங்கு என்று ப்ரமித்திருப்பார் பலர் "அம் நமோ நாராயணாய" என்று உபதேசிக்கவும், சாஸ்த்ரோக்தரீதியிலே "ஓம் நமோ நாராயணாய" என்று உபதேசிப்பவர்களை நூல்வரம்பு கடந்தவர்களாகச் சொல்லி தூஷிக்கவுங் காண்கிறோம்.

இப் பிரணவாதிகார விஷயத்திலே பூருவர்களில் சிலர் ஸ்வல்பமாக எழுதி வைத்தார்கள். நவீநர்களில் பலர் இதனைப் பெருக்கடித்து வாதப்ரதிவாத ரூபங்களான சில நூல்களையும் அவதரிப்பித்தார்கள். ஸ்வரூபோஜ்ஜீவநத்திற்கு முக்கியமான இவ்விஷயத்தில் பூர்வ பக்ஷிகளைப்போலவே ஸித்தாந்திகளில் நவீநர்களும் சில உண்மைப் பொருள்களைத் தெளிவுறுதும் வெளியிடாதும் போந்ததன் பயனாக, இதனைப் பற்றிய கலக்கங்கள் கனக்கவுண்டாகி, சில ஞானிகள் திறத்திலும் ஸம்சயவிபர்யயவுணர்ச்சிகள் மலிந்து ஸத்ஸம்ப்ரதாய க்ஷோபம் விளையக்காண்கையாலே, இவ்விஷயத்தில் பிறர்சொல்லும் அவப்பொருள்களையெல்லாம் அகற்றி சாஸ்த்ரீயமாகவும் ஸாரமாகவுமுள்ள நற்பொருள்களை ஈண்டு நல்குவது இவ்விருள்தருமா ஞாலத்திற்கு அணிவிளக்காவதோர் மஹோபகாரமெனக்கொண்டு இங்கே சில பரமார்த்தங்களைப் பகர்வோம்.

1. ப்ராஹ்மண க்ஷத்ரியவைச்யர்களென்கிற த்ரைவர்ணிகர்கள் தவிர மற்றையோர்க்கு வேதவாக்கியங்களை உச்சரிக்க அதிகாரம் சாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்டிருப்பதால் ஸகலவேதஸாரமாகிய ப்ரணவத்தை ஸ்த்ரீசூத்ரர்கள் வாயால்சொல்லவும் உபதேசம்பெறவும் அதிகாரமற்றவர்கள் என்று பூர்வபக்ஷிகள் கூறுவர். இங்ஙனாகில், "நமோ நாராயணாய" என்கிற மந்த்ரசேஷமும் வேத வாக்கியமே; மந்த்ரரத்நமென்கிற த்வயமும் வேத வாக்கியமே; ஸர்வதர்மாந் இத்யாதி சரமச்லோகமும் பஞ்சமவேதமென்றும் கீதோபநிஷத்தென்றும் ப்ரஸித்தமானதில் சேர்ந்ததாகையாலே அதுவும் வேதவாக்கியமே; வாக்ய குரு பரம்பரையில் முதல் மூன்று வாக்கியங்களும் வேதமே. இவற்றை மாத்திரம் ஸ்த்ரீசூத்ரர்கள் எங்ஙனே அதிகரிக்கலாமென்று கேள்விவரின்; வைதிகங்களென்றும் தாந்த்ரிகங்களென்றும் மந்த்ரங்களையும் கருமங்களையும் இருவகையாகப் பிரித்து, பிரணவத்தோடு கூடியவை வைதிகங்களென்றும், அஃதில்லாதவை தாந்த்ரிகங்களென்றும், சூத்ராதிகளுக்குத் தாந்த்ரிகமே உரியதென்றும் பகவச்சாஸ்த்ராதிகளில் சொல்லியிருக்கையாலே ப்ரணவமொழிந்த மந்த்ர சேஷாதிகளை ஸ்த்ரீசூத்ரர்கள் அதிகரிக்கக் குறையில்லை என்கிறார்கள்.

2. இவ்வர்த்தத்திற்கு ஆதாரமாகச் சொல்லும் ப்ரமாணங்களாவன :— "வைதிகாஃ ப்ரணவோபேதாஃ ப்ரணவேந விஹீநாஸ்து தாந்த்ரிகாஃ பரிகீர்த்திதாஃ ॥" என்றும், "வைதிகம் ப்ராஹ்மணாநாம் து ராஜ்ஞாம் வைதிக தாந்த்ரிகம்। தாந்த்ரிகம் வைச்யசூத்ராணாம் ஸர்வேஷாம் தாந்த்ரிகம் து வா॥" என்றும் உள்ள வசநங்களாம். இவற்றின் உண்மைப் பொருளை மேலேயுரைப்போம். பூர்வபக்ஷிகள் கொண்டபடியே பொருளாகில் "ப்ரணவம் த்ரைவர்ணிகாதிகாரம்" என்ற தங்கள் இசைவுக்கும் விரோதம் விளைந்ததாகும். ஏனெனில், "தாந்த்ரிகம் வைச்ய சூத்ராணாம்" என்று த்ரைவர்ணிகர்களான வைச்யர்களையும் சூத்ரர்களோடே சேர்த்து, ப்ரணவவிரஹிதமான தாந்த்ரிகத்திலேயே அவர்கட்கும் அதிகாரமாகச் சொல்லிற்றிறே. அங்ஙனிருந்தும் வைச்யர்களுக்கும் ப்ரணவாதிகாரமில்லையென்று பூர்வபக்ஷிகள் மறுக்காதொழிவதற்கு மூலமறிகின்றிலோம்.

3. அது நிற்க. "வைதிகம் ப்ராஹ்மணாநாம் து" இத்யாதியாக மேலெடுத்த வசநத்தின் பொருள் யாதெனில், தெளியச் சொல்லுவோம் கேண்மின்; எந்த மந்த்ரத்தை ஜபிக்கவேணுமானாலும் ஆதியிலும் அந்தத்திலும் ப்ரணவங்களைச் சேர்த்து ஜபிக்கவேணுமென்று விதிக்கப்பட்டுளது. ஸ்ரீமங்கிகமாந்த மஹாதேசிகன் ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷையில் மூன்றாமதிகாரத்தில் உதாஹரித்தருளின "ஸர்வேஷு ப்ரணவோ ஜப்யோ ஜபாதௌ ப்ரணவாதௌ। ஸாஹஸ்ர இதி விஜ்ஞேயஃ ப்ரணவோ ஹ்யக்ஷரம் பரம் ॥" இத்யாதி வசநமும் இப்பொருளதே. "யஜ்ஞாதௌ ஸ்வரஃ ப்ரோக்தஃ" இத்யாதி ச்ருதியாலும், "ப்ராஹ்மணஃ ப்ரணவம் குர்யாதாதாவந்தே ச ஸர்வதா।" என்ற மநுஸ்ம்ருதி (2-74.) வசநத்தாலும் ஸாமாந்யமாகவே வேதத்துக்கு ஆதியந்தங்களில் பிரணவஸம்யோஜநம்

விஹிதம். இதனையடியொற்றியே இதர மந்த்ரஜபங்களிலும் இந்த ப்ரக்ரியை ஸ்பஷ்டமாக விதிக்கப்பட்டது “[illegible]” என்று யோகயாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியிலும், “[illegible]” என்று போதாயந ஸூத்ரத்திலும், “[illegible]” என்ற வ்ருத்தமநுவசநத்திலும் காயத்ரீஜப விஷயத்திலே இங்ஙனே சொல்லிற்று. இப்படி வேதத்துக்கும் வைதிக மந்த்ரத்துக்கும் ஸாமாந்யமாக விதிக்கப்பட்ட பூர்வோத்தர ப்ரணவ ஸம்யோஜநம் திருவஷ்டாக்ஷரத்திற்கும் அபேக்ஷிதம்; “[illegible]” “[illegible]” “[illegible]” என்றதிறே.

4 ஸ்ரீபகவத்கீதையிலும் பதினேழாமத்யாயத்திலே, “[illegible]” (24) என்ற ச்லோகத்தால்—யஜ்ஞாதிகார்யங்களின் தொடக்கத்தில் ப்ரணவோச்சாரணம் ஆவச்யகமென்று காட்டப்பட்டது. கர்மாங்கமான இப்படிப்பட்ட ப்ரணவோச்சாரணத்தில் த்ரைவர்ணிகரல்லாதார்க்கு அதிகாரமில்லையென்பதும் த்ரைவர்ணிகர்கட்கு மாத்திரம் இப்படிப்பட்ட கர்மாங்கப்ரணவ ஸம்யோஜநம் அபேக்ஷிதமென்பதும் சாஸ்த்ரஸித்தம். ஆனதுபற்றியே, “[illegible]” இத்யாதி வசநமும், “[illegible]” இத்யாதி வசநங்களும் “[illegible]” என்ற வசநமும் அவதரித்தன.

5. இவற்றில் மந்த்ரத்திற்கு அவயவமாகவுள்ள ப்ரணவம் சூத்ராதிகளுக்கு ஆகாதென்று மறுக்கப்படவில்லை. பின்னை எந்த ப்ரணவம் மறுக்கப்படுகின்றதென்னில்; ஏற்கனவே ப்ரணவத்தோடு சேர்ந்தோ, அல்லது இயற்கையாக ப்ரணவ ஸம்பந்தமில்லாமலோ ப்ரஸித்தமாகவுள்ள எல்லா மந்த்ரங்களினுடையவும் ஜபாதிகாலங்களில் அவற்றுக்குப் பூர்வோத்தரங்களிலே சேர்த்துக் கொள்ளப்படவேணுமென்று விதிக்கப்பட்ட அபூர்வமான ப்ரணவம் யாதொன்

றுண்டு, அதுதான் மறுக்கப்படுகின்றது. “ அஷ்டாக்ஷரச்சைவ மந்த்ரோ த்வாத சாக்ஷர ஏவச, ஷடக்ஷரச்சைவ மந்த்ரோ விஷ்ணோரமிததேஜஸ: ॥ ஏதே மந்த்ரா: ப்ரதாநாஸ்து வைதிகா: ப்ரணவைர் யுதா:.” என்று பூர்வபக்ஷிகள் உயிர்நிலையாக எடுத்தாளும் வசநத்தில், “ அஷ்டாக்ஷரோமந்த்ர: ” என்றும் “ த்வாதசாக்ஷரோமந்த்ர:” என்றும், “ ஷடக்ஷரோமந்த்ர: என்றும் ஒவ்வொரு மந்த்ரத்தையும் அக்ஷரஸங்க்யையையிட்டே நிர்த்தேசித்துவிட்டு, “ இவை ப்ரணவத்தோடே கூடினல் வைதிகம், கூடாவிட்டால் தாந்த்ரிகம் ” என்று சொல்லியிருப்பதானது, அபூர்வப்ரணவத்தை உத்தேசித்தா, அவயவபூதப்ரணவத்தையே உத்தேசித்தா ? என்று விசக்ஷணர் தாம் விமர்சிக்கவேண்டும். ‘ நாராயண மந்த்ரமும் வாஸுதேவ மந்த்ரமும் விஷ்ணுமந்த்ரமும் ப்ரணவயுக்தமா யிருந்தால் வைதிகம், தத்வியுக்தமாயிருந்தால் தாந்த்ரிகம் ’ என்று சொல்லியிருந்தாலாவது அவயவப்ரணவத்தை யுத்தேசித்துச் சொல்லுகிற தென்னலாம். அங்ஙன் சொல்லவில்லை. ஒரு பூர்ண சரீரத்தில் கைகாலை ஒடிப்பதுபோல் பூர்ணமந்த்ரத்தில் அவயவைகதேசத்தை மறுக்கும்படியாகவோ மாற்றும்படியாகவோ எந்த சாஸ்த்ரமேனும் விதிக்குமோ ?

6. அன்றியும், “நஸ்வர: ப்ரணவோங்காநி நாப்யந் யவிதயஸ் ததா” என்ற வசநத்தில், ‘ ஸ்வரம் கூடாது, ப்ரணவம் கூடாது, அங்கங்கள் கூடாது, மற்ற எந்த விதிகளும் கூடாது ’ என்று கூடாதவற்றை விலக்கி ‘மந்த்ரமாத்ரம் கூடும்’ என்று கூறினதின் கருத்தை ஆழ்ந்து ஆராயவேணும். திருமந்த்ர சரீரத்தைச் சொல்லுமிடமெங்கும் “ஓமித்யக்ரே வ்யாஹரேத்” “ப்ரணவாத்யம் நமோத்யம் நாராயணமஷ்டாக்ஷரம்” “ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோபாஸக:” இத்யாதிகளாலே ப்ரணவஸஹிதமாகவே சொல்லப்பட்டது. ஆகவே மந்த்ரமாத்ரம் என்றது ஸ்வாவயவபூத ப்ரணவமும் சேர்ந்த அஷ்டாக்ஷரத்தைச் சொன்னபடியேயன்றி அதனை யொழித்துரைத்தபடியன்று; அங்ஙனகில் “ மந்த்ரசேஷோக்திரிஷ்யதே ” என்றே சொல்லப்பட்டிருக்கும். மந்த்ரத்திற்குப் புறம்பாய் அபூர்வமாயுள்ள ப்ரணவத்தைக் கூட்டியுரைப்பதே வைதிகத்வ ஹேது வென்னுமிடம் கீழ் உதாஹரித்த கீதாவசநாதிகளால் நன்கு விளங்கும். இப்படி கொள்ளாதபோது “ ஸர்வேஷாம் தாந்த்ரிகம் து வா ” என்றதற்கு அர்த்தமே யில்லையாகும். மந்த்ராவயவபூதப்ரணவமு மொழிந்ததே தாந்த்ரிகமென்று பூர்வபக்ஷிகள் பேசுகிறபடி பொருளாகில், ‘ த்ரைவர்ணிகர்களுக்குங்கூட தாந்த்ரிகமே யிருக்கலாம் ’ என்று இசைகிற வசநத்திற்கு ஸாமஞ்ஜஸ்யமில்லையிறே. பிரணவத்தை ஒருகாலும் விட்டுப் பிரியாத அந்தணர்கட்கு அடியோடு ப்ரணவத்தை ஒழித்து மந்த்ராநுஸந்தாநமும் கர்மாநுஷ்டாநங்களும் செய்யலாமென்று சாஸ்த்ரம் கனவிலும் கருதுமோ ? கீழ் நாம் விவரித்தபடியே ‘ அபூர்வ ப்ரணவ ஸம்யோஜநமே வைதிகத்வஹேது ’ என்னும் பொருளே இசையில் இவ்வநுபபத்தி இடம் பெறாது. அபூர்வப்ரணவத்தையும் சேர்த்துக் காரியம் கொள்ளுபவர்களும், அவயவபூதப்ரணவமாத்ரத்தோடே காரியம்கொள்ளுபவர்களுமான இருவகை த்ரைவர்ணிகாதிகாரிகளும் ப்ரத்யக்ஷ லக்ஷ்யமா

யிருப்பதால், "வைதிகம் ப்ராஹ்மணாநாம் து" என்றது முந்தின அதிகாரிகள் பக்கலிலும், "ஸர்வேஷாம் தாந்த்ரிகம் து வா" என்றது பிந்தின அதிகாரிகள் பக்கலிலும் இடம் பெறுதலால் சாஸ்த்ரதாத்பர்யம் ஸங்கதமாகும். மதாந்தரஸ்தர்கள் சொல்லும் சிவபஞ்சாக்ஷரி முதலானவற்றில் ப்ரணவமொழிந்தவளவுக்கே மந்த்ரத்வமுள்ளதென்றும், அங்ஙனன்றிக்கே வைஷ்ணவங்களான வ்யாபகமந்த்ரங்களில் ப்ரணவ விசிஷ்டத்துக்கே மந்த்ரத்வமுள்ளதென்றும் ஏற்றமாகச் சொல்லிப் போருவதற்கெல்லாம் முரண்படுமாறு, மந்த்ரமாத்ரோக்திரிஷ்யதே என்பதற்கு அவயவபூதப்ரணவவிரஹிதாம்சம் பொருளென்பார் மௌாவநீயர்களாமத்தனை.

7. பாத்மோத்தரகண்டம் முதலானவற்றில் திருவஷ்டாக்ஷரப்ரசம்ஸை பண்ணுமிடங்களிலே, "இம்மந்திரத்தில் ஸ்வபாவமாகவே ப்ரணவம் சேர்ந்திருப்பதால் ப்ரணவமேறிடவேண்டிய மற்ற பகவந் மந்த்ரங்களிற்காட்டில் இது சிறந்தது" என்று சொல்லப்பட்டதேயன்றி, ப்ரணவரஹிதமான விதற்கு மந்த்ரத்வம் எங்கும் சொல்லப்படவில்லை. இன்னமும் இங்குச் சொல்லவேண்டுமவற்றை மேலே சொல்லுவோம்.

8. "ந ஸ்வரः" என்ற வசநத்திலும் ப்ரணவமாத்ரத்தை நிஷேதியாமல் ஸ்வராதிகள் பலவற்றையும் நிஷேதித்தமையால் இந்த நிஷேதம் எக்கருத்தினலாயது? என்று விமர்சிக்கவேண்டும். சாஸ்த்ரமானது அப்ரஸக்த ப்ரதிஷேதம் பண்ணமாட்டாதிறே. திருமந்த்ரத்தை ஸ்வரத்துடனும் அங்கங்களுடனும் ரிஷிச்சந்தோ தேவதாஸங்கீர்த்தநாதிகளாகிற இதர விதிகளுடனும் உச்சரிக்கவேண்டிய ப்ரஸக்தி எப்போது உண்டாகுமோ அப்போது அந்த ஸ்தலவிசேஷத்தை நோக்கின நிஷேதம் இது என்று அல்பஜ்ஞனும் அநாயாஸமாக அறியக்கூடியது. திருவிலச்சினை சாத்தும்போது மந்த்ரோபதேசம் செய்பவர்களும் ஸாதாரணமாக இஷ்டமானபோது திருமந்த்ரத்தை உச்சரிப்பவர்களும், 'ஸ்வரம்—அங்கம்—இதர விதிகள்' என்னுமிவற்றை நெஞ்சிலும் நினைப்பதில்லை. ஜபம் முதலிய சில காலவிசேஷங்களில் மாத்திரம் ஸ்வராங்க விதிகளை அநுஸரிக்கவேண்டிய நோக்கம் நேருகின்றது. அப்படிப்பட்ட காலவிசேஷங்களில் தான் தனிப்பட அபூர்வ ப்ரணவமும் விதிபலத்தால் சேர்க்கவேண்டியதாகிறது. அந்த ப்ரணவத்தையே சூத்ராதிவர்ஜநீயமாக சாஸ்த்ரம் சொல்லுகிறதென்னுமிடம் ப்ரகரணஸித்தம்.

9. முன்பின் ப்ரகரணங்களைப் பாராமலே ப்ரமாண வசநங்களுக்கு ஸஹஸா தாந்தோன்றிப் பொருள் சொல்லுமவர்கள்—"[illegible]" என்று [illegible]ப்ரகரணத்திலுள்ள வசநத்தைக் கேட்டுவைத்த ஒரு மருத்துவன் கண்ணோயுடன் வந்த வொரு ராஜகுமாரனுக்கு அங்ஙனே காதையறுத்து அபாநத்திலே சூடுபோட்டுப்பட்ட பாடு படுவார்களென்று ஞானப்பிரான் வார்த்தை.

10. "நஸ்வர: ப்ரணவோங்காரி" என்றதற்கு அவ்யவஹித பூர்வத்திலுள்ள வசநத்தையும் ரஹஸ்யத்ரயஸாரத்திலே ஸாத்யோபாய சோதநாதிகாரத்திலே தேசிகன் உதாஹரித்தருளினர்; அதாவது—"அஷ்டாக்ஷரஜப: சீர்ணம் ப்ரக்ருத்யைவ விசிஷ்யதே। நஸ்வர:......" இத்யாதி. இதில் ஜப: என்றதையும் ப்ரக்ருத்யைவ என்றதையும் வித்வான்கள் குறிக்கொள்ள வேணும். ஜபப்ரகரணவசநமென்பது ஸித்தமானவோபாதி, அந்த ஜபந்தன்னிலும் அவயவபூதப்ரணவவிசிஷ்ட மந்த்ராநுஸந்தாநத்திற்கு நிஷேதமில்லை யென்பதும் "ப்ரக்ருத்யைவ" என்பதனால் விளக்கப்பட்டதாம். ப்ரக்ருத்யைவ என்றது—அதிகப்படியான அம்சங்களின்றியே மந்த்ரமாகவுள்ளவளவு என்றபடி. அதாவது "ஓம் நமோ நாராயணாய" என்னுமளவாம். அஷ்டாக்ஷரத்தின் ப்ரக்ருதி இதுவிறே. "யதா க்ஷீரம் ப்ரக்ருத்யைவ மதுரம்" என்றால், பசுவின் பால் சர்க்கரைக் கலப்பின்றியே க்ஷீரமான தன்மையிலேயே இனிது என்று பொருள்படுவது போல இங்கும், 'அஷ்டாக்ஷரமான தன்மையினால் மாத்திரம்' என்று பொருள்பட்டிரா நின்றது.

11. இதற்குப் பூர்வபக்ஷிகள் உரையிடும் போது, ப்ரக்ருத்யைவ—ப்ரக்ருதியினால் மாத்திரம், அதாவது—நான்காம் வேற்றுமையில்லாமல்" என்று பொருள் வரைந்துள்ளார். இது ஒரு விசித்திரமான வ்யுத்பத்திபோலும். "நமோநாராயணேத்யுக்த்வா ச்வபாக: புநராகமத்" என்ற வராஹபுராணவசநத்தைக்கண்டதேசிகன், நம்பாடுவான் "நமோநாராயண" என்றவளவே சொன்னதாகத் திருவுள்ளம்பற்றி அத்ரைவர்ணிகர்களுக்கு அவ்வளவில்தான் அதிகாரமுள்ளதென்றுகொண்டு "திருமந்த்ரமாகிற எட்டுக்கண்ணுன கரும்பிலே வேர்ப்பற்றும் தலையாடையும் கழிந்தால் நடுவுள்ள அம்சம் ஸர்வோபஜீவ்யமாகிறுப்போலே" என்றும், "இது ப்ரணவ சதுர்த்திகளை யொழிந்தபோது ஸர்வாதிகாரம்" என்றும் ரஹஸ்யத்ரயஸாரத்திலும் ஸாரஸாரத்திலும் அருளிச்செய்ததில் பரிசயம்பண்ணிப்போந்த வாஸனையாலே இவர்களிப்படி உரைக்க நேர்ந்தது போலும்.

12. கைசிக மாஹாத்ம்யத்தில் "நமோநாராயணேத்யுக்த்வா" என்ற வசநமிருப்பது உண்மையே. வ்யாபகமந்த்ரங்களில் ப்ரதாநமான திருமந்த்ரத்தைச் சொன்னனென்பதைக் காட்ட வேண்டுவதே அங்கு விவக்ஷிதமாகையால் அதில் ஏகதேசமான அம்சத்தையிட்டுக் காட்டினன் மஹர்ஷி. "நாராயணேதி ந மாயமஹம் வக்ஷ்யாமி ந்யவே" என்றவிடத்து ஸ்தோத்ர பாஷ்யத்தில், "நாமோச்சாரணமாஹாத்ம்யம் ......" என்றெடுத்துக்காட்டியருளின நியாயத்தின்படி "ஓம் நமோ நாராயணாயேத்யுக்த்வா" என்று ரிஷி சொன்னதாகவேயாகும். இவ்விஷயத்தை விவேகிகட்குப் பரிபூர்ண த்ருப்தியுண்டாம்படி விவரித்துங்காட்டுவோம்.

13. நம்பாடுவானுக்கு ப்ரணவ சதுர்த்திகளை உச்சரிக்க அதிகாரமில்லாமை யினாலே 'நமோ நாராயண' என்றவளவே அவன் சொன்னான் என்று நினைப்ப வர்கள், இவனிலும் தண்ணியனான கண்டாகர்ணபிசாசனுடைய வ்ருத்தாந் தத்தை ஹரிவம்சத்தில் விஷ்ணுபர்வத்தில் நூற்றிருபத்தினான்காமத்யாயத் திலே காணக்கடவர்கள். "ஓம் நமோ நாராயணாய விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே" என்று அவன் தன் வாயால் சொன்னதாக அங்கே ஸ்பஷ்டமாகவுள்ளது. அதற்கு மேலும் "உதிஷ்ட்ஹந்து விமாநஸ்தா ஜாத்யா ஹீநா நதீர்த்தகா:" என்று தொடங்கி "ப்ராஹ்மாந் ப்ரணவம் ஸஹா। ப்ரணவம் யாவகம் த்வா யாஜ்யம் ப்ரஹதி நிஷ்க்ரீதா:॥" இத்யாதியாலே ப்ரணவோச்சாரணம் பண்ணிற் றாகவும் சொல்லிற்று. இந்த கண்டாகர்ணன் ச்வபசனிற்காட்டிலும் அத்யந்த நிக்ருஷ்டனென்பதும், செந்நாய்களை மேய்க்கும் பரமஹீநசண்டாள ஜாதியிற் பிறந்தவனென்பதும் அந்த அத்யாயத்திலேயே ஸ்பஷ்டோக்தமா யிருப்பதைக் காணலாம். ஜாதியாலும் நடத்தைகளாலும் இவனிலுந் தண்ணியனில்லை யென்னப்பட்ட இவன் ஸப்ரணவமந்த்ரோச்சாரணம் பண்ணினானென்று ப்ர மாணஸித்தமாயிருக்கும்போது இவனில் சிறந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸாலே ஆச்ரயிக் கப்பெற்ற பெருமை வாய்ந்தவனும் பரமபவித்திரனுமான நம்பாடுவான் ப்ரணவ விரஹிதமாக உச்சரித்தானென்று இதனை ஒரு விஷயமாகச் சொல்ல வருமவர் கள் விலக்ஷண ஞானிகளேயாவர்.

14. நம்பாடுவான் உச்சரித்தது மூலமந்த்ரமாகில், பூர்வபக்ஷிகள் சொல்லு கிறபடி அவ்வளவு அம்சமே ஸர்வாதிகாரமாகில், "இதுதான் ப்ரணவசதுர்த்தி களை யொழிந்தபோது ஸர்வாதிகாரமாம்" என்ற மஹானுடைய வாக்கியமும் பரிபாலநீயமாகில், இவர்களுடைய ஸ்த்ரீசூத்ர சிஷ்யோபதேச பரம்பரையிலே 'நமோ நாராயண' என்றவளவே உபதிஷ்டமாக வரவேணுமேயன்றி, வேறொ ரெழுத்தை முன்னே கூட்டிக்கொண்டும் விலக்கப்பட்ட சதுர்த்தியை விலக்காம லும் உபதேசித்துவருவது சாஸ்த்ரீயமாகுமோ? அம் என்று கூட்டிக் கொள்வ தற்கு ஏதோ ஒரு வழி இவர்கள் காட்டக்கூடுமாயினும் சதுர்த்தியை விலக்கா மைக்கு ஹேது சொல்லப்போகாதிறே. கரும்பிலே வேர்ப்பற்றைவிடத் தலை யாடையைக் கழிக்கவேண்டியதிறே முக்கியம். அதனையும் கழிக்கும்படி வசநங்க ளுக்குப் பொருள் கூறிவிட்டுக் கழியாதமைதென்னோ? ப்ரமாணாந்தரத்தாலே சதுர்த்தி ப்ராப்தமாகிறதென்னில்; ப்ரணவத்திற்கு மாத்திரம் அங்ஙனே ப்ராப்தி உண்டாகக் கூடாதென்று சாபமோ? "யச்சாஸ்யோஸ்மாகோஷ: பரிஹாரோஸாவிவா ஸஜ:" இத்யாதி.

15. "நமோநாராயணேத்யுக்த்வா" என்ற வசனத்திற்கு இவர்கள் இங் ஙனே அர்த்தசிக்ஷை பண்ணும்போது, 1. "நானும் சொன்னேன் நமருமுரை மின் நமோ நாராயணமே" என்ற திருமங்கைமன்னனருளிச்செயலைக்கொண்டு 'நமோ நாராயணம்' என்று இரண்டாம் வேற்றுமையீற்றதாகவே கலியன்

1. பெரிய திருமொழி 6—10—6.

திருமந்த்ராநுஸந்தாநம் செய்தருளினர்; அவர் தாம் "நமருமுரைமின்" என்கையாலே அவருடைய ஸம்பந்தம்பெற்ற ஸ்ரீவைஷ்ணவர்கட்கெல்லாம் அப்படியே த்விதீயாந்தமாகவே உரைப்பதே ஒக்கும்; வேர்ப்பற்றும் தலையாடையுங் கழித்தால் போராது; இரண்டாம் வேற்றுமை யுருபையும் ஏற்றிச் சொல்லவேணும்; நமரும் என்ற பதஸ்வாரஸ்யத்தால் ✻ கலியனுரை குடிகொண்ட கருத்துடைய த்ரைவர்ணிகர்களுக்கும் இதுவே சரணம்–என்று சொல்லவேண்டியதும் ப்ராப்தமேயாம். இல்லையாகில் ஆழ்வார் நியமநத்தை அதிலங்கித்தபடியாமிறே. அன்றியும், பெரியாழ்வார் "வாயினால் நமோ நாரணவென்று" என்றருளிச்செய்கையாலே ப்ராஹ்மணோத்தமரான இவருடைய ஸ்ரீஸூக்தியே அந்தணர்க்கு உபஜீவ்யமென்றுகொண்டு, அந்தணர்களனைவரும் "நமோ நாரண" என்று பஞ்சாக்ஷரீமாத்ரம் சொல்லலாமேயன்றி, மற்றொருபடியுஞ் சொல்லலாகாது என்னும் உபந்யாஸமும் இனி ஆமோதிக்க அர்ஹமேயாம். உள்ள அக்ஷரங்களை மீறிப் பொருள்கொள்ள வொண்ணாதிறே. திருப்பல்லாண்டில் நாலாம்பாட்டிலே "நமோநாராயணாயவென்று" என்கிறார்; பதினோராம் பாட்டில் "நமோ நாராயணாவென்று" என்கிறார்; இன்னபடி வக்தவ்யமென்பது ஆழ்வார்தமக்கே நிஷ்க்ருஷ்டமாகவில்லையே! என்கிற சில செருக்கருடைய குத்ஸித வாதமும் இனி வெற்றிபெற்றதேயாம்.

16. ப்ரமாணைகசரணராய் அநுஷ்டிக்குமிவர்கள், ப்ரணவத்தை விட்டொழிக்கும்படி விதித்த சாஸ்த்ரத்தின்படி அதனை விட்டொழித்தும், அந்த ஸ்தாநத்திலே அம் என்று கூட்டிக்கொள்ளும்படி விதித்ததாகத் தாங்கள் பொருள் கொள்ளப்பெற்ற வசநத்தின்படி அம் என்று கூட்டிக்கொண்டும் உபதேசிப்பது போல, சதுர்த்தியையும் விட்டொழிக்கும்படி விதித்ததாகத் தாங்களே காட்டிக்கொள்ளுகிற வசநத்தையும் சிரமேற்கொண்டு அதன்படியே சதுர்த்தியையும் விட்டுநீக்கி "அந்நமோநாராயண!" என்றிங்ஙனே உபதேசித்து வருவாராயின் சாஸ்த்ராநுவர்த்தநம் நன்கு தேறுவதுபோல அர்த்த ஸாமஞ்ஜஸ்யமும் அழகிதாகத் தேறும். எங்ஙனேயென்னில்; "தாராதிஃ-க்ஷயெ ஜக்ஷி! ஸீஜாதிஃ-க்ஷயெ தயா" என்று பராசரஸம்ஹிதையில் மூன்றுமத்யாயத்தில்–ப்ரணவத்தை முன்னிட்டு உச்சரிப்பது முமுக்ஷுக்களுக்கென்றும், அம் என்கிற பீஜாக்ஷரத்தை முன்னிட்டு உச்சரிப்பது அந்நார்த்திகளுக்கென்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையாலே, அதன்படியே 'அந்நமோ' என்கிறவர்கள் நாராயண! என்று ஸம்போதநமாகச் சொன்னாலிறே பொருள் பொருந்துவது. சதுர்த்தி அந்வயிக்கமாட்டாதிறே.

17. விவேகிகாள்! "ஶ்ரத்தைவ காரணம் ஸம்ஹா அஷ்டாக்ஷரவிதௌ" என்றபடி திருவஷ்டாக்ஷரம் சொல்லுகைக்கு ச்ரத்தாமாத்ரமே அதிகாரஸம்பத்து; அஃது உள்ளாரனைவரும் தூர்யகோஷங்களுடன் "ஓம் நமோ நாராயணாய" என்று ஓதலாம்; இதற்கு எந்த வசநமும் அபவாதமாகப் புகாது. ஆகையால் "அஷ்டாக்ஷரஜபஸ் ஸ்த்ரீணாம் ப்ரக்ருத்யைவ விதீயதே"

என்ற வசநத்திலுள்ள 'ப்ரக்ருத்யைவ' என்பதற்குப் பிறர் பகரும் பொருளைச் செவியேற்கவும் வேண்டா; அதுவே பொருளென்னில்; நமஸ்ஸிலுங்கூட ஸ்த்ரீசூத்ரர்களுக்கு அதிகாரமில்லையென்றிசையவேண்டிவரும். ஏனென்னில், அவர்கள் சொல்லுகிறபடி "ந ஸ்வரः ப்ரணவः" என்றதனாலே ஓங்காரம் தள்ளுண்டது; 'ப்ரக்ருத்யா' என்றதனாலே சதுர்த்தி தள்ளுண்டது; ஏவகாரத்தாலே நமः பதம் தள்ளுண்டது. இனி சேஷித்தது 'நாராயண' என்னுமளவேயிறே; இதுதன்னிலும் "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்! எண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணமே" என்ற ஆழ்வாரருளிச்செயலை ப்ரவர்த்திப்பித்தால், ரகரத்தின்மேலுள்ள நெடிலும் யகரமும் தள்ளுண்டுபோய், "பஞ்ச பாண்டவர்கள் எனக்குத் தெரியாதா கட்டிற்கால் போலே" என்ற கதையாய் மூன்றெழுத்தே அஷ்டாக்ஷர மஹாமந்த்ரஸ்தாநத்திலே வந்துநிற்குமாய்த்து.

18. ஆனபின்பு "நஸ்வரः ப்ரணவः" இத்யாதிகளிலுள்ள ப்ரணவநிஷேதம் ஜபாதிஸமயப்ராப்தமான அபூர்வப்ரணவபரமேயென்னுமிடம் நிர்விவாதம். "ஸர்வஸ் ஸப்ரணவோ ஜப்யः" என்று தேசிகனுதாஹரித்த வசநத்தினால்—அவயவத்வேந ப்ரணவஸஹிதமாகவோ தத்ரஹிதமாகவோவுள்ள ஸகலமந்த்ரங்களுக்கும் ஜபஸமயத்தில் ஜபாதிசயஸித்திக்காக அபூர்வப்ரணவஸம்யோஜநம் விதிக்கப்படாநின்றதிறே. ஸ்ரீநாரதீய அஷ்டாக்ஷர ப்ரஹ்மவித்யையிலும் 'நஸ்வரः' இத்யாதிக்கு முன்னே இந்த அபூர்வப்ரணவ ஸம்யோஜநவிதியும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காணவுரியதே.

19. [illegible]. இந்த அபூர்வப்ரணவமில்லாமல் மந்த்ரஜபம் கூடாதென்று நிர்ப்பந்தரூபமான விதி கிடையாது. மந்த்ரசரீரமுள்ளபடியே கொண்டு ஜபிக்கவுங்கூடும். அதில் ப்ரத்யவாயம் சொல்லிற்றில்லை. 'ஸப்ரணவ ஜபத்தில் ஏற்றமுண்டு; அதிற்காட்டில் அப்ரணவஜபம் ஊனமானது' என்னுமத்தனையே சாஸ்த்ர தாத்பர்யவிஷயம். ப்ரயோஜநார்த்திகளுக்கே அந்த நிர்ப்பந்தமுள்ளது. இதற்குமேல் ஒன்று சொல்லக்கூடும்;—ஜபாதிசயஸித்திக்காக ப்ரணவம் சேர்த்துக்கொள்ள விதித்தது உண்மையே; ஆனால், இயற்கையாகவே ப்ரணவம் கூடியுள்ள மந்த்ரங்களிலே இந்த விதி இடம்பெற ப்ராப்தியில்லை; அடியோடு ப்ரணவ ஸம்பந்தமற்ற மந்த்ரங்களில் மாத்திரமே இந்த விதி இடம்பெறவுரியது—என்னலாம். இஃது அவிசாரிதரமணீயம்; "ஸர்வஸ் ஸப்ரணவோ ஜப்யः" என்ற விதிவசநம் அஷ்டாக்ஷரப்ரஹ்மவித்யையிலேயன்றோ உள்ளது. அவிசேஷேண ப்ரயுக்தமான ஸர்வசப்தத்தை ஸங்கோசிப்பிக்கவல்ல ப்ரமாணம் ஈஷத்துமில்லையே. அன்றியும், அர்த்தத்தின் பூர்த்திக்காக மந்த்ராவயவமாக அமைந்துள்ள ப்ரணவத்திற்காட்டில் ஜபாதிசயஸம்பாதநார்த்தமாகத் தனியே வரும் ப்ரணவம் விபிந்நப்ரயோஜநமுடையதாக சாஸ்த்ர ஸித்தமாகையாலே இதனால் அது சரிதார்த்தமாகுமென்னப் போகாது. மந்த்ரங்களுடைய ஆதியில் மாத்திரமன்றிக்கே அந்தத்திலும் ப்ரணவத்தைச் சேர்க்கவேணுமென்றும், அதுதன்னிலும் முகப்பில் பல ப்ரணவங்களைச் சேர்க்கவேணுமென்றும் விதிக்

கிற சாஸ்த்ரங்களையும் நோக்கவேணும். காடகஶ்ருதியின் முடிவான அக்ஷரம் ஓம் என்றே யிருக்கச்செய்தேயும் வேதஸமாபநாங்கமாக உச்சரிக்கவேண்டிய ப்ரணவமும் இதனால் சரிதார்த்தமாயிற்றென்று சொல்லுவாருண்டோ? தனிப் படவும் ஓமென்று சொல்லாதாருண்டோ?

20 ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையின் த்விதீய பரிச்சேதத்தில்— "ஏதை: க்ரமாத்தீர்ணபதைர்வாக்யம் தத்பூர்வம் ஸ்திதம்। ப்ரணவத்வயம் ஆதாவந்தே ச த்ரீயதாம் ச சத்வார: ப்ரணவா:" என்று நான்கு ப்ரணவங்கள் விதிக்கப்படுகின்றன. மேற்குறித்த ஸம்ஹிதையின் ஆறுவது பரிச்சேதத்தில், "ஸஹாநா வஸ்து வக்தவ்ய வாசினா த்வந்த்வஜம்। ப்ரக்ஷாத்யக்ஷரஸமேதேந ப்ரணவாத்யந்தகேந து." என்ற வசநத்தாலும், அவ்விடத்திலேயே மேலே "உத்தாய ஸர்வஜ்ஞம் து ப்ரணவத்வயாந்விதம்। ஜாஹ்யாதாஹ்ருதீநாம் ச ஸஹஸ்ரம் ஸததம் ஸதா॥" என்ற வசநத்தாலும்—இயற்கையாகவே ப்ரணவத்தோடு கூடிய அஷ்டாக்ஷரத்வாதசாக்ஷரங்களுக்கே ஆதியந்தங்களில் ப்ரணவங்கள் சேர்க்கும் படியாகவும் முன்னே நான்கு ப்ரணவங்களைச் சேர்க்கும்படியாகவும் ஸ்பஷ்ட மாக விதிக்கப்பட்டது. மேற்குறித்த வசநங்களில் "ப்ரணவத்வய" என்ற ஸ்தாநத்திலே "ப்ரணவத்ரய" என்று அச்சுப்பிரதிகளிற் பாடங் காண்கி கிறது. இதுதன்னிலும் அநிஷ்டமொன்றுமில்லை. நான்காகிலென்? இரண் டாகிலென்? ஸப்ரணவமந்த்ரங்களிலும் அபூர்வப்ரணவஸம்யோஜநம் விஹித மென்னுமிடம் ஸித்தமிறே.

21. சாண்டில்ய விசிஷ்ட பரமதர்ம சாஸ்த்ரம், இதிஹாஸஸமுச்சயம், லக்ஷ் மீதந்த்ரம் முதலானவை பலவற்றிலும் இங்ஙனே சொல்லப்பட்டன பரஸ்ஸஹ ஸ்ரமுண்டு. விரிப்பிற்பெருகும். திருவஷ்டாக்ஷரத்திலுள்ள ஒவ்வோரக்ஷரத்தை யுங்கொண்டு ஹோமபூஜாதிகள் பண்ணும்போது அதில் முதலக்ஷரமான ப்ரண வத்திற்கும் ஆதியந்தங்களில், வேறொரு ப்ரணவத்தைச் சேர்த்தே விநியோகம் சாஸ்த்ரத்தாலும் அநுஷ்டாநத்தாலும் ஸித்தம். ஆகையாலே திருவஷ்டா க்ஷரம் இயற்கையாகவே ஸப்ரணவமாயிருந்தாலும் ஜபாதிசயஸித்திக்காக சாஸ்த்ரபலத்தாலே அபூர்வப்ரணவ ஸம்யோஜநத்தை அபேக்ஷித்தேயிருக்கும். அந்த ப்ரணவமேயாய்த்து வைதிகப்ரணவம்; ஙஸ்வர: ப்ரணவ:" இத்யாதி களால் நிஷேதிக்கப்படுவது அதுவே; சேஷஸம்ஹிதை, பௌஷ்கர ஸம்ஹிதை முதலானவற்றிலும் இங்ஙனே ஸ்த்ரீசூத்ராதிகளுக்கு ப்ரணவநிஷேதம் செய்யப் பட்டுள்ளது; எந்த ப்ரணவம் நிஷேதிக்கப்படுகிறதென்பதும் அவை தன்னி லேயே ஸாவ்யக்தமாக உபபாதிக்கப்பட்டுள்ளது. அதனை அடியொற்றியே இங்கு நாம் விவரித்ததும்.

22. காடகம் உருச்சொல்லாநின்றவொரு சிஷ்யனை நோக்கி குருவானவர் 'கடைசி பஞ்சாதியை ஓங்காரணம்பண்ணி முடித்துவிடாதே' என விதித்தால்

இந்த விதியின் கருத்து எதுவாகும்? அந்தப் பஞ்சாதியில் இயற்கையாகவே அவயவமாகி அவஸாநத்திலே உள்ள ஓம் என்பதைச் சொல்லாதே யென்று விதிப்பதோ குருவுக்குத் தாத்பர்யம்? "ப்ரஹ்மணஃ ப்ரணவம் குர்யாத் ஆதாவந்தே ச ஸர்வதா" என்ற விதிபலப்ராப்தமான தனிப்பட்ட ப்ரணவோச்சாரணத்தை நிஷேதிக்கிறார் ஒரு கார்யார்த்தமாக—என்றிறே கொள்ளக்கடவது "[illegible] ॥".

23. ஸ்ரீபௌஷ்கரஸம்ஹிதையிலே இந்த உபபாதநங்கள் பண்ணித்தலைக் கட்டினபின், வ்யாபகமந்த்ரங்கள் மூன்றிலும் நான்கு வர்ணத்தார்க்கும் மந்த்ர சரீரத்திலே துல்யமான அதிகாரமுண்டென்னுமிடம், "[illegible] ॥ [illegible] । [illegible] ॥ [illegible] । [illegible] ॥ [illegible] । [illegible]" இத்யாதி ச்லோகங்களால் விளக்கப்பட்டது. இதில் "பக்தாநாம்" என்றவிசேஷணமும் "நாங்யயாஜிநாம்" என்றவிசேஷணமுமே குறிக்கொள்ள வேண்டியவை. மந்த்ரோச்சாரணத்திற்கு இன்றியமையாத அதிகார ஸம்பத்து இவ்வளவே. இந்த ஸம்பத்து இல்லையாகில் த்ரைவர்ணிகத்வமும் அப்ரயோஜக மென்பதே ஸகலசாஸ்த்ரதாத்பர்யம். இது மஹாபாரதத்திலும் வ்யக்தமென்னு மிடத்தை மேலே விரித்துரைப்போம்.

24. மந்த்ரத்திற்கு அவயவமான ப்ரணவத்தில் ஸ்த்ரீசூத்ராதிகளுக்கு அதிகாரமில்லையென்று ப்ரமிக்குமவர்கள் "ஸ்த்ரீணும் து சூத்ரஜாதீநாம் மந்த்ரமாத் ரோக்திரிஷ்யதே" என்றபதத்தை ஸ்வாநுகூலமாக நயிப்பிக்கவேண்டி, ப்ரணவமொழிந்த மந்த்ரசேஷத்திற்கும் மந்த்ரத்வமுண்டென்றும், ப்ரணவ ஸாஹித்யத்தால் விளையக்கூடிய பலன் அதையொழிந்த அம்சத்தாலும் நன்கு ஸித்திக்கக் கூடியதேயென்றும் கருதி "[illegible] । [illegible] ॥" என்ற வசநத்தை மேற்கோளாகக்காட்டுவர். இதுவும் ஒரு விலக்ஷண ப்ரமமேயாம். "நமோ நாராயணயேதி மந்த்ரஃ" என்றது ப்ரணவவிசிஷ்ட மந்த்ரபரமேயொழிய மந்த்ர சேஷ மாத்ரபரமன்று. ஏகதேசக்ரஹணமுகத்தாலே முழுதும் க்ரஹித்தவாறு கிற ப்ரக்ரியை ஸகலசாஸ்த்ரங்களிலுமுள்ளது; மந்த்ர சாஸ்த்ரங்களிலோ விசேஷமாகவுள்ளது. ரஹஸ்யதமமான மந்த்ரங்களின் ஆநுபூர்வியை யிடறு விட்டுமொழிதல் வேண்டாவென்று பலவிடங்களில் மறைத்துச் சொல்லிப்போரு வதைக் காணுகின்றோமிறே. "நான் கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்று திருமங்கையாழ்வார் ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்காற் சொன்னது திருவஷ்டாக்ஷரவிஷய மென்றிறே ஆசார்யர்களனைவரும் ஒருமிட றாக நிர்வஹிப்பது. தேசிகனும் "திருவஷ்டாக்ஷரம் ஸகல பலப்ரதமென்னு

மிடம் குலந்தருமென்கிற பாட்டிலே வ்யக்தம்" என்றருளிச் செய்தார். இப்படி யருளிச்செய்த ஆசார்யர்களின் திருவுள்ளத்தை நோக்குங்கால், ஏகதேச கீர்த் தநமும் பூர்ண கீர்த்தநபர்யாயமென்றிறே விளங்குவது.

25. "ஸாம்ஸாரிகோபி யஜ்ஞாத்மா நாராயணபராயண:। நமோ நாரா யணாயேதி ஜபந்நஷ்டாக்ஷரம் ஜபேத்॥" என்றும், "க்ஷீணாவா யாநாவா திஷ்டந் யத்ர க்வசந வா। நமோ நாராயணாயேதி மந்த்ரைகசரணா வயம்॥" என்றும் ரஹஸ்யத்ரயஸாரமூலமந்த்ராதிகாரத்தில் உதாஹரித்த வச நங்களைக் கொண்டும் தெளிவு பெறலாம். புண்டரீகன் 'நமோ நாராயணாய' என்று அஷ்டாக்ஷரத்தை ஜபித்தானென்னும்போது ப்ரணவத்தைக்கூட்டியே யிறே நிர்வஹிக்கவேண்டும். "நமோ நாராயணாயேதி மந்த்ரைகசரணா வயம்" என்றவிடத்திலும் ப்ரணவ மொழிந்த மந்த்ரம் விவக்ஷிதமாக ப்ரஸக்தியில்லா மையாலே இதுவும் ஸம்பூர்ணமந்த்ரசரீரோபலக்ஷகமென்ன வேண்டிற்று. "ஆர்தா விஷண்ணா:" என்ற ச்லோகத்தில் "ஸங்கீர்த்ய நாராயணசப்தமாத்ரம்" என்றதையும் திருமந்த்ர பர்யாயமாகச் சில ஆசார்யர்கள் யோஜிக்கக் காண்கி றோம். இப்படியிருக்க, "நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:" என்றது பூர்ண மந்த்ரபரமன்றென்றும் மந்த்ரசேஷமாத்ரபரமென்றும் கூசாதே கூறுமவர்கள் ப்ரமாணகதி அறியாதாராமித்தனை.

26. "ஆத்யம் யத் த்ர்யக்ஷரம் ப்ரஹ்ம த்ரயீ யஸ்மிந் ப்ரதிஷ்டிதா। ஸ குஹ்யோந்யஸ்த்ரிவ்ருத்வேதோ யஸ்தம் வேத ஸ வேதவித்॥" என்ற மநுஸ்ம்ருதி [11-265] வசநத்தாலும் மற்றும் பல ப்ரமாணங்களாலும் ப்ரணவம் அத்யந்த ரஹஸ்ய மந்த்ரமென்று சொல்லப்படுகையாலே அவலீலையாக அதனை வெளியிடலாகா தென்ற கருத்தினால் பலவிடங்களில் மறைத்திருப்பது கொண்டே ப்ரணவ மொழிந்தவளவுக்கும் மந்த்ரத்வ பூர்த்தியுண்டென்று சொல்லப்பார்ப்பவர் களுக்கு ஒரு சாஸ்த்ரமும் அநுகூலமாக நிற்காது.

27. "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்!, எண்ணுந்திருநாமம் திண்ணம் நாரணமே" என்ற அருளிச்செயலில் நாரணமென்றவளவையே கொண்டு திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஆறாயிரப்படியில் "எம்பெருமான் திருவடிகளைப் பெறவேணுமென்றிருப்பார்! திருமந்த்ரத்தையே சொல்லுங் கோள்" என்று வியாக்கியானம்செய்தருளுகிறார். ஆறாயிரப்படிக்கு உரையிட்ட ஸாக்ஷாத்ஸ்வாமியும் "திருமந்த்ரத்தை யென்றது—ஸாக்ஷாத்மூலமந்த்ரத்தையே சொன்னபடி." என்றும் விவரித்தருளினர். பதினெண்ணாயிரமிட்ட பரகால ஸ்வாமியும் "இது அஷ்டாக்ஷரத்தைக் காட்டும்" என்றுரைத்தார். இங்ஙனே பல்லாயிரமெடுத்துக் காட்டவல்லோம். சில காரணங்களைக்கருதித் திருவஷ்டா க்ஷரஸ்தாநத்திலே நாரணம் என்றார் என்று ஆசார்யர்கள் நிர்வஹித்த கணக்கிலே மந்த்ரசேஷமாத்ரோக்தி ஸ்தலங்களும் எளிதாக நிர்வஹிக்கலாயிருக்க, க்ருஹீத க்ராஹிகளாய்ப் பேசுமவர்களைப்பற்ற வருந்த வேண்டுமத்தனை.

**28.** விஷ்ணுகாயத்ரியில் 'நாராயணாய' இத்யாதிபதங்கள் அந்தந்தத் திருநாமங்களோடு இயைந்த பரிபூர்ண மந்த்ர சரீரத்துக்கு எப்படி உபலக்ஷணமோ, அப்படியே இவைகளும். ஆனதுபற்றியே நாராயண நாமமாத்ரப்ரஸங்கமுள்ள விடங்களையும் திருவஷ்டாக்ஷரமஹா மந்த்ரத்தின் பெருமைபேசுகையிலே சொருகாநின்றார்கள் தேசிகப்ரப்ருதிகள். நாராயணபதத்தில் சில அக்ஷரங்கள் குறைந்துகிடக்குமிடங்களையும் நம பதமும் சதுர்த்தியுமில்லாதவிடங்களையுங் கூட திருவஷ்டாக்ஷரக்ராஹகமாக ஆசார்யர்கள் அருளிச்செய்யாநிற்கும்போது ப்ரணவமாத்ர விஹீநமாயுள்ள விடங்களுக்கு இது கைமுத்யந்யாயஸித்தமாம். ப்ரணவம் ரஹஸ்யதமம் என்பதுபற்றி அதனை விசிஷ்ய மறைத்திடுதல் உண்டு.

**29.** இப்படி ரஹஸ்யதமமானதை சூத்ராதிகளுக்கு உபதேசிக்கவடுக்குமோ வென்னில்; ரஹஸ்யம் ரஹஸ்யமென்று சொல்லப்படுவதெல்லாம் அஸூயையுள்ளவர்களும் ச்ரத்தையற்றவர்களும் வழிப்போக்கர்களுமான அஸத்துக்களுக்குச் செவிப்படாவண்ணம் மறைத்திடவேணுமென்பதேயன்றி ஆஸ்திகர்களாய் "ஸத்புத்திஸ் ஸாதுஸேவீ" என்ற தேசிகஸூக்திப்படியே குணசாலிகளாயமைந்த ஸச்சிஷ்யர்களுக்கும் ஒளித்திடவேணு மென்றதன்று. ஆனது பற்றியே "ஶ்ரத்தைவகாரணம் ஸம்ஸாரஷ்டாக்ஷர ஸங்க்ரஹே" = ' திருவஷ்டாக்ஷரத்தைப் பற்றுகைக்கு நெஞ்சுகனிந்திருக்கையொன்றே காரணம்' என்றது. இங்ஙனல்லவாகில் ரஹஸ்யதமங்களான ஸகல மந்த்ரங்களிற்காட்டிலும் மிகச்சிறந்ததான மந்த்ரரத்நமென்னும் த்வயத்தையே முந்துறமுன்னம் ஸ்த்ரீ சூத்ராதிகளுக்கு மறைத்திட வேண்டிற்றும். ததுபதேசத்திற்கு யோக்யர்களாமவ ரனைவரும் யதோக்தமான திருமந்த்ரத்தின் உபதேசம் பெறவும் உரியரேயாவர்.

**30.** ஸப்தாக்ஷரத்திற்கே மந்த்ரத்வபூர்த்தியுண்டென்று கொள்ளில், பீஜாக்ஷரத்தைக்கூட்டி அஷ்டாக்ஷரமாக்கித் தாங்கள் உபதேசித்துவருவது வீண் ப்ரயாஸமேயாம் இதற்குச் சிலர் சொல்லுவர்கள்:—சாஸ்த்ரம் காட்டினவழியே செய்யக்கடவோமாகையால் "தத்ரோத்தராயணஸ்யாதி ஸ்த்ரீசூத்ராணாம் விஷேஷதஃ। பீஜஷடாக்ஷரஸ்யாஸ்ய தத்ராஷ்டாக்ஷரதா ஸவேத்॥" என்று இங்ஙனே சாஸ்த்ரம் விதிக்கையாலே விதிபாரதந்த்ரர்களாய் அம்பீஜத்தைக்கூட்டிச் சொல்லுகிறோமத்தனைபோக்கித் தாந்தோன்றிகளாய்ச் செய்கிறோமல்லோம் என்பர்கள்.

**31.** உதாஹரித்த ப்ரமாணத்தின் பொருளை உள்ளபடி உணராதே கலங்கிநிற்குமவர்களின் கலக்கத்தைப் போக்கித் தெளிவு பெறுத்துவோம் கேண்மின். "தத்ரோத்தராயணஸ்யாதி:" என்ற நாரதீய வசநத்திற்குப் பூர்வபக்ஷிகள் பகரும் பொருளாவது—ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு ப்ரணவம் வர்ஜநீயமாகிறபடியாலே ஓரெழுத்துக் குறைவதனால் எட்டெழுத்து தேறவில்லையே யென்னில், அம்பீஜத்தைக் கூட்டிக்கொண்டால் அஷ்டாக்ஷரமாய் விடுகிறது என்றும். இங்ஙனே பொருளாகில், பூர்வ மீமாம்ஸையில் முதலத்யாயத்தில் மூன்றும் பாதத்தில்

இரண்டாவதான ச்ருதிப்ராபல்யாதிகரணந்யாயத்தின்படி இந்த வசநமே அப்ரமாணமென்றொழிக்க வேண்டிற்றாகும். "ஓமித்யேகாக்ஷரம்। நம இதி த்வே அக்ஷரே। நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி। ஏதத்வை நாராயணஸ்யாஷ்டாக்ஷரம் பதம்।" என்று வேதத்திலே 'இதுவன்றோ அஷ்டாக்ஷரம்' என்று ஆநுபூர்வியைக்காட்டி ப்ரஸித்தவந்நிர்த்தேசம் பண்ணியிருக்க, அதற்கு முரண்படுமாறு வேறுவகையாக அஷ்டாக்ஷரத்வம் சொல்லுகிற ஸ்ம்ருதி எங்ஙனே ப்ரமாணமாகும். "ஔதும்பரீம் ஸ்ப்ருஷ்ட்வோத்காயேத்" என்ற ப்ரத்யக்ஷ ச்ருதிக்கு விருத்தமான "ஔதும்பரீ ஸர்வா வேஷ்டயிதவ்யா" என்ற ஸ்ம்ருதி அப்ரமாணமென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டதின்றே மீமாம்ஸையில். அந்த ந்யாயத்தாலே, வேதவிருத்தமான "தத்ரோத்தராயணஸ்யாதிः" என்ற ஸ்ம்ருதி வசநமும் வேதவிருத்தமென்னும் காரணத்தாலேயே அப்ரமாணமாயொழியத் தட்டுண்டோ?

32. இனி அஷ்டகாதிஸ்ம்ருதிகளிற்போலே மூலவேதத்தை அநுமானிக்கிறோமென்னவுமொண்ணாது. ப்ரத்யக்ஷச்ருதிக்கு விரோதமில்லாதவிடத்திலன்றோ மூலவேதாநுமாநமென்பது. வேதந்தானும் பரஸ்பரவிருத்தமாக ஓதிவைக்குமோ?

33. 'த்ரைவர்ணிகர்களுக்கு இவ்வகையான அஷ்டாக்ஷரம், மற்றையோர்க்கு அவ்வகையான அஷ்டாக்ஷரம்' என்று அதிகாரிபேதத்தாலே இரண்டுபடியாக ஓதிவைக்குமளவில், இது பரஸ்பரவிருத்தமென்னப்போமோ? என்னில்; ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு ப்ரணவத்தில் அதிகாரமில்லையென்று வேதபுருஷன் நெஞ்சிலும் நினையாதிருக்க, ப்ரத்யுத அதிகாரமுண்டென்றே ஓதியிருக்க, இந்த அப்ரஸக்த ப்ரஸஞ்ஜநங்கள் ஏதுக்கு? ஆனால், ப்ரணவத்தில் ஸ்த்ரீ சூத்ரர்களுக்கும் அதிகாரம் அக்ஷதமென்று வேதபுருஷன் ஓதினனென்பது உன்னால் ஸாதிக்கப்போமோ? என்று கேட்பீர்கள்; கேண்மின்; இந்திரஜாலமன்று; அப்படிக்கு மெய்யே வேதம் காட்டுகிறோம் காண்மின்.

34. தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில் இரண்டாவது அஷ்டகத்தில் எட்டாம் ப்ரச்நத்தில் "அக்ஷரம் ப்ரதமஜா ருதஸ்ய" என்ற எட்டாவது அநுவாகத்தில், "ஏகாக்ஷராம் த்விபதாம் ஷட்பதாம் ச। வாசம் தேவா உபஜீவந்தி விஶ்வே। (2.) வாசம் கந்தர்வா: பஶவோ மநுஷ்யா:।" என்று ஓதப்பட்டது. இதில் "ஏகாக்ஷராம்" என்றது ப்ரணவபரமென்றும், த்விபதாம் என்றது 'நமோ நாராயணாய' என்ற மந்த்ர சேஷபரமென்றும், ஷட்பதாம் என்றது த்வயபரமென்றும் ரஹஸ்யத்ரய மீமாம்ஸா பாஷ்யாதிகளிலே வியாக்கியானிக்கப்பட்டது. வேறு ஸம்ப்ரதாயஸ்தருடைய வியாக்கியானம் நமக்கு அநாதரணீயமென்பீர்களின்று ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார வ்யாக்க்யாநமான ஸாரப்ரகாசிகையிலும் மூலமந்த்ராதிகாரத்திலே இது மேற்கோளாக ஆதரிக்கப்பட்டது. இந்த வேதவாக்கியத்திற்கு

வித்யாரண்ய பாஷ்யத்திலே அர்த்தபேதம் காணப்படினும் ப்ரக்ருதத்தில் விவக்ஷிதமான வளவுக்கு ஹாநியில்லை; ஏகாக்ஷராம் என்றதற்கு "ப்ரணவரூபாம்" என்றே பாஷ்யமிட்டார்.

**35.** மேலும் வித்யாரண்ய பாஷ்யபரீக்ஷணந்தானும் அநபேக்ஷிதம். "ஏதத் ஸாம கா³யந்நாஸ்தே" "வரணம் பவித்ரம்" இத்யாதி வேதவாக்கியங்களுக்கு நாமெல்லாரும் கூடிப் பொருள் செய்யும்போது வேத பாஷ்யங்களைக் கணிசிக்கின்றிலோமிறே. நிற்க.

**36.** ஏகாக்ஷரமாயும் த்விபதமாயும் ஷட்பதமாயுமுள்ள வாக்கு, தேவர்கள் கந்தர்வர்கள் மநுஷ்யர்கள் என்ற அனைவர்க்கும் உபஜீவ்யமாகைக்குரிய ஸ்வரூப யோக்யதையுண்டு என்று வேதபுருஷன் விளம்பியிருக்க, இந்த ப்ரத்யக்ஷ ச்ருதிக்கும் விருத்தமாக ஒரு மூலவேதத்தை அநுமானிக்கிறோமென்பதும், பஹ்வர்த² ஸ்ம்ருதிவிரோதா⁴ர்த²மான ஸ்ம்ருதிக்கு ப்ராமாண்யம் கொள்வதும் சாஸ்த்ரஜ்ஞகோஷ்டீபஹிஷ்டம்.

**37.** இந்த வேதவாக்கியத்தில் தேவகந்தர்வ மநுஷ்யர்களை மாத்திரம் சொல்லி நிற்காமல் பசுக்களையும் சொல்லி வைத்திருக்கையாலே பசுக்களுக்கு இந்த யோக்யதை ஸம்பாவிதமாம்போது மநுஷ்யஸாமாந்யத்துக்கும் இது உபபந்நமாகலாம் என்று சிலர் சேஷபிக்க நினைப்பர்கள்; பசவோ மநுஷ்யாঃ என்றது— "ந்ருபஶு꞉" என்று ஆளவந்தாரும் "ப்ருத்²வாபஶவோநரபஶவ꞉" என்று மணவாளமாமுனிகளும் அருளிச்செய்தபடி ஆஹார நித்ராபயமைதுநாதிகளாலே பசுப்ராயரான மநுஷ்யர்களும் என்றபடி. இப்படிப்பட்ட அறிவிலிகளும் திருமந்த்ர, மந்த்ரரத்நங்களைக் கொண்டு உஜ்ஜீவிக்கவுரியார் என்று ஓதிவைத்ததாமாகையாலே குறையொன்றுமில்லை. மற்றும் பல ஸமாதானவழிகளுமுண்டு. "அறுகால் வரிவண்டுகளாயிர நாமஞ்சொல்லிச், சிறுகாலைப்பாடும் தென்திருமாலிருஞ்சோலையே" இத்யாதி. நிற்க.

**38.** வஸ்துதஸ்து, "தத்ரோத்தராயணஸ்யாதிঃ" என்ற ப்ரக்ருத ச்லோகத்திற்கு உண்மையான பொருளில் ச்ருதிவிரோதலேசமும் இல்லாமையாலே அதன் ப்ராமாண்யத்திற்குக் கொத்தையொன்றுமில்லை. எங்ஙனேயென்னில்; திருவஷ்டாக்ஷரத்திற்கு அம் பீஜமென்றும், அதனால் இத்திருமந்த்ரம் நன்றாகக் கார்யகரமாகிறதென்றும் இவ்வளவே இந்தச்லோகத்தினால் சொல்லப்படுகின்றதேயன்றி, இவர்கள் சொல்லுகிறபடி, ப்ரணவஸ்தாநத்திலே அம்பீஜத்தை நிவேசித்தால் அக்ஷரஸங்க்யை பொருந்திவிடும் என்று ஒருகாலும் சொல்லப்படாது.

**39.** இதனை நன்கு விளக்கியும் காட்டுவோம். "தத்ரோத்தராயணஸ்யாதிர் பிந்துமாந் விஷ்ணுரந்ததঃ" என்ற பூர்வார்த்தத்திற்கு இவர்கள் இரண்டு மூன்று வகையாகப் பொருள் கூறுகின்றனர்; அவற்றில் எமக்கு ஈஷத்தும் வைமத்யமில்லை. அஸ்து. பின்னடிகளின் பொருளிலே மாழாந்தொழிந்தனர். மூன்னடி

களால் ஸாதிக்கப்பட்ட அம் என்பதானது, அஷ்டாக்ஷரஸ்ய பீஜம் ஸ்யாத்=ஓம் நமோநாராயணாய" என்கிற மூலமந்த்ரத்திற்கு பீஜாக்ஷரமாகும். தேந அஷ்டாக்ஷரதா பவேத்=அஷ்டாக்ஷரஸ்வபாவ,—அஷ்டாக்ஷரதா; அஷ்டாக்ஷரத்தினுடைய ஸ்வபாவம் என்றபடி "நமோ நாராயணாயேதி" இத்யாதிகளால் இம்மந்த்ரத்திற்குச் சொன்ன ஸர்வோத்தமத்வமும் "குலந்தரும் செல்வந்தந்திடும்" இத்யாதிகளாற் சொன்ன ஸகலபலப்ரதத்வமும் எல்லாம் இந்த அம்பீஜ ஸம்யோக சக்தி ப்ரயுக்தம் என்று பீஜஸம்மேளநத்திற்குள்ள மேன்மையைச் சொல்லவேண்டி அவதரித்த வசநம் இது. சாஸ்த்ரங்களில் திருமந்த்ரத்திற்கு அம்பீஜம் சிலவிடங்களிலும் ஓம்பீஜம் சிலவிடங்களிலுமாக விகல்பித்துச்சொல்லப்பட்டுள்ளது. அம்பீஜத்தைச் சொல்லுகிற திங்கு.

40. "ஓம் நமோநாராயணாய" என்கிற மந்த்ர சரீரத்திற்கு முன்னமோ "ஓம் ஓம் நமோ நாராயணாய" என்று அபூர்வப்ரணவத்தோடுங்கூடிய மந்த்ரத்திற்கு முன்னமோ இந்த பீஜாக்ஷரத்தைச் சேர்க்கும்படி விதித்திருக்கிறதேயன்றி ப்ரணவமொழிந்த ஸப்தாக்ஷரிக்குமுன்னே சேர்க்கவேணுமென்று விதிக்கவில்லை. "பீஜம் அஷ்டாக்ஷரஸ்ய ஸ்யாத்" என்றிறே வசநம் வாயில் வருவது. இங்குள்ள 'அஷ்டாக்ஷரஸ்ய' என்பதற்கு ஸப்தாக்ஷரபரத்வஸ்தாபநம் பண்ண வழிதேடப்பார்ப்பதே இனி உந்தமக்குக் கடமையாகும். ஸப்தாக்ஷரத்திற்கு அஷ்டாக்ஷரத்வ ஸமர்த்தநம் பண்ணுகிறதென்று மேற்கொண்ட வசநத்திலே, அஷ்டாக்ஷர பதத்திற்கு ஸப்தாக்ஷர பரத்வஸமர்த்தநம் பண்ண நேர்ந்தது ஹந்த! ககபுஞவவு நமெ ஊகுமெதாதுதுரிவ. ஊயவா, "வி நாயகம் வுகஃவ-ஃாணோ ரவயாஜாஸவா நா॥"

41. 'இப்படிப்பட்ட பீஜத்துடன் சேர்த்து உச்சரித்தால் அஷ்டாக்ஷரம் அஷ்டாக்ஷரமாகும்' என்றது "அத்ய ராமஸ்ய ராமத்வம் பச்யந்து ஹரியூதபா:" என்று இராமபிரான் சொன்னதுபோலே. 'வாநரமுதலிகாள்! ராமனுடைய ராமத்வத்தை இன்று பாருங்கோள்' என்றது ராமனுடைய கார்ய சக்தியை இன்று காண்மின் என்றபடியேயன்றி, இதற்குமுன் இராமனுக்கு ஏதோவொரு அவயவம் குறைந்து போயிருந்து அதனை இப்போது நிறைத்துக்கொள்ளுகிறதாகச் சொல்வதன்றிறே. அதுபோலவே இங்கும் அஷ்டாக்ஷரதா பவேத் என்றது தன்னுடைய கார்யகரத்வம் பொலிய நிற்கும் என்றபடி. இங்ஙனே பொருளன்றாகில் "அஷ்டாக்ஷரஸ்ய அஷ்டாக்ஷரதாபவேத்" என்றது ஜரதூவாதி வாக்யார்த்தம்போலே அஸம்பத்தப்ரலாபமேயாம். உத்தேச்ய விதேயங்கள் என்னவென்று வினவினால் மறுமாற்ற முரைக்கத் தடுமாறி நிற்பீர்கள். ஔபசாரிகப்ரயோகமென்று நிர்வஹிக்கப் பார்ப்பதெல்லாம் * கபைஷுவமதா கஃவெஊுகஸெராதிக்கு துல்யயோக க்ஷேமமாமத்தனை. "பீஜம் ஸப்தாக்ஷரஸ்ய ஸ்யாத்" என்றோ, "மந்த்ரசேஷஸ்ய பீஜம் ஸ்யாத்" என்றோ வசநசைலி இருந்ததாகில் பூர்வபக்ஷிகள் சொல்லும்பொருளன்றிவேறொருபொருளும் பிரமனாலும் பேச

வொண்ணாது. "அஷ்டாக்ஷரஸ்ய பீஜம்ஸ்யாத்" என்றும், "அஷ்டாக்ஷரஸ்ய அஷ்டாக்ஷரதா ஸ்யாத்" என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லியிராநிற்க ப்ரமாதத்தாலே ஏறிடும்பொருள் ப்ராமாணிகர்க்கு ருசிக்கமாட்டாதிறே.

42. "ஶ்ரத்தயா தேவோ தேவத்வமஶ்நுதே" என்ற வேதவாக்கியமும் நோக்கத்தக்கது. இந்த ச்ருதியில் ஸ்வரப்ரக்ரியைக்குச்சேர, "ச்ரத்தயா, அதேவ, தேவத்வம்" என்றே பதவிபாகம் பண்ணவேண்டுமாயினும், பட்டபாஸ்கரர் வித்யாரண்யர் முதலான வேதபாஷ்யகாரர்களும் நம்முன்னோர்களில் சிலரும் தசோபநிஷத்பாஷ்யகாரரும் அதேவః என்று பிரியாமல் 'தேவ' என்றே பிரித்து உரைத்திருக்கக் காண்கையாலே "மஹாஜநோ யேந கதஸ் ஸ பந்தா:" என்றபடி அதனையே அடியொற்றிப் பேசுவோம். "தேவః ச்ரத்தயா தேவத்வம் அச்நுதே" என்றதற்கு—அஸாதாரணங்களான ஸகல கல்யாண குணங்களாலும் எப்போதும் விளங்காநின்ற பெருமான் பிராட்டியினால்தான் அப்படிப்பட்ட பெருமையைப் பெறுகின்றான் என்றிறே பொருள் கொள்ளுகிறோம். இங்ஙனமே, இவ்விடத்திலும் பீஜாக்ஷரத்தின் சேர்க்கையாலே திருவஷ்டாக்ஷரத்தின் பெருமை பொலிகின்றது என்பதே ஸர்வப்ரகாரங்களாலும் பொருந்தும் பொருளாம். மற்றைப் பொருள் கனவிலும் பொருந்தாது. பொருந்திற்றென்றால் கீழ் விவரித்தபடி விரோதாதிகரணந்யாயத்தாலே இந்த வசநத்திற்கே அப்ராமாண்யம் நிலைநின்றதாம். "நஹி வசநவிரோதே ந்யாய: ப்ரபவதி" என்னவுமொண்ணாது. பூர்வபக்ஷிகள் திறத்திலேயே வசநவிரோதங்கள் வலிதாக நிற்கையாலே.

43. இங்ஙனே பீஜஸம்மேளநத்தினால்தான் திருமந்த்ரம் கார்யகரமாகின்றதென்று விவக்ஷித்தால் திருமந்த்ர சரீரத்திற்கு இயற்கையாகப் பெருமையொன்றுமில்லையென்றதாகத் தேறுமே, இது பரஸ்ஸஹஸ்ரப்ரமாண விருத்தமன்றோ என்று கேட்பவர்கள் பரிஹாஸ்யரேயாவர். இந்த வசநமானது, பீஜாக்ஷரத்தைச் சேர்த்து ஜபிப்பதில் விரைவில் பலன் கிடைக்குமென்றும் கனத்த பேறுகிடைக்குமென்றும் சொல்லி ஸாதகர்களை ப்ரோத்ஸாஹநம் பண்ணுகின்றதத்தனைபோக்கி, திருமந்த்ரத்தின் இதர நிரபேக்ஷமான சக்திவிசேஷத்தை இல்லைசெய்வதில் நோக்குடையதன்று. "ऋते त्वं दयनीयवान् नव" [என்னைவிட்டால் உனக்கு வேறொரு தயநீயன் கிடைக்கமாட்டான்] என்று எம்பெருமானை நோக்கி ஆளவந்தார் அருளிச்செய்தது—தாம் அத்யந்தம் தயநீயர் என்பதைக் காட்டுவதிலே நோக்குடையதேயன்றி வேறொன்றில் நோக்குடைத்தன்றிறே. திருவுக்குந் திருவாகிய செல்வனான தேவாதிதேவன் பிராட்டியினால்தான் தேவனாகிறானென்றதும் பிராட்டியின் வைபவத்தை ப்ரசம்ஸிப்பதில் நோக்குடையதேயன்றி பகவத்வைபவத்தைக் குறைப்பதில் நோக்குடையதன்றிறே. "அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" இத்யாதிகளுக்கும் இங்ஙனேயிறே நிர்வாஹம். ஸ்வரூபப்ரயுக்தமாய் நிருபாதிகமான அப்ரமேயத்

வத்தை இல்லைசெய்வதன்றிறே. இவ்வோ கணக்கிலே, "தேநாஷ்டாக்ஷரதா பவேத்" என்று பீஜப்ரசம்ஸைபண்ணினவிடம திருமந்த்ர வைபவத்தைக் குறைத்ததாகாது. ஆகையாலே இங்கு நாம் கூறின பொருளே பொருள்.

44. வஸ்துஸ்திதி இங்ஙனேயிருக்கச் செய்தேயும் விபரீதார்த்த ப்ரமத்தாலே சிலமஹான்களும் மாறுபடவுரைத்தது தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோமென்ற கட்டளைக்குச் சேருமென்பர் திருவாழ்மார்பன். "ஸ்வாபிநிவேசவசீக்ருதவேதவாக்யம் பஹுவிதாவபி ஸம்ஹவதி ஸூக்ஷ்:" என்று ஆளவந்தாரும, "விவேகவிஹீனதாஹ்யபிநிவேச மேவோஹரோக" என்று ஆழ்வானும் அருளிச்செய்தபடிக்கு இணங்குமென்றார் அடியவர்க்குமெய்யனார். ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்திலே "'என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும்' என்றவிடத்தில் போலுமென்று சொல்லுகையாலே இது வஸ்துவ்ருத்தியில் நன்றன்றென்னுமிடம் ஸூசிதம்" என்னுமவர்கள் திறத்திலே இங்ஙனே சொல்லவேண்டிற்றுண்டிறே. "பின் தொடர்ந்தோடியோர் பாம்பைப்பிடித்துக் கொண்டாட்டினாய் போலும்" "விளங்காயெறிந்தாய் போலும்" "வாரிவளைத்துண்டிருந்தான் போலும்" "மரமேறியிருந்தாய் போலும்" "நாகத்திணையோடு பிணங்கி நீ வந்தாய் போலும்" "எந்தை பெருமானார் மருவிநின்றவூர் போலும்" இத்யாதிகளான பல்லாயிரமிடங்களிலே, போலுமென்றதை இசைநிறையாகக் கண்டு வைத்தும், வடமொழியில் "கிஜிவஹீயோஜாநாம்" "கயஜிவவஹிவாம்" இத்யாதிகளில் இவசப்தம்போல இதுவும் தமிழில் ஒருவகை வாக்யாலங்காரமென்றறிந்துவைத்தும் விபரீதார்த்த வர்ணநம்பண்ணினது அபிநிவேசவசத்தாலிறே. இவ்விடத்திலே சொல்லவேண்டுமவை ஸம்ப்ரதாய ஸித்தாஞ்ஜநத்திலே பரக்கச் சொல்லிவைத்தோம்.

45. "தேநாஷ்டாக்ஷரதா பவேத்" என்பதற்குத் தாங்கள் பகரும் பொருளே பொருளென்று ஸாதிக்கவேண்டில், அந்த ச்லோகத்திற்குக் கீழே சில கைச்சரக்குகள் சேர்த்துக்கொண்டால், அதாவது—'ஸ்த்ரீசூத்ராதிகள் ப்ரணவத்தை விலக்கவேண்டில் ஏழக்ஷரந்தானேஉள்ளது, அஷ்டாக்ஷரமாகவில்லையே' என்று சங்கிப்பதாக ஒரு ச்லோகம் கல்பித்து நுழைத்து அதற்குப் பரிஹாரமாக "தத்ரோத்தராயணஸ்யாதிः" என்ற இந்த ச்லோகம் பிறந்ததென்று அமைத்துக் கொண்டால் ஒருவாறு ஸாதிக்கலாகும். இங்ஙனமே சிலர் கல்பிக்க வொருப்பட்டதாகவும் கேட்டிருக்கிறோம். 'ஹக்ஷிதேவிஷஸுநேநஸாஷோவ்யாயிः'—'உள்ளிநின்று முறுநோய் ஒழிந்தில' என்றாற்போலே—அங்ஙனே கல்பித்தாலும் 'அஷ்டாக்ஷரஸ்ய' என்று இந்த ச்லோகத்திலே உள்ளதற்கு அஸாமஞ்ஜஸ்யம் அபரிஹார்யமேயாகும்.

46. அன்றியும், "தத்ரோத்தராயணஸ்யாதிः" என்ற ச்லோகத்திற்குப் பூர்வபக்ஷிகளின் கொள்கைப்படியே பொருள் கொள்வோமென்றே வைத்துக்கொண்டு திருவஷ்டாக்ஷரத்திற்கு ப்ரணவப்ரதிச்சந்தமாக அம் என்று கூட்டிக்கொண்டு

அஷ்டாக்ஷரத்வம் ஸமர்த்தித்துவிட்டாலும், விஷ்ணுஷடக்ஷரீமந்த்ரத்திலும் வாஸுதேவத்வாதசாக்ஷரீமந்த்ரத்திலும் ஸ்த்ரீசூத்ரர்கள் ப்ரணவத்தைவிட்டொழித்தால் அதன் ஸ்தாநத்திலே வேறு எந்த அக்ஷரத்தைக்கூட்டி ஷடக்ஷரத்வாதிகளை உபபந்நமாகச் செய்யவேணுமென்று கேள்விவரின் மௌநமொழிய மறுமாற்றமில்லையாம். திருவஷ்டாக்ஷரத்திற்கு "தத்ரோத்தராயணஸ்யாதிः" என்ற ச்லோகம் அவதரித்ததுபோல அந்த மந்த்ரங்களுக்கும் அக்ஷர பூர்த்தி ஸமர்த்தந ச்லோகங்கள் அவதரித்திருக்க வேணுமிறே. அவற்றையெடுத்துக் காட்ட வல்லாருண்டோ? அன்றி, அந்த மந்த்ரங்களில் ப்ரணவத்தை வர்ஜிக்கவேண்டா என்றுவது இயம்புவாருண்டோ? கடல் போன்ற சாஸ்த்ரங்களில் ஏதேனுமொரு மூலையிலே அதற்கான வசனங்களும் கிடக்குமென்று ஸாஹஸமாகச் சொல்லிவிடுதல் ப்ராமாணிகர்க்குப் பணியன்று. அல்லது, ப்ரணவப்ரதிச் சந்தமாக வேறொரெழுத்தைச் சேர்க்காமலும் ப்ரணவத்தைச் சேர்க்காமலும் "நமோ விஷ்ணவே" என்கிற பஞ்சாக்ஷரியையும் "நமோ பகவதே வாஸுதேவாய" என்கிற ஏகாதசாக்ஷரியையும் அநுஸந்திப்பதே ஸ்த்ரீ சூத்ரர்கட்கு ப்ராப்தம் என்றுவது, முதலில் அந்த மந்த்ரங்களில் அவர்கட்கு அதிகார ப்ரஸக்திதானே இல்லையென்றுவது சொல்லிவிடப்பார்க்க வேணும். அங்ஙனாகில், கீழ் எடுத்துக்காட்டிய ஸ்ரீபௌஷ்கர ஸம்ஹிதாவசநங்கட்கு ஜலாஞ்ஜலியாமத்தனை. ஆகையாலே, "தத்ரோத்தராயணஸ்யாதிः" இத்யாதி வசநத்திற்கு நாமுரைத்த பொருளே நற்பொருளென்று சிக்கனக் கொள்ளீர்.

47. ஆரியர்காள்! ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார் தொடங்கி நாதயாமுநயதிவர லோகாசார்யாதி பரம்பரையாய்ப் போருகின்ற ஸதாசார்ய பரம்பரையில், மந்த்ராநுஸந்தாநத்தில் ஸ்த்ரீசூத்ரர்கட்கு ப்ரணவம் கூடாதென்றும், அதற்கு ப்ரதிச்சந்தமாக வேறொரெழுத்தைக் கூட்டிக்கொள்ள வேணுமென்றும் இங்ஙனொத்த க்ஷுத்ரவித வாதங்கள் அணுமாத்ரமும் ஆவிர்ப்பவித்ததில்லை. ஸங்கிஹித காலத்தில் மந்த்ரஸாலவட்ட வேதாந்தாசார்ய வ்யூஹாதிகள் சிலர் தோன்றி ஸ்வச்சந்தமாகச் சில க்ரந்தங்களை யெழுதிவைத்து அநுஷ்டாநங்களையும் ஸ்வைரமாக மாறுபடுத்தி வைத்ததுபோலே இடையிலே தோன்றிய சிலர் உபாயமூலத்தைக் கல்பித்து அதற்கேற்ற ஆசாரத்தையும் ஆரம்பித்தார்கள். ஸம்ப்ரதிபந்நரான ஆசார்யர்கள் இவ்விஷயந்தன்னை நெஞ்சிலும் நினைத்திலர். ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தங்கள் தங்கள் திருவடிகளை ஆச்ரயித்த முமுக்ஷுக்களனைவர்க்கும் ஏகரூபமான மந்த்ரசரீரத்தை உபதேசித்தருளினார்களேயன்றி இங்ஙனே விச்வாமித்ர ஸ்ருஷ்டியை நெஞ்சிலிட்டெண்ணினாருமில்லை. "நின் திருவெட்டெழுத்தும் கற்று" என்றும் "எட்டெழுத்தும் ஓதுவார்கள்" என்றும் ஆழ்வார்கள் பலவிடங்களில் அருளிச் செய்வதும், வேதவேதாங்கங்களில் ப்ரஸித்தமான திருமந்த்ர சரீரமேயன்றி வேறன்று.

**48**. திருக்கண்ணபுரத் தெம்பெருமான் பக்கல் திருமந்த்ரோபதேசம் பெற்ற திருமங்கைமன்னன் ‘அந்நமோநாராயணுய’ என்று பெற்ருரென்னில் நாவேம். ப்ராஹ்மணோத்தமரான ஸ்ரீமதுரகவிகட்கு நம்பாழ்வாருபதேசித்தது அந்நமோ நாராயணுயவென்னில் * இதனில் மிக்கோரயர்வுண்டே ?

**49**. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார மூலமந்த்ராதிகாரத்தில் “நாமஞ் சொல்லில் நமோநாராயணமே” என்ற கலியன் பாசுரத்தை உதாஹரித்த விடத்திலே ஸாரஸ்வாதிநீ வியாக்கியானத்தில் “திருமங்கையாழ்வார் வர்ணாந்தரமான படியாலே ஸப்ரணவமான இம்மந்த்ரத்துக்கு அநதிகாரியானபடியாலே” என்று தொடங்கிச் சில வாக்கியங்களாலே ப்ரணவ சதுர்த்திகளை யொழித்தே திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் போல்வார்க்குத் திருமந்த்ரம் ப்ராப்தமாயிற்றென்று கைகூசாதே எழுதி வைத்தார்கள். இது தனக்கு நிதாநமேதென்னில் ; ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்திலே “ஆழ்வார்கள் வ்ருத்தாந்தங்களையுமாராய்ந்தால் ஸ்வஜாதிநியமத்தைக் கடந்தமையில்லை” என்று தூப்புலம்மான் வரைந்து வைத்ததே யென்னவேண்டும். நம்மாழ்வார், தேவுமற்றறியாத மதுரகவிகட்கு உபதேசித்ததும் ப்ரணவ வர்ஜமேயென்று இவர்களது கொள்கை போலும்.

**50**. மதுரகவிகட்கு மந்த்ரோபதேசம் ஆழ்வார் பக்கலில் ப்ராப்தமாயிற்றில்லை யென்றும், ப்ராஹ்மணர்க்கு மந்த்ரோபதேசம்பண்ண ஆழ்வார் அதிகாரி யல்லரென்றும், மதுரகவிகள் மந்த்ரோபதேசம் பெறுதற்கு மாத்திரம் வேருெரு ஸ்வஜாதீயரைத் தேடியோடினுராயிருக்க வேணுமென்றும் விளங்கவுரைக்கவிரும்பிய வேதாந்ததேசிகன் அந்த ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்திலேயே “வித்யாமந்த்ராதிகளுடைய க்ரஹணம் ப்ராஹ்மணுதி விஷயத்திலேயாகவேணுமென்னுமிடம் ‘ஶூத்ரயோநா வஹம்ஜாதோ நாதோந்யத் வக்துமுத்ஸஹே’ என்ற விதுரவாக்யத்தாலே ஸித்தம்” என்றெழுதிவைத்தார். இதனுல் தேறிற்றென்னென்னில் ; “அன்பர்க்கேயவதரிக்கு மாயன் நிற்க அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு, துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டுந் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே” என்று இவர்தாம் பேசின பாசுரத்திற்பகர்ந்த தொல்வழியாவது—வாக்குண்டான், நல்வழி, நன்னெறி, நளவெண்பா, இலக்கணச் சுருக்கம் முதலிய தமிழ் நூல்கள் பயில்வதற்காகக்கொண்ட உபாத்யாய வித்யார்த்திபாவமேயொழிய மற்றைப்படியான ஆசார்ய சிஷ்யபாவமன்றென்று நன்குவிளக்கப்பட்டதாயிற்று. “விதுராதிகளிலும் உத்க்ருஷ்ட ப்ரபாவரான ஆழ்வார்களுடைய வ்ருத்தாந்த விசேஷங்களை நம் அநுஷ்டாநத்துக்கு த்ருஷ்டாந்தமாக்கலாகாது” என்றவளவோடே நின்றிருந்தாராகில் இனிதாயிருக்கும். பாரத்வாஜ ஸம்ஹிதையில் ந்யாஸோபதேச பரமான முதலத்யாயத்தில் “ந ஜாது மந்த்ரதா நாரீ நசூத்ரோ நாந்தரோத்பவ:” என்று தொடங்கி “நார்ஹந்த்யாசார்யதாம் க்வசித்” என்று ஸ்த்ரீசூத்ரர்கட்கு மந்த்ரோபதேசகத்ருத்வரூபமான ஆசார்யத்வம்பண்ண ஒருகாலும் யோக்யதையில்லையென்று முதலில் ஸாமாந்யமாக நிஷேதித்து, உடனே

" கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு—ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம்சிந்த்யம் குலாதிகம் " என்று விசேஷமாகவுரைத்ததையெடுத்துக்காட்டி உபஸம்ஹரித்திருந்தால் சாலவுமினிதாம். அங்ஙனன்றிக்கே " ஜாத்யாதிஷ்வம்ஸத ஸ்ராஹ்யம் ஊக்திகாலெ ஸவிஷ்யதி " " ஷ்ரீயதிந்ணாமஜநந்யாதிவ " இத்யாதிகளை எழுதிவைக்கையாலே பின்புள்ள வ்யாக்யாதாக்களும் ஆழ்வார்கள் திறத்திலே யதாசக்தி கிஞ்சித்கரித்து நின்றார்கள். இப்படிப்பட்ட அஸமஞ்ஜஸ வாக்யார்த்தங்களை அநுவதிப்பதுதானும் " தொஷாநாவிஷநாயா ஸூத்ரவிஷூரீக ரொதி வொராஹ்யம் " என்று ஸங்கல்பஸூர்யோதயத்திற் கூறிய கணக்கிலே நமக்கு அவத்யாவஹமென்று ஒதுங்கப்ராப்தம்.

51. ஆக இதுகாறும் "நஸ்வரஃ ப்ரணவோங்காநி" என்ற வசநத்திற்கு உண்மைப் பொருளைப்பற்றி நின்று பூர்வபக்ஷங்களைப் பரிஹரித்து வந்தோம். இனி, அந்த வசநம் ப்ரணவஸாமாந்யத்தை நிஷேதிக்க வந்ததாகக் கொண்டு " மந்த்ர மாத்ரோக்திரிஷ்யதே " என்றதற்கு " மந்த்ரசேஷோக்திரிஷ்யதே " என்று பொருள் கூறுகின்ற பூர்வபக்ஷிகளின் ஸரணியை இசைந்தாலும் ஹாநியொன்றுமில்லை யென்பதை விளக்கி யுரைக்கப்புகுவோம்.

52. ஸாமாந்ய விசேஷந்யாயமென்பது ஸகல சாஸ்த்ரங்களிலும் ஆளப்பெற்றது. ஜீவஹிம்ஸை மஹாபாபமென்று ஸாமாந்யமாக மறுக்கப்பட்டிருக்கச் செய்தேயும் அக்நீஷோமீய பசுவிசஸநம் விசேஷ விதிப்ராப்தமா யிராநின்றது. "ஸாஷாமாநம் நமாதவ்யம்" என்ற ஸாமாந்ய நிஷேதமானது " ஹரிகீர்த்திம் விநைவாந்யத் " என்ற விசேஷ வசநத்தாலே தள்ளுண்டது. "ஸாஷாமீதிஃ வூரஸூாஸமவதி வவநாக " என்று த்ரமிடோப நிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் சொல்லலாயிற்று. இங்ஙனொத்த உதாஹரணங்கள் பரஸ்ஸஹஸ்ரமுண்டு. அப்படியே, " நஸ்வரஃ ப்ரணவ " என்ற இந்நிஷேதமும் அவைஷ்ணவ ஸ்த்ரீ சூத்ரர்களை இலக்காகக் கொண்டதாகக் குறையில்லை.

53 ஸாமாந்ய நிஷேதம் சாஸ்த்ரஸித்தமானாப் போலவே விசேஷ விதியும் சாஸ்த்ரஸித்தமாக வேணுமேயென்னில்; அதுதனக்கும் குறையில்லை. பராசர ஸம்ஹிதையில் மூன்றுமத்யாயத்தில் வைஷ்ணவ ஸ்த்ரீசூத்ரர்களுக்கு விசேஷ விதி யுரைக்குமடைவிலே " ஸதா ப்ரணவஸம்யுக்தம் மூலமந்த்ரம் த்வயாதிகம்—வேதஸ்வராதிவர்ஜம் ஸ்யாத் சூத்ராணும் மந்த்ரஜாபநே " (104) என்றும், " ஸதா தாந்த்ரிகமந்த்ரஸ் ஸ்யாத் வேதஸ்வரவிவர்ஜித:—மூலாதிஸர்வமந்த்ராணும் விதிரேஷ ஸதா பவேத்—.......ஸதா ப்ரபந்நசூத்ராணும் ஸர்வேஷாம் மோக்ஷகாங்க்ஷிணும்—மத்ஸாயுஜ்யாதிஸித்த்யர்த்தம் த்விஜதர்மோக்தவத் பவேத்." (107) என்றும் முமுக்ஷுக்களான ப்ரபந்ந சூத்ரர்களுக்கு வேதஸ்வரத்தை மாத்திரம் விட்டொழித்து ப்ரணவஸஹிதம் கூடுமென்றுசொல்லிற்று. பூர்வபக்ஷிஸஜாதீயர்கள் ஆந்த்ரலிபியில் அச்சிடுவித்த பராசரஸம்ஹிதையிலும் இவ்வசநங்கள் காணலாம். [பக்கம்—கக.]

54. இந்த ஸம்ஹிதை ப்ரமாணமாகில் இதுதன்னிலே "ஸ்யாத் க்ஷௌரம் விதவாநாம் து ஶிரோமாத்ரம் ஸதாப்ஜஜ" என்று விதவாவபநம் விதித்திருப்பது க்ராஹ்யமாக வேண்டாவோவென்னில்; இந்த விசாரம் இங்கு வேண்டா; அதைப்பற்றித் தனியே பேசுவோம்.

55. வ்யோமஸம்ஹிதை முதலிய மற்றும் பல ஸம்ஹிதைகளிலும் முமுக்ஷு ஸ்த்ரீ ஶூத்ரர்களுக்கு ப்ரணவஸஹிதமந்த்ராநுஸந்தாநம் அநுமதமாயிருக்கையாலும் விசேஷவிதியாலே ஸாமாந்யநிஷேதம் அந்யபரமாகிறதென்று தெளியக்கடவர்கள். இதனையே மற்றும்பல ப்ரமாணங்களைக் கொண்டும் நிலைநாட்டுவோம் காண்மின்;—

56. த்ரைவர்ணிகரிலும் உபநயநம் செய்யப்பெறாத பாலிசர்கள் ஶூத்ரதுல்யர்களென்றும், இரண்டாம்பிறவி பெற்றபின்னரே வைதிகத்திற்கு அதிகாரம் பெறுகிறார்களென்றும் ஸர்வஸம்மதம். உத்தாநபாதனுடைய மகனான த்ருவன் அநுபநீதனாயிருக்கும்போது ஏதோ ரோஷத்தாலே தவஞ்செய்ய விரும்பி அரணியம் நோக்கிச் சென்றவிடத்து ஸப்தர்ஷிகள் ஸந்தித்து அவனுக்கு நன்மையுபதேசிக்கும்போது ப்ரணவத்தோடுகூடின வாஸுதேவத்வாதசாக்ஷரியை உபதேசித்தார்களென்னுமிடம் ஸ்ரீவிஷ்ணு புராணத்திலே முதல் அம்சத்தில் பதினோராமத்யாயத்தின் முடிவில் ஸ்பஷ்டமாக விளங்காநிற்கும். "ஓம் நமோ வாஸுதேவாய" என்பது அவ்விடத்து ஆநுபூர்வியாகும். அவன் அநுபநீதன் என்னுமிடம் அவ்விடத்திலேயே "[illegible] ந்ருபநந்தந!" (34.) என்ற மஹர்ஷிகளின் வாக்கியத்தால் விளங்கும். இப்படிப்பட்ட சிறுவனுக்கு ஸப்ரணவமந்த்ரத்தை உபதேசித்தவர்கள் ஸாமாந்யரல்லர்; ஸாக்ஷாத் ஸப்தர்ஷிகள்; பூர்வபக்ஷிகள் பகரும் நிஷேத சாஸ்த்ரங்களை அவர்கள் அறியாதாரல்லர்.

57. இவ்விடத்தில் குறிக்கொள்ளத்தக்க விஷயமொன்றுண்டு; "ஓம் நமோ வாஸுதேவாய" என்று கீழுதாஹரித்த ஸ்ரீவிஷ்ணுபுராண ச்லோகத்தின் வியாக்கியானத்திலே எங்களாழ்வான் "[illegible] விவக்ஷிதம். [illegible]. [illegible]." என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் நன்கு நோக்கத்தக்கவை. "ஓம் நமோ பகவதே வாஸுதேவாய" என்று பன்னிரண்டு திருவெழுத்துக்களையும் மூலத்தில் சொல்லாமல் சில அக்ஷரங்கள் [அதாவது, பகவதே என்ற பதம்] மறைக்கப்பட்டிருந்தாலும் த்ருவனுக்கு த்வாதசாக்ஷரியை உபதேசித்ததாகப் புராணாந்தரங்களில் ஸ்பஷ்டமாயிருக்கையாலே இங்குள்ளது பூர்ணமந்த்ரத்திற்கு உபலக்ஷணம். ரஹஸ்யமாய் உபதேசிக்கவுரிய மந்த்ரமாகையாலே பூர்ணமான மந்த்ரசரீரத்தை இங்கு ஓதாமல் மறைத்திருக்கிறது—என்றுய்த்து எங்களாழ்வானருளிச் செய்திருப்பது. ஆகையாலே, உபநயநம் பெறாத பாலிசனுக்கு ப்ரணவஸஹிதமான மந்த்

ரத்தை உபதேசித்ததற்கு இது ப்ரமாணமாமளவன்றிக்கே, "நமோ நாராய ணேத்யுக்த்வா ச்வபாகஃ புநராகமத்" இத்யாதி ஸ்தலங்களில் மந்த்ரத்தின் ஏக தேசம் நிர்த்திஷ்டமாயிருந்தாலும் அது பூர்ணமந்த்ரத்துக்கே உபலக்ஷண மென்று கீழ் நாம் உபபாதித்தவற்றுக்கும் அவ்யாஹதமான ப்ரமாணமாகா நின்றது. ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலுள்ள ப்ராக்ருத ச்லோகத்தை நம் தூப்பு லம்மான் கடாக்ஷித்திருப்பரேல் "பெரியதொரு மாம்பழத்தில் நடுவுள்ள அம்சம் த்யாஜ்யமாய் மற்றது உபஜீவ்யமாகிறாப்போலே த்வாதசாக்ஷரி யிலும் நடுவுள்ள அம்சம் கழிந்தால் ஸர்வோபஜீவ்யமா மென்னுமிடம் 'ஓம் நமோவாஸுதேவாய' என்னும் த்ருவோபதேச ப்ரகரணஸ்த வசநத் தாலே ஸித்தம்" என்று திருவாய்மலர்ந்தருளியிருப்பர். திருமந்த்ரத்திற்கு எட்டுக்கண்ணுன கரும்பு த்ருஷ்டாந்தமாகக் கிடைத்தாற்போலே த்வாத சாக்ஷரிக்கு மாம்பழம் த்ருஷ்டாந்தமாகக் கிடைக்கலாமிறே. அதில் உள் ளுள்ள கொட்டை த்யாஜ்யமாகிறாப்போலே இதிலும் உள்ளுள்ள 'பகவதே' என்னும் பதம் த்யாஜ்யமென்னலாமிறே. யதாப்ரமாணவாதிகளாகையாலே உள்ளதை மீறி உரைக்கவொண்ணாதிறே. திருமந்த்ரத்தில் சதுர்த்தியை விட் டொழிக்கும்படி வசநலேசமும் க்வாசித்காநுஷ்டாநமும் இல்லாதிருக்கச் செய்தே "நமோநாராயணேத்யுக்த்வா" என்றதையும் "நாவாயிலுண்டே நமோ நாரணாவென்று" என்றதையுமே கொண்டு சதுர்த்தியை நிஷேதிக்குமிவர்கள் "ஓம் நமோ வாஸுதேவாய" என்ற ப்ராக்ருத வசநத்தையுங்கொண்டு, பகவதே என்னும் பதமொழிந்தவளவே ஸாவாதிகாரம் என்று சொல்லி வைத்திருப்ப ரேல், 'ஹாஹா! ஸ்வாமி என்ன ஸூக்ஷ்மார்த்தம் சிக்ஷிக்கிறீர்!' என்று அகங் குழைந்து குலாவுவார் பலருண்டாவரிறே. அதுநிற்க. த்ருவன் அநுபநீதனா யிருக்கும் நிலைமையிலே ப்ரணவஸஹித மந்த்ரோபதேசம்பெறக் காண்கையாலே ப்ரணவ நிஷேதமுள்ளவிடம் அச்ரத்தாளு விஷயமென்றொதுங்கும். "ச்ரத் தைவ காரணம் பும்ஸாமஷ்டாக்ஷரபரிக்ரஹே."

58. இன்னமும், ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் நான்காமத்யாயத்தில் நான்காம் ப்ராஹ்மணத்தில், யாஜ்ஞவல்க்யர் தம் மனைவியான மைத்ரேயிக்கு மோக்ஷோபாயமான ப்ரஹ்மோபாஸநத்தைப் பரக்கவுபதேசிக்கக் காணாநின் றோம். யோகயாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியிலே காகி யென்பவளுக்கு யோகோப தேச பூர்வகமாக ப்ரணவம் முதலியவற்றை உபதேசிக்கக்காணாநின்றோம். ப்ரஹ் லாதனென்னும் அநுபநீதனான அசுரச் சிறுவன் "ஓம் நமோ வாஸுதேவாய தஸ்மை பகவதே ஸதா" என்றும் "ஓம் நமோ விஷ்ணவேதஸ்மை" என்றும் ப்ரணவஸஹித மந்த்ரங்களைச் சொன்னானாகை ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலே [க-உக- எஅ, அச.] ஸ்பஷ்டமாகக் காணாநின்றோம். கபிலர் தேவஹூதிக்கு ஸாங்க பக்தியோகோபதேசம் பண்ணிற்றும், பார்வதிக்கு ருத்ரன் ஸப்ரணவாஷ்டாக்ஷ ரோபதேசம் பண்ணிற்றும் ஸ்ரீ பாகவத பாத்மபுராணாதிகளில் ப்ரஸித்தமாகக் காணாநின்றோம். உத்தரராம சரித நாடகத்திலே [2—3.] "[illegible]

ஓ௱வாஃ ஷூதெஜெஶ ஊ௱ஶியாஂஸ உஊீயவிஶொ வஶஷீ। தெஹெஷாயிமஊ௱ஂ நிமஊாஊவிஷூாஂ வாஷீகிவாஸூ—ாஜிஊ வயஃடாஜி॥” என்று—ஆத்ரேயியென்பாளொரு பெண்பெண்டாட்டி சொல்லுமாறு காணாநின்றோம்.

**59.** இந்த ஏட்டுக்கதைகளெல்லாம் இக்காலத்து வ்யக்திகள் விஷயத்திலே த்ருஷ்டாந்தமாகைக்கு அவகாசமரிதென்று ஏகோக்தியிலே க்ஷேபிக்கவுங் கூடும். நம்பாடுவான்கலியன் முதலானோர்ப்ரணவ சதுர்த்திகளைவிட்டார்களென்பதற்குமாத்திரமே ஏட்டுக்கதைகள் அவலம்பமாயிடுக. மற்றவற்றுக்கு அவற்றை உதாஹரிக்கலாகாதென்றே இசைந்திடுவோம். த்ரைவர்ணிகர்களும் அநுபநீதரான பாலிசர்களுக்கு அக்ஷராப்யாஸத்திலே ப்ரணவத்தைக் கற்பிக்க எங்கும் காணாநின்றோம். மற்றும் சொல்லுகோம் கேண்மின்.

**60.** 'ஸ்த்ரீகள் வேதங்களை வாயாற்சொல்லவும் காதால் கேட்கவுமாகாது' என்று ஸாமாந்யமாக நிஷேதமிருக்கச் செய்தேயும் சில ப்ரகரணங்களில் விசேஷ விதி பலத்தாலே சில வைதிகமந்திரங்களை வாய்திறந்து உச்சரிக்கும்படியானதை அநுஷ்டாநத்திலும் காணாநின்றோம். “ஊவஶூஂதா ஜநவாவெகிதாநஜிஷெதா தயா வதூ வதிஂவஜீக்ஷெத” [ப்ரயோகசந்த்ரிகா] என்னக்கடவதிறே. அன்றியும், ப்ரதிபத்திகாமத்தில் ஸ்த்ரீகளுக்குக் கர்த்ருத்வம் ப்ராப்தமானால் அக்நிப்ரதாநமந்த்ரத்தை ஸாக்ஷாத்தாக வாயாற் சொல்லுவித்து ஸம்ஸ்கரிப்பிக்கக்காணாநின்றோம். இங்ஙனே பல. இவ்விடங்களில் ஸ்த்ரீகளுக்கு வேதோச்சாரணநிஷேதம் அபவதிக்கப்படவில்லையா? ஸ்த்ரீசூத்ரர்களின் செவியிலே வேதாக்ஷரம் விழுந்தால் ஈயத்தையும் அரக்கையுமுருக்கிச் செவியிலேயூற்றி நிரப்பவேணுமென்ற ‡ சாஸ்த்ரமெல்லாம் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ச்ரயம் பெற்ற ஸத்வ்யக்திகள் திறத்திலே பயன்படுகின்றனவோ? ச்ரோத்ரியக்ருஹிணிகள் காதிலே அநவரதம் வேதமேயிறே விழாநிற்கும். “தஸ்மாத் சூத்ரஸமீபே நாத்யேதவ்யம்” என்றதும் அவைஷ்ணவசூத்ர விஷயமாக ஓதுக்கப்படவில்லையா? “ஶூய—ாயிஷிதாவா ஶ௱ஜூா ஊநுவஸஂஷுத—ாஶஷெஶூ௱ஃ” [ஆபஸ்தம்பர்.] என்னப்பட்ட விலக்ஷண சூத்ரர்கள் விவக்ஷிதரல்லரிறே.

**61.** “நமோ ஹரிகேசாய” என்கிற வேதவாக்கியத்தை யெடுத்து அப்பயதீக்ஷிதர் சிஷ்யர்களுக்கு அர்த்த ப்ரவசநம் பண்ணும்போது “ஹரி—க—ஈசாய” என்று பிரித்து, ஹரி—நாராயணனுக்கும், க—பிரமனுக்கும், ஈசாய—தலைவனான சிவனுக்கு, நமஸ்காரம் என்று சிவபாரம்ய பரமாகப் பொருள்கூற, இதனைக் கேட்ட அவரது தாயார் 'பையலே! பக்கத்தகத்துத் திண்ணையிலே பதபாடமோதக்கேளாய்' என்ன, “ஹரிகேசாயேதி ஹரி—கேசாய” என்று ஓதக்கேட்டு, “அந்தோ! தப்பச் சொன்னேன்; செம்பட்ட மயிருடையான் என்கிறது” என்றாராம்.

---

‡ இவ்விஷயம் கௌதம தர்ம ஸூத்ரத்தில் பன்னிரண்டாமத்யாயத்திலுள்ளது. மூலத்தில் “அதஹாஸ்ய” என்று சூத்ரனைமாத்திரம் எடுத்திருந்தாலும் இது ஸ்த்ரீகளுக்கு முபலக்ஷணமென்று வியாக்க்யாதாக்களால் விளக்கப்பட்டது.

தீக்ஷிதர் முதலில் சொன்ன சிவபாரம்யப்பொருள் வேதபுருஷனுக்கு விவக்ஷித மாகில், "ஹரிகேசாயேதி ஹரிக–ஈசாய" என்று ஓதலாகுமென்பது இங்கே விஷயம். அது கிடக்க. பரமவிஷ்ணு பக்தையான தீக்ஷித மாதாவின் பக்கலிலே "த்ரயீஜாதம் ஸ்ரோத்ரு வ்ருதிவர்ணம்" என்ற ஸாமாந்யசாஸ்த்ரம் இடம்பெற்றதில்லை யென்றுணர்வீராக.

62. இன்னமுமொன்று கேளீர்; ஸச்சரித்ரரக்ஷையில் ஊர்த்வபுண்ட்ரதாரண விதிப்ரகரணத்தில், பஸ்மதாரணத்தையும் திர்யக்புண்ட்ரத்தையும் விதிக்கிற சில வசநங்களை யெடுத்துக் காட்டுமிடத்திலே அவை சூத்ரர்களுக்கேயன்றி மற்ற ப்ராஹ்மணாதிகளுக்கு அல்லவென்று ஒதுக்கி, அதுதன்னிலும், வைஷ்ணவசூத்ர வ்யதிரிக்த விஷயமேயாகக் கடவது என்றும் தேசிகன் ஸ்தாபிக்கக் காண்கிறோம். "உக்தாநி லக்ஷணாநேவம் ப்ராஹ்மணஸ்ய து தஸ்ய து। திர்யக்த்ரிபுண்ட்ரம் சூத்ராணாம் விப்ராணாமூர்த்வமீரிதம்॥" என்ற நாரதீய வசநத்தையும் "ஊர்த்வபுண்ட்ரம் து கர்த்தவ்யம் சூத்ரைர் பூத்யா ஸதோயயா" என்ற பாரமேஷ்ட்ய ஸம்ஹிதாவசநத்தையும், "சூத்ரஸ்யைவ த்ரிபுண்ட்ரகம்" என்ற ப்ரஹ்மராத்ர வசநத்தையும் மற்றும் பல வசநங்களையும் உதாஹரித்த தேசிகன், பஸ்மதாரணமும் திர்யக்புண்ட்ரமும் சூத்ரர்களுக்கே யொழிய த்விஜாதிகளுக்கன்று என்று முந்துற ஸமர்த்தித்து, பிறகு, "தஸ்மாந்மாம் ப்ராப்துமிச்சத்பிர் வைஷ்ணவைர் விமலாசயை:–ஊர்த்வபுண்ட்ரமிதம் தார்யம் ஸத்யஸ்ஸம்ஸாரமோசநம்." இத்யாதி வசநங்களில் "வைஷ்ணவை:" என்றிருப்பதைக்கொண்டு, சூத்ரர்களுக்கும் வைஷ்ணவத்வமுண்டாகில் அந்தணர்களோடொக்கவே புண்ட்ரஸந்நிவேசமாகக் கடவதென்று ஸமர்த்தித்த ந்யாயம் திருமந்த்ர விஷயத்திலும் அவ்யாஹத ஸஞ்சாரமாம். கீழுதாஹரித்த பராசர ஸம்ஹிதா வசநாதிகள் இதனை வற்புறுத்தும். அந்த ஸம்ஹிதா வசநத்தைப் பூர்வபக்ஷிகள் ப்ரக்ஷிப்தமென்றே கொள்வார்களாகில், அதனை யாம் மறுப்போமல்லோம். அங்ஙனே உடன்படுவோம். உபயஸம்ப்ரதிபந்ந ப்ரமாணங்களுக்கு துர்ப்பிக்ஷமில்லையே. அங்ஙனே பல சொன்னோம்; பலவும் சொல்வோம்.

63. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் வேதவாக்கியங்களை அல்பமும் உதாஹரிப்பதில்லையென்னுமிடம் ஸர்வஸம்மதம். குருபரம்பராஸாரத்தில் "யஸ்யதேவே பராபக்திர் யதா தேவே ததா குரௌ" என்று உதாஹரிக்க வேண்டுமிடத்திலும் அது ச்ருதியென்றுவிட்டு, அதன் பொருளை மாத்திரம் "பகவத்விஷயத்திற் போலே குரு விஷயத்திலும் பரையான பக்தியுடையவனுக்கு அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் ப்ரகாசிக்கும்" என்று அருளிச்செய்கிறார். இஃது இப்படியிருக்க, மேல் அபராத பரிஹாராதிகாரத்திலே "இச்லோகங்களில் ப்ராஹ்மண சப்தம் 'விஷ்ணும் க்ராந்தம் வாஸுதேவம் விஜாநந் விப்ரோ விப்ரத்வம் கச்சதே தத்வதர்சீ' என்கிற ப்ரக்ரியையாலே விசேஷ விஷயம்" என்றருளிச்செய்கிறார். இங்கு உதாஹரிக்கப்பட்ட விஷ்ணும் க்ராந்தமித்யாதி ப்ரமாணம் எவ்

விடத்ததென்று ஆராய்வோம். வேதார்த்தஸங்க்ரஹத்தில் " தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூꣳ ஸ்வாம்" என்கிற ச்ருதியை வியாக்கியானிக்குமிடத்திலே அதன் கீழ் ச்ருதப்ரகாசிகாகாரருடைய தாத்பர்யதீபிகையில ‡ "அயமர்த்த: 'விஷ்ணும் க்ஷிப்ரம் தாவதி ஸ ஏவம் விஜாநந்த் விஷ்ணு விஷ்ணு தம் ததாஸீத்' இதி மந்த்ரவர்ணாத்" என்றருளிச் செய்திருக்கையாலே இது அதர்வண வேதவாக்கியமென்று விளங்காநின்றது. பஞ்சவிஜயங்களிலும் மற்றும் அனந்தாழ்வான் வாதார்த்தங்களிலும் இங்ஙனேயுள்ளது. நூற்றெட்டு உபநிஷத்துக்களுள் ஒன்றான சாட்யாயநோபநிஷத்திலும் இஃது உள்ளது. ஆகவே இது வேதவாக்கியமன்றென்று மறுக்கவொண்ணாது. வேதவாக்கிய முதாஹரிப்பதில்லையென்கிற ப்ரதிஜ்ஞைக்கு விஷயமான ரஹஸ்யத்திலே இந்த வேதவாக்கியத்தை உதாஹரித்ததேசிகனுடைய திருவுள்ளம் ஏதென் ஆராயவேண்டும். ஸர்வஜ்ஞரானார்க்கு இது வேதவாக்கியமென்று தெரிந்ததில்லை யென்னப்போகாது இனிச் சொல்லவேண்டிற்றென்னென்னில்; இந்த வசநம் வேதத்திலிருப்பது போலவே மஹாபாரதத்திலும் வரக்காண்கையாலே, வைதிகமென்கிற ஆகாரத்தாலே இது அநுபாதேயமாயினும், பௌராணிகம் ஐதிஹாஸிகம் இத்யாத்யாகாரத்தாலே உபாதேயமாகக் குறையில்லை என்று திருவுள்ளம்பற்றினாரென்ன வேண்டுமத்தனை போக்கி வேறொன்றும் சொல்லப்போகாதிறே. இக்கணக்கில்தானே ப்ரணவமும் வைதிகமென்னுமாகாரத்தாலே அநுபாதேயமெனினும் மற்றைப்படியாலே அநுஸந்தேயமாகக்குறையில்லை யென்றுணர்க. —ஸதஸ்ஸம்மதம்॥—

64 பொதுவாகவே ஸகல மந்த்ரங்கட்கும், விசிஷ்ய திருமந்திரத்திற்கும் சப்தசக்தியினால் காரியம் செய்யவல்லமையென்றும் அர்த்த சக்தியினால் காரியம் செய்யவல்லமையென்றும் இருவகைத்தன்மைகளுண்டு. அவற்றுள் ஜபஹோமாதி முகத்தாலே காரியஞ்செய்கையாகிற முதல் தன்மை உபாஸநாதிகாரி விஷயத்திலே விலைச்செல்லும். அநந்யார்ஹசேஷத்வாதி ரூபமான ஸ்வரூபவுண்மையைத் தெளிவிக்கும் வழியாலே தத்கோசராயதாத்ருவஸாயரூபமான நிவ்ருத்திமார்க்கத்தை ப்ரவர்த்திப்பிக்கும் முகத்தாலே காரியஞ்செய்கையாகிற இரண்டாவது தன்மை ப்ரபத்த்யதிகாரி விஷயத்திலே விலைச்செல்லும். ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு உபாஸநாதிகாரமில்லாமையாலே, ஜபஹோமாதி முகத்தாலே காரியங்கொள்ளுகையாகிற முதல் தன்மையில் அதிகாரம் இல்லை. அவர்கட்கு ப்ரபத்த்யதிகாரமுண்டாகையாலே அர்த்த சக்தியினால் காரியங்கொள்ளுகையாகிற இரண்டாவதில் அதிகாரம் இடையூறற்றதே. இவ்வர்த்தந்தன்னையே "நஸ்வர: ப்ரணவோங்காநி" இத்யாதி சாஸ்த்ரம் சொல்லவற்று. இதில், உபாஸநத்திற்கு உபயுக்தமான ஜபஹோமாதிகளின் அநுஷ்டாநத்திற்கு அதிசயத்தை விளைக்கவல்ல அபூர்வ ப்ரணவஸம்யோஜநத்திலும் ஸ்வரம் முதலிய அங்ககலாபங்களிலும் அதிகாரமில்லாமையைத் தெரிவிக்கின்ற முதலிரண்டு பாதங்களால் சப்தசக்தியினால் காரியங்கொள்ளுகையிலே அதிகாரமில்லாமை காட்டப்பட்

‡ தெலுங்குலிபியிலச்சிட்ட வேதார்த்த ஸங்க்ரஹத்தில் 370-வது பக்கத்தில் காண்க.

டது. மேலே "மந்த்ரமாத்ரோக்திரிஷ்யதே" என்ற நான்காமடியால், ப்ரபத்திக்கு உபயுக்தமான ஸ்வரூபயாதாத்மியப்பொருளை அநுஸந்திப்பதற்கு உரிய "ஓம் நமோ நாராயணாய" என்கிற மந்த்ரசரீரமாத்திரத்தில் அதிகாரத்தை இசையும் முகத்தாலே, அர்த்த சக்தியினால் காரியங்கொள்ளுகையிலே அதிகாரமுள்ளமை காட்டப்பட்டது. பாலிசர்களுக்கு அக்ஷராப்யாஸ காலத்தில் ப்ரணவயுக்தமான அஷ்டாக்ஷரசரீரத்திலே எப்படி அதிகாரம் அநுமதிக்கப்பட்டதோ ‡ நிஷாதஸ்தபதிக்கு ஒரு யாக விசேஷத்திற்கு இன்றியமையாத வேதபாகமாத்திரத்திலே அதிகாரம் எப்படி அநுமதிக்கப்பட்டதோ, அப்படியே ஸ்த்ரீசூத்ரர்களுக்கும் [அதாவது—ஸ்வரூபயாதாத்மியஜ்ஞாநத்தினாலேயே புருஷார்த்தம் பெறக்கூடிய முமுக்ஷுக்களான ஸ்த்ரீசூத்ரர்களுக்கும்] ப்ரணவயுக்தமான திருவஷ்டாக்ஷர சரீரமாத்ரத்தில் அதிகாரம் அநுமதமென்பதே சாஸ்த்ரதாத்பர்யம்.

65. பூர்வமீமாம்ஸையில் ஆறாவது அத்யாயத்தில் முதல் பாதத்தில் [51, 52. ஸூத்ரங்களால்] நிஷாதஸ்தபதிந்யாயம் சிக்ஷிதமாயிராநின்றது. அத்ரைவர்ணிகனான நிஷாதனுக்கு ரௌத்ரயாகத்தில் அதிகாரம் வேதத்தில் அநுமதிக்கப்பட்டுள்ளது. வேதோச்சாரணமின்றியாகம்பண்ணமுடியாதே, அத்ரைவர்ணிகனுக்கு வேதாதிகாரமில்லையே, எங்ஙனே அவன் ரௌத்ரயாகம் பண்ணக்கூடும்? என்று சங்கித்துக்கொண்டு "தாத்தாஷிகாவாயெ-ஷாவ ஜெஶாஷிநா விஷ்ரம ஸம வாஷ்) யநிகொ நிஷாஜொ ரௌஷ்யாமம கூயஷ்ஷாக" என்று மீமாம்ஸகர்கள் ஸ்தாபித்து வைத்தார்கள். அதற்கு முன்னை ரயகாராயிகாராயிகரணமும் நோக்கத்தக்கது. ஒரு ஸங்கீர்ணஜாதீயன் ரதகாரனெனப்படுவான்; [வைச்யஸ்த்ரீயிடத்தில் க்ஷத்ரியனுக்குப் பிறந்தவன் மாஹிஷ்யன்; சூத்ரஸ்த்ரீயிடத்தில் வைச்யனுக்குப் பிறந்தவள் கரணி; அந்த கரணியினிடத்தில் மாஹிஷ்யனுக்குப் பிறந்தவன் ரதகாரன்.] இவன் சூத்ரனல்லாவிடினும் வேதத்துக்கு அநதிகாரிஜாதியென்று பாட்டதீபிகையில் சொல்லப்பட்டது. இப்படிப்பட்டவனுக்கு விதிபலத்தாலே வேதாதிகாரம் ப்ராப்தமாயிற்றென்று அவ்வதிகரணத்தாலுணர்க. இதனையே ரதகாரந்யாயமென்று உதாஹரிப்பர்கள். ஆக, இந்த ந்யாயங்களாலே முமுக்ஷுஸ்த்ரீ சூத்ரர்களுக்கு விதிபலத்தாலே ப்ரணவோபதேசம் பண்ண ப்ராப்தம் 'ஸ்த்ரீசூத்ரர்கள் ப்ரணவோபதேசத்திற்கு அதிகாரிகளாகில் ஸகல வேதங்களுக்கும் அதிகாரிகளாகக் குறையென்?' என்கிற சோத்யமும் இதனால் பரிஹரிக்கப்பட்டதாம். "வசநாத் ப்ரவ்ருத்திः, வசநாந் நிவ்ருத்திः" இறே

66. கீழ்க்காட்டிய மீமாம்ஸாந்யாயங்களை மந்த்ரரத்ந விஷயத்தில் நடாதூரம்மாள் ப்ரபந்நபாரிஜாதத்திலே அதிதேசம் பண்ணியிருக்கவுங் காண்கிறோம்.

‡ பூர்வமீமாம்ஸையில் ஆறாவது அத்யாயத்தில் பதின்மூன்றாவதான நிஷாதஸ்தபத்யதிகரணம் நோக்கத்தக்கது.

எங்ஙனேயென்னில்; "ப்ரபத்திவாசகமான மந்த்ரரத்நம் ஶ்வேதாஶ்வதர ச்ருதியிலுள்ளது. வேதவாக்கியமானவிதை த்ரைவர்ணிகரல்லாத சூத்ராதிகளும் சொல்லலாமென்று சாஸ்த்ரங்களில் சொல்லியிருப்பதால் வேதவாக்கியமாயினும் இது ஸர்வாதிகாரமாகக் குறையில்லை. சூத்ராதிகளுக்கு வேதத்தில் அதிகாரமில்லையென்று மறுத்த சாஸ்த்ரமே வேதைகதேசத்தில் அதிகாரமுண்டென்று இசையுமோவென்னில்; இங்ஙனே பலவிடமுண்டு; ரதகாராதிகளுக்கு வைதிகமான அக்ந்யாதாநாதிகளிலும், பத்நிக்கு ஆஜ்யாவேக்ஷணாதி மந்த்ரங்களிலும் அதிகாரம் ப்ரமாண ஸித்தமானாப்போலே மந்த்ரரத்நத்திலும் அது ப்ரமாண ஸித்தமாகிறது" என்று ஸ்பஷ்டமாக அருளிச்செய்தார். "ஸர்வதைவ ஸர்வகொஷேத்ரஂ ஸம்ப்ரதாயிஷு ஶ்ருதः। தத்ஸம்ஸ்காரயிதாரம் சாப்யேதேவ வியோயதே ॥ ஸர்வஸ்மின்னேதஸ்மாத்வயிதே தஸ்மாத்வயிகிர்யா॥...யதாஹி ரதகாராதே ரக்ந்யாதாநாதி வைதிகே। யதாஜ்யாவேக்ஷணாதௌ ச ஶூத்ரஸ்யாபி ஸுதந்த்ராः ஸம்ப்ரதாயதः॥" என்ற அம்மாள் ச்லோகங்களை ப்ரபந்ந பாரிஜாதத்தில் அதிகாரபத்ததியிற் காண்க.

67. சாஸ்த்ரங்களில் திருமந்த்ரம் த்ரைவர்ணிகாதிகாரமென்று சிலவிடங்களிலும் ஸர்வாதிகாரமென்று சிலவிடங்களிலும் சொல்லியிருப்பதன் கருத்து இத்தனையே காணும்; சப்தசக்தியினால் காரியங்கொள்ளுமளவில் அதிக்ருதாதிகாரம்; அர்த்தசக்தியினால் காரியங்கொள்ளுமளவில் ஸர்வாதிகாரம் என்றபடி.

68. இங்கொன்று நோக்குமின்; ப்ரணவமொழிந்த மந்த்ரசேஷத்தில் ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு அதிகாரம் பூர்வபக்ஷிகட்கும் ஸம்மதம். ப்ரணவ மாத்ரத்திலிறே விப்ரதிபத்தியுள்ளது. இங்கே வினவுகின்றோம்—ப்ரணவ ப்ரதிபாத்யமான அர்த்த ஸ்வரூபத்திலே அதிகாரமில்லையென்றோ? ஓம் என்று உச்சரிப்பதில் அதிகாரமில்லையென்றோ? அர்த்த விசிஷ்ட ப்ரணவோச்சாரணத்தில் அதிகாரமில்லையென்றோ? எங்ஙனே விவக்ஷிதம்?. அர்த்தஸ்வரூபத்தில் அதிகாரமில்லையென்று பூர்வபக்ஷிகளும் சொல்லிற்றிலர்; ஓமென்று உச்சரிப்பதில் அதிகாரமில்லையென்றும் சொல்லிற்றிலர். பரமபத ஸோபாநத்தில் நிர்வேத பர்வத்தில் "நீ பகவத்கிங்கரன் என்றால் ஓமென்றிசையாதே" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது தேசிகனால். இந்த ஓமுக்கு அங்கீகாரம் அர்த்தமாயினும் ஓமென்கிற ஆநுபூர்வியை உச்சரிப்பதில் அனைவர்க்குமதிகாரமுண்டென்னுமிடம் அப்ரதிஹதம். அஃதில்லையென்னில் 'வருவோம் போவோம்' இத்யாதி சப்தங்களையுச்சரிப்பதும் அயுக்தமென்னவேண்டி வரும். ஆகவே, ஓமென்கிற ஆநுபூர்வியில் அதிகாரமுண்டென்றும் ப்ரணவார்த்தத்திலும் அதிகாரமுண்டென்றும் இசைந்துவைத்து, இனி இவ்விடத்தில் ப்ரணவத்திற்கு எது அர்த்தமோ அந்த அர்த்தத்துடன் கூடியதாக ப்ரணவத்தை உச்சரித்தல் கூடாதென்று சொல்லுமத்தனையிறே சேஷித்து நிற்பது. ஓரேவகையான சப்தத்தில் இன்ன அர்த்தம் விவக்ஷிதமாம்போது அதிகாரமுண்டென்றும் இன்ன அர்த்தம் விவக்ஷிதமாம்

போது அதிகாரமில்லையென்றும் நியமிப்பார்க்கு ப்ரமாண ஸஹகாரமில்லையிறே. ஆனால், ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு ப்ரணவத்தில் அதிகாரமில்லையென்று சாஸ்த்ரம் நிஷேதித்துக் கிடக்கும்போது நாமென்செய்வோம்? என்று பழம்பாட்டையே பாடக்கூடும். அப்படிப்பட்ட நிஷேதசாஸ்த்ரம் "[illegible]." இத்யாதி ஸஹோதரமென்பதை நிபுணமாகநிரூபித்தோமிறே.

69. * அன்னபுகழ் முடும்பையண்ணலுலகாசிரியனருளிச்செய்த பரந்தபடியிலே "இதுதான் ஸர்வாதிகாரம்; ப்ரணவார்த்தத்துக்கு எல்லாருமதிகாரிகள். இடறினவன் அம்மேயென்னுமாபோலே இது சொல்லுகைக்கு எல்லாரும் யோக்யர்; ப்ராயச்சித்தாபேக்ஷையில்லை" (உபோத்காதத்திலே) என்ற ஸ்ரீஸூக்திகளைக் கண்டார் சிலர் இதில், ப்ரணவத்துக்கு எல்லாருமதிகாரிகள் என்னாதே 'ப்ரணவார்த்தத்துக்கு எல்லாருமதிகாரிகள்' என்றருளிச் செய்கையாலே, ப்ரணவம் த்ரைவர்ணிகாதிகாரமென்னுமிடம் ஸ்பஷ்டமாகிறதிறே யென்பர்கள். * கதிராயிரமிரவிகலந்தெரியா நிற்கச்செய்தே 'சங்கு பீதகம்' என்னுமவர்களிறே அவர்கள். தெளியச் சொல்லுவோம் கேண்மின்;—அவ்விடத்தில் 'இதுதான் ஸர்வாதிகாரம்' என்றிராநின்றது. 'இதுதான்' என்றதற்கு விஷயம் எது? என்று நோக்கவேணும். கீழும்மேலும் திருவஷ்டாக்ஷர ப்ரசம்ஸையே நடந்து போருகையாலே அதுவே இங்கு விஷயம். "இதுதான் சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெடநில்லாது" என்கிற கீழ்வாக்கியத்திலும், "இதுதான் ஸகல பலப்ரதம்" என்கிற மேல்வாக்கியத்திலும் 'இதுதான், இதுதான்' என்று சுட்டிக்காட்டுவது திருவஷ்டாக்ஷரத்தையே யன்றி ஏகதேசத்தையன்றென்பது கீழும்மேலும் காண்பார்க்கு விசதம். "நாமமாயிரமேத்தநின்ற நாராயணா" "நாமம் பலவுமுடை நாரண நம்பீ" என்ற அருளிச்செயல்களைக் கீழே உதாஹரிக்கையாலே இது 'நாராயண' என்கிற ஏகதேச மாத்ரபரம் என்றுய்த்துச் சிலர் ப்ரமிப்பது. அங்ஙனன்றுகிடீர். நாராயண நாமமாத்ரம் ப்ரஸ்துதமாகவுள்ள பாசுரங்களையும் பெரிய திருமந்த்ரத்தின் ப்ரசம்ஸாபரமாகவே தேசிகனுள்ளிட்ட நம் ஆசார்யர்கள் ஆங்காங்கு யோஜிக்கக் காண்கையாலே நாராயண நாமப்ரஸ்தாவமுள்ள பாசுரங்களை உதாஹரிப்பது திருமந்த்ரத்தை நோக்கியே யொழிய தாவந்மாத்ர விவக்ஷயா அன்று. ரஹஸ்யத்ரயஸார மூலமந்த்ராதிகாரத்தில் "இதுதன்னையே ஸ்வரவ்யஞ்ஜந பேதத்தாலே எட்டுத் திருவக்ஷரமாக பாவிக்கத் திருமந்த்ரத்தோடொக்குமென்று புராணாந்தரோக்தம்" என்றருளிச் செய்தது ஒருபுறமிருக்கச்செய்தேயும், நாராயண சப்தமாத்ர நிர்த்தேசத்தை உபலக்ஷணவிधயா திருமந்த்ர பரமாகக் கொள்வதொரு புடையிலே, பரந்தபடியிலும் ப்ரக்ருதஸ்தலத்தில் "நாராயணா—நாரண நம்பீ!" இத்யாதி பாசுரங்களை உதாஹரித்தாரென்னுமிடம் அவ்விடத்து ப்ரகரணத்தாலும், மற்றும் முமுக்ஷுப்படி முதலிய ரஹஸ்யங்களின் சைலியாலும் ஸுவ்யக்தம். ஆகையாலே 'இதுதான் ஸர்வாதிகாரம்'

என்ற பரந்தபடி ஸ்ரீஸூக்தி திருவஷ்டாக்ஷரத்தின் ஸர்வாதிகாரத்வத்தையே சொல்லுகிறது.

70. ஆகில், "ப்ரணவார்த்தத்துக்கு எல்லாரும் அதிகாரிகள்" என்கிற அடுத்த வாக்கியம் ஸமந்விதமாகிறபடி எங்ஙனேயென்னில்; ஒரு குறையுமில்லை; ப்ரணவத்தின் அர்த்தமாவது அநந்யார்ஹசேஷத்வம்; அதற்கு அனைவரும் அதிகாரிகளாகையாலே, அவ்வர்த்தந்தன்னையே ப்ரதிபாதிக்கிற திருமந்த்ரத்துக்கும் எல்லாரும் அதிகாரிகளாவர்—என்று கீழ்வாக்கியத்திற்கு உபபாதகமாக அவதரித்த வாக்யமிறே இது. "இடறினவன் அம்மேயென்னுமாபோலே இது சொல்லுகைக்கு எல்லாரும் யோக்யர்" என்ற அடுத்த வாக்கியமும் இதனையே ஸத்ருஷ்டாந்தமாக நிகமிக்கிறது. இது சொல்லுகைக்கு—திருமந்த்ரம் சொல்லுகைக்கு என்றபடி. "பேசுமின் திருநாமமெட்டெழுத்தும்" என்ற ப்ரக்ருத பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை, "ஓரதிகார ஸம்பத்தி வேண்டாவிறே பெற்ற தாய் பேர் சொல்லுவார்க்கு; அப்படியே இடர் வந்த போது எல்லாருமொக்கச் சொல்லிக்கொடு போரக்கடவதான இனிய திருநாமமான எட்டெழுத்தையும்" என்றருளிச் செய்ததுகொண்டும் தெளியலாம். பேசிற்றே பேசும் ஏககண்டரிறே இவர்கள்.

71. "ப்ரணவார்த்தத்துக்கு எல்லாருமதிகாரிகள்" என்றதனால் அர்த்தத்துக்கே ஸர்வாதிகாரத்வமுள்ளது; ப்ரணவத்துக்கு அது இல்லை என்றதாகுமென்று ஒருகாலுங் கொள்ளப்போகாது. ரஹஸ்யத்ரயஸாரத்தில் சாஸ்த்ரீய நியமநாதிகாரத்தில்—"இவனுக்கு இங்கிருந்தநாள் பண்ணலாம் கைங்கர்ய மஞ்சுண்டு; அவையாவன:—பாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல், அதுக்கு யோக்யதை யில்லையாகில் அருளிச் செயலைக்கேட்டு ப்ரவர்த்திப்பித்தல், அதுக்கு யோக்யதை யில்லையாகில் உகந்தருளின திவ்யதேசங்களுக்கு அமுதுபடி சாத்துப்படி திருவிளக்குத் திருமாலைகளை யுண்டாக்குதல்; அதுக்கு யோக்யதை யில்லையாகில் த்வயத்தினுடைய அர்த்தாநுஸந்தாநம் பண்ணுதல்; அதுக்கு யோக்யதை யில்லையாகில் என்னுடையவனென்று அபிமானிப்பானொரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அபிமாநத்திலே ஒதுங்கி வர்த்தித்தல் செய்யலாம்" என்றருளிச் செய்கிறார்; இதில் 'பாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல்' என்று முதலிலே அருளிச்செய்து, அதற்குமேல் 'அருளிச்செயலைக் கேட்டு ப்ரவர்த்திப்பித்தல்' என்றருளிச் செய்கையாலே 'அருளிச் செயலைக் கற்க அதிகாரமில்லை; கேட்கவே அதிகாரமுண்டு' என்று அர்த்த சிக்ஷை பண்ணக்கூடுமோ? அதற்கும் மேலே "த்வயத்தினுடைய அர்த்தாநுஸந்தாநம் பண்ணுதல்" என்கையாலே, த்வயார்த்தத்தில் அதிகாரமுண்டேயொழிய த்வயத்தில் அதிகாரமில்லையென்பதாகப் பொருள் கொள்ளக்கூடுமோ? அவை கூடுமாகில் இதுவும் கூடுமெனக் கொள்ளீர்.

72. இன்னமும், "ப்ரணவார்த்தத்துக்கு எல்லாருமதிகாரிகள்" என்றதனாலே ப்ரணவத்தில் இதரர்களுக்கு அநதிகாரம் விளங்குகிறதென்றும், "இது

தான் ஸர்வாதிகாரம்" என்றதனாலே நாராயணபத மாத்ரத்தில் அதிகாரம் விளங்குகிறதென்றும் பூர்வபக்ஷிகளின் கருத்தின்படியே கொள்வோமாகில், மற்ற நம: பதத்தின் அதிகாரத்தைப்பற்றியும் சதுர்த்தியின் அதிகாரத்தைப் பற்றியும் ஒன்றும் சொல்லிற்றிலராகையாலே குறையாகும். திருவஷ்டாக்ஷரத்தை விவரிக்கத் தொடங்கினவர் ப்ரணவத்தையும் நாராயணபதத்தையும்பற்றி மாத்திரம் அதிகாரவிஷய மருளிச் செய்துவிட்டால் மிகுந்தவற்றுக்கு என்ன கதி? மயங்கவைத்தலென்னும் குற்றத்திற்குக் கொள்கலமாக உலகாசிரியர் உரைத்தருளார். பெண்ணுக்கும் பேதையர்க்குங்கூடப் பயன்படுமாறு அருளிச்செய்த முமுக்ஷுப்படியில் இவ்விஷயம் ப்ரஸ்தாவிக்கப்படவுமில்லை. பிள்ளையுலகாசிரியர்க்கு ப்ரணவாதிகாரவிஷயத்தில் வேறான திருவுள்ளமிருக்குமாகில் அது முமுக்ஷுப்படியில் விரிந்திருக்கும். ப்ரணவப்ரதிச்சந்தமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டியதாகப் பூர்வபக்ஷிகள் சொல்லுகிற அக்ஷரத்தைப்பற்றியும் ப்ரஸ்தாவியாதிருக்க ப்ராப்தியில்லை. 'இதுதான் எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பதமாய்' என்றே பலகாலுமருளிச்செய்து போருமவர் அதற்கு முரணாக வேறொருபடியை விவக்ஷித்தாராகில் அதனை விரித்துரையாதொழிவரோ? "முமுக்ஷுவுக்கறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று" என்று தொடங்குகையாலே முமுக்ஷுத்வமுடையாரெல்லாரும் இதற்கு அதிகாரிகள் என்று முதலடியிலே ஸ்பஷ்டமாக்கி வைத்தாராயிற்று.

73. மற்றொன்றும் ஸூக்ஷ்மமாகக் குறிக்கொள்ள வேண்டிற்றுண்டு;—"பகவந்மந்த்ரங்கள்தான் அநேகங்கள்; அவைதான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றுமிரண்டுவர்க்கம். அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள். இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதானம்." என்றருளிச்செய்து "இத்தை வேதங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் விரும்பினார்கள்" என்கிறாருலகாசிரியர்; தேசிகனும் இங்ஙனே யருளிச்செய்கிறார். இதனால் வேதங்கள் விரும்பின திருமந்த்ர சரீரமும் ஆழ்வார்கள் விரும்பின திருமந்த்ர சரீரமும் துல்யமென்பது நன்கு விளங்கும். நாராயண நாமமாத்ரத்துக்கே இந்த துல்யத்வோக்தி என்னவொண்ணாது; உதாஹரண ப்ரமாணங்களில், நாரணனென்றும், நாராயணனென்றும், நாராயணாயவென்றும், நமோ நாராயணாயவென்றும் இப்படி பலவாறிருந்தாலும் திருவஷ்டாக்ஷரத்தில் நோக்கு என்னுமிடம் "திண்ணம் நாரணமே" என்றவிடத்துப் பிள்ளானுரையினால் விளங்குமிறே. ஆகையாலே வேதமுகந்த திருமந்த்ரமே ஆழ்வார்களுகந்தது; ஆழ்வார்களுகந்ததே ஸ்ரீவைஷ்ணவர்களனைவருமுகந்தது. வேதவிருத்தமான ப்ரகாரங்கள் அவைஷ்ணவர்கட்கு உபஜீவ்யமாம். ஆழ்வார்களு மாசார்யர்களும் பரிபூர்ண மந்த்ர சரீரத்தைத் தம் தம் ப்ரபந்தங்களிலே வ்யக்தமாக வெளியிடாதது மௌனவ்ருதமென்னுமத்தாலத்தனை. இது கீழேகாட்டிய ஸ்ரீ விஷ்ணுபுராண வியாக்யான ஸூக்தியாலும் விசதம்.

74. ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த நிகமநப்படியிலே "திருமந்த்ரம் எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும்; எங்ஙனே யென்னில், ஓம் என்றும் நம: என்றும் நாராயணாய என்றும்" என்று ஸுவ்யக்தமாகவே அருளிச்செய்யப்பட்டது.

75. ஆசார்ய ஹ்ருதயத்திலும் "மனமுடையீரென்கிற ச்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கு நாலும் நமருமென்னும்படி ஸர்வருமதிகாரிகள்" என்றருளிச் செய்யப்பட்டது. இதில் மர்மஸ்பர்சியென்றது திருமந்த்ரத்தை. ச்ரத்தையுடையாரெல்லாரும் திருவஷ்டாக்ஷரத்துக்கு அதிகாரிகள் என்றதாயிற்று.

76. ஆசார்ய ஹ்ருதயந்தன்னிலேயே "உத்கீத ப்ரணவத்தை ப்ரதமத்திலே மாறுடி" என்றவிடத்தில் வியாக்கியானமருளாநின்ற மணவாளமாமுனிகள் "ஓம் என்று ஸம்ஹிதாகாரேண வெடுத்தால் அதிக்ருதாதிகாரமாமென்று" என்றருளிச் செய்திருப்பதைக் கண்ட சிலர் 'ப்ரணவத்துக்கு ஸர்வாதிகாரத்வமில்லையென்பது இங்கே விளங்கிற்று' என்பர்கள். ஸம்ஹிதாஸாமாவயவமான உத்கீதப்ரணவவிஷயமாக அங்கருளிச் செய்தது உண்மையே. அந்த உத்கீதப்ரணவமும் ஸர்வாதிகாரமென்று சொல்லவருவாரில்லை. ஸ்வாவயவபூத ப்ரணவவிசிஷ்டமந்த்ரம் ஸர்வாதிகாரமென்றவளவாலே ப்ரணவஸாமாந்யமும் ஸர்வாதிகாரமென்றதாகுமோ? மந்த்ரபஹிர்ப்பூதமான அபூர்வப்ரணவங்கள் அதிக்ருதாதிகாரமென்று கீழே வரைந்தோமிறே. நிஷாதஸ்தபதிந்யாயாதிகளாலே அதுதனக்கும் ஸ்த்ரீசூத்ராதிகாரம் சொல்லிவிடலாமே யென்னில்; இது சாஸ்த்ர மர்யாதை யறியாதார் பேச்சு. "மந்த்ரோஷ்டாக்ஷரோ நூநம் ஸர்வேஷாம் ஸர்வகாங்க்ஷிணாம்" "பேசுமின் திருநாமமெட்டெழுத்தும்" "ஹே மர்த்யா:......ஸம்ஸாரார்ணவ ஸந்தரணைக ஸாதநம் ப்ரணவஸஹிதம் மந்த்ரம் ப்ரபத்யத்வம் ஸதா:" (முகுந்தமாலை) இத்யாதிப்ரமாணங்களாலே ப்ராப்தமான ப்ரணவத்தின் அதிகாரத்தை முமுக்ஷுஸாமாந்ய விஷயமாக ஸ்தாபிக்க மீமாம்ஸாந்யாயம் உபகாரகமாகிறதென்றால், அவஸித்தமான அந்யஸ்தலங்களிலும் இங்ஙனே ஆயிடுகவென்று ஆபாதநம் பண்ணுவது அவிவேக பலமிறே. ந்யாயஸஞ்சாரமென்பது வசநாவிருத்த விஷயங்களிலேயாம்.

77. ஸ்ரீவசநபூஷணத்தில் நிஷித்த கர்மநிரூபண ப்ரகரணத்தில் "வர்ணாச்ரம விபரீதமான உபசாரமும்" என்றவிடத்திலே "த்ரைவர்ணிகார்ஹமான வைதிக மந்த்ரங்களாலே சதுர்த்த வர்ணரானவர்கள் ஆராதித்தல் வர்ண விபரீதமான உபசாரம்" என்று மணவாளமாமுனிகள் வியாக்கியானித்திருக்கையாலே வைதிக மந்த்ரமான திருவஷ்டாக்ஷரத்தை அத்ரைவர்ணிகர் அநுஸந்தித்தல் நிஷித்தமென்று நிரூபிதமாயிற்றென்பர் சிலர். நிஷேத சாஸ்த்ரமெல்லாம் விஹிதவ்யதிரிக்தவிஷயத்திலே ஸாவகாசம் என்னுமிடமறியாதே யதாச்ருதக்ராஹிகளாய்க் குசோத்யம் பண்ணுவார்க்கு என் சொல்லவல்லோம். அதற்குக் கீழ் வாக்யத்திலே "அக்ருத்யகரணமாவது பரஹிம்ஸை" என்றருளிச் செய்தவிடத்திலே

"'ந ஹிம்ஸ்யாத் ஸர்வாபூதாநி' என்கிற விதியை அதிக்ரமித்துப்பண்ணும் ப்ராணிபீடை பாபம்" என்றிறே மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸூக்தி யுள்ளது. இது "அக்நீஷோமீயம் பசுமாலபேத" என்ற விதிபலப்ராப்தமான யஜ்ஞபசு ஹிம்ஸையையும் பாபமென்னவற்றன்றோ? விசேஷவிதியைவிலக்கியன்றோ ஸாமாந்ய நிஷேதம் இடம்பெறும். இங்ஙனமே, சதுர்த்தவர்ணஸ்தர்கள் தங் களுக்கு ப்ராப்தமல்லாத வைதிகமந்த்ரங்களாலே ஆராதித்தல் நிஷித்தமென்றதைத் தனே போக்கி விதிப்ராப்தங்களைக் கொண்டு பண்ணுமாராதநத்தையும் நிஷித்த மென்றதன்று. அப்படியாகில் வைதிகமான த்வயமந்த்ரத்தைக் கொண்டுபண்ணு மாராதநமும் பாபமென்ன வேண்டிவரும்.

78. வார்த்தமாலையில் முப்பத்தொன்பதாம் வார்த்தையைக்கண்டு சிலர் ப்ர மிப்பர்கள். அதாவது—"ஸ்த்ரீசூத்ராதிகளுக்குத் திருமந்த்ர படநத்தில் அதிகார மில்லை; அர்த்தத்திலே அதிகாரமுள்ளது என்று நம்பிள்ளை அருளிச் செய்ய, திருக்குருகூர்தாஸர் அத்ருப்தரைப் போலேயிருந்தவாறே, இவர்க்குப் புரு ஷார்த்த ஸித்திக்குறுப்பான அர்த்தத்தில் அதிகாரமுண்டாகில் அப்ரயோஜக மான வாசத்தில் அதிகாரமில்லையென்றவித்தால் இவர்க்கு வருமதென்? என் றருளிச் செய்தார்" என்றிருக்கிறது. இதனால் ப்ரணவம் அதிக்ருதாதிகார மென்றுவிளங்குகின்றதாம். இந்த வார்த்தையில் ப்ரணவத்தைப்பற்றின பேச்சே யில்லை. திருமந்த்ரசப்தமேயுள்ளது. எட்டெழுத்தையும்பற்றின பேச்சாயிரா நின்றது. திருமந்த்ரத்திற்கு சப்தசக்தியினால் கார்யகரத்வமென்றும் அர்த்த சக்தியினால் கார்யகரத்வமென்றும் இரண்டு தன்மைகளுள்ளனவாகவும், முந்தி னது த்ரைவர்ணிகமாத்ராதிகாரமாகவும் கீழே விரித்துரைத்தோம். அவ்வர்த் தமே இந்த வார்த்தையில் அடங்கியுள்ளது. ஸ்த்ரீ சூத்ரர்கள் திருமந்த்ரத் தைக்கொண்டு அர்த்த சக்தியினால் காரியங்கொள்ளலாமேயொழிய சப்த சக்தி யினால் காரியங் கொள்ளலாகாது என்றதத்தனே. இவ்வார்த்தையில் ப்ரணவ மாத்ரப்ரஸ்தாவமே இல்லை. உள்ளது திருமந்த்ர சப்தம். அது அஷ்டாக்ஷர பரமென்பதை அவ்விடத்திலேயே மேல் அர்த்த விவரணத்தினால் நன்குணர்க. ப்ரணவத்துக்கும் மந்த்ரத்வமுண்டேயாகிலும் திருமந்த்ரமென்பது திருவெட் டெழுத்தையிறே. ஸ்த்ரீ சூத்ரர்களுக்கும் திருமந்த்ர ஜபத்திலே அதிகாரமுண் டாகிலும், சப்த சக்தியினால் காரியங்கொள்ளவுரியார்க்கு எப்படிப்பட்ட ஜபக்ர மம் சாஸ்த்ரோக்தமென்று கீழே நாம் விவரித்தோமோ, அப்படிப்பட்ட க்ரமத் தில் இவர்களுக்கு அதிகாரமில்லை யென்பதே இவ்வார்த்தையில் விவக்ஷிதம்.

79. வார்த்தாமாலையில் ப்ரணவத்தைப் பற்றியே பேசியிருப்பதாக வைத்துக் கொண்டாலும் வருவதொரு ஹாநியில்லைகிடீர். அதில் ஊடே பல கைச்சரக்கு கள் சொருகப்பெற்று அநந்விதோக்தி முதலியவை ஏறிக்கிடக்கையாலே முத்ரித புஸ்தகத்தில் பூர்ணப்ராமாண்யம் கொள்வதற்கில்லையென்று விரோதவாஸித ஸஹ்ருதயர் பணிப்பர். ஆயினும் ஈண்டு உதாஹரித்த அம்சத்தில் அவத்யலேசமு மில்லையென்பது அநவத்யமிறே.

80. மஹாபாரதம் ஆச்வமேதிகபர்வத்தில் [118—14.] "தஸ்மாத் ஸப்ரணவம்சூத்ரோ மந்நாமானி ந கீர்த்தயேத்" என்றுள்ள வசநத்தைக்கொண்டு போராடுவர் சிலர். இதுவும் அந்த வசநத்தின் வரலாற்றை வரியடைவே வாசித்தறியாதாருடைய ப்ரஸங்கமாம்.

81. உதாஹரித்த வசநம் நூற்றுப்பதினெட்டாமத்யாயத்திலே உள்ளது. அதற்குக் கீழே இரண்டு அத்யாயங்களை வாசித்தால் விஷயம் விளங்கும். தர்மபுத்திரர் கண்ணபிரானை நோக்கி "கீத்ருசா ப்ராஹ்மணா: புண்யா பாவசுத்தா ஸ்ஸுரேச்வர!" [116—1.] சிறந்த பிராமணர்கள் யாவர்? என்று கேட்க, "க்ஷாந்தம் தாந்தம் ஜிதக்ரோதம் ஜிதாத்மாநம் ஜிதேந்த்ரியம்—தமக்ர்யம் ப்ராஹ்மணம் மந்யே சேஷா: சூத்ரா இதி ஸ்ம்ருதா:." ='ஆத்ம குணங்களில் சிறந்தவர்களே ப்ராம்மணர்கள், அல்லாதார் சூத்ரர்கள்' என்றும், "சண்டாளமபி வ்ருத்தஸ்தம் தம் தேவா ப்ராஹ்மணம் விது:"='இழிகுலத்தவனேனும் நல்லொழுக்கமுடையனேல் அவனே ப்ராம்மணன்' என்றும், இங்ஙனே பலச்லோகங்கள் சொல்லி ஜாதியில் சரக்கறுத்து குணங்களே முக்கியமென்று கண்ணபிரான் அருளிச்செய்து வந்தான். மீண்டும் தர்மபுத்ரர் "கீத்ருசாநாம் து சூத்ராணும் நாநுக்ருஹ்ணஸி சார்ச்சநம்? [117—1.]='எப்படிப்பட்ட சூத்ரர்களுடைய ஆராதனையைத் திருவுள்ளம்பற்றமாட்டாய்? சூத்ரராவார் யாவர்?' என்று கேட்க; கண்ணபிரான் ஜாதிசூத்ரனைப்பற்றி அணுமாத்ரமும் பேசாமல், "எந்த அந்தணன் பன்னிரண்டாண்டு கிணற்றில் நீராடி வருகிறானே, அவன் அவ்வுடலோடே சூத்ரனாய் விடுகிறான்; எவன் அரசனையடுத்தே வயிறு வளர்க்கிறானோ அவன் மிக்க வேதியனாயினும் சூத்ரனாய் விடுகிறான்;" என்றிங்ஙனே பல சொல்லி வந்து 'எனக்கு ராக்ஷஸர்களிடத்தில் அச்சமில்லை, அஸுரர்களிடத்திலும் அச்சமில்லை; சூத்ரனுடைய வாயில்நின்றும் வேதம் வந்தால் அதுவே எனக்கு பயஹேது; ஆகையாலே சூத்ரன் ப்ரணவத்தோடே நாமஸங்கீர்த்தநம் பண்ணலாகாது' என்று தலைக்கட்டியருளினான். ஆகவே இங்குள்ள சூத்ரசப்தம் "அமரவோரங்கமாறும்" என்ற திருமாலைப் பாசுரத்திற் சொல்லுகிற கட்டளையிலே நிலைகுலைந்த அந்தணரைச் சொல்லுகிறதேயன்றி வேறில்லை. "ஶ்வபாகம் ப்ராஹ்மணா: ஶூத்ரா ஹ்யபாகவதா இதி। ந ஶூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:॥" என்கிற ப்ரஸித்தவசநம் அவ்விடத்திலேயிறே உள்ளது. "தஸ்மாத் ஸப்ரணவம் சூத்ர:" இத்யாதி வசநமும் "ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:" என்ற வசநமும் ஒரே அத்யாயத்திலுள்ளதாயிருக்கச் செய்தேயும் அஸ்தானே கலங்குவாருண்டோ? "தஸ்மாத் ஸப்ரணவம் சூத்ர:" என்ற விடத்திலுள்ள சூத்ரபதம் அவிலக்ஷணவ்யக்திபரமென்று அநாயாஸமாக அறுதியிடலாயிருக்க, மருண்டு நிற்பதென்னோ?

82. "ப்ராஹ்மணா மம தேவதா:" "ப்ராஹ்மணேப்யோ நமோ நித்யம்" இத்யாதி ஸ்தலங்களில் ஸாமாந்யமாகவுள்ள ப்ராஹ்மணசப்தம் "விஷ்ணுபக்திவிஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:" இத்யாதிகளில் புலையரினும் கேடாக இழித்துரைக்

கப்பட்ட ப்ராஹ்மணோபஸஜர்களைத் தவிர்த்து "ஸவிப்ரேந்த்ரோ முநிஃ ஸ்ரீமாந் ஸ யதிஸ்ஸச பண்டிதஃ" என்று சிறப்பித்துரைக்கப்பட்ட ப்ராஹ்மணர்களையே குறிப்பதுபோல, "தஸ்மாத் ஸப்ரணவம் சூத்ரஃ" என்ற விவ்விடத்தில் ஸாமாந்யமாகவுள்ள சூத்ரசப்தமும் "ந சூத்ரா பகவத்பக்தாஃ விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதாஃ" என்று சிறப்பித்துரைக்கப்பட்ட விசேஷாதிகாரிகளைத் தவிர்த்து "ஸர்வ வர்ணேஷு தே சூத்ரா யேஹ்யபக்தா ஜநார்த்தநே" என்று இழிக்கப்பட்ட கர்ம சூத்ரர்களையே குறிக்கவல்லதென்னுமிடம் நிஸ்ஸம்சயவிபர்யயம்.

83. "நஶூத்ராய மதிம் தத்யாத்" "தஸ்மாச்சூத்ரோ யஜ்ஞேநவக்லுப்தஃ" இத்யாதி ஸ்தலங்களிலுள்ள சூத்ரசப்தத்துக்கும் இங்ஙனே தானோ நிர்வாஹமென்பீர்; அவற்றை ஸாமாந்ய நிஷேதமாக்கவல்ல விசேஷ விதிசாஸ்த்ரமுண்டாகில் அவற்றுக்குமிங்ஙனே தான் நிர்வாஹமென்னப் பொருந்தும்.

84. இவ்விஷயத்திலே பன்னியுரைக்கவேண்டியவை பாரதத்தினும் பெரியனவுண்டாயினும் ஸாராம்சங்களைச் சுருங்கச் சொன்னோம். அஸூயையற்ற அறிவுடையார் இவ்வளவிலே தெளிய ப்ராப்தம். கவிதார்க்கிக கேஸரி, வாதி கேஸரி முதலானோர்க்கு இவ்விஷயத்தில் விப்ரதிபத்தி உண்டாயிருந்த மாத்திரத்தினால் சாஸ்த்ரார்த்தம் விபரீதமாய்விடாது. விவேகிகள் உற்று நோக்கினால் ஸர்வாபிப்ராய ஸாமரஸ்யமும் இதில் ஸமந்விதமாகலாம். எங்ஙனே யென்னில்; "திருமந்த்ரம் ப்ரணவசதுர்த்திகளையொழிந்தபோது ஸர்வாதிகாரம்" என்று தேசிகன் திருவுள்ளம்பற்றுகிறார். சதுர்த்தியை ஒழிக்கவேணுமென்பதற்கு ச்ருங்கக்ராஹிகயா ஒரு ப்ரமாணமும் காட்டிற்றிலர். "நமோ நாராயணேத்யுக்த்வா ச்வபாகஃ புநராகமத்" என்ற நிர்த்தேசமாத்ரத்தையே கொண்டு ஸாதிக்கிறார். அஸ்து; இரண்டு அம்சங்களை வர்ஜிக்கும்படி அவர் விதித்திருக்க, அர்வாசீநர்கள் சதுர்த்தீவர்ஜநத்தை நெஞ்சிலும் நினையாதே ப்ரணவவர்ஜநமொன்றிலே போர்புரியா நின்றார்கள். துல்யமாக நிஷேதித்த விரண்டிலே ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றுகைக்கு நியாமகமேதென்றுவினவில், "சதுர்த்தியைவிடவேணுமென்றது ஸ்த்ரீசூத்ரர்களை நோக்கியன்று; பஞ்சமஜாதீயர்களை நோக்கியாமத்தனை" என்று பலர் கூறுவர்; இங்ஙனே விபஜித்துச் சொல்லுகைக்கு நிதாநமொன்றுமின்றியே யிருந்தாலும் * உபஶ்லிஷ்டிஹாஷணம் பண்ணுநின்றார்கள்; பண்ணுக; இப்புடையிலேதானே, ப்ரணவத்தை யொழிக்கச்சொன்னதும் விலக்ஷண வைஷ்ணவ முமுக்ஷு சூத்ரர்களை நோக்கியன்றென்று கொள்ளப்ராப்தம். ஒன்றுக்குக் கொண்டவழி மற்றொன்றுக்கும் உறுப்பாவதிறே அழகு. இங்ஙனே கொள்ளில் ஸர்வம் ஸமஞ்ஜஸமாகுமிறே.

85. இவ்விடத்திலே சிங்கப்பிரான் பணித்துப் போருவதொரு பரமார்த்தமுண்டு; ஓ மென்கிற ஆநுபூர்வியை (அங்கீகாரம் முதலிய வேறு பொருள்களில்) உச்சரிக்க அனைவர்க்கும் அதிகாரமுண்டென்றும் ப்ரணவார்த்தத்தை அநுஸந்

திக்கையும் ஸர்வாதிகாரமென்றும், ஆனால் தத்த்வவிவக்ஷயா ஓமென்று உச்சரிக்கக் கூடாதென்றும் சொல்லுகிற பூர்வபக்ஷிகளின் சொலவை அங்ஙனமே தழீஇக் கொள்வோம். “ஓம் நமோநாராயணாய” என்று ஸ்ரீவைஷ்ணவ ஸ்த்ரீ சூத்ரர்கள் அநுஸந்திப்பதில் முதலெழுத்தான ஓமென்பது வைதிகப்ரக்ரியையாகவன்றிக்கே லௌகிக ப்ரக்ரியையாலே ஆ—உ—ம—என்ற மூன்றெழுத்துகளின் கூட்டரவு. ஆ என்றது—ஆழ்வார் திருவடிகளே சரணம் என்றபடி. உ என்றது உடையவர் திருவடிகளேசரணம் என்றபடி. ம என்றது மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம் என்றபடி. ஸத்ஸம்ப்ரதாயத்துறையிலே படிந்தவர்கள் ‘ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்’ என்று உரையாமல் ஒன்றிலும் ப்ரவர்த்திக்கக் காண்பதில்லையாகையாலும், குருபரம்பராவந்த பூர்வகமாக மந்த்ராநுஸந்தாநம் பண்ண சாஸ்த்ரவிதிதானுமுண்டாகையாலும், ஆழ்வாருடையவர் மணவாளமாமுனிகளைத் தொழுவதான பொருளை விவக்ஷித்து ஓமென்றநுஸந்தித்துப் பின்னை நமோநாராயணாயவென்கிறார்களென்று கொள்ளக் கடவது—என்றும். இதுவுமொரு யோஜனையாயிருக்கத் தகுமாயினும், ஸர்வஜாதீய முமுக்ஷு ஸாதாரணமான ரஹஸ்யநூல்களிலே லோகதேசிகன் நிகமாந்த தேசிகனுள்ளிட்ட ஆசார்யர்களனைவரும் ஒருமிடறாக ‘அ-உ-ம’ என்று பிரித்து ப்ரணவார்த்தத்தையே வியாக்கியானித்திருக்கையாலும், வ்யஸ்தபதத்தில் அதிகாரமிசைந்தபோதே ஸமஸ்தபதத்திலதிகாரமும் தன்னடையே இசைந்ததாக ப்ராப்தமாகையாலும், ஜாதியில் வாசியுண்டேலும் முமுக்ஷுத்வத்தில் வாசியற்றானனைவர்க்கும் ஆநுபூர்வியாலும் அர்த்தத்தாலும் ஏகரூபமான திருமந்த்ரசரீரமே உபாதேயமாகக்குறையில்லை யென்கிற கலையறக்கற்ற எழில்மதியோருடைய ஸித்தாந்தமே ஸர்வசாஸ்த்ரஸாரஜ்ஞ ஸ்ப்ருஹணீயமாம். (கூ)

செங்கயல் திளைக்கும்சுனைத் திருவேங்கடத்துறை செல்வனை *
மங்கையர்தலைவன் கலிகன்றி வண் தமிழ்ச் செஞ்சொல் மாலைகள் *
சங்கையின்றித் தரித்துரைக்க வல்லார்கள் தஞ்சமதாகவே *
வங்கமா கடல்வையம் காவலராகி வானுல காள்வரே. (க௦)

| சொல் | பொருள் | சொல் | பொருள் |
|---|---|---|---|
| செம் கயல் | (இளமையாலே) சிவந்த மீன்கள் | மங்கையர் தலைவன் கலிகன்றி | திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவரான கலியன் (அருளிச் செய்த) |
| திளைக்கும் | களித்து விளையாடப் பெற்ற | வண் தமிழ் | அழகிய தமிழிலாகிய |
| சுனை | நீர் நிலைகளையுடைய | செம் சொல் மாலைகள் | சிறந்த சொல் மாலையை |
| திரு வேங் கடத்து | திருமலையிலே | சங்கை இன்றி தரித்து உரைக்க வல்லார்கள் | ‘இது பலன்தருமோ தராதோ’ என்கிற ஸந்தேஹமில்லாமல் (விச்வாஸத்துடனே) அப்யஸித்து அநுஸந்திக்க வல்லவர்கள் |
| உறை | நித்யவாஸம் பண்ணுகின்ற | | |
| செல்வனை | திருமாலைக் குறித்து, | | |

வங்கம் மா கடல் வையம் — கப்பல்கள் நிறைந்த பெரிய கடலால் சூழப்பட்ட பூமண்டலத்திலுள்ளார்க்கு
தஞ்சம் அது ஆகவே காவலர் ஆகி — புகலிடமாய்க்கொண்டு அவர்களுக்கு ரக்ஷகராகி (இப்படி லீலாவிபூதியை நிர்வஹித்த பின்பு)
வான் உலகு ஆள்வர் — பரமபதத்தையும் ஆளப் பெறுவர்கள்.

* * *—[செங்கயல்திளைக்குஞ்சுனை.] யௌவனபருவத்திற்குத் தகுதியாகச் சிவந்த நிறத்தையுடைய கயல்களானவை ஒன்றோடொன்று களித்து விளையாடப்பெற்ற சுனைகளையுடைய திருவேங்கட மலையிலே நித்யவாஸம் செய்தருள்கின்ற பெருமானைக்குறித்துத் திருமங்கைமன்னன் அழகிய தமிழிலே செவ்விய சொல்லாலே அருளிச்செய்த இச்சொல்மாலையைத் தரித்துச் சொல்லவல்லவர்கள் இவ்விபூதியிலுள்ளவளவும் ராஜாதிராஜர்களாய் விளங்கி, பின்னை நித்திய விபூதிக்கும் நிர்வாஹகராகப் பெறுவர்களென்று இத்திருமொழிகற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

சங்கையின்றித் தரித்துரைக்கவல்லார்கள் = 'இத்தமிழ்ப்பாசுரங்களுக்கு இவ்வளவு வைபவமுண்டோ?' என்று ஸந்தேஹப்படாமல் பூர்ண விச்வாஸத்துடனே ஓதவல்லவர்கள் என்றபடி. ശങ്കാ (சங்கா) என்ற வடசொல் சங்கையெனத் திரிந்தது. இனி, "சங்கையின்றி வானுலகாள்வரே" என இயைத்து, இதிற் சொன்ன பலன் நிஸ்ஸம்சயமாகக் கைகூடும் என்றதாகவுங் கொள்ளலாம். "தஞ்சமதாகவே" என்றவிடத்து 'തഥ്യം' [தத்த்யம்] என்ற வடசொல் தஞ்சமென மருவிற்றென்று கொண்டு, தஞ்சமதாகவே—உண்மையாகவே என்று பொருள் கொள்ளுதலுமாம். 'வித்யா' என்ற வடசொல் விஞ்சை என மருவுவது போல, தத்த்யம் என்ற வடசொல்லும் தஞ்சமென்றாகலாமிறே. ... (கo)

அடிவரவு:—கொங்கு பள்ளி நின்ற பார்த்தற்கு வண்கையான் எண்திசைகள் பார் அம்பரம் பேசுமின் செங்கயல் தாய்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்

முதற்பத்து—ஒன்பதாந்திருமொழி.

# தாயே தந்தை.



அவதாரிகை:—கீழ்த்திருமொழியில், பாசுரந்தோறும் "திருவேங்கடமடை நெஞ்சமே!—திருவேங்கடமடை நெஞ்சமே!" என்று சொல்லித் திருமலையை ஆச்ரயிக்குமாறு தம் திருவுள்ளத்தைத் தூண்டினார். அதுவும் அப்படியே இசைய, "யானுமென்னெஞ்சமிசைந் தொழிந்தோம்" என்றாற்போலே இருவரும் கூடித் திருவேங்கடமுடையானை அநுபவிக்கத் திருமலையிலே வந்து புகுந்தனர். ஸர்வஸ்வாமியாய் ஸர்வவிதபந்துவான திருமால் இங்கே நித்யவாஸம் செய்தருளுகிறபடியாலே நம்முடைய அபேக்ஷிதங்களெல்லாம் இங்கே பெறலாமென்று மிகுந்த பாரிப்புடனே வந்தார் ஆழ்வார். இப்படி வந்த ஆழ்வாரை எதிர்கொண்டழைத்தல் அணைத்தல் மதுரமாகவொரு வார்த்தைசொல்லுதல் குசலப்ரச்நம்பண்ணுதல் கைங்கரியத்திலே ஏவுதல் ஒன்றுஞ்செய்திலன் திருமலையப்பன். அதனால் ஆழ்வார் மிகவுந்திருவுள்ளம் நொந்து 'ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் நமக்கு வகுத்தநாதனாய் பிராட்டியை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாதானாயிருக்குமிப்பெருமான் இப்போது நம்மை உபேக்ஷித்திருப்பதற்குக் காரணம் நம்முடைய கனத்த பாவங்களேயாகவேணும்; மஹாபாபியான இவனை நாம் கடாக்ஷிக்கலாகாதென்று திருவுள்ளம்பற்றியிருக்கிறான் போலும்' என்று நிச்சயித்து, அப்பெருமான் திருவுள்ளத்திலே இரக்கம் பிறக்கும்படி பாசுரம் பேசுகிறார்.

பந்துக்களல்லாதாரை பந்துக்களாக நினைத்தும், போக்யமல்லாத விஷயங்களை போக்யமாகக் கொண்டும், ஜீவஹிம்சைகளை அளவறப்பண்ணியும், இன்னமும் பலவகைப்பாவங்களைச் செய்தும் காலம் கழித்தேனாகிலும், இப்போது உன்னைவிட்டுத் தரிக்கமாட்டாத அன்பு பிறந்ததனால் அநுதாபத்துடனே இவ்விடம் வந்து சேர்ந்தேன்; இனி என்னுடைய முன்னைத்தீவினைகளைப்பார்த்துக் கைவிடலாகாது; நீயோ ஸர்வரக்ஷகன்; நானோ அநாதன் அநந்யகதி; என் குற்றங்களைப் பொறுப்பிக்கைக்குப் பிராட்டியும் "அகலகில்லேனிறையுமென்று" திருமார்பிலே உறையாநின்றாள்; ஆனபின்பு என் அபராதங்களைப் பொறுத்தருளி அடியேனைக் கைக்கொண்டருளவேணுமென்று பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகக் கொண்டு திருவடிகளின்மேல்விழுந்து சரணம்புகுகிறார். ஒன்பதாம் பாட்டிலே "மாயனே எங்கள் மாதவனே!" என்று பிராட்டி ஸம்பந்தம் ப்ரஸ்துதமாயிருக்கையாலே புருஷகாரம் முன்னாகச் சரணம் புகுகிறாரென்பது விளங்குமிறே. ... ... ... ... ... ... ... *

தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும் *
நோயே பட்டொழிந்தேனுன்னைக்காண்பதோ ராசையினால் *
வேயேய் பூம்பொழில்சூழ் விரையார் திருவேங்கடவா! *
நாயேன் வந்தடைந்தேன் நல்கியாளென்னைக் கொண்டருளே. (க)

| | |
|---|---|
| வேய் ஏய் | மூங்கில்கள் நெருங்கியிருக்கப் பெற்றதும் |
| பூ பொழில் சூழ் | பூஞ்சோலைகள் நிறைந்திருக்கப் பெற்றதும் (ஆகையினாலே) |
| விரை ஆர் | பரிமளம் விஞ்சியிருக்கிற |
| திரு வேங்கடவா | திருமலையில் எழுந்தருளியுள்ள பெருமானே! |
| தாயே என்றும் தந்தையே என்றும் தாரமே என்றும் கிளையே என்றும் மக்களே என்றும் | தாய் தந்தை மனையாள் பந்துக்கள் பிள்ளைகள் என்கிற ஆபாஸமான சரீர ஸம்பந்திகளையே எப்போதும் வாய் வெருவிக்கொண்டு |
| நோய் பட்டு ஒழிந்தேன் | அநர்த்தப்பட்டுப் போனவனும் |
| நாயேன் | நாய் போலே மிக்க நீசனுமான அடியேன் |
| உன்னை காண்பது ஓர் ஆசையினால் | (அந்த ஆபாஸ பந்துக்களை விட்டு, ப்ராப்த பந்துவான) உன்னை ஸேவிக்க வேணுமென்கிற ஆசையினால் |
| வந்து அடைந்தேன் | உன்னிடம் வந்து சரணம் புகுந்தேன்; |
| என்னை | சரணாகதனான என்னை |
| நல்கி | கிருபை செய்து |
| ஆள் கொண்டருள் | அடிமைகொண்டருளவேணும். |

* * *—[தாயே தந்தை.] 1. "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய் தந்தையுமவரே யினியாவாரே" 2. "தாயாய்த்தந்தையாய் மக்களாய்மற்றுமாய் முற்றுமாய், நீயாய் நீ நின்றவாறு" என்கிறபடியே உன்னையே ஸகலவிதபந்துக்களுமாகக் கொள்ளவேண்டியிருக்க அது செய்யாதே தாயேயென்றும் தந்தையேயென்றும் தாரமேயென்றும் கிளையேயென்றும் மக்களேயென்றும் ஆபாஸமான புத்ரமித்ராதிகளிடத்திலே ஆசைவைத்து மிகவும் கஷ்டங்கள்பட்டேன்; அவர்களுக்கு என்னை ரக்ஷிக்க சக்தியுண்டாகிலன்றோ அவர்களால் நான் வாழ்வேன்; உண்மையில் அசக்தர்களான அவர்களை நான் வீணே நம்பிக்கெட்டேன் என்றபடி. "இப்படி ஆபாஸபந்துக்களை நம்பினபடியாலன்றோ நமக்குக் கஷ்டங்கள் நேர்ந்தன; நிருபாதிகபந்துவான எம்பெருமானைப்பற்றினோமாகில் ஒரு குறையுமிராதே" என்று இன்று நல்ல புத்தியுண்டாயிற்று. பரமபோக்யமான திருமலையிலே வந்து நிற்கிற நிலையிலே ஈடுபட்டுத் திருவடிகளிலே விழுகின்றேன்; அடியேனுடைய முன்னைத்தீவினைகளைக் கணிசியாமல் சரணாகதனென்பதையே குறிக்கொண்டு பரமகிருபையுடன் அடிமைகொண்டருளவேணும் என்று பிரார்த்தித்தாராயிற்று.

நாயேன்=நாய் போலே நீசன் என்று நைச்யாநுஸந்தாநம்பண்ணுகிறபடி. இவ்விடத்தில் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செயல் பாரீர்—; "[நாயேன்.]

---

1. திருவாய்மொழி 5-1-8 2. ஷை 7-8-1.

நான் செய்து கொண்டபடியைப் பார்த்தால் பிறர்க்குமாகேன், தேவரீர்க்குமா கேன். புறம்பேபோகில் கல்லையிட்டெறிவர்கள். உள்ளே புகுரில் தொட்டனவும் தீண்டினவும் பொகட வேண்டிவரும்.”

ராஜபுத்ரர்கள் நாய்களையே மேல்விழுந்து விரும்புமாபோலே ராஜாதிராஜனை நீயும் என்னை மேல்விழுந்து விரும்பவேணுமென்பது உள்ளுறை. (க)

மானேய் கண்மடவார் மயக்கில்பட்டு * மாநிலத்து
நானே நானாவித நரகம்புகும் பாவம்செய்தேன் *
தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை * என்
ஆனாய்! வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. (உ)

| | |
|---|---|
| தேன் ஏய் | வண்டுகள் நிறைந்த |
| பூ பொழில் சூழ் | பூஞ்சோலைகளாலே சூழப்பட்ட |
| திரு வேங்கடம் மா மலை | திருவேங்கடமென்னும் சிறந்த மலையிலே எழுந்தருளியிராநின்ற |
| என் ஆனாய் | ஆனைபோன்ற எம்பெருமானே! |
| மா நிலத்து | இப்பெரிய பூமண்டலத்திலே |
| மான் ஏய் கண் மடவார் மயக்கில் பட்டு | மான்போன்ற கண்ணழகுடைய மாதர்களின் கண் மயக்கிலே அகப்பட்டு, |
| நாநாவித நரகம் புகும் பாவம் | பலவகைப்பட்ட நரகங்களிலே புகுவதற்குக் காரணமான பாவங்களை |
| நானே செய்தேன் | நானொருவனே செய்து வைத்தேன்; |

(ஆகிலும் இன்று அநுதாபம் பிறந்தமையாலே)

| | |
|---|---|
| வந்து அடைந்தேன் | உன்பக்கல் வந்து சரணம் புகுந்தேன்; |

அடியேனை ஆள் கொண்டருள்—.

* * *—[மானேய்கண்மடவார்.] ஆபாஸபந்துக்களை உற்ற உறவினராக நினைத்திருந்த குற்றத்தைப் பொறுத்தருளவேணுமென்று சரணம் புகுந்தார் கீழ்ப்பாட்டில்; போக்யமல்லாத துர்விஷயங்களை போக்யமென்று கொண்டிருந்த குற்றங்களைப் பொறுத்தருள வேணுமென்று சரணம் புகுகிறாரிதில்.

நெஞ்சு நஞ்சாயிருக்கச் செய்தேயும் வெளிநோக்கை வெகுஅழகாகச் செய்து ஆண்பிள்ளைகளை ஆகர்ஷிக்கின்ற பெண்களின் கண்வலையிலே அகப்பட்டு, அந்த மாதர்களை ஆராதிப்பதே பரம ப்ரயோஜநமென்றுகொண்டு, அதற்காக எத்தனை பாவங்கள் செய்யலாமோ அத்தனை பாவமுஞ் செய்து தீர்த்தேன்; ‘உள்ள நரகங்கள் போராது, இன்னமும் பல நரகங்களைப்படைக்கவேணும்’ என்னும்படி எண்ணிறந்த பாவங்களைச் செய்தேன். ‘போக்யமல்லாத விஷயங்களிலே ப்ரமித்து ஈடுபட்டு அநர்த்தங்களை விளைத்துக்கொண்டோமே!’ என்று அநுதாபம் தோன்றியதனால், பரமபோக்யமான விஷயத்திலே ஈடுபட்டு நன்மை பெறுவோமென்று நன்மதிஉண்டாகி, போக்யதைக்கு எல்லை நிலமாகவுள்ள திருமலையிலே எழுந்தருளியிருக்குமிருப்பிலே வந்து சரணம் புகுந்தேன்; பழைய குற்றங்களைக்காணாது அடியேனை அடிமை கொண்டருளவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று.

நானே நாநாவிதநரகம் புகும்பாவஞ் செய்தேன்=சேதநவர்க்கங்களுக்குத் தொகையில்லாதாப்போலவே ஏற்கனவே படைக்கப்பட்டுள்ள நரகங்களுக்கும் தொகையில்லை; சிலசில சேதநர்கள் சிலசில நரகங்களிலே சென்று வேதனைப்படுவர்கள் என்றிருந்தாலும், உள்ள நரகங்களெல்லாம் என்னொருவனுக்கே போராதென்னும்படி எல்லையற்ற பாவங்களைச் செய்தேனென்று சொல்லிக்கொள்ளுகிறார்.—"ஈச்வரனுக்கு ஜகந்நிர்வாஹம் நடக்கவேண்டில் வேறே சில நரகங்கள் ஸ்ருஷ்டிக்கவேணும்" என்பது பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல். நாநாவிதநரகம்=வடமொழித் தொடர்.

என்ஆனாய்='ஆனை' என்பது விளியுருபு ஏற்றால் 'ஆனாய்' என்றாகும்; ஆனைபோன்றவனே! என்றபடி. "தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபாலமதயானாய்" என்று திருநெடுந்தாண்டகத்திலுமருளிச் செய்வர். "என்னானை என்னப்பனெம்பெருமான்" என்றார் நம்மாழ்வாரும் திருவாய்மொழியில்.

1. யானையை எத்தனைதடவை பார்த்தாலும் பார்க்கும்போதெல்லாம் அபூர்வவஸ்துபோலவே யிருந்து பரமாநந்தத்தைத் தருவது போல எம்பெருமானும் "அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதமே" என்னும்படியிருத்தலால் ஆனையாகச் சொல்லப்படுவன்.

2. ஆனையின்மேல் ஏறவேண்டியவன் ஆனையின்காலைப்பற்றியே ஏறவேண்டுவதுபோல, எம்பெருமானிடம் சென்று சேரவேண்டியவர்களும் அவனது திருவடிகளையேபற்றி ஏறவேண்டுதலாலும் ஆனையென்கிறது.

3. ஆனையானது தன்னைக்கட்டத் தானே கயிறு கொடுக்கும்; "எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால்" (திருச்சந்தவிருத்தம்.) என்றபடி பக்தியாகிற கயிற்றை எம்பெருமானே தந்தருள்வன்.

4. யானையை நீராட்டினாலும் அடுத்த க்ஷணத்திலே அழுக்கோடே சேரும்; எம்பெருமான் சுத்த ஸத்வமயனாய்ப் பரமபவித்திரனாயிருக்கச் செய்தேயும் * பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமுடைய நம்போல்வாரோடே சேரத் திருவுள்ளமாயிருப்பன் வாத்ஸல்யத்தாலே.

5. யானையைப் பிடிக்கவேண்டில் பெண்யானையைக்கொண்டே பிடிக்கவேண்டும்; பிராட்டியின் புருஷகாரமின்றி எம்பெருமான் வசப்படான்.

6. பாகனுடைய அநுமதியின்றித் தன் பக்கல் வருமவர்களைத் தள்ளிவிடும் யானை; எம்பெருமானும் 1. "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்றபடி பாகவதர்களை முன்னிட்டுப் புகாதாரை அங்கீகரித்தருளான்.

7. யானையின் பாஷை யானைப்பாகனுக்கே தெரியும்; எம்பெருமானுடைய பாஷை திருக்கச்சி நம்பிபோல்வார்க்கே தெரியும்; பேரருளாளனோடே பேசுமவரிறே நம்பிகள்.

---

1. திருமொழி 4—6—8.

8. யானையினுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் முதலிய தொழில்கள் பாகனிட்ட வழக்கு; எம்பெருமானும் 1. "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்கவேண்டா—உன்றன் பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்றும் 2. "கிடந்தவா றெழுந்திருந்து பேசு" என்றுஞ் சொல்லுகிற திருமழிசைப்பிரான் போல்வார்க்கு ஸர்வாத்மநா விதேயனிறே.

9. யானைக்குக் கை நீளம்; எம்பெருமானும் * அலம்புரிந்த நெடுந்தடக் கையனிறே.

10. யானை உண்ணும்போது இறைக்கும் அரிசி பலகோடி நூறாயிர மெறும்புகளுக்கு உணவாகும். எம்பெருமானமுது செய்து சேஷித்த ப்ர ஸாதத்தாலே பலகோடி பக்தவர்க்கங்கள் உஜ்ஜீவிக்கக் காண்கிறோமிறே.

11. யானை இறந்த பின்பும் உதவும்; எம்பெருமானும் தீர்த்தம் ஸாதித்துத் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளினபின்பும் இதிஹாஸ புராணங்கள் அருளிச் செயல்கள் மூலமாகத் தனது சரிதைகளை உணர்த்தி உதவுகின்றானிறே.

12. யானைக்கு ஒரு கையே; எம்பெருமானுக்கும் கொடுக்கும் கையொழியக் கொள்ளுங்கையில்லையிறே.

13. பாகனுக்கு ஜீவநங்கள் ஸம்பாதித்துக் கொடுக்கும் யானை; எம்பெருமானும் அர்ச்சக பரிசாரகர்களுக்கு—இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் கண்டு கொள்க. ... ... ... .... (உ)

கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோளொன் றிலாமையினால் *
என்றேனு மிரந்தார்க் கினிதாக வுரைத்தறியேன் *
குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா! *
அன்றே வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. (ங)

| | |
|---|---|
| குன்று ஏய் மேகம் அதிர் குளிர் மா மலை வேங்கடவா | மலைபோன்ற மேகங்கள் கோஷிக்குமிடமாய்க் குளிர்ந்ததாய்ச் சிறந்ததான திருவேங்கட மலையிலெழுந்தருளி யிருப்பவனே! |
| குறிக்கோள் ஒன்று இலாமையினால் | விவேகமென்பது சிறிது மில்லாமையினாலே |
| பல் உயிரை | பல பிராணிகளை |
| கொன்றேன் | கொலைசெய்து முடித்தேன்; |
| இரந்தார்க்கு | யாசித்தவர்களுக்கு |
| இனிது ஆக | மதுரமாக |
| என்றேனும் | ஒருநாளும் |
| உரைத்து அறியேன் | பதில் சொல்லி யறியேன்; |
| அன்றே | அந்த க்ஷணத்திலேயே |
| வந்து அடைந்தேன் | உன்னை வந்து பற்றினேன்; |
| | அடியேனை ஆள் கொண்டருள்—. |

1. திருமழிசைப்பிரான் வைபவத்திற் பாசுரம்.
2. திருச்சந்த விருத்தம். 61.

* * *—[கொன்றேன் பல்லுயிரை.] ஜீவஹிம்சை பண்ணிப் போந்த குற்றங்களையும் பொறுத்தருளவேணுமென்று சரணம் புகுகிறார். குறிக்கோள் ஒன்றிலாமையினால் பல்லுயிரைக் கொன்றேன்=குறிக்கோளாவது நம்பிக்கை; தேஹத்திற்காட்டிலும் வேறான ஆத்மா உண்டென்றும் தெய்வமுண்டென்றும் சாஸ்த்ரமுண்டென்றும் புண்யபாபங்களுண்டென்றும், பாபபலன்களை அநுபவிக்க நரகமுண்டென்றும் இவையொன்றிலும் நம்பிக்கையில்லாதவனாகையால், இவ்வளவென்று கணக்கிடமுடியாதபடி எல்லையில்லாத ஜீவராசிகளைக் கொலை செய்தேன்; உகந்த பெண்களை த்ருப்தி செய்விப்பதற்குப் பொருளீட்டுவதற்காக வழிமறித்துப் பிராணிகளைக் கொன்றேனாகிலும், பிறகு கூடியிருந்து குலாவும்போது 'தேஹி' என்று ஒரு கவளமிரந்தவர்களுக்கு ஒருநாளாகிலும் ஐயமிட்டிருப்பேனோ, அதுவுமில்லை; இடாவிடினும் 'அப்பா! இப்போது கையில் ஒன்றுமில்லை; மற்றொருபோது வந்தால் பார்ப்போம்' என்று தேனொழுக வார்த்தையாவது சொல்லிவிடலாமே, அதுவும் செய்திலேன். 'இந்த பாவியினிடம் வந்து யாசிக்தோமே!' என்று வாழ்நாளுள்ளவரையிலும் அவர்கள் நெஞ்சுபுண்பட்டிருக்கும்படி மிகவும் திரஸ்காரமான வார்த்தைகளைச் சொல்லி வெருட்டினே னென்கை.

இப்படி பலபாவங்கள் செய்து போந்தேனாகிலும் சரணம் புகுந்துவிட்டேனாகையால் அடியேனைக் குளிரநோக்கி அடிமைகொள்ளவேணுமென்றாராயிற்று. "இன்று வந்தடைந்தேன்" என்னாதே "அன்றே வந்தடைந்தேன்" என்றருளிச் செய்த ஸ்வாரஸ்யம் விளங்குமாறு பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானித்தருளுமழகு பாரீர்; [அன்றே.] அநுபோதும் பிறந்தாதல் ப்ராயச்சித்தம் பண்ணியாதல் வருகையன்றிக்கே, கொன்ற கைகழுவாதே உதிரக்கை கழுவாதே வந்து சரணம்புகுந்தேன்.' (உதிரக்கை—கொலைசெய்ததனால் ரத்தமயமான கை.) ... ... ... ... (௩)

குலந்தா னெத்தனையும் பிறந்தே யிறந்தெய்த்தொழிந்தேன் *
நலந்தா னொன்றுமிலேன் நல்லதோரறம் செய்துமிலேன் *
நிலம்தோய் நீள்முகில்சேர் நெறியார் திருவேங்கடவா! *
அலந்தேன் வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. (௪)

நிலம் தோய் நீள் முகில் சேர் நெறி ஆர் திரு வேங்கடவா { பூமியிலே படிந்த பெரிய மேகங்கள் நடமாடின வழிகள் பொருந்தியிருக்கிற திருமலையிலெழுந்தருளி யுள்ளவனே!

எத்தனை குலமும் { எல்லாக்குலங்களிலும்

பிறந்து இறந்து எய்த்து ஒழிந்தேன் { பிறப்பதும் இறப்பதுமாக இளைத்துப் போனவனும்

நலம் ஒன்றும் இலேன் { ஒருவகை நன்மையுமில்லாதவனும்

நல்லது ஓர் அறமும் செய்திலேன் { நல்ல கருமமொன்றும் செய்தறியாதவனும்

அலந்தேன் { பகைஷ்டங்களை அநுபவித்தவனுமான அடியேன்

வந்து அடைந்தேன் { உன்னை வந்து பற்றினேன்;

அடியேனை ஆள் கொண்டருள்—.

பும் செந்நீரும் சீயு நரம்பும் செறிதசையும், வேண்டாநாற்றமிகுமுடல்" என்ற படி புண்கள் நிறைந்து கிடக்குமிது. இப்படிப்பட்ட சரீரத்திலே அகப்பட்டுத் துவண்டு போனேன்; இனி ஒரு சரீரத்தையும் பரிக்ரஹிக்க சக்தியில்லாமையாலே ஜந்மாந்தரத்துக்கு அஞ்சி உன் திருவடிவாரத்திலே வந்துவிழுந்தேன், அடிமைகொண்டருளவேணும்—என்றுராயிற்று. ... ... (கூ)

தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள் செய்துமிட்டேன் *
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத் தேழையானேன் *
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா! *
அரியே! வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (எ)

| | |
|---|---|
| கரி சேர் | யானைகள் மிகுந்திருக்கப் பெற்றும் |
| பூ பொழில் சூழ் | அழகிய சோலைகளாலே சூழப்பட்டும் |
| கனம் மா மலை வேங்கடவா | திண்ணியதாயுமிருக்கிற திருமலையிலே வாழ்பவனே! |
| அரியே | ஹரியே! |
| பாலகன் ஆய் | சிறியேனாயிருந்தபோது |
| தெரியேன் | அறிவில்லாதவனாய் |
| பல தீமைகள் | பல பாவங்களை |
| செய்தும் இட்டேன் | செய்து தீர்த்தேன்; |
| பெரியேன் ஆயினபின் | யௌவன பருவமடைந்த பின்பு |
| பிறர்க்கே உழைத்து | விஷயாந்தர பரனாய் ச்ரமப்பட்டு |
| ஏழை ஆனேன் | சதிர்கெட்டுப் போனேன்; |
| | (இப்படிப்பட்ட அடியேன்) |
| | வந்து அடைந்தேன்—; |
| | அடியேனை ஆள் கொண்டருள்—. |

* * *—[தெரியேன் பாலகனாய்.] "கிளரொளியிளமை கெடுவதன் முன்னம்" என்றும் "தஸ்மாத் பால்யே விவேகாத்மா யதேத ச்ரேயஸே ஸதா" என்றும் இளம்பிராயத்திலே நல்லதுகளைக் கற்கும்படி சொல்லியிருப்பதற்கு எதிர்த்தட்டாக நான் இளம்பிராயத்திலே அவிவேகியாய்ப் பல தப்புக்காரியங்களைச் செய்துவிட்டேன்; பிறகு யௌவனம் வந்து முகங்காட்டினவாறே, எந்த வஸ்துவைக்கண்டாலும் 'இது அவளுக்காகும், இது அவளுக்காகும்' என்றேகொண்டு பலவற்றையும் மாதர்க்காகத்தேடித்திரிந்து அலைந்து சதிர்கேடனானேன்; போன காலமெல்லாம்பழுதேபோனாலும், இனியாகிலும் ப்ராப்தவிஷயத்திலே தொண்டு பூண்ட முதமுண்ணப்பெறலாமென்று திருவடிகளின் கீழே வந்து சேர்ந்தேன், ஆட்கொண்டருளவேணும் என்றுராயிற்று.

முதலடியை இரண்டு வாக்கியமாகவும் உரைக்கலாம்; பாலகனாய் தெரியேன்—சில நாள் மிக்க இளம்பருவமாய் யுக்தாயுக்தங்களறியாதே கிடந்தேன். பல தீமைகள் செய்துமிட்டேன்—(சிறிது அறிவு உண்டான பின்பு) தோன்றினபடி பலதீமைகள் செய்து திரிந்தேன் என்கை.

அரியே!—ஹரி என்ற வடசொல் அரியெனத்திரிந்தது. என்னுடைய பாவங்

களை யெல்லாம் ஹரிப்பவனே! என்றும், சிங்கம்போல் ஒருவராலும் அடர்க்க வொண்ணாதவனே! என்றும் உரைக்கலாம். (ஹரி—சிங்கம்) ... (எ)

நோற்றேன் பல்பிறவி யுன்னைக்காண்பதோ ராசையினால் *
ஏற்றே னிப்பிறப்பே யிடருற்றன னெம்பெருமான்! *
கோல்தேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா! *
ஆற்றேன் வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. (அ)

| | |
|---|---|
| கோல் தேன் பாய்ந்து ஒழுகும் | கோல்களினின்றும் தேன் இழிந்து வெள்ளமிடா நின்ற |
| குளிர் சோலை சூழ் வேங் கடவா | குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருமலையில் வாழ்பவனே! |
| எம்பெருமான் | அஸ்மத் ஸ்வாமியே!, |
| பல் பிறவி நோற்றேன் | எனக்குப் பல பிறவிகள் உண்டாகும்படி காரியம் செய்து வைத்தேன். |
| உன்னை காண்பது ஓர் ஆசையினால் | உன்னை ஸேவிக்கவேணு மென்று ஒரு காதல் கிளர்ந்தபடியினாலே |
| இப்பிறப்பே ஏற்றேன் | இந்த ஜந்மத்திலே உனக்கு அன்பனாக ஏற் பட்டேன். |
| இடர் உற்றனன் | (இன்னமும் நேரக்கூடிய பிறவிகளை நினைத்து) துக்கப்படா நின்றேன்; |
| (இனி பிறவிகள் நேராமைக்காக) வந்து அடைந்தேன்—; | |
| அடியேனை ஆள் கொண்டருள்—. | |

* * *—[நோற்றேன்பல்பிறவி.] நோற்கையாவது—ஸங்கல்பிக்கை; பல பிறவிகளை ஸங்கல்பிக்கையாவது—பலபிறவிகள் உண்டாகும்படி கருமங்களைச் செய்தலாம். இப்படி பல பிறவிகளும் பிறந்து கொண்டேவரச் செய்தே யாத்ருச்சிக ஸுக்ருத விசேஷத்தாலே உன்னைக் காணவேணுமென்று ஆசைபிறந்தது இப்பிறவியில்; அதனால், இதற்குக்கீழ் நாம் நின்ற நிலை மிகவும் பொல்லாதென்று நெஞ்சில்பட்டது. இதுவரையில் நடந்தவற்றையும் இனி நடக்கப் போகிறவற்றையும் நினைத்து ஸஹிக்கமாட்டாமல் உன் திருவடிகளை வந்துபணிந்தேன், அடியேனை ஆட்கொண்டருளவேணும்—என்றாராயிற்று.

"உன்னைக் காண்பதோராசையினால் பல்பிறவி நோற்றேன், இப்பிறப்பே ஏற்றேன்" என்று அந்வயித்து, 'உன்னை ஸேவிக்கவேணுமென்று பலபல பிறவிகளில் நோன்பு நோற்றேன்; இதுவரையில் உன்னுடைய ஸேவை கிடைக்கப்பெற்றிலேன்; இப்பிறவியில் பாக்கியம் வாய்த்தது; கீழ்க்கழிந்த காலமெல்லாம் வீணாய்ப்போயிற்றேயென்று இடருற்றேன்—என்றும் உரைப்பர். இதனினும் முன்னமுரைத்த பொருளே சிறக்கும். ... ... ... (அ)

பற்றே லொன்றுமிலேன் பாவமேசெய்து பாவியானேன் *
மற்றே லொன்றறியேன் மாயனே! எங்கள்மாதவனே! *
கல்தேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே. (௯)

| | | | |
|---|---|---|---|
| மாயனே | ஆச்சரியமான குணங்களை யுடையவனே ! | பற்று ஒன்றும் இலேன் | ஒருவிதமான ஆதாரமும் அற்றவனாய் |
| எங்கள் மாதவனே | எங்களுக்குப் புருஷகார மான பிராட்டிக்கு வல்லபனே ! | பாவமேசெய்து பாவி ஆனேன் | பாவங்களையே செய்து பாபிஷ்டனாய் |
| | | மற்று ஒன்று அறியேன் | ஒரு உபாயமுமறியாதவனான அடியேன் |
| கல் தேன் பாய்ந்து ஒழுகும் கமலம் சுனை வேங்கடவா | மலை முழஞ்சுகளினின் றும் தேன் பெருகி வெள்ளமிடா நிற்பதும் தாமரைச்சுனைகளை யுடையதுமான திரு மலையிலே வாழ்ப வனே ! | அற்றேன் | உனக்கே அற்றுத் தீர்ந்தவனாய்க் கொண்டு |
| | | வந்து அடைந்தேன்—: | |
| | | அடியேனை ஆள் கொண்டருள்—. | |

* * *—[பற்றேலோன்றுமிலேன்.] உன்னுடைய ஸம்பந்தத்தை அறுத்துக்கொண்டு வெகுதூரம் ஓடிப்போன வெனக்கு ஓரிடத்திலும் ஒருவகையான ஆதாரமுமில்லை. ஆத்மாவுக்கு ஞானமும் ஆநந்தமும் நிரூபகமாயினும் என்வரையில் பாபமே நிரூபகமாம்படி பாவங்களையே செய்து பாபிஷ்டனானேன்; உன்னைப் பெறுதற்குறுப்பான உபாய விஷயத்தில் எள்ளளவும் ஞானமில்லை; நீயோ இப்படிப்பட்ட குறைவாளரையும் ரக்ஷிக்கவல்ல ஆச்சர்ய சக்தியுக்தனாக இரா நின்றாய்; உனது குளிர்ந்த திருவுள்ளத்திலே என்னைப்போன்றவர்களுடைய அபராதங்களினாலே ஒருகால் சீற்றம்பிறந்தாலும் பொறுப்பித்து ரக்ஷிப்பிக்கவல்ல பெரிய பிராட்டியாரும் * அகலகில்லேனிறையுமென்று திருமார்விலே உறையா நின்றாள். இப்படியிருக்குமிருப்பிலே நான் வந்து சரணம் புகுந்தேனான பின்பு இனி நான் இழப்பதுண்டோ? "பற்றிலார் பற்ற நின்றானே!" என்றபடி ஆதாரமற்றவர்களுக்கு ஆதாரமாய் நிற்கக்கூடிய நீயே அடியேனை ஆட்கொண்டருளவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று.

பாவமே செய்து பாவியானேன்="பாவமேசெய்தேன்" என்றாவது, "பாவியானேன்" என்றாவது இரண்டத்தொன்று சொன்னால் போராதோ? "பாவமே செய்து பாவியானேன்" என்ன வேண்டுவதென்? என்னில்; கேளீர்;—பாவஞ்செய்து புண்யாத்மாவாக ஆவதுமுண்டு; புண்யஞ்செய்து பாபிஷ்டனாக ஆவதுமுண்டு; தசரதசக்ரவர்த்தி அஸத்யவசநமாகிற பாவத்துக்கு அஞ்சி, சொன்னவண்ணம்செய்கையாகிறபுண்யத்தைப் பண்ணிவைத்தும், ஸாக்ஷாத்வடிவெடுத்துவந்த புண்யமான இராமபிரானை இழந்து ஆபாஸதர்மத்தில் நிலைநின்றானென்ற காரணத்தினால் அவனுடைய புண்யம் பாவமாகவே ஆயிற்று; பரமபதப்ராப்திக்கு அநர்ஹனாய்விட்டானிறே. "சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன்" என்று பாபிகளில் முதல்வனான சிசுபாலன் உள்ளதனையும் பாவமேசெய்துபோந்தாலும் முடிவில் நல்ல பேறுபெற்றனனாதலால் அவனுடைய பாவமெல்லாம் புண்யமாகவே ஆயிற்று. ஆகவிப்படி பாவஞ்செய்து புண்யசாலியாவதும், புண்யஞ்செய்துபாபிஷ்டனாவதும் உண்டாயினும், நான் பாவமேசெய்துபாவியானேன்—

(அதாவது) தசரதனைப் போலே புண்யத்தைச் செய்து பாவியானவனல்லேன், சிசுபாலனைப்போலே பாவத்தைச் செய்து புண்யாத்மாவாக ஆனவனுமல்லேன் ; செய்ததும் பாவம் ; ஆனதும் பாபிஷ்டனாக—என்கை.

முதலடியிலும் இரண்டாமடியிலும், ஏல்—அசைச்சொற்கள். ...

இப்பாட்டில் மாதவனே ! என்கையாலே பிராட்டியை முன்னிட்டு சரணம் புகுந்தமை விளங்கும். மா—பிராட்டிக்கு, தவன்—நாயகன். ... (கூ)

கண்ணா யேழுலகுக் குயிராய வெங்கார்வண்ணனை *
விண்ணோர் தாம்பரவும் பொழில்வேங்கட வேதியனை *
திண்ணார் மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன் கலியன் *
பண்ணார் பாடல்பத்தும் பயில்வார்க் கில்லைபாவங்களே. (க0)

| | |
|---|---|
| ஏழ் உலகுக்கு | எல்லாவுலகங்களுக்கும் |
| கண் ஆய் | கண்போன்றவனும் |
| உயிர் ஆய | உயிர் போன்றவனும் |
| எம் | எமக்காக |
| கார் வண்ணனை | மேகம் போன்ற திரு நிறத்தையுடையவனும் |
| விண்ணோர் தாம்பரவும்பொ ழில் வேங்கடம் | நித்யஸூரிகளும் வந்து துதிக்கப்பெற்ற, சோலை சூழ்ந்த திருமலையிலே |
| வேதியனை | வேதப்ரதிபாத்யனாய் எழுந் தருளியிருப்பவனுமான எம்பெருமானைக் குறித்து |
| திண் ஆர் மாடங்கள் சூழ் திரு மங்கையர் கோன் கலியன் | திண்ணிய மாடங்கள் சூழ்ந்த திருமங்கையி லுள்ளார்க்குத் தலை வரான கலியன் (அரு ளிச் செய்த) |
| பண் ஆர் பாடல் பத்தும் | பண்ணோடுகூடிய இப்பத் துப்பாசுரங்களையும் |
| பயில்வார்க்கு | ஓதுமவர்களுக்கு |
| பாவங்கள் இல்லை | பிரதிபந்தகங்களெல்லாம் தொலைந்து போம். |

* * *—[கண்ணாயேழுலகுக்கு.] "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்குத், தண்ணார் வேங்கடவிண்ணோர் வெற்பனே" என்றபடி ஏழுலகத்தவர்க்கும் கண்போன்றவனும் உயிர்போன்றவனுமான திருவேங்கடமுடையானைக் குறித்துத் திருமங்கைமன்னனருளிச்செய்த இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்களுக்குப் பாவங்களெல்லாம் பறந்தோடுமென்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. ... ... (க0)

அடிவரவு:—தாய் மான் கொன்றேன் குலம் எப்பாவம் மண் தெரியேன் நோற்றேன் பற்றேல் கண்ணாய் கண்.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து—பத்தாந்திருமொழி.

# கண்ணார் கடல்சூழ்.



அவதாரிகை:—கீழ்த்திருமொழியில், தம்முடைய வெறுமையைச் சொல்லிச்சரணம் புகுந்து 'அடியேனை ஆட்கொண்டருளவேணும், அடியேனை ஆட்கொண்டருளவேணும்' என்று பலகாலும் பிரார்த்தித்தார்; அஹங்காரம் மமகாரம் முதலிய விரோதிகள் கழிந்து பரபக்தி பெருகினாலன்றோ கைங்கரியம் பெறலாவது; அதற்காக, அஹங்காரமமகாரம் முதலிய விரோதிகளைப் போக்கியருளவேணுமென்றும், பக்தி ஸம்பத்தைத் தந்தருள வேணுமென்றும் பிரார்த்திக்கிறாரிதில்.

எம்பெருமானாரும் சரணாகதிகத்யத்திலே "த்வத் பாதாரவிந்தயுகளம் சரணமஹம் ப்ரபத்யே" என்று சரணம் புகுந்த பின்பு, ஸ்தூல ஸூக்ஷ்மரூபமான ப்ரக்ருதியைக் கழித்துத்தரவேணுமென்றும் அஹங்காரமமகாரங்களைக் கழித்துத்தரவேணுமென்றும் பரபக்தி முதலியவற்றைப் பிறப்பிக்கவேணுமென்றும் பிரார்த்தித்தது இங்கே அநுஸந்திக்கத்தகும். ... ... ...

கண்ணார் கடல்சூழிலங்கைக் கிறைவன்தன் *
திண்ணாகம் பிளக்கச் சரம்செல வுய்த்தாய்! *
விண்ணோர் தொழும் வேங்கட மாமலைமேய *
அண்ணா! அடியே னிடரைக் களையாயே. (க)

| பதம் | பொருள் |
|---|---|
| கண் ஆர் கடல் சூழ் | விசாலமான கடலாலே சூழப்பட்ட |
| இலங்கைக்கு | லங்காபுரிக்கு |
| இறைவன் தன் | தலைவனான இராவணனுடைய |
| திண் ஆகம் பிளக்க | திண்ணிய சரீரம் பிளந்து போம்படியாக |
| சரம் | அம்புகளை |
| செல உய்த்தாய் | செலுத்தினவனே! |
| விண்ணோர் தொழும் | (பிரமன் முதலிய) தேவர்கள் வந்து ஸேவிக்கப் பெற்ற |
| வேங்கடம் மா மலை | திருமலையிலே |
| மேய அண்ணா | எழுந்தருளியிருக்கிற பெருமானே! |
| அடியேன் இடரைகளையாய் | என் துன்பங்களை நீக்கியருளவேணும். |

* * *—[கண்ணார்கடல்சூழ்.] மிகப் பெரிய கடலையே அகழாகவுடைத்தான இலங்கைக்குத் தலைவனான இராவணனுடைய திண்மை பொருந்திய சரீரம் இருபிளவாகப் பிளவுறும்படியாக அவன் மீது அம்புகளைப் பிரயோகித்த

வனே ! என்று ஸ்ரீராமபிரானாக விளிக்கின்றார் திருவேங்கடமுடையானை ; அவனும் இவனும் ஒருவனேயென்கிற ஒற்றுமைநயம் தோற்றுதற்காகவென்க. இராவணனாலே குடியிருப்பு இழந்து கிடந்த தேவர்களெல்லாரும் களித்து வந்து தொழும்படியான திருவேங்கட மலையிலே எழுந்தருளியிருக்கு மெம்பெருமானே ! இவ்விருள்தருமாஞாலத்தில் இருப்பு—பெருந்துக்கம் என்றுணர்ந்த என்னுடைய இவ்விடரைப் போக்கியருளாய் என்கிறார்.

கண்ணார்கடல் = வைத்தகண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருக்கும்படியான (அழகிய) கடல் என்றுமுரைக்கலாம். ... ... ... (க)

இலங்கைப் பதிக்கன் றிறையாய* அரக்கர்
குலம்கெட் டவர்மாளக் கொடிப்புள் திரித்தாய்! *
விலங்கல் குடுமித் திருவேங்கடம் மேய *
அலங்கல் துளப முடியாய் ! அருளாயே. (உ)

| | |
|---|---|
| அன்று | முற்காலத்தில் |
| இலங்கை பதிக்கு | லங்காபுரிக்கு |
| இறை ஆய | அரசர்களாயிருந்த |
| அரக்கரவர் | (மாலிமுதலிய) ராக்ஷஸர்கள் |
| குலம் கெட்டு மாள | கும்பலோடே சிதறியோடி முடியும்படியாக |
| கொடி | (தனக்கு) த்வஜமான |
| புள் | பெரிய திருவடியை |
| திரித்தாய் | ஸஞ்சரிப்பித்தவனே !, |
| விலங்கல் குடுமி | (மேலே ஸஞ்சரிக்கிற சந்திர ஸூர்யர்கள்) விலங்கிப்போகவேண்டும்படியான (உயர்த்திபொருந்திய) சிகரத்தையுடைய |
| திருவேங்கடம் | திருமலையிலே |
| மேய | மேவியிருப்பவனாய் |
| துளபம் | திருத்துழாயினாலாகிய |
| அலங்கல் | மாலையை |
| முடியாய் | திருமுடியிலே அணிந்துள்ளவனே ! |
| அருளாய் | (அடியேன் மீது) க்ருபை பண்ணியருளவேணும். |

* * *—[இலங்கைப்பதிக்கு.] புற்றானது என்றைக்கும் துஷ்ட ஸர்ப்பங்கள் மாறாதே உறையுமிடமாக இருப்பதுபோல இலங்கையானது இராவணனுக்குமுன்பும் குடியிருந்து வந்த மாலிமுதலானவர்களால் ஆக்கிரமிக்கப்பட்டு வந்ததாதலால் அவர்களையும் தொலைத்தபடி சொல்லுகிறது இப்பாட்டில்.

உத்தர ஸ்ரீராமாயணத்தில் ஏழாவது ஸர்க்கத்தில் மாலிமுதலிய அரக்கர்களை மடித்தவரலாறு விரிவாகக் கூறப்பட்டுள்ளது, கண்டு கொள்க. மாலியானவன் முதலில் பெரியதிருவடியை கதையாலே அடித்துத் துரத்திவிட்டானென்றும், பிறகு பெருமாள் அளவற்ற சீற்றங்கொண்டு அப்பெரிய திருவடியின்மேல் ஏறிக்கொண்டு போர்க்களத்திலே யெழுந்தருளித் திருவாழியைப் பிரயோகித்து வெற்றி பெற்றனன் என்றுமுணர்க. "இலங்கைப்பதிக்கென்று இறையாய" என்ற பாடமும் பொருந்தும்.

“ குலம் மாள ” என்னாமல் “ குலம் கெட்டு மாள ” என்றதனால், பல அரக்கர்கள் மூலைக்கொருவராகச் சிதறி ஓடினார்களென்பதும் பலர் மாண்டொழிந்தனர் என்பதும் விளங்கும். விலங்கல்குடுமி = “ சேணுயர் வேங்கடம் ” என்றாற்போலே திருமலையின் உயர்த்தியைச் சொல்லுகிறது இந்த விசேஷணம். வானத்தின்மீது ஸஞ்சரிக்கின்ற ஸூர்ய சந்திரர்கள் விலகிப்போகவேண்டும்படியான சிகரத்தையுடைய திருமலை என்கை. விலங்கல் என்று மலைக்கும்பேருண்டாகையாலே, குடுமி—சிகரத்தையுடைய, திருவேங்கடம் விலங்கல்—திருவேங்கட மலையிலே என்றும் உரைக்கலாமாயினும் அதுசிறவாது.

அலங்கல்துளபமுடியாய் அருளாய் = ஆர்த்தர்களை ரக்ஷிப்பதற்கென்றே தனி மாலையிட்டிருக்கிற உனக்கு என்னுடைய விரோதிகளைப் போக்குகை ஒரு பெரிய காரியமன்று ; அருள்செய்ய வேண்டுமத்தனையென்கை. ... ... (உ)

நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு *
ஏரால மிளந்தளிர்மேல் துயிலெந்தாய்! *
சீரார் திருவேங்கட மாமலை மேய *
ஆராவமுதே ! அடியேற் கருளாயே. (௩)

| | | | |
|---|---|---|---|
| நீர் ஆர் கடலும் | நீர் நிரம்பியிருக்கிற கடலையும் | துயில் | திருக்கண்வளர்ந்தருளின |
| நிலனும் | பூமியையும் | எந்தாய் | ஸ்வாமியே !, |
| முழுது | மற்றுமுள்ள எல்லாவற்றையும் (பிரளயம் கொள்ளாதபடி) | சீர் ஆர் | சிறப்புப் பொருந்திய |
| உண்டு | அமுதுசெய்து | திரு வேங்கடம் மா மலை மேய | திருமலையிலே எழுந்தருளியிருக்கிற |
| ஏர் | அழகியதும் | ஆரா அமுதே | ஆராவமுதமான எம்பெருமானே ! |
| இள | இளையதுமான | அடியேற்கு அருளாய் | அடியேன்மீது கிருபை செய்தருளவேணும். |
| ஆலந்தளிர் மேல் | ஆலந்தளிரின் மேலே | | |

* * *[நீரார்கடலும்.] ‘மற்ற பேர்களை ரக்ஷிக்க நான் சக்தனாயினும் பாவிகளில் தலைவரான உம்மை ரக்ஷித்தல் எனக்கு எளிதன்றே ; இஃது அருமையான காரியமாயிற்றே !’ என்று எம்பெருமான் திருவுள்ளமாக ; பிரளய காலத்திலே கடல் சூழ்ந்த உலகங்களையெல்லாம் திருவயிற்றிலே வைத்திட்டு இளையதொரு ஆலந்தளிரின்மேலே திருக்கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸமர்த்தனான உனக்கு அரிதான காரியமும் உண்டோ ? எல்லாம் எளிதேகாண் என்பார்போல வடதளசாயி விருத்தாந்தத்தை ப்ரஸ்தாவிக்கிறார். அந்த சக்தி விசேஷமெல்லாந் தோற்றத் திருமலையிலே ஸேவைஸாதிக்கின்ற என் ஆராவமுதமே! அருள்புரியாய் என்கிறார். ... ... ... ... (௩)

உண்டாயுறிமேல் நறுநெய்யமுதாக *
கொண்டாய் குறளாய் நிலமீரடியாலே *
விண்டோய் சிகரத் திருவேங்கடம் மேய *
அண்டா! அடியேனுக்கருள்புரியாயே. (௪)

| | | | |
|---|---|---|---|
| உறி மேல் | உறிகளின்மேல் வைக்கப்பட்டிருந்த | விண் தோய் சிகரம் | பரமபதம் வரையில் சென்று ஓங்கின சிகரத்தையுடைய |
| நறு நெய் | நல்ல நெய்யை | திரு வேங்கடம் மேய | திருமலையிலே நித்ய வாஸம் பண்ணுகிற |
| அமுது ஆக உண்டாய் | அமுதமாகக்கொண்டு புஜித்தவனே! | அண்டா | தேவாதி தேவனே! |
| குறள் ஆய் | வாமனனாகி | அடியேனுக்கு அருள் புரியாய் | அடியேன்மீது கிருபை செய்தருள வேணும். |
| நிலம் | பூமியை | | |
| ஈர் அடியாலே | இரண்டடியாலே | | |
| கொண்டாய் | அளந்து கொண்டவனே! | | |

* * *—[உண்டாயுறிமேல்.] திருமலையிலெழுந்தருளியிருக்கிற இருப்பில் பரத்வ ஸௌலப்யங்களிரண்டும் ஒருங்கே விளங்குகின்றன வென்னவேண்டி இரண்டுக்கும் ப்ரகாசகமான இரண்டு சேஷ்டிதங்களை முன்னடிகளிற் கூறுகின்றார். திருவாய்ப்பாடியில் ஆய்ச்சிகள் உறிகளின்மேலே சேமித்துவைத்த நெய் முதலிய கவ்யங்களை அமுது செய்தாயென்று சொன்னமுகத்தால் ஸௌலப்ய குணத்தையும், குறளாகி மாவலியிடத்துச் சென்று நீரேற்றுப் பெற்று ஈரடியாலே உலகளந்தாயென்று சொன்னமுகத்தாலே பரத்வத்தையும் பேசினாராயிற்று.

திருவேங்கடமலை பூமண்டலத்திலே உள்ளதாகையாலே நம்போன்ற மனிசர்கள் சென்று ஸேவிப்பதற்குப் பாங்காயிருப்பதுபோல, * விண்தோய் சிகரத் திருவேங்கடமாகையாலே நித்யஸூரிகள் வந்து ஸேவிப்பதற்கும் பாங்காயிருக்கும். ஆனதுபற்றியே "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்று திருமழிசைப்பிரானும் "மந்திபாய் வடவேங்கடமாமலை, வானவர்கள் சந்தி செய்ய நின்றான்" என்று திருப்பாணாழ்வாரும் அருளிச்செய்தது. நித்யஸூரிகள் பரத்வத்திலே ஸர்வகாலமும் பழகினவர்களாகையாலே ஸௌலப்யத்தைக் காண விரும்பி வருவர்கள்; மனிசர்கள் பரத்வத்தைக்காண விரும்பிச் செல்லுவர்கள்; இரண்டு குணங்களும் அங்கே குறையற்றவை என்று இப்பாசுரத்தினால் காட்டினாராயிற்று.

"திருவேங்கடம் மேய அண்டா" என்ற விளியும் இங்கே பொருத்தமாக அமைந்தது. 'அண்டன்' என்று இடையனுக்கும் தேவனுக்கும் பெயர். "உறிமேல் நறுநெய் அமுதாக உண்ட அண்டா" என்று யோஜித்து, இடையனே! என்னுதல்; "குறளாய் ஈரடியாலே நிலம் கொண்ட அண்டா" என்று யோஜித்து, 'தேவனே!—பரமபுருஷனே!' என்னுதல். இரண்டு யோஜனையாலும் பரத்வ ஸௌலப்யங்கள் விளியிலும் விளங்கினபடி. ... ... ... (௪)

தூணாயதனூ டரியாய் வந்துதோன்றி *
பேணா வவுணனுடலம் பிளந்திட்டாய்! *
சேணார் திருவேங்கட மாமலைமேய *
கோணாகணையாய்! குறிக்கொள்ளெனைநீயே. (ரு)

| | |
|---|---|
| தூணாயதனூடு | வெறும் தூணாகவேயிருக்கிறவதற்குள்ளே |
| அரி ஆய் | நரஸிம்ஹமாகி |
| வந்து தோன்றி | திருவவதரித்து, |
| பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய் | (தன்னை) மதியாத ஹிரண்ய கசிபுவின் சரீரத்தைக் கிழித்துப் போகட்டவனே |
| சேண் ஆர் | மிக்க உயர்த்திபொருந்திய |
| திரு வேங்கடம் மா மலை மேய | திருமலையிலே எழுந்தருளியிருப்பவனும் |
| கோள் நாக அணையாய் | மிடுக்கையுடைய திருவனந்தாழ்வானைப்பள்ளியாகவுடையனுமான பெருமானே! |
| எனை | அடியேனை |
| நீயே குறிக்கொள் | நீயாகவே திருவுள்ளம் பற்றியருளவேணும். |

* * *—[தூணாயதனூடு.] பக்தர்களின் சத்துருக்களிடத்தில் சீற்றமும், பக்தர்களிடத்தில் வாத்ஸல்யமும் விளங்கத் திருமலையிலே ஸேவைஸாதிக்கிறபடியைப் பேசுகிறார். தூணினுள்ளே நரசிங்கமாய்த் தோன்றி இரணியனுடலைப் பிளந்தெறிந்து சிறுக்கனை ப்ரஹ்லாதாழ்வானுக்கு அருள் செய்தாப்போலே அடியேன்மீதும் அருள் செய்யவேணு மென்கிறார்.

“தூணூடு அரியாய் வந்து தோன்றி” என்னுமளவே போதுமாயிருக்க, “தூணாயதனூடு=தூணாயிருக்கிற வஸ்துவினுள்ளே” என்று சொல்லுகைக்குக் கருத்து என்னென்னில்; ‘முன்பே நரஸிம்ஹத்தை உள்ளே அடக்கி வைத்துக் கட்டின கம்பமிது’ என்று சொல்லவொண்ணாதபடி வெறும் தூணானவதனுள்ளே என்பதாம். அரி—சிங்கம். பேணாஅவுணன்—ஸர்வேச்வரனை மதியாத இரணியன் என்றும், பாகவதசிகாமணியான ப்ரஹ்லாதனை மதியாத இரணியன் என்றும் உரைக்கலாம்.

சேண்=அகலம், ஆகாசம், உயர்ச்சி, தூரம், நீளம். கோள்நாகணையாய்!=கோள்—மிடுக்கு; திருவனந்தாழ்வானுக்கு மிடுக்காவது—“சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம்” என்றபடி பலவகையடிமைகளுக்கும் உரிய வடிவங்களைக் கொள்ளுதற்குப் பாங்கானசக்தி. குறிக்கோள்—ஓரடியானுமுளனென்று திருவுள்ளத்தில் வைத்திரு என்றபடி. திருவனந்தாழ்வானைப்போலே என்னையும் அத்தாணிச் சேவகத்துக்கு ஆளாக்கிக் கொள்ளாய் என்பது உள்ளுறை. ... ... ... ... ... ... (ரு)

மன்னாவிம்மனிசப் பிறவியை நீக்கி *
தன்னாக்கித் தன்னின்னருள் செய்யுந்தலைவன் *
மின்னார் முகில்சேர் திருவேங்கடம்மேய *
என்னானையென்னப்ப னென்னெஞ்சிலுளானே. (சா)

| | |
|---|---|
| மன்னு | நிலைத்திராத |
| இ மனிசப் பிறவியை | இந்த மநுஷ்யஜன்மத்தை |
| நீக்கி | போக்கடித்து |
| தன் ஆக்கி | தனக்கு ஆளாக்கிக்கொண்டு |
| தன் இன் அருள் செய்யும் | தனது பரமகிருபையைச் செய்கின்ற |
| தலைவன் | ஸ்வாமியும், |
| மின் ஆர் முகில் சேர் | மின்னலோடு கூடிய மேகங்கள் வந்து சேரப்பெற்ற |
| திருவேங்கடம் | திருமலையிலே |
| மேய | எழுந்தருளியிருக்கிற |
| என் ஆனை | எனது ஆனை போன்றவனுமான |
| என் அப்பன் | எம்பெருமான் |
| என் நெஞ்சில் உளானே | எனது நெஞ்சிலே எழுந்தருளிவிட்டான். |

* * *—[மன்னுவிம்மனிச.] கீழ் ஐந்துபாட்டும் பிரார்த்தனையாய்ச் சென்றது; இனி மேற்பாட்டுக்கள் பிரார்த்தனை ஒருவாறு தலைக்கட்டினபடியைச் சொல்வதாகச் செல்லுகிறது. "அடியேனிடரைக்களையாயே" என்றும் "அடியேற்கருளாயே" என்றும் "அடியேனுக்கருள் புரியாயே" என்றும் "குறிக்கொள் எனைநீயே" என்றும் பிரார்த்தித்த ஆழ்வாரை நோக்கித் திருவேங்கடமுடையான் 'அடியார்களைத் தேடித்திரிகிற நான் இங்ஙனே பிரார்த்திக்கிற உம்மை உபேக்ஷித்திருப்பேனோ?' என்று சொல்லி ஆழ்வார் திருவுள்ளத்திலே வந்து புகுந்தான்; அதனை அறிந்த ஆழ்வார் இனிதாக அநுபவிக்கிறார். எம்பெருமான் தமது நெஞ்சிலே வந்து புகுந்தவாறே தாம் ஸம்ஸாரத்தில் நின்றும் விலகிவிட்டதாகவே நினைத்துப் பேசுகிறார்.

மன்னு என்பது மனிசப்பிறவிக்கு அடைமொழி. "மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள்" என்றபடி மின்னலைக்காட்டிலும் அஸ்திரமான இந்த மானிடப்பிறவியில்நின்றும் என்னை நீக்கித்தன்னையே யொக்க அருள்செய்யுமெம்பெருமான் என்னெஞ்சிலே வந்து புகுந்துநிற்கிறான் காண்மின்—என்கிறார்.

**தன்னாக்கி** = தன்னைப்போலே என்னையும் மலர்ந்த ஞானாநந்தங்களையுடையவனாக்கி என்றாவது, தனக்கு சேஷமாக்கி என்றாவது உரைக்கலாம். **மின்னார் முகில்சேர்** = பெருமாளும் பிராட்டியும் சேர்ந்த சேர்த்திக்கு உவமையிட்டபடி. ... ... ... ... ... ... (சு)

மானேய் மடநோக்கி திறத்தெதிர்வந்த *
ஆனேழ் விடைசெற்ற அணிவரைத்தோளா! *
தேனே! திருவேங்கட மாமலை மேய! *
கோனே! என்மனம் குடிகொண்டிருந்தாயே. (எ)

| | |
|---|---|
| மான் ஏய் மட நோக்கி திறத்து | மானினுடைய நோக்குப் போன்ற அழகிய நோக்குடையளான நப்பின்னைப் பிராட்டிக்காக, |
| எதிர் வந்த | செருக்குடன் வந்த |
| ஆன் விடை ஏழ் செற்ற | ஏழு ரிஷபங்களைக் கொன்ற |
| அணி வரை தோளா | அழகிய மலைபோன்ற திருத்தோள்களையுடையவனே |

| | | | |
|---|---|---|---|
| தேனே | தேன்போல் போக்யனானவனே ! | என் மனம் | என்னுடைய நெஞ்சை |
| திரு வேங்கடம் மா மலை மேய கோனே | திருமலையிலே எழுந்தருளியிருக்கிற ஸ்வாமியே | குடி கொண்டு | இருப்பிடமாகக்கொண்டு |
| | | இருந்தாய் | நிலைபெற்றிரா நின்றாய். |

* * *—[மானேய்மடநோக்கி.] "அண்ணா வடியேனிடரைக்களையாயே" என்று முதற்பாட்டிலே தாம் பிரார்த்தித்தபடியே தம்முடைய இடர்களைக் களைந்து அருளினது, முன்பு நப்பின்னைப்பிராட்டியின் கலவிக்கு விரோதிகளாயிருந்த ஏழு ரிஷபங்களை வலியடக்கினதுபோலே யிருக்கையாலே அதனைப்பேசி இனியராகிறார். மானினுடைய நோக்குப்போன்ற நோக்கையுடையளான நப்பின்னைப்பிராட்டியை மணந்துகொள்வதற்காக அவளுடைய தந்தையின் கட்டளைப்படி ஏழு ரிஷபங்களையும் கொன்றொழித்த பெருமிடக்கனே !; அன்று அவளுக்கு எவ்வளவு போக்யமாயிருந்தாயோ, எனக்கும் அவ்வளவு போக்யமாயிருப்பவனே ! திருவேங்கடமுடையானே ! அந்த நப்பின்னைப்பிராட்டியையும் கூட்டிக்கொண்டு என்மனத்தே வந்துகுடிகொண்டிருக்கின்றாயே ! இப்படியும் ஒரு திருவருளுண்டோ ? என்றாராயிற்று.

எதிர் வந்த ஆனேழ்விடைகளை மானேய்மட நோக்கி திறத்துச் செற்ற அணிவரைத் தோளா ! என்று அந்வயிப்பது. ... ... ... (எ)

சேயனணிய னெனசிந்தையுள் நின்ற
மாயன்* மணிவா ளொளி வெண்டரளங்கள் *
வேய்விண்டுதிர் வேங்கடமா மலைமேய *
ஆய னடியல்லது மற்றறியேனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| சேயன் | (பக்தியற்றவர்களுக்கு) எட்டாதவனும் | வாள் மணி | ஒளியுள்ள ரத்னங்களையும் |
| | | உதிர் | உதிர்க்குமிடமான |
| அணியன் | (பக்தர்களுக்குக்) கையாளாயிருப்பவனும் | வேங்கடம் மா மலை மேய | திருமலையில் எழுந்தருளியிருப்பவனுமான |
| என சிந்தையுள் நின்ற மாயன் | என் நெஞ்சினுள்ளே வந்து நின்ற ஆச்சரியபூதனும், | ஆயன் | ஸ்ரீக்ருஷ்ணனுடைய |
| வேய் விண்டு | மூங்கில்களானவை பிளவுபட்டு | அடி அல்லது | திருவடிகளையொழிய |
| ஒளி வெண் தரளங்கள் | பிரகாசமுள்ள வெளுத்த முத்துக்களையும் | மற்று | வேறொன்றையும் |
| | | அறியேன் | அறியமாட்டேன். |

* * *—[சேயனணியன்.] இப்படி என்னெஞ்சிலே நப்பின்னைப்பிராட்டியோடுங்கூட வந்து புகுந்தானானபின்பு இவன் திருவடிகளிலே கைங்கரியம் பண்ணுகையொழிய வேறொன்றும் நானறியேன் என்கிறார்.

எம்பெருமான் சிலர்க்குச் சேயன், சிலர்க்கு அணியன் ; சேயனென்றால் தூரத்திலிருப்பவனென்கை ; அணியனென்றால் ஸமீபத்திலிருப்பவனென்கை,

தன்னை உகவாதார்க்கு அவன் எட்டாதவன்; தன்னை உகந்தார்க்கு அவன் கையாளாயிருப்பவன். துரியோதநாதியர் திறத்திலும் பாண்டவர் திறத்திலும் இதனைக்காணலாம். சிறிது பக்தியுடையார்க்கும் அவன் அணியன் என்பதை என்னைக்கொண்டேயறியலாமென்பவர் போல என சிந்தையுள் நின்றமாயன் என்கிறார். என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து நித்யவாஸம்பண்ணுகிற ஆச்சரிய சீலன் அணியனென்பது சொல்லவேணுமோ வென்கை.

மணிவாளோளிவெண்தரளங்கள் வேய்விண்டுதிர் என்பது திருவேங்கட மலைக்கு விசேஷணம். யானைகளின் கும்பஸ்தலத்திலும் மூங்கில்களிலும் முத்துக்களும் மணிகளும் உண்டாவதாக நூல்கள் கூறும். வேய்களானவை விண்டு விரிந்து, வாள் (ஒளி) பொருந்திய மணிகளையும், ஒளியும் வெண்ணிறமும் பொருந்திய தரளங் (முத்துக்)களையும் உதிர்க்குமிடமான திருமலையிலே எழுந்தருளியிருக்கிற ஸர்வஸுலபனுடைய திருவடிகளைத்தவிர வேறொன்றுமறியேன்.

தரளம்—முத்து; வடசொல். ... ... ... (அ)

வந்தாயென்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய் *
நந்தாத கொழுஞ்சுடரே யெங்கள்நம்பீ! *
சிந்தாமணியே திருவேங்கடம் மேய
எந்தாய்! *இனியானுன்னை யென்றும் விடேனே. (௯)

| | |
|---|---|
| நந்தாத | ஒருகாலும் அணையாத |
| கொழு சுடரே | சிறந்த தேஜஸ்ஸாயிருப்பவனே! |
| எங்கள் நம்பீ | எங்களுடைய குறையை நிரப்பவல்ல பூர்ணனே! |
| சிந்தாமணியே | நினைத்த மாத்திரத்தில் எல்லாவற்றையும் கொடுத்தருளவல்லவனே! |
| திரு வேங்கடம் மேய எந்தாய் | திருமலையிலெழுந்தருளியிருக்கும் பெருமானே! |
| வந்தாய் | என்பக்கல் வந்தாய்; |
| என் மனம் புகுந்தாய் | எனது நெஞ்சினுள்ளே புகுந்தாய்; |
| மன்னிநின்றாய் | உள்ளேயே பொருந்தி நின்றாய்; |
| இனி | இனிமேல் |
| யான் | அடியேன் |
| உன்னை என்றும் விடேன் | உன்னை ஒரு நாளும் விடமாட்டேன். |

* * *—[வந்தாயென்மனம்.] தாம்பெற்ற பேற்றை வாயாரச் சொல்லி மகிழ்கிறார். "வந்து என் மனம் புகுந்து மன்னிநின்றாய்" என்று ஒரு வாக்கியமாகவே சொல்லிவிடலாமாயினும் தம்முடைய ஆநந்தம் நன்கு விளங்குமாறு "வந்தாய்—என் மனம் புகுந்தாய்—மன்னிநின்றாய்" என்று தனித்தனி வாக்கியமாக நீட்டிநீட்டி யுரைக்கின்றார்.

வந்தாய்—பரமபதம், திருப்பாற்கடல் முதலான அஸாதாரண ஸ்தலங்களை விட்டு இவ்விடம் வந்தாய். என்மனம்புகுந்தாய்—வந்தவிடத்திலும் ஜ்ஞாநாநுஷ்டாநங்களிற்சிறந்த யோகிகளின் மனத்தைத் தேடியோடாமல் நாயினேனுடைய மனத்தைத் தேடிப்பிடித்து வந்து புகுந்தாய். மன்னிநின்றாய்—' இனிய இடங்

களிலே நாம் சுகமாக இருப்பதைவிட்டு இவருடைய அழுக்கு நெஞ்சிலே சிறைப் பட்டுக்கிடப்பானேன்' என்று வெறுத்து நெஞ்சைவிட்டு நீங்கப்பாராமல் 'இதனில் சிறந்த ஸ்தாநம் வேறொன்று நமக்கில்லை' என்று கொண்டு என்னெஞ்சிலேயே ஸ்திரப்ரதிஷ்டையாக இருந்துவிட்டாய்.

அப்ராக்ருதனை நீ மிகவும் ஹேயமான என்னெஞ்சிலே வந்து புகுந்ததனாலே உன்னுடைய தேஜஸ்ஸுக்கு எள்ளளவும் குறையில்லை; முன்னிலும் தேஜஸ்ஸு விஞ்சுகின்றது என்பார் நந்தாத கொழுஞ்சுடரே! என விளிக்கின்றார். நந்துதல்—கெடுதல்; நந்தாத—கெடாத.

சிந்தாமணியே!=காமதேநு, கல்பவ்ருக்ஷம் முதலானவை போலே நினைத்த மாத்திரத்தில் அபீஷ்டங்களையெல்லாம் தரக்கூடிய ஒரு மணிக்குச் சிந்தாமணியென்றுபெயர்; அதுபோலே ஸர்வாபீஷ்டங்களையும் அளிப்பவனே! என்றபடி. இப்படிப்பட்டவுன்னை இனி நான் ஒருநொடிப்பொழுதும்விட்டுப் பிரியமாட்டேனென்று தமக்குப் பரபக்தி வாய்ந்தபடியைப் பேசினாராயிற்று. ... (௯)

வில்லார்மலி வேங்கட மாமலைமேய *
மல்லார் திரடோள் மணிவண்ண னம்மானை *
கல்லார் திரடோள் கலியன் சொன்னமாலை *
வல்லாரவர் வான..வ ராகுவர்தாமே. (கo)

| | | | |
|---|---|---|---|
| வில்லார் மலி | வேடர்கள் நிறைந்திருக்கப்பெற்ற | அம்மானை | எம்பெருமானைக் குறித்து, |
| வேங்கடம் மா மலை | திருவேங்கடமென்னும் சிறந்த மலையிலே | கல் ஆர் திரள் தோள் | மலைபோன்று திரண்ட தோள்களையுடையரான |
| மேய | எழுந்தருளியிருப்பவனும் | கலியன் | திருமங்கைமன்னன் |
| மல் ஆர் திரள் தோள் | மிடுக்குமிக்குத் திரண்ட தி..த்தோள்களையுடையவனும் | சொன்ன | அருளிச்செய்த |
| மணி வண்ணன் | நீலமணிபோ..றதிருநிறத்தையுடைய..னுமான | மாலை | இச்சொல்மாலையை |
| | | வல்லாரவர் தாம் | ஓதவல்லவர்கள் |
| | | வானவர் ஆகுவர் | நித்யஸூரிகளாகப் பெறுவர்கள். |

* * *—..ல்லார்மலி.. திருமலையிலே வில்லுங்கையுமான வேடர்கள் நிறைந்து கிடப்ப..வருணிப்ப..ன் கருத்து யாதெனில்; ஆழ்வார் மங்களாசாஸநபரராகையாலே தம்மைப்போன்ற மங்களாசாஸநபரர்கள் திருமலையிலே பலருளர் என்றபடி. பரமபதத்திலும் நித்யஸூரிகள் அஸ்தாநே பயத்தைச் சங்கித்துப் பரியும்போது, திருமலையிலே ஸ்ரீ குஹப்பெருமாள்போன்ற வேடர்கள் 'அஸுரராக்ஷஸமயமான இந்நிலத்திலே எந்த வேளையிலே யாரால் என்ன தீங்கு எம்பெருமானுக்கு நேர்ந்துவிடுமோ' என்று அதிசங்கைபண்ணி எப்போதும் ஏறிட்ட வில்லுங்கையுமாய் இருப்பர்களாகையாலே, அதனை உவந்து ஆழ்வார் அ..ளிச்செய்கிறாரென்க. பெரியாழ்வார் "மல்லாண்ட திண்டோள் மணி

வண்ணு" என்று எம்பெருமானுடைய அளவற்ற சக்திவிசேஷத்தை அறிந்து சொல்லச் செய்தேயும் அதிசங்கையின் மிகுதியாலே "பல்லாண்டு பல்லாண்டு" என்றாப்போலே, இவரும் * மல்லார்திரடோள் மணிவண்ணனென்று அறிந்து வைத்தும் அதிசங்கையினுல் மங்களாசாஸநத்திலே நிஷ்டையுடையராயிருப்பர் என்பது இப்பாட்டில் அறியத்தக்கது.

இப்பாட்டில் ஆழ்வார் பல்லாண்டுபாடுவதாக இல்லையே யென்று நினைக்க வேண்டா; "மங்களாசாஸநபரர்கள் திருமலையிலே உள்ளார்" என்று சொல்லுவதும் பல்லாண்டு பாடுகையிலே அந்வயிக்கும்.

திருவேங்கடமுடையானைத் திருமங்கையாழ்வார் கவிபாடின இப்பாசுரங்களை ஓதவல்லவர்கள் நித்யஸூரிகளைப்போலே நித்யகைங்கரியம் பண்ணிக் கொண்டு வாழப்பெறுவர்களென்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. ... ... ... (கo)

அடிவரவு :—கண் இலங்கை நீர் உண்டாய் தாளும் மன்னு மானேய் சேயன் வந்தாய் வில் வானவர்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் அருளிச்செய்த

பெரிய திருமொழி திவ்யார்த்த
தீபிகையில்

முதற்பத்து முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீரஸ்து.



ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

பெரிய திருமொழியில்

# இரண்டாம் பத்து.



## முதல் திருமொழி—வானவர்தங்கள்.

அவதாரிகை:—பகவத்விஷயத்தை அநுபவித்துக்கொண்டுபோகச் செய்தே ஆநந்தம் தலைமண்டைகொண்டு, 'இப்படிப்பட்ட அநுபவம் எல்லார்க்கும் இல்லையாயிருக்க, நமக்குமாத்திரம் கிடைக்கவேண்டிய காரணம்யாது?' என்று ஆராய்ந்து "మన ఏవ మనుష్యాణాం కారణం బన్ధమోక్షయోః" மந ஏவ மநுஷ்யாணும் காரணம் பந்தமோக்ஷயோஃ" என்றபடி—பேற்றுக்கும் இழவுக்கும் நெஞ்சுதான் முதலடியானது என்று துணிந்து, இப்படிப்பட்ட நெஞ்சானது தீய விஷயங்களிற் செல்லாமல் ஸ்வரூப ப்ராப்தமான பகவத்விஷயத்திற் சென்று சேர்ந்ததே! என்று உவந்து அந்த நெஞ்சைக் கொண்டாடுதல் நம் ஆழ்வார்கட்கு உள்ள தொன்று. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "நெஞ்சமே! நல்லைநல்லை! உன்னைப் பெற்றாலென் செய்யோம், இனியென்ன குறைவினம்" என்றும், "ஊனில் வாழுயிரே! நல்லைபோ உன்னைப்பெற்று, வானுளார் பெருமான் மதுசூதனென்னம்மான், தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம், தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்தே" என்றும் அடிக்கடி நெஞ்சைக் கொண்டாடுவர்.

அப்படியே இவ்வாழ்வார் தாமும் இத்திருமொழியில் ஒவ்வொரு பாட்டிலும் தமது திருவுள்ளத்தை விளித்து 'திருவேங்கடமுடையானுக்கு அடிமைத்தொழில் பூண்டாயே! அடிமைத்தொழில் பூண்டாயே!' என்று சொல்லி உகக்கிறார். "நாயேன் வந்தடைந்தேன் நல்கியாளென்னைக் கொண்டருளே" என்றும், "இனியானுன்னை யென்றும் விடேனே" என்றும் பகவத்விஷயத்திலே நான் ஈடுபடும்படியாக அவன் திறத்து அடிமைத்தொழில் பூண்டது நீயன்றோ நெஞ்சமே! என்று ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்காற் சொல்லி நெஞ்சைப் புகழ்கின்றார்.

தம்மிற்காட்டில் நெஞ்சை வேறுபடுத்திச் சொல்லுதல் கவிமரபு. நெஞ்சைத் தூதுவிடுவதாகவுஞ் சொல்லுவர்களிறே. நல்ல விஷயங்களைச் சொல்லிக்கொண்டு போதுபோக்குவதற்கு இவ்விருள்தருமாஞாலத்தில் வேறு யாரும் உடன்படாமல்*உண்டியே உடையே உகந்தோடுகிறவர்களாயிருப்பதால் உசாத்துணையாவது நெஞ்சு தவிர வேறில்லாமையால் அந்த நெஞ்சை நோக்கித் தானே வார்த்தை சொல்லவேண்டும். "யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம்" என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்தார். ஆகையாலே நெஞ்சை விளித்து வார்த்தை சொல்லுவதென்பது பக்தர்களுக்கு ஒரு நற்போதுபோக்காக அமைந்ததாம். நெஞ்சு பிரிந்து போயிற்றதாகச் சொல்வதும் இப்படியே.

ஆக, இத்திருமொழியால் தமது நெஞ்சைப் புகழ்ந்துபேசும் முகத்தால் திருவேங்கடமுடையானை அநுபவித்து இனியராகிறார். ... ... ... *

(ஆசிரியத்துறை.)

வானவர்தங்கள் சிந்தைபோல வென்னெஞ்சமே! யினிதுவந்து*மாதவ
மானவர் தங்கள்சிந்தை யமர்ந்துறைகின்றவெந்தை *
கானவரிடு காரகில்புகை யோங்குவேங்கடம் மேவி * மாண்குற
ளானஅந்தணற் கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (க)

என் நெஞ்சமே — என்னுடைய மனமே!,
மா தவம் மானவர் தங்கள் சிந்தை — மிக்க தவஞ் செய்தவர்களான மனிசருடைய நெஞ்சிலே
அமர்ந்து உறைகின்ற — பொருந்தி வாழ்கின்ற
எந்தை — ஸ்வாமியும்,
கானவர் இடு கார் அகில் புகை ஓங்கு வேங்கடம் மேவி — வேடர்கள் ஸமர்ப்பிக்கும் காரகில்புகை பரவியிருக்கப்பெற்ற திருமலையிலே வாழ்பவனும்
மாண் குறள் ஆன அந்தணற்கு — வாமந ப்ரஹ்மசாரி வடிவெடுத்தவனுமான எம்பெருமானுக்கு
வானவர் தங்கள் சிந்தை போல — நித்யஸூரிகளுடைய ஹ்ருதயம்போலே (நீயும்)
இனிது உவந்து — நன்றாகக் களித்து
இன்று — இப்போது
அடிமை தொழில் பூண்டாயே — கைங்கர்ய வ்ருத்தியை ஏற்றுக்கொண்டாய் காண்.

* * *—[வானவர்தங்கள்.] "என் நெஞ்சமே! நீ வானவர்தங்கள் சிந்தை போல (திருவேங்கடமுடையானுக்கு) இன்று அடிமைத்தொழில் பூண்டாயே!" என்று உகந்து பேசுகிறார். இவ்விருள் தருமாஞாலத்திலே பிறந்த என்னுடைய நெஞ்சாக நீ இருந்தும், இந்த மண்ணோருடைய நெஞ்சு எப்படி துர்விஷயங்களையே சிந்தை செய்கிறதோ அப்படி நீ விஷயாந்தரங்களைச் சிந்தியாமல், ஒரு நாளும் ஸம்ஸார நாற்றமே கண்டறியாத நித்யஸூரிகளின் நெஞ்சுபோலே திருவேங்கடமுடையான் திறத்திலே அடிமைத்தொழிலை ஏற்றுக்கொண்டாயே, உன்னுடைய பாக்கியமே பாக்கியம்! என்றவாறு.

அந்தத் திருவேங்கடமுடையான் எப்படிப்பட்டவனென்னில்; மாதவ மானவர்தங்கள் சிந்தை இனிது உவந்து அமர்ந்து உறைகின்ற எந்தை=மிக்க அத்ருஷ்டசாலிகளான மனிசருண்டு—பொய்கையார், பூதத்தார், பேயார், புகழ் மழிசைஐயன், அருள்மாறன், சேரலர்கோன், துய்யபட்டநாதன், அன்பர்தாள் தூளி, நற்பாணன் போல்வார்; அவர்களுடைய திருவுள்ளத்திலே பரமபோக்யமாகப் பொருந்தியிருந்து நித்யவாஸம் பண்ணுமவன். அநந்ய ப்ரயோஜநரான பக்தர்களுடைய நெஞ்சைவிட்டுப் பிரியமாட்டாத பெருமான் என்கை. இன்னமும் எப்படிப்பட்டவனென்னில்; கானவரிடு காரகிற்புகையோங்கு வேங்கடம் மேவி=(திருமலையிலுள்ள) வேடர் குறவர் முதலானோர் தாங்கள் சமையல் செய்து கொள்வதற்கு அகில்மரங்களை வெட்டியிட்டுத் தீயை உண்டாக்குவர்கள்; அதன் புகையானது திருமலையெங்கும் பரவி கமகமவென்று பரிமளித்துக் கொண்டிருக்கும். அப்படிப்பட்ட ஸுகந்தமான திருமலையிலே எழுந்தருளி

யிருப்பவன். "கானவரிடுகாரகில்" என்றவிடத்து, "అతిపరిచయాదవజ్ఞా సన్తతగమనాదనాదరో భవతి। మలయే భిల్లపురన్ధ్రీ చన్దనతరుకాష్ఠ మిన్ధనం కురుతే—அதிபரிசயாதவஜ்ஞா ஸந்ததகமநாதநாதரோ பவதி—மலயே பில்லபுரந்த்ரீ சந்தந தருகாஷ்டமிந்தநம் குருதே." என்ற பண்டிதராஜனுடைய ஸுபாஷிதம் ஸ்மரிக்கத்தகும். (இதன் பொருள்:—ஒருவனோடு அதிகபரிசயம் செய்தால் அவமானம் நேரிடும்; அடிக்கடி ஒருவன் வீட்டுக்குச் சென்றால் அலக்ஷியமுண்டாகும். பொதியமலையில் குறத்திகள் சந்தனக்கட்டைகளைச் சமையலுக்கு விறகாக உபயோகப்படுத்தக் காண்கிறோமிறே. அதிக பரிசயத்தினாலல்லவோ அலக்ஷியமுண்டாயிற்று என்பதாம்.) கானவர்கட்குக் காரகிற்கட்டைகள் எளிய சரக்காக இருப்பதால் அவர்கள் அவற்றையிட்டுச் சமைப்பார்கள்; அவர்கள் ஸ்வார்த்தமாகச் செய்துகொண்ட அக்காரியமும் பரார்த்தமாகித் திருமலையைப் பரிமளிக்கச் செய்கின்றதென்றதாயிற்று. * நாற்றத்துழாய்முடி நாராயணனுக்கும் நறுநாற்ற மூட்டுகிறபடி.

மேவி = இது வினையெச்சமன்று; மேவியவன் என்னும் பொருளதான பெயர்ச்சொல். இ—பெயர்விகுதி. 'நாடோடி' 'பிறைசூடி' 'குதிரையோட்டி' என்பன காண்க.

மாண்குறளான அந்தணற்கு = தன்னுடையதான பூமியைப் பெறுதற்குத் தான் யாசகனாக வந்துநின்ற பெருமானுடைய குறை தீர, நெஞ்சமே! நீ அவனுடைய வஸ்துவாக அமையப்பெற்றாயே! என்றவாறு. மாவலிபக்கல் வந்தபோது வாமநப்ராஹ்மணனாக வந்தமையாலே 'அந்தணற்கு' எனப்பட்டது; அன்றி, "அந்தணரென்போர் அறவோர், மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டொழுகலான்" (திருக்குறள்—30.) என்றபடி அழகிய தண்மையையுடையவன் அந்தணன் என்றதாய், மஹாதர்மிஷ்டன் என்னவுமாம்.

முதலடியில் "இனிதுவந்து" என்றவிடத்து "இனிது உவந்து" என்றும் 'இனிது வந்து' என்றும் பிரிக்கலாம். எம்பெருமான் வானவர்தங்களுடைய சிந்தையிலே எப்படி அமர்ந்துறைகின்றானோ அப்படியே மாதவமானவர் தங்களுடைய சிந்தையிலும் அமர்ந்துறைகின்றான் என்று முன்னடிகட்குப் பொருள் சொல்லலாமாயினும் 'என்னெஞ்சமே! நீ வானவர்தங்கள் சிந்தை போல (திருவேங்கடமுடையானுக்கு) அடிமைத் தொழில் பூண்டாய்' என்று அந்வயித்துப் பொருள் கொள்ளுதல் சிறக்கும். 'இனிது உவந்து' என்பதை இரண்டாமடியிலோ ஈற்றடியிலோ அந்வயித்துக் கொள்ளலாம். (அதாவது) மாதவமானவர் தங்கள் சிந்தையிலே இனிது வந்து அமர்ந்துறைகின்ற வெந்தை—என்றும், 'இனிதுவந்து அடிமைத் தொழில் பூண்டாயே" என்றும் அந்வயிக்கலாம். மாநவர்—மநுஷ்யர்; வடசொல். "மாண்குறளாய" என்ற பாடம் எதுகைக்குச் சேராது; ப்ராசீநபாடமுமன்று. ... ... ... (க)

உறவுசுற்றமேன் றேன்றிலா வோருவனுகந்தவர்தம்மை * மண்மிசைப்
பிறவியே கெடுப்பானதுகண்டேன்னேஞ்சமேன்பாய்! *
குறவர் மாதர்களோடு வண்டுகுறிஞ்சி மருளிசைபாடும் வேங்கடத்து *
அறவனுயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (உ)

என் நெஞ்சம் என்பாய் } எனது நெஞ்சே!,

உறவு சுற்றம் என்று ஒன்று இலா ஒருவன் } பந்துக்கள் தாயாதிகள் என்று சொல்லக்கூடிய எவ்வகை ஆபாஸஸம்பந்தமுமில்லாத அத்விதீயனான பெருமான்

உகந்தவர் தம்மை } தானுகந்த அந்தரங்கபக்தர்களுக்கு

மண் மிசை பிறவியே கெடுப்பான் அது கண்டு } இப்பூமியில் பிறவியைப் போக்குவானென்கிற தன்மையைக் கண்டு,

குறவர் மாதர்களோடு } குறத்திகளோடுகூட

வண்டு வண்டுகள்

குறிஞ்சி மருள் இசை பாடும் வேங் கடத்து } குறிஞ்சி, மருள் முதலிய இசைகளைப் பாடுமிடமான திருமலையிலுள்ள

அறவன் நாயகற்கு } பரமதார்மிஷ்டனான அப் பெருமானுக்கு

இன்று அடிமைத்தொழில் பூண்டாயே—.

* * *—[உறவுசுற்றம்.] நெஞ்சமே! திருமலையப்பனுடைய திருக்குணங்களின் வாசியறிந்து நீ அவன் திறத்திலே அடிமைத்தொழில் பூண்டாயே!. நாம் பந்துக்களென்றும் தாயாதிகளென்றும் சில ஆபாஸபந்துக்களைக்கற்பித்துக் கொண்டு அவர்களுக்கு நன்மைசெய்வதும், சிலரை சத்துருக்களென்றுகொண்டு அவர்கட்குத் தீமைசெய்வதுமாக இருக்கிறோமே; இப்படியல்ல எம்பெருமானுடைய ஸ்வபாவம். அவன் எப்படிப்பட்டவனென்றால், உறவுசுற்றமேன்றேன்றிலாவோருவன்; “ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்” என்றும், “தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்” என்றும் எல்லார் திறத்திலும் வாசியற்ற அன்புடையவனாகச் சொல்லப்படுபவன். இன்னமும் எப்படிப்பட்டவனென்னில்; உகந்தவர்தம்மை மண்மிசைப் பிறவியே கெடுப்பான் = தன்னை யார் உகக்கின்றார்களோ அவர்களை ஸம்ஸாரத்தில் நின்றும் களைந்தெடுத்து நித்ய ஸூரிகளுடைய திரளிலே நிறுத்துமவன். “அது கண்டு அடிமைத்தொழில்பூண்டாயே” என்று அந்வயம்; இப்படிப்பட்ட எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைக் கண்டறிந்து ‘அவனுக்கு அடிமை செய்கையே புருஷார்த்தம்’ என்று கொண்டாயே என்கை.

‘உகந்தவர்தம்மை’ என்பதற்கு, ‘தன்னிடத்தில் எவர் ப்ரீதி பண்ணுகிறார்களோ அவர்களை’ என்றும், ‘எம்பெருமான்தான் எவர்களிடத்தில் ப்ரீதி வைக்கிறானோ அவர்களை’ என்றும் உரைக்கலாம். இப்படி எம்பெருமான்தானாகவே சிலரை உகக்கிறானென்று கொண்டால், அவனுக்குப் பக்ஷபாதித்வம் வந்தி

டுமேயென்று நினைக்கவேண்டா; "ப்ரியதம ஏவ ஹி வரணீயோ பவதி — ப்ரியதம ஏவஹிவரணீயோ பவதி" என்று ஸ்ரீபாஷ்யத்திலருளிச் செய்தபடி—எம்பெருமான் தன்பக்கல் அன்புசெய்வாரையே தான் உகப்பனுகையாலே பக்ஷபாத ப்ரஸக்தியில்லை. இங்ஙனேயாகில், 'எம்பெருமான் நிர்ஹேதுகமாக அருள் செய்பவன்' என்கிற ஸித்தாந்தம் குலையுமே என்று சங்கை பிறக்கும் இப்பெரிய விஷயம் இங்கு வேண்டாவென்று நிற்கின்றோம்.

என்னெஞ்சே! என்று ஸாமாந்யமாகச் சொல்லிவிடாமல், "என்னெஞ்சமென்பாய்" என்றது மிக்க கௌரவத்தைத் தோற்றுவிக்கும். 'என்னுடைய நெஞ்சமென்று சொல்லப்படுகிற மஹாநுபாவனே!' என்றவாறு.

திருமலையை வருணிப்பது மூன்றாமடி. குறத்திகளும் வண்டுகளும் குறிஞ்சி முதலிய பண்களைப் பாடுகின்றனரென்றது ஸ்வபாவோக்தி. குறிஞ்சியென்றும் மருள்என்றும் பெயருடைய பண்களைப் பாடுகின்ற என்கை. இனி, மருள் என்பதைக் குறிஞ்சிக்கு அடைமொழியாக்கி, மதிமயக்கமுண்டுபண்ணுவதான குறிஞ்சியென்னும் ராகத்தைப் பாடுகின்ற என்றுமுரைப்பர்.

அறவன் = "தண்ணீர்ப்பந்தலை வைத்து நம்மடிமை பெறுகைக்குத் தம்மை நமக்குத் தந்து கொடு நிற்கிற பரமதார்மிகன்" என்பது பெரியவாச்சான்பிள்ளையருளிச்செயல். நம்மிடத்தில் கைங்கரியங் கொள்ளுதற்காகத் திருமலையிலே வந்து நித்யஸந்நிதானம் செய்தருளியிருக்கையாகிற பெரிய தருமத்தைச் செய்த பகவான் என்கை. ... ... ... ... ... ... (உ)

இண்டையாயின கொண்டு தொண்டர்களேத்துவா ருறவோடும் * வானிடைக்
கொண்டு போயிடவுமதுகண்டேன் நெஞ்சமென்பாய்! *
வண்டுவாழ் வடவேங்கடமலை கோயில்கொண்டதனோடும் * மீமிசை
அண்டமாண்டிருப்பாற் கடிமைத்தொழில் பூண்டாயே. (௩)

| | |
|---|---|
| என் நெஞ்சம் என்பாய் | ஓ மனமே!, |
| இண்டை ஆயின கொண்டு | புஷ்பமாலைகளை ஏந்திக் கொண்டு (தன் பக்கல் வந்து) |
| ஏத்துவார் | ஸ்தோத்ரம்பண்ணுமவர்களான |
| தொண்டர்கள் | தாஸபூதர்களை |
| உறவோடும் | அவர்களுடைய ஸம்பந்த ஸம்பந்திகளோடுங் கூட |
| கொண்டு போய் | இந்நிலத்தில் நின்றும் கொண்டுபோய் |
| வானிடை | பரமபதத்திலே |
| இட அது கண்டு | (எம்பெருமான்) சேர்க்கிற படியைக் கண்டு, |
| வண்டு வாழ் | வண்டுகள் களித்து வாழப்பெற்ற |
| வட வேங்கடம்மலை | வடதிசையிலுள்ள திருமலையை |
| கோயில் கொண்டு | திருக்கோயிலாகக் கொண்டு |
| அதனோடும் | அந்தத் திருமலையையும் |
| மீமிசை அண்டம் | நித்ய விபூதியான திருநாட்டையும் |
| ஆண்டு இருப்பாற்கு | ஆண்டு கொண்டிருக்கிற அப்பெருமானுக்கு |

அடிமைத்தொழில் பூண்டாயே—,

* * *—[இண்டையாயினகொண்டு.] "1. எண்டிசையுமுள்ள பூக்கொண்டு ஏத்தியுகந்துகந்து, தொண்டரோங்கள் பாடியாட" என்றபடி பல வகைப்பட்ட புஷ்பங்களைக் கையிலேந்திக்கொண்டு துதிக்கவருகின்ற தொண்டர்களையும் அவர்களோடு ஸம்பந்தம்பெற்ற மற்றுமுள்ளாரையும் எம்பெருமான் விஷயீகரித்துப் பரமபதத்திலே கொண்டு சேர்க்கிறான் என்கிற இச்சிறந்த குணத்தைக்கண்டு நெஞ்சே! அத்திருவேங்கடமுடையானுக்குத் தொண்டு பூண்டாயே! என்று உகக்கிறார்.

"இண்டை கொண்டு" என்னாமல் "இண்டையாயின கொண்டு" என்ற தன் கருத்துயாதெனில்; எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேணுமென்கிற சுத்த பாவத்துடனே கொள்ளுகிறபுஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; "செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி" என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவேயிருக்கவேணுமென்கிற நியதியில்லை; ஏதேனுமொரு பூவாயிருக்கலாம். என்பது தோன்றும். "பூமாலையென்று பேர்பெற்றவற்றைக்கொண்டு" என்று வியாக்கியானித்தருளினார் பெரியவாச்சான்பிள்ளையும். இதனால், இன்ன பூ என்று நிர்ப்பந்தமில்லாமையால் பூவென்று பேர்பெற்றிருக்குமத்தனையே வேண்டுமென்றதாயிற்று. திருவாய்மொழியில் [1-6-1.] "பரிவதிலீசனைப்பாடி விரிவது மேவலுறுவீர், பிரிவகையின்றி நன்னீர்தூய் புரிவதுவும் புகை பூவே" என்ற பாசுரத்தை ஸ்ரீபட்டர் உபந்யஸிக்கும்போது "புரிவதுவும் புகை பூவே" என்ற சப்தஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி "இவ்விடத்தில் அகில்புகையென்றாவது, கருமுகைப் பூ என்றாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனுமொரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டுப்புகைக்கலாம், கண்டகாலிப்பூவும் சூட்டலாம்" என்று உபந்யஸித்தாராம்; அதை நஞ்சீயர் கேட்டு "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க இப்படி அருளிச் செய்யலாமோ? என்று கேட்டார்; அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி:—"சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுக்கவில்லை; அடியார்கள் அப்பூவைப்பறித்தால் கையில் முள்பாயுமே! என்று பக்தர்கள்பக்கல் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றாம். திருவாய்மொழிக்குப் பதினெண்ணாயிரமுரைத்த பரகாலஸ்வாமி இந்த ஸம்வாதத்தைக் கண்டு ரஸியாமல் திரஸ்கரித்துரைத்தது கிடக்க. "అత్యన్త భక్తియుక్తానాం నశాస్త్రం నైవచ క్రమః— அத்யந்தபக்தியுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவச க்ரமః" [பக்தி எல்லை கடந்தால் நூல்வரம்பில்லை] என்றதையும் அருளிச்செயல் தொடையழகையும் நோக்கி ரஸப்பொருளுரைப்பதில் குதர்க்கவாதம் செய்கை விவேகிகட்குப் பணியன்று.

---

1. திருவாய்மொழி 4—7—8.

உறவோடும் வானிடைக் கொண்டுபோயிடவுமதுகண்டு = தொண்டர்களாய் ஏத்துகிறவர்களுக்கு மாத்திரமேயன்று மோக்ஷம்; அவர்களோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றவர்களுக்கு முண்டென்கிருர். இவ்விஷயத்தில் ஸ்வல்பமான மதபேதமுண்டு ;—(எங்ஙனேயென்னில் ;) ஒருவர் உபாயாநுஷ்டாநம் பண்ணிருல் அவர்க்கும் அவரோடு ஸம்பந்தம் பெற்றவர்கட்கும் புருஷார்த்த ஸித்தி உண்டென்றுலும், அவருடைய ஜீவிதகாலத்திலேயே இருந்து ஸம்பந்தம் பெற்ற வர்களுக்குப் புருஷார்த்த ஸித்தி உண்டேயன்றி, காலாந்தரத்திலே உள்ள அர் வாசீநர்கட்கும் அஃது உண்டென்ன வொண்ணுது என்பர் ஒரு சாரார் ; அனை வர்க்குமுண்டென்பர் ஸித்தாந்திகள். ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனுடைய திரு வுள்ளம் ந்யாஸதிலகமென்னும் ஸ்தோத்ரத்திலே "అంధోనంధగ్రహణవశగో యాతి రంగేశ! యద్వత్ పంగుర్నౌకాకుహరనిహితో నీయతే నావికేన। భుఙ్క్తే భోగానవిదితనృపస్సేవకస్యార్భకాదిః త్వత్సంప్రాప్తౌ ప్రభవతి తథా దేశికేంద్రో దయాళుః = அந்தோநந்தக்ரஹணவசகோ யாதி ரங்கேச! யத்வத் பங்குர் நௌகா குஹரநிஹிதோ நீயதே நாவிகேந—புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவக ஸ்யார்ப்பகாதி: த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகேந்த்ரோ தயாளு:." என்ற ச்லோகத்தில் இந்தஸித்தாந்தத்தை வெளியிட்டருளினர். இதில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் காட்டினர். குருடன் கண்தெரிந்தவனுடைய கையைப்பிடித் துக்கொண்டு போகிறுப் போலவும், நொண்டியானவன் மரக்கலத்திலே உட் காரவைக்கப்பட்டு ஓடக்காரனுல் கொண்டுபோகப்படுவது போலவும்—என் றுரைத்த இரண்டு த்ருஷ்டாந்தங்களும் ஸமகாலத்தவர்களுக்குப் புருஷார்த்த ஸித்தியுண்டென்பதைக்காட்டும் ; "அரசனிடத்திலே சேவகஞ்செய்துவிசேஷ மாகப் பொருளீட்டிவைத்தவனுடைய புத்ரபௌத்ரர் முதலான மேலுள்ள குடும்பஸ்தர் எல்லாரும் அவ்வரசனுடைய பெயரையுமறியாதே போகங்களை அநுபவிக்கிறுப்போலே" என்றுரைத்த மூன்றுவது த்ருஷடாந்தத்திருல் பிற் காலத்தவர்க்கும் புருஷார்த்த ஸித்தியுண்டென்பது நன்கு விளக்கப்பட்டதிறே.

[வண்டுவாழ் இத்யாதி.] வண்டுகள் வாழும்படியாகச் சோலைவாய்ப்பு அமைந்துள்ள திருவேங்கடமலையை ஆள்வதுபோலவே பரமபதத்தையும் ஆண்டு கொண்டு உபயவிபூதி நிர்வாஹகனென்று பேர்பெற்றிருக்குமெம்பெருமானுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே ! என்று உகந்தாராயிற்று.

எம்பெருமான் தன்னுடைய பக்தர்களை ஸம்பந்த ஸம்பந்தி பர்யந்தமாக அநுக்ரஹிப்பவனென்றுணர்ந்து அவனுக்கு அடிமைப்படுதல் நன்று என்ற வாறு. .... .... .... .... .... (ங)

பாவியாது செய்தாயென்நெஞ்சமே ! பண்டுதொண்டு செய்தாரை * மண்மிசை
மேவியாட்கொண்டுபோய் விசும்பேற வைக்குமெந்தை *
கோவிநாயகன் கொண்டலுந்துயர் வேங்கடமலையாண்டு * வானவர்
ஆவியாயிருப்பாற்கடிமைத்தொழில் பூண்டாயே. (ச)

என் நெஞ்சமே என் மனமே!

பாவியாது செய்தாய் { அலைபாயாமல் திண்ணிதான அத்யவஸாயம் கொண்டாய்;

பண்டு முன்பு

மண்மிசை மேவி { இந்நிலத்திலே வந்தவதரித்து,

தொண்டு செய்தாரை } அடிமை செய்தவர்களை

ஆள்கொண்டு போய் { ஆட்படுத்திக்கொண்டு போய்

விசும்பு ஏற வைக்கும் எந்தை } பரமபதத்திலே ஸ்தாபித்தருளும் ஸ்வாமியும்,

கோவி நாயகன் கோபிகளுக்கு நாதனும்,

கொண்டல் உந்து உயர் { மேகங்களைத் தள்ளும்படியான உயர்த்தியையுடைய (சிகரங்கள் பொருந்திய)

வேங்கடம் மலை திருமலையை

ஆண்டு அரசாட்சி செய்துகொண்டு

வானவர் ஆவியாய் இருப்பாற்கு { ஞானிகளைத் தனக்கு உயிர் நிலையாகவுடையவனுமான அப்பனுக்கு

அடிமைத்தொழில் பூண்டாயே—.

* * *—[பாவியாதுசெய்தாய்.] எம்பெருமான் இந்த மண்ணுலகத்திலே வந்து அவதரித்து, பக்தர்களிடத்தில் பல பல கைங்கரியங்களைக் கொண்டருளி அவ்வளவிலும் த்ருப்திபெறாமல் இன்னமும் இவர்களிடத்தில் நித்ய கைங்கரியங் கொள்ளவேணுமென்று அவர்களைத் திருநாட்டிலே கொண்டுவைக்குமவனாய் கோபாலக்ருஷ்ணனை திருவேங்கடமுடையானுக்குத் தொண்டு பூண்டாயே நெஞ்சே! என்று உகக்கிறார்.

[பாவியாது செய்தாய்.] பாவித்தலாவது ஆராய்தல்; ஆராயாதே செய்தாய் என்றதன் கருத்தாவது—அத்தைச் செய்வோமோ இத்தைச் செய்வோமோ என்று அலைபாயாமல் திண்ணிதான அத்யவஸாயம் கொண்டு தொண்டு செய்தாயே! என்கை. 'விஷயாந்தரங்களை அநுபவித்து ஸம்ஸாரியாய்க் கிடக்கலாமா, எம்பெருமானுக்குத் தொண்டு பூண்டு ஸ்வரூபம் நிறம் பெறலாமா? என்று தடுமாறாமல் சடக்கெனக் கைங்கரியத்தில் அந்வயிக்கப் பெற்றாயே! என்கை.

"பாவி—யாது" என்று பிரித்து, பாவிநெஞ்சே! என்ன செய்தாய்! என்று சிலர் உரைப்பது ஸ்வதந்த்ரப்படியாம். சுவையற்றதுமாம்.

கோவிநாயகன் = गोपी [கோபீ] என்ற வடசொல் கோவியெனத் திரியும்; ஆய்ச்சிகட்கு அன்பன் என்றபடி.

கோண்டலுந்துயர் வேங்கடமலை = உந்துதலாவது தள்ளுதல்; மேகங்களைத் தள்ளும்படி ஓங்கி வளர்ந்த திருமலையென்கை. "கொண்டலும் துயில்" என்று ஸ்வதந்த்ரபாடம் கற்பித்து "மேகங்களும் துயில்கொள்ளுமிடமான" என்று உரைத்தார் பரகால ஜீயர். "மேகங்களைச் சென்று தள்ளும்படி அவ்வளவும் வளர்ந்த சிகரங்களையுடைய திருமலையை" என்பது பெரியவாச்சான்பிள்ளையருளிச்செயல்.

வானவராவியாயிருப்பாற்கு = வானவர்களுக்கு ஆவியாயிருப்பவன் என்று மேலெழப்பொருள்படுமாயினும் அங்ஙனன்று பொருள்; வானவரென்று ஞானிகளைச்சொன்னபடியாய், ஞானிகளை ஆத்மாவாகவுடையவன் என்கிறது.

"ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" என்று கீதையிலே கண்ணபிரான் தானே சோதிவாய் திறந்து சொன்னது காண்க. ஆகவே இங்கு வானவராவி என்கிறவிது அன்மொழித்தொகை. (ச.)

போங்குபோதியும் பிண்டியும்முடைப் புத்தர்நோன்பியர் பள்ளியுள்ளுறை *
தங்கள்தேவரும் தாங்களுமேயாக என்நெஞ்சமேன்பாய் ! *
எங்கும்வானவர் தானவர்நிறைந்தேத்தும் வேங்கடம்மேவி நின்றருள் *
அங்கணாயகற்கின்றடிமைத்தொழில் பூண்டாயே. (ரு)

| | |
|---|---|
| என் நெஞ்சம் என்பாய் | ஓ மனமே !, |
| பொங்கு | கொம்புங்கிளையுமாகப் பணைத்து வளர்ந்திருக்கிற |
| போதியும் | அரசமரத்தையும் |
| பிண்டியும் | அசோகமரத்தையும் |
| உடை | (தங்களுக்குத் தஞ்சமாக) உடையவர்களான |
| புத்தர் | பௌத்தரும் |
| நோன்பியர் | அமணரும் |
| பள்ளியுள் உறை தங்கள் தேவரும் தாங்களுமே ஆக | தமது தேவாலயங்களிலேயுள்ள தங்களுடைய சாமிகளும் தாங்களுமேயாய் உலகமெங்கும் நிறைந்து கிடக்கச் செய்தேயும் (அந்த மதங்களில் நீ புகாமல்), |

| | |
|---|---|
| எங்கும் வானவர் தானவர் நிறைந்து ஏத்தும் | தேவப்ரக்ருதிகளும் அஸுரப்ரக்ருதிகளும் எங்கும் சூழ்ந்துகொண்டு போற்றுமிடமான |
| வேங்கடம் | திருமலையிலே |
| மேவி நின்று | எழுந்தருளியிருந்து |
| அருள் | அருள்செய்கின்ற |
| அம் கண் நாயகற்கு | அழகிய திருக்கண்களையுடைய பெருமானுக்கு |

இன்று அடிமைத்தொழில் பூண்டாயே—.

* * * [போங்குபோதியும்.] உலகத்திலே ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம் ஓங்கினவிடம் மிகச் சுருங்கியும், ஜைநர் பௌத்தர் முதலிய புறமதத்தவர்களின் சமயம் வியாபித்தவிடம் மிகப் பரம்பியும் இராநின்றது. இப்படிப்பட்ட வுலகத்திலே விதிவசத்தாலே நாம் புறமதங்களிலே புகுந்தோ பிறந்தோ பாழாய்ப் போகாமல் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திலே ஜனித்து எம்பெருமானுக்கு அடிமைப்பட்டு வாழப்பெற்றோமே என்கிற தமது மகிழ்ச்சியை ஆழ்வார் இது முதல் மூன்று பாசுரங்களில் வெளியிடுகிறார்.

பௌத்தர்களின் தேவதை அரச மரத்தடியை இருப்பிடமாகவுடையதென்றும், ஜைநர்களின் தேவதை அசோகமரத்தடியை இருப்பிடமாகவுடையதென்றும் ப்ரஸித்தி உண்டாதலால் போங்குபோதியும் பிண்டியுமுடைப் புத்தர் நோன்பியர் என்றார். பொங்கு போதியுடையவர் புத்தர்; பிண்டியுடையவர் நோன்பியர் என்று முறை முறையே உணர்க. போதி என்று அரசமரத்திற்குப் பெயர் ; அது கிளையும் கப்புமாக மிக வளர்ந்த மரமாதலால் போங்குபோதி எனப்பட்டது. பிண்டி என்று அசோகமரத்திற்குப் பெயர். புத்தர்—புத்ததேவதையைப்பற்றினவர்கள். ஜைநர்கள் அதிகமாக விரதங்கள் கொண்டாடுகிறவர்களாதலால் நோன்

பியர் எனப்பட்டனர். ஆக, பொங்கு போதியைப் பிரதானமாகக் கொண்ட புத்தர்களும், பிண்டிமரத்தைப் பிரதானமாகக் கொண்ட ஜைநர்களும் ஆகிய இப்புறமதத்தவர்களும் இவர்களால் தொழப்படும் தெய்வங்களும் நிறைந்துகிடக்கு மிம்மண்ணுலகிலே, நெஞ்சமே! நீ அந்தத் தீயவழியில்புகாதே திருவேங்கடமுடையானுக்கு அடிமைத்தொழில் பூண்டாயே!, நீயன்றோ பாக்யசாலி என்று உகந்தாராயிற்று.

["வானவர்தானவர்நிறைந்தேத்தும்."] தானவரென்று அஸுரர்களைச் சொல்லுகையன்றியே இந்நிலத்திலுள்ளாரைச் சொல்லுவதாக உரைப்பதுமுண்டு; ஸ்தாநம் என்ற வடசொல் தானமெனத்திரியும்; ஸ்தானத்திலுள்ளவர்--தானவர்; ஆகவே, அவ்வுலகத்தவர்களும் இவ்வுலகத்தவர்களும் நிறைந்து ஏத்துமிடமான வேங்கடம் என்றதாயிற்று. அங்கண்—புண்டரீகாக்ஷனென்றபடி. ... ... ... ... ... (ரு)

துவரியாடையர்மட்டையர் சமண்தொண்டர்கள் மண்டியுண்டு பின்னரும்*
தமரும் தாங்களுமேதடிக்க என்னெஞ்சமேன்பாய்! *
கவரிமாக்கணம்சேரும் வேங்கடம்கோயில்கோண்ட கண்ணார்விசும்பிடை*
அமரநாயகற்கின் றடிமைத்தோழில் பூண்டாயே. (சு)

என் நெஞ்சம் என்பாய் } ஓ மனமே!,

துவரி ஆடையர் } காஷாய வஸ்த்ரமுடுத்தவர்களாய்

மட்டையர் } மொட்டைத்தலையரா யிருக்கிற

சமண் தொண்டர்கள் } சமணமதக்காரர்கள்

மண்டி } ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து

உண்டு } (மனம்போனபடி) உணவுகளை உட்கொண்டு

பின்னரும் மேலும்

தாங்களும் தமரும் தடிக்க } அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் உடல் தடித்துக்கிடக்க,

(நீயும் அவர்களைப்போலே உண்டு தடிக்க நினையாமல்)

கவரி மா கணம் சேரும் வேங்கடம் கோயில் கொண்ட } சவரிமான்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்திருக்கப்பெற்ற திருமலையைக் கோயிலாகக் கொண்டவனும்

கண் ஆர் விசும்பிடை அமரர் நாயகற்கு } விசாலமான பரமபதத்திலேயுள்ள நித்யஸூரிகளுக்குத் தலைவனுமான பெருமானுக்கு

இன்று அடிமைத்தொழில் பூண்டாயே—.

* * *—[துவரியாடையர்.] அரையிலே காஷாயத்தை உடுத்துக்கொண்டு மொட்டைத் தலையராகக் கிடக்கிற அமணர்கள் கண்டபடி மேல்விழுந்து சோறுகளைத்தின்று அவ்வளவோடு த்ருப்திபெறுமல், தங்களைப்போன்ற மற்றுமுள்ள அமணர்களுடனே பின்னையும் பெருங்கூட்டமாக இருந்து தின்றுதின்று தடித்திருக்கக்காணாநின்றோம்; நெஞ்சமே நீயும் அவர்களைப்போலே உண்டியே உகந்து ஊன்மல்கி மோடுபெருக்காதே திருவேங்கடமுடையானுக்குத் தொண்டுபூண்டு வாழப்பெற்றாயே! என்று உகந்தாராயிற்று.

துவரி—காஷாயம். மட்டையர்—தலை மயிர்களைப் பிடுங்கி யெறிவதையே தொழிலாகக் கொண்டவர்களாதலால் மொட்டைத் தலையராயிருப்பர் சமணர். தலையிலே மயிர் வளர்ந்தால் பூச்சிகளும் புழுக்களும் சேரநேர்ந்து ஜீவஹிம்ஸை ஏற்படுமென்று அவர்கள் க்ஷௌரமும் செய்துகொள்ளாமல் பிறரைக்கொண்டு தலை மயிரைப் பிடுங்கி யெறியச் சொல்லுவர்களாம்; பிடுங்கும்போது நொந்தாலும் நோகிறதென்று வாய்விட்டுச் சொல்லாதே "பரமஸுகம்! பரமஸுகம்!!" என்றே சொல்லிக்கொண்டிருக்கவேணுமாம். இப்படிப்பட்ட ஆசரணையுடையவர்கள் இக்காலத்தில் உளரோ இலரோ அறியோம். "స్థిరశిరసిజోల్లుఞ్చనేనైవ దండః—ஸ்திர சிரஸிஜோல்லுஞ்சநேநைவ தண்ட:" என்றார் வேதாந்த தேசிகனும் ஸங்கல்பஸூர்யோதய நாடகத்தில் இரண்டாம் அங்கத்திலே.

வேங்கடங் கோயில்கொண்ட என்பது அமரநாயகனுக்கு விசேஷணம். (௬)

தருக்கினால் சமண்செய்து சோறுதண்தயிரினால் திரளை * மிடற்றிடை
நெருக்குவாரலக்க ணதுகண்டேன்னெஞ்சமேன்பாய்! * [வானிடை
மருட்கள் வண்டுகள்பாடும் வேங்கடம் கோயில்கொண்டதனோடும் *
அருக்கன் மேவிநிற்பாற்கடிமைத்தொழில் பூண்டாயே. (எ)

| | |
|---|---|
| தருக்கினால் | வெறும் தர்க்கங்களாலே |
| சமண் செய்து | தங்களுடைய சமண மதத்தைப்பற்றி வாது செய்துகொண்டு |
| தண் தயிரினால் | நல்ல தயிரோடு கூடிய |
| சோறு திரளை | சோற்றுக் கவளத்தை |
| மிடறு இடை | கழுத்துக்குள்ளே யிட்டு |
| நெருக்குவார் | அடைப்பவர்களான அந்தச் சமணருடைய |
| அலக்கண் அது | அப்படிப்பட்ட திண்டாட்டத்தை |
| கண்டு | பார்த்து |
| என் நெஞ்சம் என்பாய் | ஓ மனமே! (நீ அவர்களுடைய திரளில் சேராமல்) |
| வண்டுகள் | வண்டுகளானவை |
| மருட்கள் | மருள் முதலிய இசைகளை |
| பாடும் | பாடுமிடமான |
| வேங்கடம் | திருமலையை |
| கோயில் கொண்டு | திருக்கோயிலாகக் கொண்டு |
| அதனோடும் | அவ்வளவுமாத்திரமன்றிக்கே |
| வானிடை | ஆகாசத்திலே (திரிகிற) |
| அருக்கன் | ஸூர்யமண்டலத்திலும் |
| மேவி நிற்பாற்கு | பொருந்தியிருக்கும் பெருமானுக்கு |
| | அடிமைத்தொழில் பூண்டாயே— |

* * *—[தருக்கினால் சமண்செய்து.] தருக்காவது தர்க்கம்; யுக்திவாதம். கேவலம் யுக்திவாதங்களாலே மதஸ்தாபநம் செய்வதுகூடாது; சாஸ்த்ரங்களுக்கு இணங்கிய யுக்திவாதங்களை உசிதமானவை; அங்ஙனன்றிக்கே பிரமாணங்களுக்கு விருத்தமான சுஷ்கதர்க்கங்களாலே தங்கள் மதத்தை உரைப்பராம் சமணர்கள்; அதை அருளிச் செய்கிறார் தருக்கினால் சமண் செய்து என்று.

[சோறு இத்யாதி.] சமணமதத்தில் ப்ரஸித்தமாக ஒரு விரதமுண்டு; அதாவது ‡ பெருஞ்சோறுண்ணுதல். தயிரும் சோறுமாகத் திரட்டி, கண்

‡ இது, வெஞ்சோறுண்ணுதல் எனவும் வேகுசோறுண்ணுதல் எனவும் வ்யவஹரிக்கப்படும்.

பிதுங்கும்படி மிடற்றிலேயிட்டு நெருக்குவர்களாம் நோன்புக்குறப்பாக; அப்போது படும் கஷ்டம் பொறுக்கமுடியாததாம். இப்படி அவர்கள் படும் கஷ்டத்தைக்கண்டு அந்த மதத்தை வெறுத்துத் திருவேங்கடமுடையானுக்குத் தொண்டுபூண்டு மகிழப்பெற்றாயே நெஞ்சமே! என்று உகக்கிறார். "தெருவில் திரி சிறு நோன்பியர் செஞ்சோற்றுருடி கஞ்சிமருவிப், பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்தடைவீர்" என்று மேல் ஏழாம்பத்திலே அருளிச்செய்யும் பாசுரமும் இங்குக் குறிக்கொள்ளத்தகும்.

(அலக்கண்—துன்பம்.)

வானிடைஅருக்கன்மேவிநிற்பாற்கு = வைதிகர்கள் வணங்கும்படியாக ஸூர்யமண்டலத்திலே எழுந்தருளியிருப்பவனென்கை. "ధ్యేయస్సదా సవితృ మండలమధ్యవర్తీ నారాయణః = த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ நாராயணஃ" என்று முப்போதும் அநுஸந்திக்கிறோமிறே. ... (எ)

சேயனணியன் சிறியன் பெரியனேன்பதும் சிலர்பேசக்கேட்டிருந்
தே * என்னெஞ்சமேன்பாய்! எனக்கோன்றுசோல்லாதே *
வேய்கள்நின்று வெண்முத்தமேசோரி வேங்கடமலே கோயில்மேவிய *
ஆயர்நாயகற்கின்றடிமைத்தோழில் பூண்டாயே. (அ)

(பரமபதநாதனைத் தொழுங்கள் என்றால்)

சேயன் என்பது — (அவன்) வெகு தூரத்திலுள்ளவன் (அவனை எப்படி தொழமுடியும்) என்று சொல்லுவதும்,

(அர்ச்சாரூபியான எம்பெருமானைத் தொழுங்கள் என்றால்)

அணியன் என்பது — (இவன்) இதோ இருக்கிறானே (இவனையா தொழுவது) என்று சொல்லுவதும்,

(ஸ்ரீ கிருஷ்ணனைத் தொழுங்கள் என்றால்)

சிறியன் என்பது — (இவன்) இழிகுலத்திலே பிறந்தவனாயிற்றே (இவனையோதொழுவது) என்று சொல்லுவதும்,

(வ்யூஹவாஸுதேவனையும் அந்தர்யாமியான பெருமானையும் தொழுங்கள் என்றால்)

பெரியன் என்பதும் — கைக்கு எட்டாதவனை எப்படி தொழுவது? என்று சொல்லுவதுமாய் (ஆக இப்படியெல்லாம்)

சிலர் பேச — சில துர்ப்பாக்கியசாலிகள் பேசாநிற்க,

என் நெஞ்சம் என்பாய் — ஓ மனமே!

கேட்டிருந்தே — (அந்த குத்ஸிதவாதங்களை நீ) கேட்டுவைத்தும்

(அந்த துர்வாதிகளின் திரளில் புகாமல்)

எனக்கு ஒன்று சொல்லாதே — என்னிடத்திலும் ஒரு வார்த்தை சொல்லாமல்,

வேய்கள் — மூங்கில்களானவை

நின்று — ஒருபடிப்பட நின்றுகொண்டு

வெண் முத்தமே சொரி — வெளுத்த முத்துக்களைச் சொரியுமிடமான

வேங்கடம் மலை — திருமலையை

கோயில் மேவிய — கோயிலாக விரும்பிய

ஆயர் நாயகற்கு — ஸ்ரீ கோபால கிருஷ்ணனுக்கு

இன்று அடிமைத்தொழில் பூண்டாயே—,

* * *—[சேயனணியன்.] "சேயன், அணியன், சிறியன், பெரியன்" என்கிற வார்த்தைகள் பகவத்விஷயத்தில் இழியமாட்டாத ஸம்ஸாரிகள் சொல்லும் வார்த்தைகளாம்; பரவாஸுதேவன் எட்டாநிலத்திலே உள்ளவனுகையாலே வெகு தூரஸ்தனுன அவனை ஆச்ரயிக்கப்போகாது என்பர் சிலர்; அர்ச்சாவதாரங்கள் ஸமீபத்திலுள்ளவையாகையாலே அலக்ஷியம் தோற்றப் பேசுவர் சிலர்; ராமகிருஷ்ணுதி விபவாவதாரங்களில் ஸௌலப்ய குணத்தில் ஈடுபடாதே சிறுமைகளைச்சொல்லி ஏசுவர் சிலர்; வியூஹவாஸுதேவனையும் அந்தர்யாமியான பெருமானையும் உபாஸிக்கச் சொன்னுல் நெஞ்சுக்குமெட்டாத அப்பெரிய வுருவை எப்படி உபாஸிப்பதென்று சொல்லி மொழிவர் சிலர்; ஆகவிப்படி அவரவர்கள் மனம்போனபடி பேசி பகவத்விஷயத்தில் அவகாஹிக்கமாட்டாதே ஸம்ஸாரிகளாய் உண்டுடுத்துத் திரியாநிற்கக் காண்கிறும். எம்பெருமானுடைய சேய்மையைச் சிலர் குற்றமாகக் கூறுவர்; அவனுடைய அண்மையைச் சிலர் குற்றமாகக் கூறுவர்; அவனுடைய பெருமையைச் சிலர் குற்றமாகக் கூறுவர்; ஆகவே அவனுடைய குணங்களெல்லாம் இகழ்ச்சிக்கு உறுப்பாகிக் கிடக்கும்போது, அப்படி இகழ்வாருடைய திரளில் புகாதே நெஞ்சே! நீ என்றேடும் ஒரு வார்த்தை சொல்லாதே திடீரென்று திருவேங்கடமுடையான் விஷயத்திலே அடிமைத் தொழில்பூண்டு நின்றுயே! என்று உகந்து பேசினுராய்த்து.

மதயானைகளின் கும்பஸ்தலத்திலும் மூங்கில்களிலும் முத்துக்கள் உண்டானவாகக் கவிகள் சொல்லுவர்களாதலால் "வேய்கள் நின்று வெண்முத்தமே சொரி வேங்கடம்" எனப்பட்டது. "வெண்தரளங்கள் வேய்விண்டுதிர் வேங்கடமாமலை" என்றுர் கீழ்த்திருமொழியிலும். மூங்கில்களானவை வெளுத்த முத்துக்களைச் சொரிய, அவற்றின் ஒளியானது வழிகாட்ட, அப்பன் திருமலையிலே வந்து புகுந்தானென்று ரஸோக்தியருளிச் செய்வர்.

கிருஷ்ணுவதாரம் செய்தருளின பெருமானும் திருவேங்கடமுடையானும் ஒரே வ்யக்திதான் என்பது தோன்ற "ஆயர்நாயகற்கு" என்றுர். ... (அ)

கூடியாடி யுரைத்ததேயுரைத்தாய் என்னெஞ்சமென்பாய்! துணிந்துகேள் *
பாடியாடிப் பலரும் பணிந்தேத்திக் காண்கிலா *
ஆடு தாமரையோனுமீசனுமமரர்கோனும் நின்றேத்தும் * வேங்கடத்து
ஆடகூத்தனுக்கின்றடிமைத்தொழில் பூண்டாயே. (கூ)

(இதற்கு முன்பெல்லாம்)

| | |
|---|---|
| கூடி | உலகத்தாரோடே கூடி |
| ஆடி | அவர்கள் எந்த விஷயங்களிலே ஊன்றுவர்களோ அந்த விஷயங்களிலே ஊன்றி, |
| உரைத்ததே உரைத்தாய் | அவர்கள் என்னவார்த்தைகளைச் சொல்லுவர்களோ அந்த வார்த்தைகளையே சொல்லிக்கொண்டிருந்த |
| என் நெஞ்சம் என்பாய் | என் மனமே! |

| | |
|---|---|
| துணிந்து கேள் | (இப்போது நான் உனக்கு மகிழ்ந்து சொல்வதை) விச்வஸித்துக் கேள்; |
| பலரும் | எத்தனையோ பேர்கள் |
| பாடி | (பகவத் குணங்களைப்) பாடிக்கொண்டும் |
| ஆடி | கூத்தாடிக்கொண்டும் |
| பணிந்து | ஆச்ரயித்து |
| ஏத்தி | துதித்தும் |
| காண்கிலா | ஸாக்ஷாத்கரிக்க முடியாதவனும், |

| | |
|---|---|
| ஆடு தாமரையோனும் ஈசனும் அமரர் கோனும் நின்று ஏத்தும் வேங்கடத்து ஆடு கூத்தனுக்கு | வெற்றியையுடைய பிரமனும் சிவனும் இந்திரனும் நிலை நின்று போற்றுமிடமான திருமலையிலே நிற்பவனும் (முன்பு) குடக்கூத்தாடினவனுமான பெருமானுக்கு |

இன்று அடிமைத்தொழில் பூண்டாயே—.

* * *—[கூடியாடி.] "கூடியாடி உரைத்ததே உரைத்தாய்" என்றவிது தமது நெஞ்சின் பூர்வாவஸ்தையைச் சொன்னபடி. (தம்முடைய பூர்வாவஸ்தையையே கூறியவாறு.) நெஞ்சே! நீ நேற்றுவரை எப்படி போதுபோக்கித்திரிந்தாய்!; இன்று எப்படியானாய்! என்று ஆச்சரியம் தோற்ற அருளிச்செய்கிறார்.

விஷயாந்தரங்களிலே மண்டித்திரிகிற ஸம்ஸாரிகளோடே கூடியும், அவர்கள் அநுபவிக்கிற விஷயங்களையே அநுபவித்தும், அவர்கள் பேசுகிற பேச்சுக்களையே பேசியும் போந்தாயன்றோ நீ நேற்றுவரையில்; இப்படியிருந்த நீ இன்று திடீரென்று எப்படிப்பட்ட நிலைமைக்கு வந்துவிட்டாய்!; நீ பெற்ற பாக்கியம் நீ அறிகின்றிலையாகையால் நான் எடுத்துச்சொல்லுகிறேன், அன்புடன் கேளாய் நெஞ்சமே!; பக்திக்குப் போக்குவிட்டுப் பாடியுமாடியும் பலரும் பணிந்து ஏத்தி அவ்வளவிலும் காணமுடியாதவனும், பிரமன் சிவனிந்திரன் முதலான மேலாத் தெய்வங்கள் சேவித்தொழப்பெற்றவனுமான திருவேங்கடமுடையான் திறத்திலே அடிமைத்தொழில் பூண்டாய்காண் என்கிறார்.

இரண்டாமடியின் முடிவில் "காண்கிலா" என்றும், "காண்கிலார்" என்றும் பாடபேதமுண்டு. காண்கிலா வென்பதைத் திருவேங்கடமுடையானுக்கு விசேஷணமாக்கியுரைத்தல் ஒரு யோஜனை; தாமரையோனுக்கும் ஈசனுக்கும் அமரர்கோனுக்கும் விசேஷணமாக்கியுரைத்தல் மற்றொரு யோஜனை. தங்களைப் பணிந்தவர்களுங்கூடத் தங்களைக் காணப்பெறாதபடியான ஏற்றமுடைய பிரமன் முதலியோர் நின்று ஏத்தப்பெற்ற திருவேங்கடமுடையான் என்கை.

ஆடுதாமரையோன் = 'ஆடு' என்று வெற்றிக்குப் பெயர்; வெற்றியையுடைய பிரமன்—உலகங்களைப்படைக்க வல்லவனாகையாகிற ஸாமர்த்தியம் வாய்ந்த பிரமன் என்கை.

வேங்கடத்துஆடுகூத்தனுக்கு = ஸ்ரீக்ருஷ்ணனாய்த் திருவவதரித்துக் கூத்தாடின விடாய்தீரத் திருமலையிலே வந்து நிற்பவனென்கை. பண்டு கூத்தாடின சுவடு இந்த நிலைமையிலும் தோற்றாநிற்குமாம். "மன்றமரக்கூத்தாடி மகிழ்ந்தாயென்றும் வட திருவேங்கடம் மேயமைந்தாவென்றும்" (திருநெடுந்தாண்டகம்.) என்று அநுஸந்தானத்தில் சேர்த்தியழகு காண்க. ... ... (௬)

மின்னுமா முகில்மேவு தண்திருவேங்கடமலை கோயில்மேவிய *
அன்னமாய் நிகழ்ந்த வமரர்பெருமானை *
கன்னிமாமதிள் மங்கையர்கலிகன்றி இன்தமிழாலுரைத்த * இம்
மன்னுபாடல் வல்லார்க்கிடமாகும் வானுலகே. (கo)

| | |
|---|---|
| மின்னும் மா முகில் மேவு | மின்னுகின்ற காளமேகங்கள் வந்துசேருகிற |
| தண் திரு வேங்கடம் மலை கோயில் மேவிய | குளிர்ந்த திருமலையைக் கோயிலாகக்கொண்டு எழுந்தருளியிருப்பவனும், |
| அன்னம் ஆய் நிகழ்ந்த | ஹம்ஸரூபியாய்த் திருவவதரித்தவனும் |
| அமரர் பெருமானை | நித்யஸூரிகளுக்குத் தலைவனுமான பெருமான் விஷயமாக, |
| கன்னி மா மதிள் மங்கையர் கலிகன்றி | நிலைநின்ற பெரிய மதில்களையுடைய திருமங்கைநாட்டில் உள்ளவர்களுக்குத் தலைவரான ஆழ்வார் |
| இன் தமிழால் உரைத்த | செவிக்கினிய தமிழ்ப் பாஷையாலே அருளிச்செய்த |
| மன்னு | (வேதம்போலே) நித்யமான |
| இப்பாடல் | இப்பாசுரங்களை |
| வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| வான் உலகு | பரமபதம் |
| இடம் ஆகும் | வாஸஸ்தானமாகும். |

* * *—[மின்னுமாமுகில்மேவு.] மின்னுகின்றுள்ள பெரிய மேகங்களானவை படிந்து, அதனால் குளிர்ந்த திருமலையைக் கோயிலாகக்கொண்டவனும், ஹம்ஸமாய்த் திருவவதரித்துப் பிரமனுக்கு வேதங்களை மீட்டுக்கொடுத்தவனுமான திருவேங்கடமுடையான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் இனிய தமிழ்ப்பாஷையாலே அருளிச்செய்த இப்பத்துப்பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் பரமபதத்தை இருப்பிடமாகக் கொள்ளப்பெறுவர்கள் என்று இத்திருமொழிகற்றார்க்குப்பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

"மின்னுமாமுகில்மேவு" என்ற விசேஷணம்—பெருமாளும் பிராட்டியும் கூடி வாழ்கிற வாழ்ச்சியை ஸூசிப்பித்ததாகவுமாம். மின்னின் ஸ்தானத்திலே பிராட்டியும், முகிலின் ஸ்தானத்திலே எம்பெருமானும்.

அன்னமாய் நிகழ்ந்தவரலாறு :—முன்னொருகாலத்தில் மதுகைடபரென்ற அசுரர்கள் பிரமதேவனிடத்திலிருந்து வேதங்களை அபஹரித்துக்கொண்டு கடலில் முழுகிமறைந்துவிட, ஞானவொளியைத்தரும் பெருவிளக்கான வேதங்கள் ஒழிந்தமைபற்றி உலகமெங்கும் பேரிருள் மூடி நலியாநிற்க, பிரமன் முதலியோரனைவரும் கண் கெட்டவர் போல யாதொன்றும் செய்யவறியாமல் திகைத்து வருந்துவது கண்டு திருவுள்ளமிரங்கித் திருமால் கடலினுட்புக்கு அவ்வசுரர்களைத் தேடிக்கண்டு பிடித்துக்கொன்று வேதங்களை மீட்டுக்கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளினன். இவ்வரலாறு சிறிது வேறுபடக் கூறுதலுமுண்டு.

கன்னி = அழிவில்லாமை. ... ... ... (கo)

அடிவரவு :—வானவர் உறவு இண்டை பாவியாது பொங்கு துவரி தருக்கினல் சேயன் கூடி மின்னுக்காசை.

## இரண்டாம்பத்து முதல் திருமொழி உரை முற்றுப்பெற்றது.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—இரண்டாந்திருமொழி.

# காசையாடை மூடியோடி.

உரையவதாரிகை:—கீழ் நான்கு திருமொழிகளாலே திருவேங்கட மலையிலே ஆழ்ந்து அநுபவித்தாராய் நின்றார்; இவ்வளவோடு வடநாட்டுத் திருப்பதிகளிலநுபவம் ஒருவாறு தலைக்கட்டிற்றாய், இனி, தொண்டை நாட்டுத்திருப்பதிகளிலே மண்டி அநுபவிக்க ஆசைப்பட்டுத் திருவெவ்வுளூரிலே திருவுள்ளம் சென்று அதனை அநுபவிக்கிறார் இத்திருமொழியால். எம்பெருமான் சாலிஹோத்ரமாமுனிவனுக்குப் பிரத்யக்ஷமாகி "வஸிப்பதற்கு உரிய உள் எவ்வுள்?" என வினவியதனால் இத்தலத்திற்குத் திருவெவ்வுளூரென்று திருநாமமாயிற்றென்பர். "கிம்க்ருஹம்" என்பது ஸம்ஸ்க்ருதவ்யவஹாரம். (இத்தலம் திருமழிசையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது.) ... *

காசையாடை மூடியோடிக் காதல்செய்தானவனூர் *
நாசமாக நம்பவல்ல நம்பிநம்பெருமான் *
வேயினன்ன தோள்மடவார் வெண்ணெயுண்டானிவனென்று *
ஏசநின்ற வெம்பெருமானெவ்வுள்கிடந்தானே. (க)

| | |
|---|---|
| காசை ஆடை | காஷாய வஸ்த்ரத்தினால் |
| மூடி | உடம்பை மறைத்துக் கொண்டு |
| ஓடி | (பஞ்சவடிக்கு) ஓடிவந்து |
| காதல் செய் | (பிராட்டியிடத்தில்) ஆசை கொண்டவனான |
| தானவன் | இராவணனுடைய |
| ஊர் | ஊராகிய இலங்கையானது |
| நாசம் ஆக நம்ப வல்ல | நாசமாகும்படி ஸங்கல்பித்த |
| நம்பி | பரிபூர்ண சக்தியை யுடையவனும் |
| நம்பெருமான் | நமக்கு ஸ்வாமியும் |
| வேயின் அன்ன தோள் மடவார் | மூங்கிலோடு ஒத்த தோளையுடைய இடைச்சியர் |
| இவன் வெண்ணெய் உண்டான் என்று ஏச நின்ற எம்பெருமான் | 'இவன் வெண்ணெய்திருடி உண்டவன்' என்று சொல்லிப் பரிஹஸிக்கும்படி நின்றவனுமான எம்பெருமான் |
| எவ்வுள் கிடந்தான் | திருவெவ்வுளூரில் திருக்கண் வளர்ந்தருளாநின்றான். |

* * *—[காசையாடை.] முன்னிரண்டடிகளால் ஸ்ரீராமாவதார வ்ருத்தாந்தத்தையும், பின்னிரண்டடிகளால் ஸ்ரீக்ருஷ்ணாவதார வ்ருத்தாந்தத்தையும்

அநுஸந்தித்து, இப்படி ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் செய்தருளின பெருமான்றானே திருவெவ்வுளூரிலே வந்து சாய்ந்தருளா நின்றானென்கிறார்.

காஷாயம் என்ற வடசொல் காசையெனத் திரிந்தது. மாரீசமாயமான் ஸ்ரீராமலக்ஷ்மணர்களைப் பிரித்த காலத்து இராவணன் ஸந்நியாசிவேஷம்பூண்டு ஸீதை யிருக்குமிடம் வந்து பிக்ஷைகேட்டு அவளுடைய வடிவைக்கண்டு மோஹித்துத் தன் செல்வங்களையும் வீரங்களையும் விஜயங்களையும் விஸ்தாரமாகச் சொல்லித் தன்னைக் கணவனாகக் கொள்ளுமாறு பிதற்ற, பிராட்டி அதைக் கேட்டு மிகுந்த கோபத்துடன் அவனை நோக்கிப் பல அவமானச் சொற்களைச் சொல்ல, பின்பு இராவணன் ஸந்நியாசி வேஷத்தைவிட்டுத் தன்னுடைய பயங்கரமான நிஜரூபத்தைக்காட்டி இவளைத் தேரேற்றிக்கொண்டுபோய் இலங்கையில் சிறைவைத்து, இதுவே காரணமாக நாசமடைந்தானென்ற வரலாறு அறிக.

[வேயினன்னதோள்மடவார் இத்யாதி.] கண்ணபிரானாய்த் திருவாய்ப்பாடியில் திருவிளையாடல்கள் செய்தருளுங்காலத்து ஆய்ச்சிகளின் ஹஸ்தஸ்பர்சமுள்ள பொருள்களினாலல்லது செல்லாமையையுடையனாய் அவர்களுடைய வெண்ணெயைக் களவாடி அமுதுசெய்து, அந்தக் களவுத்தொழிலை அவ்வாய்ச்சிகள் எடுத்துச் சொல்லிப் பரிஹாஸம் செய்யும்படி நின்ற ஸௌலபன் திருவெவ்வுளூரிலே திருக்கண் வளர்ந்தருளாநின்றானென்கிறார். (க)

தையலாள்மேல் காதல்செய்த தானவன் வாளரக்கன் *
பொய்யிலாத பொன்முடிகளொன்பதோ டொன்றும் * அன்று
செய்த வெம்போர்தன்னிலங்கோர் செஞ்சரத்தாலுருள *
எய்தவெந்தையெம்பெருமானெவ்வுள்கிடந்தானே. (உ)

| | | | |
|---|---|---|---|
| தையலாள் மேல் | அழகிற்சிறந்த பிராட்டி விஷயத்திலே | அன்று அங்கு செய்த வெம் போர் தன்னில் | முன்புராமாவதாரத்திலே கடற்கரையில் செய்த கோரமான யுத்தத்திலே |
| காதல் செய்த | காமம் கொண்ட | | |
| தானவன் | ஆஸுரப்ருக்ருதியாய் | | |
| வாள் | வாளாயுதத்தை யுடையவனான | ஓர் செம் சரத்தால் உருள எய்த எந்தை எம் பெருமான் | ஒப்புற்ற சிவந்த பாணத்தினாலே உருட்டின எம்பெருமான் |
| அரக்கன் | இராவணனுடைய | | |
| பொய் இலாத பொன் முடிகள் ஒன்பதோடு ஒன்று | மெய்யான பொன் முடிகள் பத்தையும் | எவ்வுள் கிடந்தானே—. | |

* * *—[தையலாள்மேல்] கீழ்ப்பாட்டில் ராமாவதார சேஷ்டிதம் க்ருஷ்ணாவதார சேஷ்டிதம் இரண்டையும் கலந்து அநுபவித்துப் பேசினார்; எவ்வுள் கிடந்தானுடைய திருநாமம் வீரராகவனென்று அஸாதாரணமாக இருப்பதற்கேற்ப ஸ்ரீராமாவதார சேஷ்டிதமொன்றையே பேசி அநுபவிக்கிறார் இப்பாட்டில்:

தையல்—அழகு; தையலாள்—ஸுந்தரி. பிராட்டியைப் பிரிந்த பெருமாள் மால்யவானில் மேகத்திரளைக்கண்டபோது விரஹவ்யஸநம் பொறுக்கமாட்டாமல் பட்டபாட்டை ஹநுமான் கண்டு 'வஸிஷ்ட பகவானிடத்திலே சிக்ஷைபெற்று ஸமுத்ரம் போலே கம்பீரஸ்வபாவனுயிருப்பவனென்று ப்ரஸித்தியும் பெற்றிருக்கிற இராமன் ஒரு ஸ்த்ரீநிமித்தமாக இப்படி துவளுகிருனே!' என்று சிரித்திருந்தான்; அவன்றனே இலங்கைபுக்கு அசோகவனிகையிலே பிராட்டியின் திருமேனியை ஸேவிக்கப்பெற்ற பின்பு "அந்தோ! இப்படிப்பட்ட பிராட்டியைப் பிரிந்த பின்பும் உயிர்தரித்திருக்கிருனே இராமன்; அவனிலும் மிக்க கல்நெஞ்சனுண்டோ?" என்று வெறுக்கலானுன். விஷயங்களில் விரக்தனை திருவடியையும் இப்படி ஈடுபடுத்தவல்ல வடிவழகுடையளாதல் பற்றித் தையலாள் என்றே நிரூபகமாம்படி சொல்லப்பட்டாளென்க "రాజ్యం వా త్రిషు లోకేషు సీతా వాజనకాత్మజా। త్రైలోక్యరాజ్యం సకలం సీతాయా నాప్నుయాత్కలామ్ = ராஜ்யம் வா த்ரிஷு லோகேஷு ஸீதாவா ஜநகாத்மஜா—த்ரைலோக்யராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத் கலாம்." என்ற ஸ்ரீராமாயணச்லோகமும் இங்கு அநுஸந்திக்கத்தகும்.

இப்படிப்பட்ட லோகவிலக்ஷணமான அழகு அமைந்த பிராட்டியிடத்துக் காதல்கொண்ட ஆஸுரப்ரக்ருதியான இராவணனுடைய பொன் முடிகள் பத்தும் போர்க்களத்திலே புரளச் சரந்துரந்த வீரராகவன் அந்த ச்ரமந்தீரத் திருவெவ்வுளூரிலே திருக்கண் வளர்ந்தருளாநின்றுன்.

தானவன்=ராக்ஷஸ ஜாதியிற் காட்டில் அஸுரஜாதி வேறுபட்டிருக்க, ராக்ஷஸயோநியிற் பிறந்த இராவணனைத் தானவனென்றது ஆஸுரப்ரக்ருதியுள்ளவனென்பதுபற்றியென்க. வாளரக்கன் = சிவனை ஆராதித்துப்பெற்ற வாளாயுதத்தையுடைய அரக்கன். போய்இலாத பொன்முடிகள் = தலைகட்குப் பொய்யில்லாமையாவது–தனது மாயச்செயல் வல்லமைக்கிணங்க மாயாரூபமான தலைகளைக் காட்டிவிட்டு மெய்யான தலைகளைக்கொண்டு தப்பிப்பிழைத்தானென்கையன்றியே உண்மையான தலைகளுக்கே அறுப்புண்டானென்கை. திசைகளெங்குந் திரிந்து வெற்றிபெற்று வீராபிஷேகம் விஜயாபிஷேகம் என்றுசெய்துகொண்ட அபிஷேகங்களில் சிறிதும் பொய்யின்றியே உண்மையான ஏற்றமுடைய கிரீடங்கள் பத்தும் உருள என்னவுமாம். ... ... (௨)

முன்னோர்தூது வானரத்தின் வாயில்மொழிந்து * அரக்கன்
மன்னூர்தன்னை வாளியினுல் மாளமுனிந்து * அவனே
பின்னோர்தூது ஆதிமன்னர்க்காகிப் பெருநிலத்தார் *
இன்னூர் தூதனென நின்றுனெவ்வுள் கிடந்தானே. (௩)

| | |
|---|---|
| முன் | ஸ்ரீராமாவதாரத்திலே |
| வானரத்தின் வாயில் | சிறிய திருவடி மூலமாக |
| ஓர் தூது மொழிந்து | (பிராட்டிக்குத்) தூது சொல்லியனுப்பி (பிறகு) |
| அரக்கன் | இராவணனுடைய |
| மன் ஊர்தன்னை | சிறந்த லங்காபுரியை |
| வாளியினால் | ஓர் அம்பினாலே |
| மாள முனிந்து | மாண்டுபோம்படி சீறி முடித்து, |
| பின் | பின்பொருகாலத்தில் |
| ஆதி மன்னர்க்கு | ராஜாதிராஜர்களான பாண்டவர்களுக்கு |
| ஓர் தூது ஆகி | விலக்ஷணனான தூதனாய், |
| பெரு நிலத்தார் இன்னார் தூதன் என நின்றானவனை | பெரிய இப்பூமியிலுள்ளாரெல்லாரும் 'இவன் இன்னாருடைய தூதன்' என்று சொல்ல அதனால் நிலைபெற்று நின்ற அப்பெருமான் |

எவ்வுள்கிடந்தான்—.

* * *—[முன்னோர் தூது.] கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டர்க்கு ஸ்ரீராமாவதாரத்திலே அளவற்ற பக்ஷபாதமுண்டென்பது ப்ரஸித்தம். சிறியாத்தானென்பவர் பட்டருடைய அருளிச் செயல்களைக்கேட்க விரும்பி ஒரு நாள் பட்டர் ஸந்நிதியிலே விடைகொண்டு "சக்ரவர்த்திதிருமகனார்க்கு எல்லா ஏற்றமுமுண்டேயாகிலும் ஆச்ரிதர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூது போன ஏற்றமில்லையே; அந்த ஏற்றம் கண்ணபிரானுக்கேயன்றோ வுள்ளது" என்றார்; அதை பட்டர் கேட்டருளி, "ஓய்! குணக்கடலாகிய இராமபிரானுக்குத் தூதுபோதல் அநிஷ்டமன்று காணும்; இக்ஷ்வாகு வம்சத்திலே ஸார்வபௌமனாகப் பிறந்தானாகையாலே மஹாராஜன் கழுத்திலே ஓலையைக் கட்டித் தூதுபோக விடுவாரைக் கிடையாமையாலே இராமன் தூதுபோகப் பெற்றிலனத்தனை; அந்த அவதாரத்திலே திருவடி அங்குமிங்கும் போவது வருவதாய்க் கொண்டு தூதக்ருத்யஞ்செய்து வார்த்தை சொல்லித் திரிந்த ஏற்றத்தைக்கண்டு 'நாமும் இப்படி ஆச்ரிதர்களுக்காகத் தூதுபோகப் பெற்றிலோமே' என்று திருவுள்ளம் குறைபட்டு அக்குறை தீருகைக்காகவே பின்னை இழிகுலத்திலே வந்து பிறந்து தூதுசென்றான்; க்ஷத்ரியனென்று நிச்சயிக்கில் தூதுபோகவிடமாட்டார்களென்று அத்தை மறைத்து வளர்ந்தான் காணும்; அபிஷிக்த க்ஷத்ரிய குலத்திலே பிறந்தால் 'தூதுபோ' என்று ஏவ ஒருவர்க்கும் நா எழாதிறே" என்றருளிச் செய்தாராம். இதற்கு இப்பாசுரம் மூலமாயிருக்கும்.

முன்பு த்வாபரயுகத்தின் ஆதியிலே பிராட்டியைப் பிரிந்து ஆற்றாமை அதிகரித்து உயிர்துறக்குமளவான அவஸ்தை விளைந்தபோது அநுமானென்கிற ஒரு வானரத்தின் வாயிலே தூது சொல்லியனுப்பி அதுவே மூலமாக இராவணனுடைய இலங்கையை நீறுபடுத்தினவனே பின்னை யொருகால் (த்வாபரயுக முடிவிலே) பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலை கட்டித் தூதுசென்று பாண்டவ தூதனென்று பேர் பெற்றான்; "1. கோதை வேலைவர்க்காய் மண்ணகலங்

1. பெரிய திருமொழி 11—5—7.

கூறிடுவான், தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான்காண் ஏடீ!" என்று ஏசும்படி நின்ற அப்பெருமான் அந்த விடாய் தீரத் திருவெவ்வுளூரிலே திருக்கண் வளர்ந்தருளாநின்றான்.

கண்ணபிரான் தூது சென்ற காலத்து, துரியோதநாதியரே அரசாண்டு கொண்டிருக்கையாலே பாண்டவர்கள் நாடோடிகளாய்த் திரிந்து ராஜ்யஹீநர்களாயிருந்தாலும் 'பாண்டவர்களுக்கே ராஜ்யப்ராப்தியுள்ளது' என்கிற துணிவினால் ஆழ்வார் ஆதிமன்னர் என்ற சொல்லினால் பாண்டவர்களைக் குறிக்கின்றார்.

"இன்னார் தூதனெனப்பட்டான்" என்னாமல் "இன்னார் தூதனென நின்றான்" என்கையாலே, பாண்டவ தூதனென்று பேர்பெற்ற பின்புதான் எம்பெருமானுக்குத் தரிப்பு உண்டாயிற்றென்பது விளங்கும். (௩)

பந்தணைந்த மெல்விரலாள் பாவைதன் காரணத்தால் *
வெந்திறலேறேழும் வென்றவேந்தன் விரிபுகழ்சேர் *
நந்தன் மைந்தனாகவாகும் நம்பி நம்பெருமான் *
எந்தைதந்தை தம்பெருமானெவ்வுள் கிடந்தானே. (௪)

| | |
|---|---|
| பந்து அணைந்த மெல் விரலாள் | பந்து பொருந்திய மெல்லிய விரல்களையுடையளான |
| பாவைதன் காரணத்தால் | நப்பின்னைப்பிராட்டி நிமித்தமாக |
| வெம் திறல் ஏறு ஏழும் வென்ற வேந்தன் | க்ரூரமான மிடுக்கையுடைய ஏழுரிஷபங்களையும் வென்று முடித்த அரசனும், |
| விரி புகழ் சேர் நந்தன் | உலகமெங்கும் பரந்த புகழையுடையனான நந்தகோபனுக்கு |
| மைந்தன் ஆக ஆகும் நம்பி | திருக்குமாரனாக அவதரித்த பரிபூர்ணனும் |
| நம்பெருமான் | நமக்கு ஸ்வாமியும் |
| எந்தை தந்தை தம்பெருமான் | நம்குலத்துக்கெல்லாம் நாதனுமானவன் |
| | எவ்வுள் கிடந்தான்—. |

* * *—[பந்தணைந்த.] கீழ்ப்பாட்டில் "இன்னார் தூதனென நின்றான்" என்று பாண்டவதூதனைப் பேசினவாறே க்ருஷ்ணாவதாரத்தில் திருவுள்ளம் அவகாஹிக்கப்பெற்று அதனையே பூர்த்தியாகப் பேசுகிறாரிதில். நப்பின்னைப் பிராட்டியை மணம் புரிதற்காக அவளுடைய தந்தையின் நியமனப்படி ஒருவர்க்குமடங்காத ஏழு எருதுகளை வலியடக்கின பெருவீரன் அந்த விடாய் தீரத் திருவெவ்வுளூரிலே திருக்கண் வளர்ந்தருளாநின்றான்.

பந்தணைந்தமெல்விரலாள்=கண்ணபிரான் மனமகிழும்படி கையிலே பந்தைப் பிடித்து, அதுதானும் பொறாத மென்மைத்தன்மையையுடைய விரலையுடையவளாம் நப்பின்னை. பாவை=சித்திரப் பதுமைபோல அழகியவள்; கண்மணிப்பாவைபோல் அருமையானவள்; உவமையாகுபெயர்.

விரிபுகழ்சேர் என்ற விசேஷணம் நந்தன் மைந்தனுக்கு ஆவதிற்காட்டிலும் நந்தனுக்கு ஆவது சிறக்கும். கண்ணபிரானைப் பிள்ளையாகப் பெறவேணுமென்று நோன்பு நோற்றவன் வஸுதேவனாயிருக்க, 1. "நந்தன் பெற்றனன், நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே" என்னவேண்டும்படி கண்ண

1. பெருமாள் திருமொழி 7—3.

பிரானுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இலக்காகப்பெற்ற பெரும்புகழுடையன் நந்தகோபனேயிறே. "வஸுதேவன்" என்றால் பணத்தால் விளங்குபவன் என்று பொருள்; 'நந்தன்' என்றால் ஆநந்தமுடையவன் என்று பொருள் உலகத்தில் பணக்காரனாயிருப்பவனுக்கெல்லாம் ஆநந்தமுடைமை இன்றியமையாததன்று. பணக்காரன் துக்கமுடையவனாகவும் ஏழை ஆநந்த முடையனாகவும் இருக்கவுங் காண்கிறோம். வஸுதேவன் கண்ணபிரானைப் பெறுதற்கு உபாயாநுஷ்டாநத்தில் ப்ரவர்த்தித்தனனாதலால் கண்ணனுடைய முகத்தைக் கண்ட மாத்திரத்திலே அவனுடைய நோன்பின் பலன் முற்றுப்பெற்றதாகி அவன்தானே பிள்ளையைத் தலையில் சுமந்துகொண்டுபோய் நந்தகோபனிடத்தே விடவேண்டியதாயிற்று. நந்தகோபன் ஒருவகை உபாயாநுஷ்டாநத்தையும் நெஞ்சிலும் நினையாதவனாயிருந்தவனாதலால் அவனுக்கு ஆநந்தமே நித்தியமாகச் சென்றது; விரிந்த புகழுமுண்டாயிற்று. ... ... (௪)

பாலனாகி ஞாலமேழுமுண்டு பண்டாலிலைமேல் *
சாலநாளும் பள்ளிகொள்ளும் தாமரைக்கண்ணனெண்ணில் *
நீலமார்வண் டுண்டுவாழும் நெய்தலந்தண் கழனி *
ஏலநாறும் பைம்புறவிலெவ்வுள் கிடந்தானே. (௫)

| | | | |
|---|---|---|---|
| பண்டு | முன்பொரு காலத்தில் | ஆர் | படிந்த |
| பாலன் ஆகி | சிறு குழந்தையாய் | வண்டு | வண்டுகள் |
| ஞாலம் ஏழும் உண்டு | உலகங்களையெல்லாம் திரு வயிற்றிலே வைத்து | உண்டு | (அப்பூக்களிலுள்ள தேனைப்)பருகி |
| ஆல் இலை மேல் | ஆலந்தளிரின் மேலே | வாழும் | வாழப்பெற்ற |
| | | அம் தண் | அழகிய குளிர்ந்த |
| சால நாளும் | வெகு நாள் வரையில் | நெய்தல் கழனி | நெய்தல் கழனிகளையும் |
| பள்ளி கொள்ளும் | சயனித்திருந்த | ஏலம் நாறும் | பரிமளம் கமழ்கின்ற |
| தாமரைக் கண்ணன் | புண்டரீகாக்ஷன், | பை புறவில் | பரந்த சோலைகளையுமுடைய |
| எண் இல் நீலம் | எண்ணிறந்த நெய்தற் பூவிலே | எவ்வுள் | திருவெவ்வுளூரிலே |
| | | கிடந்தான் | சயனித்திருப்பவன். |

* * *—[பாலனாகிஞாலமேழும்.] மிக்க இளம்பிள்ளையாய் ஸகல லோகங்களையும் பிரளயங்கொள்ளாதபடி எடுத்துத் தன் வயிற்றிலே வைத்துக்கொண்டு ஒரு சிறிய ஆலந்தளிரிலே நெடுநாள் வரையில் பள்ளிகொண்டிருந்த புண்டரீகாக்ஷன் திருவெவ்வுளூரிலே திருக்கண் வளர்ந்தருளாநின்றான்.

பின்னடிகள் நிலவளம் கூறுவன. ... ... ... (௫)

சோத்த நம்பியென்று தொண்டர்மிண்டித் தொடர்ந்தழைக்கும் *
ஆத்தனம்பி செங்கணம்பி யாகிலும் தேவர்க்கெல்லாம் *
மூத்தநம்பி முக்கணம்பி யென்று முனிவர்தொழுது
ஏத்தும் * நம்பியெம்பெருமானெவ்வுள் கிடந்தானே. (௬)

| | |
|---|---|
| தொண்டர் | அடியவர்கள் |
| மிண்டி | நெருக்கமாகத் திரண்டு |
| நம்பி சோத்தம் என்று தொடர்ந்து அழைக்கும் | 'ஸ்வாமீ! உனக்கு அஞ்சலி' என்று சொல்லிப் பின் தொடர்ந்து துதிக்கப் பெற்ற |
| ஆத்தன் | ஆப்தனை |
| நம்பி | ஸ்வாமியாய் |
| செம் கண் | செந்தாமரைக் கண்ணனை |
| நம்பி ஆகிலும் | ஸ்வாமியுமாய் இருக்கச் செய்தேயும், |
| முனிவர் | ஸநகர் முதலிய ரிஷிகள் |
| தேவர்க்கு எல்லாம் | தேவர்களுக்குள் பெரிய |
| மூத்த நம்பி முக்கண் நம்பி என்று தொழுது ஏத்தும் நம்பி எம்பெருமான் | 'பிரமனே! சிவனே!' என்று சொல்லி வணங்கி ஏத்தும்படியா யுள்ள (ஸர்வாந்தர்யாமி யான) பெருமான் |

எவ்வுள் கிடந்தான்—.

* * *—[சோத்தநம்பியென்று.] அஞ்ஜலி பண்ணுமவர்கள் அதுக்கு அநுகூலமாகத் தாழ்ச்சி தோற்றச் சொல்லுமதொரு சப்தவிசேஷம் சோத்தம் என்பதாம்; 'ஸ்தோத்ரம்' என்ற வடசொல் சோத்தமெனச் சிதைந்து கிடக்கிறது என்பாருமுளர். 'நம்பி! சோத்தம்' என்று சொல்லித் தொண்டர்களால் அழைக்கப்படுகிற ஆப்தபந்துவானவன்; இப்படி நம்போலியர்க்கும் எளியனாக அழைக்க வுரியவனாயிருந்தாலும் இவன் ஸாமாந்யனல்லன்; தேவர்களுக்கெல்லாம் மூத்தவனென்றும், முக்கண்ணனான சிவனுக்கும் அந்தர்யாமியாயிருந்து காரியம் நடத்தவல்லவனென்றும் உண்மையறிந்த ஸநகாதி மஹர்ஷிகளால் தொழுதேத்தப்படுமவன்; இப்படி ஸௌலப்யமும் பரத்வமும் வாய்ந்த பரம புருஷன் திருவெவ்வுளூரிலே திருக்கண் வளர்ந்தருளாநின்றான்.

ஆப்தः என்ற வடசொல் ஆத்தனெனத் திரிந்தது; நம்புதற்குரியவனென்கை. (௬)

திங்களப்பு வானெரிகாலாகி * திசைமுகனார்
தங்களப்பன் சாமியப்பன் பாகத்திருந்த * வண்டுண்
தொங்கலப்பு நீண்முடியான் சூழ்கழல் சூடநின்ற *
எங்களப்ப னெம்பெருமானெவ்வுள்கிடந்தானே. (எ)

| | |
|---|---|
| திங்கள் ஆகி | சந்திரனுக்கு அந்தர்யாமியாயும் |
| அப்பு வான் எரி கால் ஆகி | ஜலம் ஆகாசம் தேஜஸ் வாயு முதலிய பூதங்களுக்கு சரீரியாயும் |
| திசைமுகனார் தங்கள் அப்பன் | பிரமனுக்குத் தந்தையாயும் |
| சாமி அப்பன் | ஸாமவேதத்தால் பிரதிபாதிக்கப்பட்ட ஸ்வாமியாயும் |
| பாகத்து இருந்த | தனது திருமேனியின் ஒருபக்கத்திலே இருப்பவனாய் |
| வண்டு உண் தொங்கல் அப்பு நீள் முடியான் | வண்டுகள் மதுபானம் பண்ணப்பெற்ற கொன்றை மாலையையும் கங்கா ஜலத்தையும் நீண்ட சடையிலே யுடையனான சிவபிரான் |
| சூழ் கழல் சூட நின்ற | விசாலமான திருவடிகளைத் தன் தலைமீது அணிந்து கொள்ளும்படி யிருப்பவனாயுமுள்ள |
| எங்கள் அப்பன் எம்பெருமான் | —; |

எவ்வுள் கிடந்தான்—.

* * *—[திங்களப்புவான்] காரியவர்க்கங்களையெல்லாம் தனக்கு சரீரமாகக் கொண்டு, தான் அவற்றுக்கு ஆத்துமாவாக இருப்பவன் என்கிறார் திங்களப்புவானெரிகாலாகி என்பதனால்; சந்திரனையும் நான்கு பூதங்களையும் இங்குச் சொன்னது—மற்றுமுள்ள காரியவர்க்கங்களையுஞ் சொன்னபடி. உபலக்ஷணமென்க. ஆகியென்றது—சரீரசரீரிபாவத்தைச் சொன்னபடி.

திசைமுகனார்தங்களப்பன் = உலகங்களைப்படைத்த நான்முகக்கடவுளையும் படைத்தவன் என்கை.

சாமியப்பன் = 'ஸாமி' என்ற வடசொல் சாமியென்று கிடக்கிறது. பகவத்கீதையில் "வேதாநாம் ஸாமவேதோஸ்மி" என்று "வேதங்களுக்குள்ளே நான் ஸாமவேதமாகிறேன்" என்றருளிச் செய்தமைக்கிணங்க, ஸாமவேத ப்ரதிபாத்யனான பகவான் என்கை.

[பாகத்திருந்த இத்யாதி.] வண்டுகள் மதுபானம்பண்ணப்பெற்ற கொன்றை மாலையையும் கங்காதீர்த்தத்தையும் ஜடையிலே உடையனாய்த் திருமேனியின் ஏகதேசத்திலே உறைகின்ற சிவபெருமான் தனது தலையாலேசுமக்கின்ற திருவடிகளையுடைய எம்பெருமான் திருவெவ்வுளூரிலே திருக்கண்வளர்ந்தருளா நின்றான்.

சூழ்கழல் = உலகங்களையெல்லாம் சூழ்ந்த திருவடி; உலகளந்ததிருவடி. (எ)

முனிவன் மூர்த்தி மூவராகி வேதம்விரித்துரைத்த
புனிதன் * பூவைவண்ணனண்ணல் புண்ணியன் விண்ணவர்கோன் *
தனியன் சேயன் தானொருவனாகிலும் தன்னடியார்க்கு
இனியன் * எந்தையெம்பெருமானெவ்வுள்கிடந்தானே. (அ)

| | |
|---|---|
| முனிவன் | உலகங்களைப் படைக்க ஸங்கல்பம் செய்தவனும் |
| மூர்த்தி மூவர் ஆகி | பிரமன் விஷ்ணு சிவன் என்று மூன்று மூர்த்தியாக நிற்பவனும் |
| வேதம் விரித்து உரைத்த புனிதன் | வேதப் பொருள்களை வியக்தமாக வெளியிட்ட பவித்திரனும் |
| பூவை வண்ணன் | காயாம்பூப்போன்ற திருநிறத்தை யுடையவனும் |
| அண்ணல் | ஸர்வ ஸ்வாமியும் |
| புண்ணியன் | வடிவுகொண்ட புண்ணியமானவனும் |
| விண்ணவர் கோன் | நித்யஸூரிகளுக்குத் தலைவனும் |
| தனியன் | "ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்ம" என்று உபநிஷத்தில் ஓதப்பட்டவனும் |
| தான் சேயன் ஒருவ னாகிலும் | தான் ஒருவர்க்கும் எட்டாத வொருவனா யிருந்தாலும் |
| தன் அடியார்க்கு இனியன் | தன்னுடைய அடியவர்களுக்குப் பரம போக்யனா யிருப்பவனும் |
| எந்தை | எமக்குத் தந்தையா யிருப்பவனுமான |
| எம் பெருமான் | ஸ்வாமியானவன் |
| | எவ்வுள் கிடந்தான்—. |

* * *—[முனிவன்மூர்த்தி.] "முனிவன்" என்றால் மநநம்பண்ணுகிறவன் என்கை; மநநம்பண்ணுகையாவது ஸங்கல்பம் செய்கை. "பன்மைப்படர் பொருளாதுமில் பாழ்நெடுங்காலத்து" என்கிறபடியே * ஒன்றுந்தேவுமுலகுமுயிரும்மற்றும் யாதுமில்லாதவக்காலத்து "बहु स्यां प्रजायेय = பஹு

ஸ்யாம் ப்ரஜாயேய" என்று ஸ்ருஷ்டிக்குறுப்பாக ஸங்கல்பித்துக் கொண்டவனென்கை.

மூர்த்திமூவராகி = பிரமனுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டிசெய்தும், தானான தன்மையிலே நின்று ரக்ஷணஞ்செய்தும், சிவனுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸம்ஹாரத்தை நடத்தியும் போருகிறவனென்கை.

வேதம்விரித்துரைத்த புனிதன் = வேதப்பொருள்களைத் தெளியவெளியிடாநின்ற பகவத்கீதையை அருளிச்செய்த பவித்திரன். புனிதனென்றது—தனக்கொரு பிரயோஜநத்தைக் கணிசியாமல் பிறருடைய லாபத்தையே நோக்கிக் காரியம் செய்தலாகிற மனத்தூய்மையையுடையவனென்றபடி.

தான் சேயனொருவனாகிலும் தன்னடியார்க்கு இனியன் = "எவர்க்கும் சிந்தைக்கும் கோசரமல்லன்" என்றபடி மனத்தினால் நினைப்பதற்கும் எட்டாதவனாகிலும், தன்னையே நாளும் வணங்கித் தொழுகின்ற அந்தரங்கபக்தர்களுக்கு எளியனாயிருக்கையாகிற இனிமையையுடையவன் என்றபடி. இப்படிப்பட்ட எம்பெருமான் எவ்வுள்கிடந்தான்காண் என்றாராயிற்று. ... (அ)

பந்திருக்கும் மெல்விரலாள் பாவை பனிமலராள் *
வந்திருக்கும் மார்வன் நீலமேனி மணிவண்ணன் *
அந்தரத்தில் வாழும் வானோர் நாயகனாயமைந்த *
இந்திரற்கும் தம்பெருமானெவ்வுள் கிடந்தானே. (௯)

| பதம் | பொருள் |
|---|---|
| பந்து இருக்கும் மெல் விரலாள் | பந்து தங்கிய மெல்லிய விரல்களை யுடையவளும் |
| பனி மலராள் | குளிர்ந்த தாமரைப் பூவைப் பிறப்பிடமாக வுடையவளுமான |
| பாவை | பிராட்டியானவள் |
| வந்து இருக்கும் மார்வன் | வந்து தங்கி வாழ்கின்ற திருமார்பை யுடையவனாய் |
| நீலம் மேனி மணி வண்ணன் | நீலமான நிறத்தையுடைய மணியின் வர்ணம் போன்ற வர்ணத்தை யுடையவனாய் |
| அந்தரத்தில் வாழும் வானோர் நாயகன் ஆய் அமைந்த இந்திரற்கும் தம்பெருமான் | சுவர்க்கத்தில் வாழ்கின்ற தேவர்களுக்கு நாதனாக அமைந்த இந்திரனுக்கும் ஸ்வாமியானவன் |

எவ்வுள் கிடந்தான்—.

* * *—[பந்திருக்குமெல்விரலாள்.] ஒருநாளும் பிரிந்துவருந்தாமல் நித்யஸம்ச்லேஷத்தாலே கையும் பந்துமாய்க் கொண்டு, அந்தப் பந்தையும் பொறுக்கமாட்டாத ஸௌகுமாரமான விரலையுடையளாய், குளிர்ந்த தாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடையளான பெரிய பிராட்டியார் அப்பூவை நெரிஞ்சிமுள்ளாக நினைத்துவிட்டிட்டுத் திருமார்பிலே வந்து வாழப்பெற்றவனாய், கருங்குவளை போன்ற வடிவழகுடையனாய், மணிபோலே முன்தானையிலே முடிந்து ஆளலாம்படி விதேயனாய், ஸ்வர்க்கத்திலே வாழ்கின்ற முப்பத்துமுக்கோடி தேவர்கட்கும் தலைவனாயமைந்த இந்திரனுக்கும் நாதனான பெருமான் திருவெவ்வுளூரிலே திருக்கண் வளர்ந்தருளாநின்றான். ... ... ... (௯)

இண்டைகொண்டு தொண்டரேத்த வெவ்வுள் கிடந்தானை *
வண்டுபோடும் பைம்புறவின் மங்கையர்கோன் கலியன் *
கொண்டசீரால் தண்டமிழ் செய்மாலை யீரைந்தும் வல்லார் *
அண்டமாள்வதாணை யன்றேலாள்வரமருலகே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| தொண்டர் | பக்தர்கள் | தண் தமிழ் செய் | அழகிய தமிழ்ப்பாஷையி லருளிச்செய்த |
| இண்டை கொண்டு | புஷ்ப மாலைகளை ஏந்திக்கொண்டு | மாலை | சொல்மாலையாகிய |
| ஏத்த | துதிக்கும்படியாக | ஈர் ஐந்தும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| எவ்வுள் கிடந்தானை | திருவெவ்வுளூரிலே சயனித்தருள்பவனான பெருமான் விஷயமாக,- | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| வண்டு பாடும் பை புறவில் மங்கையர் கோன் கலியன் | வண்டுகள் களித்துப் பாடாநின்ற விசாலமான சோலைகளையுடைய திருமங்கையி லுள்ளார்க்கு ஸ்வாமியான ஆழ்வார் | அண்டம் ஆள்வது ஆணை | இந்த ப்ரஹ்மாண்டங்களை யெல்லாம் செங்கோல் செலுத்தி ஆளப் பெறுவது திண்ணம்; |
| கொண்ட சீரால் | நெஞ்சிலேகொண்ட பகவத் குணங்களாலே | அன்றேல் | இவ்வுலகங்களை ஆள்வதில் ஆசையற்றவர்களாகில் |
| | | அமர் உலகு ஆள்வர் | பரமபதந் தன்னையே ஆளப்பெறுவர்கள். |

* * *—[இண்டைகொண்டு.] ஸ்ரீவைஷ்ணவர்கள் பூமாலைகளைக்கொண்டு அடிமைசெய்து வாழலாம்படி திருவெவ்வுளூரிலே திருக்கண்வளர்ந்தருளா நின்ற எம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய விலக்ஷணமான இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் இவ்வுலகத்திலே நீடூழி வாழ்ந்திருந்து அரசாளப் பெறுவர்கள்; இவ்வுலகவின்பத்திலே விரக்தி பெற்று விண்ணுலகமாள விரும்புவர்களாகில் அப்படியே பெறுவர்களென்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

"தொண்டர் ஏற்ற" என்று புதியதோர்பாடங் கற்பித்து ஏதோவொரு பொருளையுமுரைத்தார் பரகாலஜீயர்.

அண்டமாள்வது ஆணை = அண்டமென்று இவ்வுலகுக்கும் பரமபதத்துக்கும் பெயர்; இவ்வுலக வாழ்ச்சியைப் பலனாகச் சொல்லி, இது வேண்டா என்றிருப் பவர்கள் பரமபதத்தை ஆளப்பெறுவர்களென்கிறார் அன்றேலாள்வரமருலகே என்று. இனி, அண்டம் என்பதற்குப் பரமபதமென்று பொருளுரைத்து, 'பரம பதப்ராப்தியே இதற்குப் பலன்; அதனை விரும்பாதவர்கள் ஸ்வர்க்க லோக புருஷார்த்தத்தைப் பெறுவர்களென்கிறார்' என்றும் சிலர் உரைப்பர்

அமருலகு—அமரருலகு. ... ... ... (௧௦)

அடிவரவு:—காசை தையலாள் முன் பந்தணைந்த பாலன் சோத்தம் திங்கள் முனிவன் பந்திருக்கும் இண்டை வில்.

## இரண்டாம்பத்து இரண்டாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து—மூன்றாந்திருமொழி.

## விற்பெருவிழவும்.

உரையவதாரிகை :—எம்பெருமான் திருவெவ்வுளூரிலே ஸேவைஸாதித்த படியைக் கண்டுகளித்து அநுபவித்தார் கீழ்த்திருமொழியில்; அங்குநின்றும் திருவல்லிக்கேணியில் நின்றருளுமழகைக் காட்டிக்கொடுப்பதாகத் திருவுள்ளம் பற்றி ஆழ்வாரை எம்பெருமான் அங்கே அழைத்தருள, ஆழ்வாரும் அங்கே யெழுந்தருளித் "திருவல்லிக்கேணிக் கண்டேனே" என்று உகந்து பேசுகிறார் இத்திருமொழியில்.

தொண்டைமான் சக்கரவர்த்தியின் ப்ரார்த்தனையின்படியே திருவேங்கடமுடையான் கண்ணனாகத் தனது குடும்பத்தோடு ஸேவைஸாதித்த தலம் இது. இத்தலத்துப் புஷ்கரிணி—அல்லிப்பூக்கள் நிறையப்பெற்றதனால் கைரவிணி யென்று வடமொழியிலும், திருவல்லிக்கேணியென்று தென்மொழியிலும் பெயர் பெறும். இந்தப் புண்ணிய தீர்த்தத்தின் பெயரே இத்தலத்திற்கும்பெயராயிற்றென்றுணர்க. இது மயிலையை அடுத்திருக்கிறபடியால், "மயிலைத் திருவல்லிக்கேணி" யெனப் பெயர் பெறும். ... .... ... *

விற்பெருவிழவும் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழ *
செற்றவன் தன்னைப் புரமெரிசெய்த சிவனுறு துயர்களை தேவை *
பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு பார்த்தன்தன் தேர்முன் நின்றானை *
சிற்றவைபணியால் முடிதுறந்தானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (க)

| | |
|---|---|
| பெரு | சிறந்ததான |
| வில் விழவும் | தநுர்யாகமென்கிற உத்ஸவமும் |
| கஞ்சனும் | (அந்த உத்ஸவத்தை நடத்தின) கம்ஸனும் |
| மல்லும் | (அந்தக் கம்ஸனாலே ஏவி நிறுத்தப்பட்ட) மல்லர்களும் |
| வேழமும் பாகனும் | (குவலயாபீடமென்கிற) யானையும் அதன் பாகனும் (ஆகிய எல்லாம்) |
| வீழ | பங்கமடையும்படி |
| செற்றவன் தன்னை | த்வம்ஸம் பண்ணினவனும், |
| புரம் எரி செய்த சிவன் உறு துயர் | திரிபுரமெரித்த சிவபெருமானடைந்த ப்ரஹ்மஹத்தி சாபத்தை |
| களை | களைந்தொழித்த |
| தேவை | தேவனும், |
| பற்றலர் வீய | சத்துருக்கள் மாளும்படியாக |
| கோல் | சாட்டையை |
| கையில் கொண்டு | திருக்கையிலே பற்றிக்கொண்டு |

| | | | |
|---|---|---|---|
| பார்த்தன் தன் தேர்முன் நின்றானை | பார்த்தசாரதியாய் நின்றவனும் | முடி துறந்தானை | பட்டாபிஷேகத்தை உபேக்ஷித்தவனுமான பெருமானை |
| சிறுஅவை பணியால் | சிறிய தாயாகிய கைகேயியினுடைய சொல்லாலே | திருவல்லிக்கேணி | திருவல்லிக்கேணி யென்னும் க்ஷேத்ரத்திலே |
| | | கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன். |

* * *—[விற்பெருவிழவும்.] இத்தலத்திலே ஸேவைஸாதிக்கின்ற எம்பெருமான் பார்த்தஸாரதியாகையால், அப்பெருமானுடைய சிறுச்சேவகங்களைச் சொல்லி யேத்துகிறார்.

கம்ஸன் தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் யசோதையினிடம் ஒளித்து வளர்தல் முதலிய வரலாறுகளை நாரதமுனிவர் சொல்லக்கேட்டு அதிக கோபங்கொண்டு எவ்வகையினாலாவது கண்ணனைக் கொல்லநிச்சயித்து வில்விழா வென்கிற வியாஜம்வைத்துக் கண்ணபிரானையும் பலராமனையும் அழைத்து வரும்படி நியமிக்கப்பட்ட அக்ரூரனுடைய பிரார்த்தனைக்கிணங்கக் கண்ண பிரான் நம்பிமூத்தபிரானுடன் புறப்பட்டு மதுரையிற் புகுந்து நடுவழியில் ஒரு துஷ்ட வண்ணானைக்கொன்று அவனிடமிருந்த சிறந்த ஆடைகளை யெடுத்துச் சாத்திக்கொண்டு ராஜவீதியில் வருகிறவளவிலே மாலாகாரரையும் கூனியையும் அநுக்ரஹித்துப் பின்பு கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில் அவ்வரண்மனை வாயில்வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, அவ்யாதவவீரர் அதனை யெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பது போல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அவ்யானையையும் யானைப்பாகனையும் உயிர் தொலைத்துவிட்டு உள்ளே கம்ஸ ஸபையிற் செல்லுகையில் அவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர்செய்ய, அவர்களையெல்லாம் அவ்யாதவ வீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனர். பிறகு கண்ண பிரான் வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மேலேறி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில் தள்ளி அவன் மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டனன்.

விற்பெருவிழவு=கம்ஸன் தனது வில்லுக்குப் பெரிய பூஜை நடத்துவதாகச்செய்த மஹோத்ஸவம். வேழமும் பாகனும் மல்லர்களும் கஞ்சனும் மடியவே வில்விழவும் முடிந்ததாயிற்று. வீழ என்றது—நாசமடைய என்றபடி; உபசாரவழக்கு.

சிவனுறுதுயர்களைந்த வரலாறு:—ஒரு காலத்திலே பரமசிவன் தன்னைப் போலவே பிரமனும் ஐந்துதலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதெனக்கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளி யெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளவே

அவன் இதற்கு என்செய்வதென்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவம் தொலையப்பிச்சையெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இக்கபாலம் கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலும் பலதலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித்திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்பதாம். இவ்வரலாற்றுமுகத்தால் எம்பெருமானுடைய பரத்துவத்தை வெளியிட்டவாறு. (களைதேவை—வினைத்தொகை.)

கையில்கோல்கொண்டு பார்த்தன்தன் தேர்முன் நின்ற சரிதை பிரஸித்தமேயாம். சிற்றவைபணியால் முடிதுறந்தது இராமாவதாரத்தில். சிற்றவை—சிறியதாய்; கைகேயி.

கண்ணபிரானாகவும் இராமபிரானாகவும் திருவவதரித்து அக்காலத்து மஹான்களை வாழ்வித்தருளின எம்பெருமான், பிற்பட்டவர்களையும் வாழ்விக்கத் திருவல்லிக்கேணியிலே நித்ய ஸந்நிதிபண்ணியிருக்கிறபடியை அடியேன் ஸேவிக்கப்பெற்றேனென்றாராயிற்று. ... ... ... (க)

வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை விழுமிய முனிவர்விழுங்கும் *
கோதிலின்கனியை நந்தனார்களிற்றைக் குவலயத்தோர் தொழுதேத்தும் *
ஆதியை யமுதை யென்னையாளுடை யப்பனை ஒப்பவரில்லா
மாதர்கள்வாழும் * மாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (உ)

வேதத்தை — வேதஸ்வரூபியானவனும்
சுவை — அவரவர்களுடைய ருசிக்குத் தக்கபடி
வேதத்தின் பயனை — வேதத்தில் சொல்லப்பட்டுள்ள கருமங்களின் பலன்களைக் கொடுப்பவனும்
விழுமிய முனிவர் விழுங்கும் — சிறந்த முனிவர்களால் அநுபவிக்கப்படுகிற
கோது இல் இன் கனியை — கோதற்றபோக்யமான பழம் போன்றவனும்
நந்தனார் களிற்றை — நந்தகோபர் வயிற்றிற் பிறந்த ஆனைக்கன்று போன்ற பிள்ளையானவனும்
குவலயத்தோர் தொழுது ஏத்தும் ஆதியை — பூமியிலுள்ளாரெல்லாரும் வணங்கித் துதிக்க நின்ற ஜகத்காரணபூதனும்
அமுதை — அமுதம்போலே போக்யனானவனும்
என்னை ஆள்உடை அப்பனை — என்னை அடிமை கொண்டவனுமான எம்பிரானை
ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் — ஒப்பற்ற ஸ்த்ரீகள் வஸிக்கப்பெற்ற
மாடம் மா மயிலை — மாடங்களையுடைய சிறந்த மயிலைக்கடுத்த
திரு அல்லிக்கேணி — திருவல்லிக்கேணியிலே
கண்டேன் — ஸேவிக்கப்பெற்றேன்.

* * *—[வேதத்தை.] எம்பெருமானை ஸாக்ஷாத் வேதமாகச் சொன்னது—வேத ப்ரதிபாத்யனா யிருக்குந் தன்மைபற்றியாதல், வேதங்களை வெளியிட்டருளினமை பற்றியாதல். உலகத்தில் ஒவ்வொருவருடைய விருப்பம் ஒவ்வொரு வகையாக இருக்குமாதலால் அவரவர்களுடைய விருப்பத்திற்கிணங்க உபாயங்களையும் பலன்களையும் வேதமூலமாகக் காட்டிக்கொடுத்திருக்கின்றமைபற்றி வேதத்தின் சுவைப்பயனை எனப்பட்டது. வ்யாஸர் பராசரர் வால்மீகி முதலிய முனிவர்களுக்கு இனிய கனிபோலே மிகவும் போக்யனாயிருப்பதுபற்றி விழுமிய முனிவர் விழுங்குங் கோதிலின்கனியை எனப்பட்டது.

நந்தனார்களிற்றை = நந்தகோபருடைய திருமாளிகையிலே யானைக்கன்று போலே விளையாடினவனென்றவாறு. களிற்றை = யானையானது ஒருநாள் கண்டோமென்று திருப்தியாயிருக்கவொண்ணாதபடி தினந்தோறும் காண வேண்டுமென்னும் விருப்பத்தை உண்டாக்குவதும், மிக்க செருக்கையுடையதும், கைக்கு எட்டினாரை நினைத்தபோது எடுத்துக் கழுத்திலே வைத்துக்கொள்வதும், தன்மீது ஏறநினைப்பார்க்குத் தன்னைப் பணிந்து கொடுப்பதும், உகவாதாரை ஆராயாது கிழித்துப்போகடுவதும், தன்னைக்கட்டுமாறு தானே கயிற்றையெடுத்துக் கொடுப்பதுமாக இருக்கும்; அவ்வாறே தினந்தோறும் ஸேவிக்கத்தக்க வடிவழகும், எப்பொருட்கும் இறைவனாயிருக்குந் தன்மை தோன்றக் கொண்டிருக்குஞ் செருக்கும், நித்யஸம்ஸாரியொருவன் தன்னைச் சரணமடைந்ததே காரணமாக அவனது குற்றங்களைக் குணங்களாகக்கொண்டு தன்னை அவனுக்குக் கொடுத்தால் கேட்பாரில்லாத உரிமையும், கருமம் ஞானம் முதலிய உபாயங்களால் தன்னையடைய விரும்பினவர்க்கும் தன்னைக் கொடுக்குஞ் சீலமும், தனது அடியார்களின் விரோதிகளை ஆராயாது அழிக்கின்ற விரோதி நிரஸநஸ்வபாவமும், தன்னைக் கட்டுப்படுத்துமாறு பக்தியைத்தானே தருகிற ருசிஜநகத்வமும் எம்பெருமான் உடையவனாவன்; ஆதலால் அவனுக்குக் களிறு முற்றுவமையாம். ... ... ... ... ... (உ)

வஞ்சனைசெய்யத் தாயுருவாகி வந்தபேயலறி மண்சேர *
நஞ்சமர் முலையூடுயிர்செகவுண்ட நாதனைத் தானவர்கூற்றை *
விஞ்சைவானவர் சாரணர்சித்தர் வியந்துதிசெய்யப் பெண்ணுருவாகி *
அஞ்சுவையமுத மன்றளித்தானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (ந)

| | |
|---|---|
| வஞ்சனை செய்ய | கபடமாகக் கொல்வதற்காக |
| தாய் உரு ஆகி வந்த | தாய் வடிவு கொண்டுவந்த |
| பேய் | பூதனை யென்னும் பேய்ச்சி |
| அலறி | கதறிக்கொண்டு |
| மண் சேர | தரையிலே விழும்படியாக |

| | |
|---|---|
| நஞ்சு அமர் முலை ஊடு | விஷந்தடவின (அவளது) முலை வழியாக |
| உயிர் செக | அவளுடைய பிராணன் ஒழியும்படியாக |
| உண்ட | முலைப்பாலுண்ட |
| நாதனை | ஸ்வாமியானவனும் |
| தானவர் கூற்றை | அஸுரர்கட்கு யமன் போன்றவனும் |

| | | | |
|---|---|---|---|
| விஞ்சை வானவர் | வித்யாதரர்களென்ன | பெண் உரு ஆகி | மோஹிநீவேஷமெடுத்து |
| சாரணர் | சாரணர்களென்ன | அன்று | முன்னொரு காலத்திலே |
| சித்தர் | ஸித்தர்களென்ன ஆகிய தேவவர்க்கமடங்கலும் | அம் சுவை அமுதம் அளித்தானை | இனிய சுவையுள்ள அமுதத்தை (தேவர்களுக்கு) அளித்தவனுமான பெருமானை |
| வியந்து | ஆச்சரியப்பட்டு | | |
| துதி செய்ய | தோத்திரம் செய்யும்படி | | திருவல்லிக்கேணி கண்டேன்—. |

* * *—[வஞ்சனை செய்ய.] கம்ஸன் தன்னைக்கொல்லப் பிறந்தவன் ஒளித்து வளர்கிறானென்பதை யுணர்ந்து மிக்க அச்சங்கொண்டவனாய், பிரலம்பன் கேசி தேனுகன் பூதனை அரிஷ்டன் முதலிய அசுரர்களையழைத்து, 'தேவகி வயிற்றிற் பிறந்த பெண் சொல்லிப்போன வார்த்தையினால் என்னைக் கொல்பவன் பிறந்திருக்கிறானென்று தெரிகிறது; இவ்வுலகத்தில் விசேஷமான பலம் ஸாமர்த்தியம் அழகு முதலியவை எங்கெந்தக் குழந்தையினிடத்திற் காணப்படுமோ அந்தந்தச் சிறந்த ஆண் குழந்தைகளைத் தேடி எப்படியாவது கொன்றுவிடவேண்டும்' என்று கட்டளையிட்டான்; உடனே அவர்களெல்லாரும் அங்ஙனமே முயல்வாராயினர்; அவர்களிலொருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி மாயையால் நல்ல பெண்ணுருவத்தோடு இரவில் அங்கங்கே சென்று சிறு குழந்தைகளுக்குத் தாய் முலை கொடுப்பதுபோலத் தான் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் குழந்தைகளைக் கொன்றுகொண்டே கோகுலத்திலும் வந்து தூங்கிக்கொண்டிருந்த ஸ்ரீ கிருஷ்ண சிசுவை யெடுத்து முலைகொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அப்பேய்மகளின் முலைகளைக் கைகளாலிறுகப் பிடித்து அவளுயிரோடு உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி விழும்படி செய்ததென்கிற கதையை முன்னடிகளில் அநுஸந்திக்கிறார். இப்படியே மற்றும் வந்த பல அசுரர்களையும் கொன்றொழித்தானென்பார் தானவர்கூற்றை என்கிறார்.

[விஞ்சைவானவர் இத்யாதி.] திருமால் தேவர்களுக்காகக் கடல்கடைந்த காலத்து தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத் தரித்து அம்ருத பூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அந்த க்ஷீர ஸமுத்ரத்தினின்றும் தோன்றியபொழுது அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அம்ருத கலசத்தைப் பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள அந்த எம்பெருமான் ஜகந்மோஹநகரமான ஒரு பெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்கட்கு ப்ரஸாதித்தனன். இந்த அற்புத சக்தியைக்கண்டு தேவ வர்க்கத்தாரனைவரும் ஆச்சரியப்பட்டுத் துதிசெய்தனர்; இதனைப் பின்னடிகளில் அநுஸந்தித்தாராயிற்று.

'வஞ்சநா' என்ற வடசொல் வஞ்சனையென ஐயீறாகத்திரிந்தது. விஞ்சை—வித்யா; வித்யாதரர், சாரணர், ஸித்தர் என்பவர்கள் தேவதைகளின் வகுப்பிற் சேர்ந்தவர்கள். "வியந்து துதிசெய்ய" என்ற சொற்கள் வியந்துதிசெய்ய எனப் புணர்ந்தன. 'சங்கு கதை' சங்கதை போல. "வியந்து துதி செயப் பெண்ணுருவாகி" என்றும் பாடமுண்டு. ... ... ... (௩)

இந்திரனுக்கென் றாயர்களெடுத்த எழில்விழவில் பழநடைசெய் *
மந்திரவிதியில் பூசனைபெறாது மழைபொழிந்திடத் தளர்ந்து * ஆயர்
எந்தம்மோடினவாநிரை தளராமலெம்பெருமா னருளென்ன *
அந்தமில்வரையால் மழைதடுத்தானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (௪)

இந்திரனுக்கு என்று } இந்திரனை உத்தேசித்து
ஆயர்கள் எடுத்த { இடையர்களால் நடத்தப்பட்டுவந்த
எழில் விழவில் சிறந்த உத்ஸவத்திலே
பழநடை செய் { அநாதி ஆசாரமாகச் செய்துவருகிற
மந்திரம் விதியில் பூசனை பெறாது { ஸங்கேதப்படி நடக்கவேண்டிய ஆராதனையைப் பெறாமல்
மழை பொழிந்திட { (இந்திரன்) மழை பெய்விக்க,
ஆயர் இடையர்
தளர்ந்து துன்பப்பட்டு
எம் பெருமான் { "எங்களுக்குத் தலைவனான கண்ணபிரானே!
எம் தம்மோடு நாங்களும்
இனம் ஆ நிரை { கூட்டங்கூட்டமான பசுக்களின் திரளும்
தளராமல் { (மழையினால்) நோவு படாதபடி
அருள் என்ன { ரக்ஷித்தருளவேணும்" என்று பிரார்த்திக்க
அந்தம் இல் வரையால் { அளவில்லாத [மிகப் பெரிய] கோவர்த்தன மலையைக்கொண்டு
மழை தடுத்தானை { அந்த மழையைத் தடுத் தருளின பெருமானை
திருவல்லிக்கேணி கண்டேன்—.

* * *—[இந்திரனுக்கென்று] திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்களெல்லாரும் கண்ணபிரானுடைய அற்புத சரிதைகளைக்கண்டு 'இவனே நம் குலக்கொழுந்து, இவனது சொற்படி நடப்பதே நமது கடமை' என்று தீர்மானித்திருந்தார்கள். இருக்கையில் சரத்காலம் வந்தது. அப்போது இடையர்கள் வருடந்தோறும் நடத்துவதுபோல் இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பலபல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜைப் பொருள்களையும் அமைப்பதைக்கண்டு கண்ணபிரான் 'ஓ பெரியோர்களே! இவை ஏதுக்காக?' என்றான்; அதற்கு அவர்கள் 'அப்பா! தேவேந்திரனுடைய அநுக்ரஹத்தினால் காலங்களில் தகுதியாக மழைபெய்து அதனால் பசுக்களும் நாமும் ஸுகமே வாழ்கிறோம்; இனி எப்போதும் அந்த இந்திரன் நம்மை இப்படியே ரக்ஷிக்கவேணுமென்கைக்காக அவனுக்கு வருஷத்துக்கொருமுறை பொங்கலிடுவதுண்டு; அதற்காக இவையெல்லாம் சேர்த்து வைத்தோம்' என்றனர். கண்ணன் அது கேட்டு 'நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கன்றோ பூஜை செய்யவேண்டும்; இக்கோவர்த்தன மலையன்றோ பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பிரயோஜனமுண்டு? இதையெல்லாம் நீங்கள் இந்த மலைக்கே பலியிடுங்கள்' என்று கட்டளையிட, இடையர்கள் அப்படியே செய்யத்துணிந்து மலைக்கே பலியிட்டவளவில், கண்ணபிரான் தான் அம்மலையில் ஆவேசித்து அவற்றையெல்லாம் தானே

அமுது செய்திட்டான்; பின்பு பூஜையிழந்த இந்திரன் சீற்றமுற்றுத் தன் பரிஜநங்களான மேகங்களையழைத்து 'இடைக்குலத்துக்குப் பெருந்தீங்கு விளையும்படி விடாமழை பெய்யுங்கள்' என்று சொல்லிக் கட்டளையிடவே அம்மேகங்கள் அப்படியே வந்து ஏழுநாள் விடாமழை பெய்ய, இடையரும் பசுக்களுமெல்லாம் கதறிக் கதறிக் கண்ணனையே சரணமடைய, கண்ணபிரான் அபயமளித்து அந்த மலையைப் பிடுங்கிக் குடையாகத் தூக்கித் தாங்கிக் கோகுலத்தைச்சேர்ந்த ஸகல பிராணிகளையும் அதன்கீழ் அழைத்துக்கொண்டு சிறிதும் அபாயமின்றிக் காப்பாற்றியருளினன். அப்பெருமானை இன்று திருவல்லிக்கேணியில் ஸேவிக்கப் பெற்றேனென்றாராயிற்று.

வருஷந்தோறும் இந்திரனுடைய பூஜை பெரிய திருவிழாவாக நடத்தப்பட்டு வந்தமையால் எழில்விழவு எனப்பட்டது. மந்திரவிதி=வேதத்துக்கு அநதிகாரிகளான இடையர்களுக்கு மந்திரவிதியுண்டோ வென்னில்; இங்கு மந்த்ரமாவது ஆலோசனை; அதாவது ஸங்கேதம். 'பூஜநா' என்ற வடசொல் பூசனையெனத்திரிந்தது. ... ... (௪)

இன்துணைப் பதுமத்தலர்மகள்தனக்கு மின்பன் நற்புவிதனக்கிறைவன் *
தன்துணையாயர்பாவை நப்பின்னை தனக்கிறை மற்றையோர்க்கெல்லாம்
வன்துணை * பஞ்சபாண்டவர்க்காகி வாயுரைதூதுசென்றியங்கும்
என்துணை *எந்தைதந்தைதம்மானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (௫)

| | |
|---|---|
| இன் துணை | தனக்கினிய துணையான |
| பதுமத்து அலர் மகள் தனக்கும் இன்பன் | தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டிக்கு இன்பனும் |
| நல் புவி தனக்கு இறைவன் | ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு நாதனும் |
| தன் துணை | தன்னையே துணையாக வுடையளான |
| ஆயர் பாவை நப்பின்னை தனக்கு இறை | ஆயர்மகளான நப்பின்னைப் பிராட்டிக்கு நாயகனும் |
| மற்றையோர்க்கு எல்லாம் | மற்றுமுள்ள எல்லார் தமக்கும் |
| வன் துணை | ஒருகாலும் விட்டு நீங்காத துணையாயிருப்பவனும் |
| பஞ்ச பாண்டவர்க்கு ஆகி | பஞ்சபாண்டவர்களுக்காய் |
| தூது சென்று | தூதனாக எழுந்தருளி |
| வாய் உரை இயங்கும் | வாய் வார்த்தைகளைச் சொன்னவனும் |
| என் துணை | எனக்குத் துணையானவனும் |
| எந்தை தந்தை தம்மானை | என் குலநாதனுமான பெருமானை |
| | திருவல்லிக்கேணி கண்டேன்—. |

* * *—[இன்துணை.] ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்கிற திவ்ய மஹிஷிகள் மூவர்க்கும், 1. "தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்" 2. "பதினாறுமாயிரவர் தேவிமார்பணி செய்யத்துவரையென்னுமதில் நாயகராகி வீற்றிருந்த மணவாளர்" என்கிறபடியே மற்றும் பல தேவிமார்களுக்கும் நாயகனென்கிறது முன்னடிகளில்.

1. பெரிய திருமொழி 10—8—8. 2. பெரியாழ்வார் திருமொழி 4—9—4.

பத்மம் என்று வடசொல் பதுமமெனத் திரிந்தது. பதுமத்தலர்—தாமரைப்பூ; அதன் மகள்—ஸ்ரீமஹாலக்ஷ்மி. எம்பெருமான் தேவசரீரத்தையோ மநுஷ்யசரீரத்தையோ மற்றும் எந்த சரீரத்தைப் பரிக்ரஹிக்கிறானோ அந்தந்த சரீரங்களுக்குத் தகுதியாகப் பிராட்டிதானும் உடலெடுத்து உடன்கூடுகிறாளென்று சாஸ்த்ரமாதலால் 'இன்துணை' என்று பிராட்டிக்கு விசேஷணமிடப் பட்டது.

இப்படி திவ்யமஹிஷிகட்கு வல்லபனாயிருந்துகொண்டு போகங்களில் பராக்காக இருந்து விடுகிறானத்தனையோவென்னில்; அன்பர்களுக்குக் கையாளாக உழைக்குமவன் என்பார் பாண்டவர்கட்குத் தூதுசென்றமையைப் பேசுகிறார் மூன்றாமடியில். ஆக, பரத்வமும் ஸௌலப்யமும் பொலியத் திருவல்லிக்கேணியில் ஸேவை ஸாதிக்கக் கண்டேனென்றாராயிற்று. ... (ரு)

அந்தகன்சிறுவனரசர்த மரசற்கிளையவனணியிழையைச் சென்று *
எந்தமக்குரிமை செய்யெனத்தரியாதெம்பெருமானருளென்ன *
சந்தமல்குழலாளலக்கண் நூற்றுவர்தம் பெண்டிருமெய்திநூலிழப்ப
இந்திரன்சிறுவன் தேர்முன்நின்றானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. (சு)

| | |
|---|---|
| அந்தகன் சிறுவன் | குருடனான த்ருதராஷ்ட்ரனுடைய பிள்ளையாய் |
| அரசர்தம் அரசற்கு | ராஜாதிராஜனென்று தன்னை மதித்திருந்த துரியோதனனுடைய |
| இளையவன் | தம்பியான துச்சாஸநன் |
| அணி இழையை சென்று | அழகிய ஆபரணங்களையுடையளான த்ரௌபதியிடம் வந்து |
| எம்தமக்கு உரிமை செய் என | "நீ எங்களுக்கு அடிமை செய்யக்கடவை" என்று சொல்ல, |
| தரியாது | (அவள்) பொறுக்க மாட்டாமல் |
| எம் பெருமான்! | "ஸ்வாமியான கண்ணபிரானே! |
| அருள் என்ன | கிருபை பண்ணவேணும்" என்று ப்ரார்த்திக்க, |
| சந்தம் அல் குழலால் அலக்கண் | அழகிய இருண்ட கூந்தலையுடையளான அந்த த்ரௌபதியின் மனவருத்தத்தை |
| நூற்றுவர்தம் பெண்டிரும் எய்தி | துரியோதநாதியர் நூறு பேர்களுடைய மனைவிகளும் அடைந்து |
| நூல் இழப்ப | தாலியை இழக்கும்படியாக |
| இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானை | இந்திர புத்திரனான அர்ஜுநனுடைய தேரின் முன்னே ஸாரதியாய் நின்ற பெருமானை |
| திருவல்லிக்கேணி கண்டேன்—. | |

* * *—[அந்தகன்சிறுவன்.] தருமபுத்திரர் சகுநியோடு சூதாடினகாலத்து மனைவியான த்ரௌபதியையுமுட்பட எல்லாப்பொருள்களையும் தோற்றபோது துரியோதநன் தனது தம்பியான துச்சாஸனனை நோக்கி 'த்ரௌபதியை ஸபை நடுவிற் கொண்டு நிறுத்து' என்று கட்டளையிட, அவனும் அப்படியே அவளை மிக்க பெருஞ்சபைநடுவே கொண்டு நிறுத்த, 'இவள் நமக்கு வசப்பட்டனளாதலால் இவளை நம் வீட்டு வேலைக்காரிகளிலே ஒருத்தியாக இருக்கும்படி அமைத்திடு; இனி இவள் நம் வீட்டைப் பெருக்குதல் மெழுகுதல் முதலிய

வேலைகளைச் செவ்வனே செய்துவரக்கடவள்' என்று சொல்ல, துச்சாஸநன் கடூரமான இந்த வார்த்தைகளை த்ரௌபதியிடத்துச் சொல்லி அவளை மிகவும் அவமானப் படுத்தினவளவிலே அவள் பொறுக்கமாட்டாமல் "கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணாகதாம்" என்று சொல்லிக் கண்ணபிரானைச் சரண மடைய, 1. "பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம், ஆண்டங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்தவப்பன்" என்றபடி அவள்பட்ட வருத்த மெல்லாம் மாற்றலர் நூற்றுவர்களின் மனைவியர் தாங்கள் பட்டுத் தங்கள் பர்த்தாக்களைப் பறிகொடுத்துத் தாலியிழந்து கைம்பெண்டாட்டிகளாய்க் கதறும்படி பார்த்தனுக்குச் சாரதியாயிருந்து அரிய பெரிய காரியங்கள் செய்தருளி ஆச்ரித ரக்ஷணமும் ஆச்ரிதவிரோதி நிரஸநமும் செய்தருளின கண்ணபிரானைத் திருவல்லிக்கேணியில் ஸேவிக்கப்பெற்றேன் என்றாராயிற்று.

துரியோதனனுக்கும் துச்சாஸநனுக்கும் தந்தையான த்ருதராஷ்ட்ரன் பிறவிக்குருடனாதலால் அந்தகன் எனப்பட்டான்; வடசொல். ராஜாதிராஜர்கள் பாண்டவர்களேயாயினும், காலக்கொடுமையினால் அவர்கள் தோற்றுத் தளர்ந்திருந்த காலத்தில் துரியோதநன் தானே ராஜாதிராஜன் என்று அஹங்காரங் கொண்டிருந்தனாதலால் அரசர்தமரசன் எனப்பட்டான். அவனுடைய இளைய தம்பி—துச்சாஸநன். "எந்தமக்குரிமை செய்" என்றவிடத்து, "దుశ్శాసనశ్చాపి సమీక్ష్య కృష్ణామవేక్షమాణాః కృపణాః పతీన్ స్వాన్। ఆధూయ వేగేన విసంజ్ఞకల్పాం ఉవాచ దాసీతి హసన్ సశబ్దమ్ = துச்சாஸநச்சாபி ஸமீக்ஷ்ய க்ருஷ்ணாம் அவேக்ஷமாணாந் க்ருபணாந் பதீம்ஸ்தாந்—ஆதூய வேகேந விஸம்ஜ்ஞகல்பாம்உவாச தாஸீதி ஹஸந் ஸசப்தம்." என்ற மஹாபாரத [ஸபாபருவம் 89-56] ச்லோகம் நினைக்கத்தக்கது.

த்ரௌபதி ரஜஸ்வலையாயிருக்குந் தன்மையையும் கணிசியாது தலைமயிரைப் பிடித்திழுத்து மாநபங்கஞ் செய்ததும் "எந்தமக்குரிமைசெய்" என்றவிதிலே அடக்கம்.

சந்தம் அல்குழலாள் = 'சந்தம்' என்று அழகுக்குப்பெயர்; அல் என்று இருளுக்குப் பெயர்; அழகிய இருண்ட கூந்தலையுடைய த்ரௌபதியென்க. அலக்கண்—மனவருத்தம். த்ரௌபதியின் வயிற்றெரிச்சலெல்லாம் சத்துருபத்தினிகளுக்குப் போய்ச்சேருமாறு கண்ணபிரான் காரியஞ் செய்தனனென்று சமத்காரமாக அருளிச்செய்தபடி. அழுதவர்கள் சிரிக்கும்படியும், சிரித்தவர்கள் அழும்படியும் காரியஞ் செய்தானென்க.

இந்திரன்சிறுவன் = பாண்டுமஹாராஜனுக்கு மனைவியுடன் சேரக்கூடாதென்று சாபம் நேரிட்டதனால், அவனனுமதிப்படி, அவனது மூத்தமனைவியாகிய குந்தி, தனக்கு இளமையில் துர்வாஸமுனிவன் உபதேசித்திருந்த மந்திரத்தின் மஹிமையால் வந்த யமதர்மராஜனால் யுதிஷ்டிர (னென்னும் தருமபுத்திர) னையும், வாயுதேவனால் பீமஸேநனையும், தேவேந்திரனால் அர்ஜுநனையும் பெற்றாளென்று புராணவரலாறாதலால் அர்ஜுனன் இந்திரன்சிறுவ னெனப்பட்டான். ... .... .... (௬)

1. பெரியாழ்வார் திருமொழி 4—3—6.

பரதனும்தம்பி சத்துருக்கனனுமிலக்குமனோடு மைதிலியும் *
இரவுநன்பகலும் துதிசெய்யநின்ற இராவணாந்தகனையெம்மானை *
குரவமேகமழும் குளிர்பொழிலூடு குயிலோடு மயில்கள் நின்றால *
இரவியின்கதிர்கள் நுழைதல்செய்தறியாத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (எ)

| | |
|---|---|
| பரதனும் | பரதாழ்வானும் |
| தம்பி சத்துருக்கனனும் | அவனது தம்பியான சத்ருக்நாழ்வானும் |
| இலக்குமனோடு | லக்ஷ்மணனும் |
| மைதிலியும் | ஸீதாபிராட்டியும் |
| இரவும் நன் பகலும் துதி செய்ய நின்ற | இடைவிடாது தோத்திரம் பண்ணும்படியாக எழுந்தருளியிருக்கிற |
| இராவண அந்தகனை எம்மானை | ராவண ஸம்ஹாரியான பெருமானை, |
| குரவமே கமழும் குளிர் பொழிலூடு | குரவமலர்களே பரிமளிக்கின்ற குளிர்ந்த சோலைகளிலே |
| குயிலொடு மயில்கள் நின்று ஆல | குயில்களும் மயில்களும் ஆரவாரிக்க, |
| இரவியின் கதிர்கள் நுழைதல் செய்து அறியா | ஸூர்ய கிரணங்கள் உள்ளே நுழைந்தறியாத [எப்போதும் நிழல் செய்திருக்கிற] |
| திரு அல்லிக்கேணி | திருவல்லிக்கேணியிலே |
| கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன். |

* * *—[பரதனும்] சத்ருக்நன் பரதனை விட்டுப்பிரியாதவனாதலால் "பரதனும் தம்பி † சத்துருக்கனனும்" என்று இதுவொரு சேர்த்தியாகவும், இளையபெருமாள் தம் பிரிவிலாதரியாமையை விண்ணப்பஞ் செய்யும்போது "నచ సీతా త్వయా హీనా నచాహమపి రాఘవ ముహూర్తమపి జీవావో జలాన్మత్స్యావివోద్ధృతౌ = நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ—முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ." என்று பிராட்டியோடே தம்மைச்சேர்த்துச் சொல்லிக்கொள்ளுகையாலே "இலக்குமனோடு மைதிலியும்" என்று இதுவொரு சேர்த்தியாகவும் அருளிச்செய்யப்பட்டது. இங்கு இந்நால்வரைச் சொன்னது மற்றுமுள்ள வாநரமுதலிகளையும் தேவதாஸமூஹங்களையும் மஹர்ஷிகளையும் சொன்னதற்கு உபலக்ஷணமாம். ஆகிய இவர்களெல்லாரும் இரவும் பகலும் ஏத்த நின்ற இராமபிரானைத் திருவல்லிக்கேணியில் ஸேவிக்கப்பெற்றேன். இராவணாந்தகனை என்ற சொல்நயத்தால்—இவர்களெல்லாரும் துதிப்பது இராவணஸம்ஹாரமாகிற வீரச்செயலை யென்பது விளங்கும்.

பின்னடிகள் நிலவளம் கூறுவன. "இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியா" என்ற விசேஷணத்தைக் குளிர்பொழிலிலே அந்வயித்துரைப்பதும் பொருந்தும். ஸூர்ய கிரணங்கள் உள்ளிறங்க வொண்ணாதபடி நிழற்பாங்காயும் பரிமளம் மிக்கவையாயுமுள்ள சோலைகளிலே குயில்கள் பாடவும், மயில்கள் ஆடவும் பெற்ற திருவல்லிக்கேணியிலே கண்டேன். (எ)

† "சத்துருக்கனும்" என்று ஓதுவர்கள்.

பள்ளியிலோதிவந்த தன்சிறுவன் வாயிலோராயிரநாமம் *
ஒள்ளியவாகிப் போதவாங்கதனுக்கொன்றுமோர் பொறுப்பிலனாகி *
பிள்ளையைச்சீறி வெகுண்டு தூண்புடைப்பப் பிறையெயிற்றனல்விழிப் பேழ்வாய் *
தெள்ளியசிங்கமாகிய தேவைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (அ)

பள்ளியில் — பள்ளிக்கூடத்தில்
ஓதி — வாசித்துவிட்டு
வந்த — வீட்டுக்குவந்த
தன் சிறுவன் வாயில் — தனது மகனான ப்ரஹ்லாதனுடைய வாயில்
ஓர் ஆயிரம் நாமம் — விலக்ஷணமான ஸஹஸ்ர நாமங்கள்
ஒள்ளிய ஆகி போத — அழகாக உச்சரிக்கப்பட்டுவர
ஆங்கு — அக்காலத்திலே
அதனுக்கு ஒன்றும் ஓர் பொறுப்பு இலன் ஆகி — அதை எள்ளளவும் பொறுக்கமாட்டாதவனாய் (இரணியன்)

பிள்ளையை சீறி வெகுண்டு — அந்த ப்ரஹ்லாதன் மீது மிகவும் கோபித்து
(வாதப்ரதிவாதங்கள் நடந்தபின்)
தூண் புடைப்ப — தூணைத்தட்டின போது
பிறை எயிறு அனல் விழி பேழ் வாய் — பிறைபோன்ற பற்களையும் நெருப்புப்பொறி கிளர்கின்ற கண்களையும் பெரியவாயையுமுடைய
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை — தெளிசிங்கப்பெருமாளாகத் திருவவதரித்த தேவனை
திருவல்லிக்கேணி கண்டேன்.

* * *—[பள்ளியிலோதிவந்த.] தனித்தனி எல்லாப் பிராணிகளாலும் இறவாதபடி வரம்பெற்றவனும் மூவுலகங்களையும் வென்று தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்துவருகின்றவனுமான ஹிரண்யாஸுரன் தன் மகனான ப்ரஹ்லாதனுக்கு அஸுரகுருவாகிய சுக்கிராசாரியரைக்கொண்டு அக்ஷராப்யாஸஞ் செய்விக்கிறபொழுது அக்கால வழக்கத்தின்படி அவ்வாசிரியன் "ஹிரண்யாயநம:" என்று முதலிற் சொல்லிக் கல்விகற்பிக்க, ப்ரஹ்லாதன் அங்ஙனஞ் சொல்லிக் கல்விகற்க உடன்படாது நாராயணநாமத்தை உட்கொண்ட அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தைச் சொல்ல, அதனையுணர்ந்த இரணியன் மைந்தனைத் தன் வழிப்படுத்துதற்குப் பலவாறு முயன்றும் அவன் வழிப்படாது விடாப்பிடியுடையனாமை கண்டு கடுங்கோபங்கொண்டு, தன்னைச்சார்ந்த அஸுரர்களையழைத்து ப்ரஹ்லாதனைக் கொன்றுவிடும்படி கட்டளையிட்டனன். அதற்கு இசைந்த அவர்கள் தக்ஷன் முதலிய கொடிய அஷ்ட மஹாநாகங்களைக் கொண்டு வந்து அக்குமாரன் மீது கடிக்கவிட, அந்தப் பெரும்பாம்புகள் காளி காளாத்ரீ யமன் யமதூதியென்ற தங்களது விஷப்பற்கள் கொண்டு அவனுடைய ஸகல அவயவங்களிலும் கடித்து உக்ரமான விஷங்களைக் கக்க அவன் இடைவிடாது நாராயண நாமோச்சாரணம் செய்து வந்ததுபற்றி அவன்மீதெழுந்த திருமாலருளால் அக்கடித்த வாய்களினின்றும் சொரிந்த விஷமே அமிருதமயமாக, அந்தப் பரமபாகவதன் சிறிதும் நோவுபடாதிருந்தனன்; அசுரர்கள் அவனை நெருப்பிலே போகட, அத்தீயும் குளிர்ந்து அவனை எரிக்கமாட்டாதாயிற்று. இரணியன் கட்டளையால் திக்கஜங்கள் ப்ரஹ்லாதனைப் பூமியிலே வீழ்த்தித் தங்கள் வலிய தந்தங்களாற் பாய்ந்து இடித்தபொழுது திருவருள் வலிமை

பெற்ற அவனது மார்பிற் பட்டதனால் அத்திசையானைகளின் தந்தங்கள் முறிந்துபோய்விட்டன. அசுரர்கள் அவனைப் பெரியமலையுடன் சேர்த்து நாகபாசங்களினாற்கட்டிக் கடலிலே போகட அந்த ஸமுத்ரத்திலே அம்மலையானது ப்ரஹ்லாதன் தன் மேற்பக்கத்திலிருக்கத் தெப்பமாய் மிதந்தது. பிறகு நாகபாசம் தானே விடுபட்டதனால் ப்ரஹ்லாதன் இனிது பிழைத்துக் கரைசேர்ந்தனன். இங்ஙனம் பலவாறாக அவனைக்கொல்ல உபாயஞ்செய்தும் அவன் பகவானருளால் இறவாதொழியவே, இரணியன் ஒருநாள் ஸாயங்காலத்தில் தன் மகனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கு உளன்? காட்டு' என்ன, அச்சிறுவன் 'தூணிலுமுளன், துரும்பிலுமுளன், எங்குமுளன்' என்று சொல்ல, உடனே இரணியன் மிக்க கோபாவேசங்கொண்டு 'இங்கு உளனோ?' என்று சொல்லி எதிரிலிருந்த தூணைப்புடைக்க, அதினின்றும் பகவான் பிறைபோன்ற பற்களையும் நெருப்புப்பொறி பறக்கின்ற கண்களையும் நாவடித்த பெரியவாயையுங் கொண்ட நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிளந்தொழித்து ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்தனன். அப்பெருமான் அஸ்மதாதிகளைக்காத்தருளவும் நம் விரோதகளைக் களைந்தொழிக்கவும் திருவல்லிக்கேணியிலே ஸேவை ஸாதியா நின்றான், ஸேவிக்கப்பெற்றேனென்றதாயிற்று.

இப்பாட்டில் தெள்ளிய சிங்கம் என்று ஆழ்வாரருளிச்செய்ததுகொண்டே திருவல்லிக்கேணியிலெழுந்தருளியுள்ள அழகிய சிங்கப்பெருமாளுக்குத் தெளி சிங்கப்பெருமாள் என்று திருநாமம் வழங்கலாயிற்று; 'துள சிங்கப்பெருமாள்' என்று பலரும் வழங்குவது பிழையென்றுணர்க.

சீறிவெகுண்டு = ஒரு பொருட்பன்மொழி; மிகவும் கோபங்கொண்டு என்றபடியாம். ... ... ... (அ)

மீனமர்பொய்கை நாண்மலர்கோய்வான் வேட்கையினோடு சென்றிழிந்த *
கானமர்வேழம் கையெடுத்தலறக் கராவதன் காலினைக்கதுவ *
ஆனையின்துயரம் தீரப்புள்ளூர்ந்து சென்றுநின்றாழிதொட்டானை *
தேனமர்சோலை மாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. (கூ)

| | |
|---|---|
| மீன் அமர் பொய்கை | மீன்கள் அமர்ந்ததொரு தடாகத்திலே |
| நாள் மலர் | புதிய புஷ்பங்களை |
| கொய்வான் வேட்கையினோடு | பறிக்கவேணுமென்கிற விருப்பத்தோடு |
| சென்று | போய் |
| இழிந்த | இறங்கின |
| கான் அமர் வேழம் | காட்டில் திரியும் கஜேந்திரன் |
| கை எடுத்து அலற | தனது துதிக்கையை உயரத் தூக்கிக் கூச்சலிடும்படியாக |
| கரா | முதலையானது |
| அதன் காலினை கதுவ | அவ்யானையின் காலைக் கௌவிக்கொள்ள, |
| ஆனையின் | அந்த யானையினுடைய |
| துயரம் | மனவருத்தம் |
| தீர | தீரும்படி |
| புள் ஊர்ந்து சென்று | பெரிய திருவடியைவாஹனமாகக்கொண்டு(பொய்கைக்கரையிலே) எழுந்தருளி |
| நின்று | அங்கே நின்று |
| ஆழி தொட்டானை | திருவாழியை (அந்தமுதலையின்மீது) பிரயோகித்த பெருமானை, |
| தேன் அமர் சோலை | தேன்மாறாத சோலைகளையுடைய |
| மாடம் மா மயிலை | |
| | திருவல்லிக்கேணி கண்டேன். |

* * *—[மீனமர்பொய்கை.] மஹாவிஷ்ணு பக்தனான இந்த்ரத்யும்நனென்னும் அரசன் வழக்கப்படி ஒருநாள் விஷ்ணுபூஜைசெய்து கொண்டிருந்தபோது அகஸ்த்ய மஹாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவ்வரசன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூஜிப்பதில் செலுத்தியிருந்ததனால் அம்முனிவனது வருகையை அறியாதவனாய் அவனுக்கு உபசாரமொன்றுஞ்செய்யாதிருக்க, அம்முனிவன் இப்படி அரசன் நம்மை அலக்ஷியஞ்செய்தானென்று மாறுகக் கருதிக் கோபித்து, 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத் தோன்றினனாயினும் முன்செய்த விஷ்ணு பக்தியின் மஹிமையினால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை அர்ச்சித்துப் பூஜித்துவருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத்தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறிப்பதற்குப்போய் இறங்கிற்று; முன்பொருகால் தேவலனென்னும் முனிவன் ஒரு நீர்நிலையில்நின்று தவஞ்செய்துகொண்டிருந்தபோது அவனது காலைப்பற்றி யிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூவென்னுங் கந்தர்வன், அவ்யானையின் காலைக் கௌவிக்கொள்ள, அதனை விடுவித்துக்கொள்ள முடியாமல் கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அப்பொய்கைக் கரையிலே அரைகுலையத் தலைகுலைய விரைந்தெழுந்தருளித் தனது திருவாழியைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன் வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முக்தியை அருளினன். அப்பெருமான் பஞ்சேந்திரியங்களாகிற பல முதலைகளின் வாயிலே அகப்பட்டுத் துடிக்கின்ற நம்மையும் காத்தருள விரும்பித் திருவல்லிக்கேணியிலே நிற்கக்கண்டேனென்றாராயிற்று.

இங்கு "ஆனையின் துயரம்" என்றது உயிர்போகிறதேயென்ற துயரத்தையன்று; வருந்திப்பறித்த இத்தாமரை மலர்களைச் செவ்வியழியாமல் எம்பெருமானது திருவடியிற் சாத்தப்பெறுகின்றிலோமே என்ற துயரத்தையாம். "ஆழி விட்டானை" என்னாது "ஆழி தொட்டானை" என்றது காரியத்தின் லாகவத்தைத் தெரிவித்தவாறு. (சு)

மன்னுதண்பொழிலும் வாவியும்மதிளும் மாடமாளிகையும் மண்டபமும் *
தென்னன் தொண்டையர்கோன்செய்த நன்மயிலைத் திருவல்லிக்கேணி
கன்னிநன்மாட மங்கையர்தலைவன் காமருசீர்க் கலிகன்றி * [நின்றானை *
சொன்னசொல்மாலை பத்துடன்வல்லார் சுகமினிதாள்வர் வானுலகே. (க0)

| | | | | |
|---|---|---|---|---|
| மன்னு | நித்தியமாய் | | மதிளும் | மதில்களும் |
| தண் | குளிர்ந்த | | மாடம் மாளிகையும் | மாடமாளிகைகளும் |
| பொழிலும் | சோலைகளும் | | | |
| வாவியும் | நீர்நிலங்களும் | | மண்டபமும் | மண்டபங்களும் உண்டாம்படி |

| | | | |
|---|---|---|---|
| தென்னன் தொண்டையர் கோன் செய்த | பாண்டிய குலத்தவனான தொண்டைமான் சக்கரவர்த்தி நிருமித்த | காமரு சீர் | சிறந்த ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியை உடையவருமான |
| | | கலிகன்றி | திருமங்கையாழ்வார் |
| நல் மயிலை திரு அல்லிக்கேணி நின்றானை | அழகிய மயிலைக்கடுத்த திருவல்லிக்கேணியிலே நின்றருளும் பெருமான் விஷயமாக, | சொன்ன | அருளிச்செய்த |
| | | சொல் மாலை பத்து உடன் | சொல்மாலையாகிய இப்பத்துப்பாசுரங்களையும் |
| | | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| கன்னி நல் மாடம் மங்கையர் தலைவன் | அழிவில்லாத நல்ல மாடங்களையுடைய திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவரும் | சுகம் இனிது வான் உலகு | ஆநந்தமயமான பரமபதத்தை |
| | | ஆள்வர் | ஆளப்பெறுவர்கள். |

* * *—[மன்னுதண்பொழிலும்.] எப்போதும் குளிர்ந்த பொழில்களும் நீர் நிலங்களும், மதில்களும், மாடங்களும், மாளிகைகளும், மண்டபங்களும் மற்றும் பல ஸந்நிவேசங்களும் அழகாக அமையும்படி தொண்டைமான் சக்கரவர்த்தி ஏறியருளப்பண்ணின திருவல்லிக்கேணியில் அடியார்களை எதிர்பார்த்துக்கொண்டு நின்றருளும் பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய இப் பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் திருநாட்டிலேசென்று நித்ய கைங்கரியம் பண்ணப்பெறுவர்களென்று இத்திருமொழி கற்றார்க்குப்பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

வாவி — வாபீ என்ற வடசொல் விகாரம். மண்டபம் வடசொல். திருவல்லிக்கேணி ஸந்நிதி திருப்ரதிஷ்டை தொண்டைமான் சக்ரவர்த்தியின் கைங்கரியமென்க. நகரப்ரதிஷ்டையும் இவனது கைங்கரியமென்று கூறுவாருமுளர்.

மலயத்வஜனென்கிற பாண்டிய ராஜனுக்குத் தென்னன் என்று பெயர்; "கொன்னவில் கூர்வேல்கோன் நெடுமாறன் தென்கூடல்கோன், தென்னன்" என்ற பெரியாழ்வார் திருமொழியும் காண்க. தொண்டைமான் சக்ரவர்த்தி அத்தென்னனுடைய வம்சத்தில் தோன்றினமைபற்றித் தென்னன் தொண்டையர் கோன் என்றருளிச் செய்யப்பட்டதென்று சொல்லக் கேட்டிருக்கை.

அழகிற் சிறந்த மாதர்கள் வாழுமிடமாயிருந்தகாலும் "ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாட மாமயிலை" என்று ஆழ்வார் தாமும் அருளிச் செய்திருக்கையாலும் மஹிளாபுரீ என்று வடமொழியிலும் மயிலை என்று தென்மொழியிலும் வழங்கப்பட்டு வந்ததே மயிலாப்பூரென்பதாம். அதன் ஸமீபத்திலுள்ள காரணம்பற்றி மயிலைத் திருவல்லிக்கேணி எனப்பட்டது. மஹிளா என்ற வடசொல்—சிறந்த மாதர் என்று பொருள்படும் "மயூரபுரீ" என்றும் சிலர் வழங்குவர். (௧௦)

அடிவரவு :—வில் வேதத்தை வஞ்சனை இந்திரனுக்கு இன்துணை அந்தகன் பாதன் பள்ளியில் மீனமர் மன்னு அன்றாயர்.

## இரண்டாம்பத்து மூன்றாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து நான்காந்திருமொழி

# அன்றாயர்குலக்கொடியோடு.

## திருநீர்மலையிலே சென்று அநுபவிப்பதாம் இத்திருமொழி.

(எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.)

அன்றாயர் குலக்கொடியோடணிமாமலர் மங்கையோடன்பளவி * அவுணர்க்கு
என்றானுமிரக்கமிலாதவனுக்குறையுமிடமாவது * இரும்பொழில்சூழ்
நன்றாயபுனல்நறையூர் திருவாலிகுடந்தை தடந்திகழ்கோவல்நகர் *
நின்றானிருந்தான்கிடந்தான்நடந்தாற்கிடம் மாமலையாவது நீர்மலையே. (க)

| | |
|---|---|
| அன்று | கிருஷ்ணனாய்ப் பிறந்த அக்காலத்து |
| ஆயர் குலம் கொடியோடு | இடைக் குலத்திற் பிறந்த கொடிபோன்ற நப்பின்னைப் பிராட்டியோடும் |
| அணி மா மலர் மங்கையொடு | மிகச் சிறந்த தாமரைமலரிற் பிறந்த பெரிய பிராட்டியோடும் |
| அன்பு அளவி | அன்புடன் கலந்தவனும் |
| என்றானும் | எக்காலத்திலும் |
| அவுணர்க்கு | அசுரர்கள் விஷயத்திலே |
| இரக்கம் இலாதவனுக்கு | இரக்கமில்லாதவனுமான எம்பெருமானுக்கு |
| உறையும் இடம் ஆவது | வாஸஸ்தானமேதுவென்றால்; — |
| இரு பொழில் சூழ் | பரந்த சோலைகளாலே சூழப்பட்டு |
| நன்று ஆய புனல் | நல்ல தீர்த்தங்களையுடைய |
| நறையூர் | திருநறையூரிலே |
| நின்றான் | நின்றவனும் |
| திரு ஆலி | திருவாலியிலே |
| இருந்தான் | வீற்றிருந்தவனும் |
| குடந்தை | திருக்குடந்தையிலே |
| கிடந்தான் | சயனித்தவனும் |
| தடம் திகழ் கோவல் நகர் | தடாகங்களாலே விளங்குகின்ற திருக்கோவலூரிலே |
| நடந்தாற்கு இடம் | உலகளந்த திருக்கோலமாக எழுந்தருளியிருந்தவனுமான எம்பெருமானுக்கு இடமான |
| மா மலை ஆவது நீர்மலை | சிறந்த மலையான திருநீர்மலையாம். |

* * *—[அன்றாயர்.] "ஆயர் குலக்கொடி" என்று நப்பின்னைப் பிராட்டியைச் சொல்லுகிறது. கும்பனென்னும் இடையர்தலைவனது மகளிறே நப்பின்னை யென்பாள். "அணிமாமலர் மங்கை" என்று ஸ்ரீ மஹாலக்ஷ்மியைச் சொல்லி அவளுடைய அம்சமான ருக்மிணிப்பிராட்டியை நினைக்கிறது. ஆக, நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் புணரும் நிமித்தமாகச் சில (எருது ரூபமான) அஸுரர்களைக் கொன்றொழித்தும், ருக்மிணிப்பிராட்டியைத் திருமணம்

புணரும் நிமித்தமாக ருக்மிணி முதலிய சில ஆஸுரப்ரக்ருதிகளைப் பங்கப்படுத்தியும் போந்தமை சொல்லுகிறது—முன் ஒன்றரையடிகளால். இப்படி ஆஸுரப்ரக்ருதிகளைத் தொலைப்பதையே தொழிலாகக் கொண்ட எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் எதுவென்றால்;— மலைகளுக்குள்ளே சிறந்த மலையென்று ப்ரஸித்தி பெற்ற திருநீர்மலையாம். திருநறையூரிலே நின்றதிருக்கோலமாகவும், திருவாலியிலே வீற்றிருந்த திருக்கோலமாகவும், திருக்குடந்தையிலே பள்ளிகொண்ட திருக்கோலமாகவும், திருக்கோவலூரிலே உலகளக்கத் திருவடிநீட்டி நடக்குந்திருக்கோலமாகவும் ஸேவைஸாதிக்கின்ற எம்பெருமான் அந்த நான்குவகைத் திருக்கோலங்களையும் இத்திவ்யதேசமொன்றிலேயே கொண்டருளி ஸேவைஸாதிக்கும்படியை அநுபவித்துப் பேசுகிறார் பின்னடிகளில்.

மாமலையாவது நீர்மலையே என்ற சொல்தொடரிலுள்ள 'ஆவது' என்பதை இடம் என்பதனோடே கூட்டி "இடமாவது மாமலை நீர்மலை" என்று உரைப்பர் சிலர்; அங்ஙனம் வேண்டா; உள்ளபடியே அந்வயித்து உரைத்தல் தகும். மாமலை ஆவது—மாமலையான என்றபடி. நீர்மலை=நீரானது அரண்போலச் சூழப்பெற்ற மலையானது பற்றித் திருநீர்மலை யெனப்படும். (க)

காண்டாவனமென்பதோர்காடமரர்க்கரையனதுகண்டவன் நிற்க * முனே
மூண்டாரழலுண்ணமுனிந்ததுவும் அதுவன்றியும் முன்னுலகம்பொறைதீர்த்து
ஆண்டான் * அவுணனவன்மார்பகலம் உகிரால்வகிராகமுனிந்தரியாய்
நீண்டான் * குறளாகிநிமிர்ந்தவனுக்கிடம் மாமலையாவது நீர்மலையே. (உ)

| | |
|---|---|
| அமரர்க்கு அரையன் அவன் | தேவர்களுக்குத் தலைவனான இந்திரனுடைய |
| கண்டு நிற்க | பார்த்துக்கொண்டிருக்கையில் |
| முனே | அவன் கண் முன்னே |
| காண்டாவனம் என்பது ஓர் காடு அது | 'காண்டவவனம்' என்று ப்ரஸித்தமான வொரு காட்டை |
| ஆர் அழல் | அக்நி பகவான் |
| மூண்டு உண்ண | மேல் விழுந்து உட்கொள்ளும்படியாக |
| முனிந்ததுவும் | சீறி நியமித்தவனும், |
| அது அன்றியும் | அதுவுந்தவிர, |
| முன் | முன்பு (பாரதப்போரில்) |
| உலகம் பொறை தீர்த்து | பூமியின் பாரங்களைத்தீர்த்து |
| ஆண்டான் | உலகங்களை ரக்ஷித்தவனும் |
| அவுணன் அவன் | இரணியாசுரனுடைய |
| அகலம் மார்பு | அகன்ற மார்பு |
| உகிரால் | (திருக்கை) நகங்களாலே |
| வகிர் ஆக | இருபிளவாம்படி |
| முனிந்து | சீறி |
| அரி ஆய் நீண்டான் | நரசிங்கமாய் வளர்ந்திட்டவனும் |
| குறள் ஆகி | (முதலில்) வாமநாவதாரஞ் செய்து |
| நிமிர்ந்தவனுக்கு | (பிறகு) திரிவிக்கிரமனாய் வளர்ந்தவனுமான பெருமானுக்கு |
| இடம் | இடம் (எதுவென்றால்) |

மா மலை ஆவது நீர்மலை—

* * *—[காண்டாவனம்.] "காண்டவவநம்" என்பது 'காண்டாவனம்' என்று கிடக்கிறது. இது தேவேந்திரனுக்கு உரியதாய்ப் பூலோகத்திலிருந்த காடு. ஒருநாள் அக்நிபகவான் ஒரு அந்தணவேடம் பூண்டு, அர்ஜுநனும் கண்ணபிரானும் கூடியிருக்குமிடத்திலே வந்துசேர, அவ்வந்தணனைக் கிருஷ்ணார்ஜுநர்கள் நன்கு உபசரிக்க, அவன் உணவுவேண்ட, 'வேண்டிய உணவை அளிப்போம்' என்று அவ்விருவரும் உறுதிமொழி கூற, உடனே அவ்வந்தணன் தான் இன்னானென்று உண்மை தெரிவித்துக் காண்டவவனத்தைத் தனக்கு இரையாக அளிக்குமாறு வேண்ட, அவர்களும், 'பல கொடிய அசுரர்களும் அரக்கர்களும் துஷ்டமிருகங்களும் நிரம்பியிருக்குமிந்தக் காடு அழிந்தொழிவது நன்றே' என்று நிச்சயித்து அக்நிபகவானை நோக்கி 'அங்ஙனமே உண்பாயாக' என்று அநுமதிதந்ததின்பேரில் அக்நி அக்காடு முழுவதையும் ஆக்கிரமித்துப் பூர்ணதிருப்தியாக உண்டனன் என்ற கதை மஹாபாரதத்தில் ஆதிபருவத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனான கண்ணபிரான் தனது அன்பனான இந்திரன் வருந்தும்படி அவனது காட்டை யழிக்குமாறு அநுமதித்தது அவதாரப்ரயோஜனம் நிறைவேறுதற்காக வென்க; அக்காட்டிலுள்ள அளவற்ற துஷ்ட ஜந்துஸமூஹங்கள் தொலைந்தொழியும் முகத்தால் பூமியின் பாரத்தைக் குறைத்தருளினனென்றுணர்க. இவ்வனத்தின் தன்மையைப்பற்றி வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் காண்டவதகனச் சருக்கத்தில்—"மிடைந்த நால்வகை மகீருகங்களு நெடுவெற்பினங்களுந்துன்றி, அடைந்த தானவரரக்கர் பேருரகருக்காலயங்களுமாகிக், குடைந்துசோரி கொள்வாளுகிரரி முதற்கொடு விலங்கினமிக்குக், கடைந்த கூரெயிற்றுல தக்ககனும் வாழ் கானனமது கண்டா" என்ற செய்யுள் இங்குக் குறிக்கொள்ளத்தக்கது.

இவ்வனத்தை அக்நிபகவான் உண்ணும்போது தேவேந்திரன் அதைத் தடுக்க முயன்றும் பயன்படவில்லை யென்பது விளங்க "**கண்டு அவன் நிற்க முனே**" எனப்பட்டது.

காண்டவவனத்தை எரிக்க அநுமதித்த முகத்தால் பூமிபாரங்களைத் தொலைத்தும், தானே நேரில் பலதுஷ்டஜனங்களைக் கொன்றொழித்து அம்முகத்தாலும் பூமிபாரங்களைத் தொலைத்தும் அருளின எம்பெருமானுறையுமிடம் திருநீர்மலை என்றாராயிற்று.

அரையன்—அரசன். முனே—முன்னே. வகிர்—பிளவு. (உ)

அலமன்னுமடல் சுரிசங்க மெடுத்தடலாழியினு லணியாருருவில் *
புலமன்னு வடம்புனை கொங்கையினாள் பொறைதீர முனாளடு வாளமரில் *
பலமன்னர்படச் சுடராழியினைப் பகலோன் மறையப் பணிகொண்டணிசேர் *
நிலமன்னனுமா யுலகாண்டவனுக்கிடம் மாமலையாவது நீர்மலையே. (௩)

| | |
|---|---|
| அணி ஆர் உருவில் | அழகு பொருந்திய திருமேனியிலே |
| அடல் ஆழியினால் | தீக்ஷணமான திருவாழியோடுகூட |
| அலம் | கலப்பையையும் |
| மன்னும் அடல் சுரி சங்கம் | (எதிரிகட்கு) நித்யபயங்கரமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் |
| எடுத்து | தரித்துக் கொண்டிருப்பவனும் |
| முன் | முன்னொருகால், |
| புலம் மன்னு வடம் புனை கொங்கையினாள் | மனோஹரமான முத்துவடங்களணிந்த முலையையுடையளான பூமிப்பிராட்டியினுடைய |
| பொறை | பாரமானது |
| தீர | தொலையும்படி |
| ஆள் அடு வாள் அமரில் | ஆள்களை யெல்லாம் முடிக்கிற மஹத்தான யுத்தத்திலே |
| பல மன்னர் பட | பல அரசர்கள் நசிக்கும்படி (செய்தவனும்) |
| பகலோன் மறைய | ஸூர்யன் மறையும்படியாக |
| சுடர் ஆழியினை பணிகொண்டு | ஒளிமிக்க திருவாழியைக் காரியங் கொண்டவனும் |
| அணி சேர் நிலம் மன்னனும் ஆய் | அழகிய இந்நிலத்திற்கு நாயகனாயிருந்துகொண்டு |
| உலகு ஆண்டவனுக்கு | உலகங்களை ரக்ஷித்தவனாயுமிருக்கிற பெருமானுக்கு |
| இடம் | இருப்பிடம் |

மா மலை ஆவது நீர்மலையே—.

* * *—[அலமன்னுமடல்.] திருநீர்மலையிலெழுந்தருளியிருக்கிற எம்பெருமான் எப்படிப்பட்டவனென்னில்;—தனது அழகிய திருமேனியிலே திருவாழி திருச்சங்கு கலப்பை முதலிய திவ்யாயுதங்களைத் தரித்துக்கொண்டிருப்பவன்; முன்னொருகால் பூமிப்பிராட்டியின் பாரத்தைத் தொலைப்பதற்காக ஏற்பட்ட பெரிய போர்க்களத்திலே [அதாவது—பாரதயுத்தத்திலே] பல்லாயிரமரசர்களை மாளச்செய்தவன்; அந்தப் போர்தன்னிலே ஜயத்ரதனைக் கொல்லத் துணிந்த அர்ஜுநனது பிரதிஜ்ஞையை நிறைவேற்றுதற்காகத் தனது திருவாழியைக்கொண்டு ஸூர்யனை மறைத்தவன்; இந்நிலவுலகம் முழுமைக்கும் பிரபுவாயிருந்துகொண்டு உலகங்களை ரக்ஷித்தருளும் பெருமான்; இப்படிப்பட்ட பெருமானுக்கு இருப்பிடம் திருநீர்மலை என்றதாயிற்று

எம்பெருமான் பலராமனாகத் திருவவதரித்தபோது கலப்பையை ஆயுதமாகக் கொண்டருளினனென்க. 'ஹலாயுதன்' என்றிறே பலராமனது திருநாமம். கலப்பையென்னும் பொருளதான ஹலம் என்ற வடசொல் இங்கு அலமெனத் திரிந்தது.

புலமன்னு வடம்புனை கொங்கையினாள் = திருமடந்தைபோலே மண்மடந்தையும் எம்பெருமானுக்குத் திவ்யமஹிஷியாதலால் இங்ஙனே சிறப்பித்து வருணிக்கப்பட்டாள்.

புலம்மன்னுவடம் = கண்ணும் மனமுமாகிற இந்திரியங்கள் வேறு பொருள்களிற் செல்லாது தன்னிடத்திலேயே பொருந்தியிருக்கப்பெற்ற முத்து

வடம்; எனவே, மநோஹரமான முத்துவடமென்றதாயிற்று. பாரதயுத்தத்தில் எண்ணிறந்த ஆண்பிள்ளைகள் முடிந்தமைபற்றி ஆளடுவோளமர் எனப்பட்டது.

பகலோன்மறையச் சுடராழியினைப் பணிகொண்ட வரலாறு:—அர்ஜுநன் பதின்மூன்றுநாட் போரில் தன் மகனான அபிமந்யுவைக் கொன்ற ஜயத்ரதனை மறுநாள் ஸூர்யன் அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்வதாகப் பல பிரதிஜ்ஞைகள் செய்ய, அது நிறைவேறக்கூடாதென்று அந்த ஜயத்ரதனை எதிரிகளால் உட்புகமுடியாதபடியாக வ்யூஹத்திலே நிறுத்திக் காப்பாற்றிக்கொண்டிருந்த ராஜாக்கள்முன்னே ஸ்ரீக்ருஷ்ணன் பகல்நாழிகை முப்பதும் சென்றதாகத் தோற்றும்படி, நினைவறிந்து காரியஞ்செய்யும் தனது சக்கராயுதத்தைக்கொண்டு ஸூர்யனை மறைக்க, 'ஆதித்யன் அஸ்தமித்தான், இனி நமக்குப் பிராணபயமில்லை; அர்ஜுநன் பிரதிஜ்ஞை செய்திருக்கிறபடியே அக்நிப்ரவேசம் செய்யப் போவதைக் கண்டு களிப்போம்' என்றெண்ணி ஜயத்ரதன் வெளிப்பட்டு நின்ற வளவிலே கண்ணபிரான் ஸுதர்சநாழ்வானை மீட்டுக்கொள்ள, ஸூர்யன் இன்னும் அஸ்தமிக்கவில்லையென்று உணர்ந்துகொண்ட அர்ஜுநன் உடனே தனது அம்பைக்கொண்டு அந்த ஜயத்ரதனைத் தலையறுத்துவிட்டனன் என்பதாம்.

கோடி ஸூர்யப்ரகாசமான திருவாழியைக்கொண்டு ஸூர்யனை மறைத்தல் எங்ஙனம் கூடுமெனின்; ஸூர்யனுடைய ஒளி கண்ணாலே காணலாம்படி அளவுபட்டிருத்தலால் இருட்டைப் போக்கும்; அப்படியல்லாமல் திருச்சக்கரத்தினொளி நேராகக் கண்கொண்டு பார்க்கமுடியாதபடி அளவுபடாத மிக்க பேரொளியைக் கொண்டுள்ளதனால் பளபளத்துக் கண்களை இருளப்பண்ணுமெனச் சமாதானங் கூறுவர் பெரியோர். மற்றுஞ் சிலவகையான ஸமாதானங்களும் கூறுவாருளர். ... ... ... ... (௩)

தாங்காததோராளரியாயவுணன்தனை வீடமுனிந் தவனாலமரும் *
பூங்கோதையர் பொங்கெரிமூழ்கவிளைத்ததுவன்றியும் வென்றிகொள் வாளமரில் *
பாங்காகமுனைவரோடன்பளவிப் பதிற்றைந்திரட்டிப் படைவேந்தர்பட *
நீங்காச் செருவில் நிறைகாத்தவனுக்கிடம் மாமலையாவது நீர்மலையே. (௪)

| | | | |
|---|---|---|---|
| தாங்காதது | எதிரிகளுக்கு ஸஹிக்க முடியாத | பொங்கு எரி மூழ்க | எரிகிற நெருப்பிலே புகும்படி |
| ஓர் ஆள் அரி ஆய் | ஒப்பற்ற நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றி | விளைத்து | செய்தவனாயும், |
| அவுணன் தனை | (ஹிரண்யனென்னும்) அஸுரனை | அது அன்றியும் | அதுவுமல்லாமல், |
| வீட முனிந்து | முடியுமாறு சீறி, | முன் | முன்னே |
| அவனால் அமரும் | அவ்விரணியனால் நிலை பெற்றிருந்த | வென்றி கொள் வாள் அமரில் | வெற்றியையுடைய பெரிய போர்க்களத்திலே |
| பூங்கோதையர் | பெண்டுகள் | ஐவரொடு | பஞ்சபாண்டவர்களோடே |

பாங்கு ஆக அன்பு அளவி { அவர்களுக்குத் தக்கபடி உறவுபண்ணிக் கலந்து,
படை { ஆயுதங்களை யுடையவர்களான
பதிற்றைந் திரட்டி வேந்தர் பட { நூற்றுவரான துரியோத ஞதிகள் முடிந்து போம் படி செய்தவனும்
நீங்கா செருவில் { மாளாத அப்பெரும் பூசலிருலே
நிறை (த்ரௌபதியின்) நலத்தை
காத்தவனுக்கு { ரக்ஷித்தவனுயுமுள்ள ஸர்வேச்வரனுக்கு
இடம் மா மலை ஆவது நீர்மலையே—.

[தாங்காததோராளரி.] திருநீர்மலையிலெம்பெருமான் எப்படிப்பட்டவ னெனில்; எவ்வகையாலும் எதிரிகட்குப் பொறுக்கமுடியாத மிக்க பிரதாபத்தை யுடைய நரஸிம்ஹமூர்த்தியாய்த் திருவவதரித்து ஹிரண்யாஸுரனை முடித்த தனுல் அவ்விரணியனுல் நிலைபெற்றிருந்த பெண்டுகள் நெருப்பிலே விழுந்து உயிர்துறக்கும்படி செய்தவன்; பஞ்சபாண்டவர்கட்குப் படைத்துணையா யிருந்து துரியோதநாதியரை மாள்வித்தவன்; பாண்டவர் மனைவியான பாஞ் சாலியின் மானத்தைக் காத்தருளினவன்; இப்படிப்பட்ட எம்பெருமானெழுந் தருளியிருக்குமிடம் திருநீர்மலை.

நீங்காச்செருவில் நிறைகாத்தவனுக்கு என்றவிடத்து, "பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப் பாரதத்துக், கந்தார் களிற்றுக் கழல் மன்னர் கலங்கச் சங்கம்வாய்வைத்தான்" என்ற பாசுரமும், "அர்ஜுநனுக்கு தூத்ய ஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்தியுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக" என்ற ஸ்ரீவசநபூஷணஸூக்தியும் அநுஸந்திக்கத்தக்கன. ... ... (௪)

மாலுங்கடலார மலைக்குவடிட்டணைகட்டி வரம்புருவ மதிசேர் *
கோலமதிளாய விலங்கைகெடப் படைதொட்டொருகாலமரிலதிர *
காலமிதுவென் றயன்வாளியினுல் கதிர்நீண்முடி பத்துமறுத்தமரும் *
நீலமுகில்வண்ண னேமக்கிறைவற்கிடம் மாமலையாவது நீர்மலையே. (௫)

ஒரு கால் முன்னொருகாலத்திலே
மாலும் கடல் ஆர { பெரிய கடல் நிறையும்படி
மலைக்குவடு இட்டு { மலைக் கொடுமுடிகளைக் கொண்டு போட்டு
வரம்பு உருவ { அக்கரையிலே சென்று சேரும்படி
அணை கட்டி ஸேது கட்டி,
மதி சேர் { சந்திரன் வரையில் ஓங்கியிருக்கிற
கோலம் மதிளாய { அழகிய மதிள்களை யுடைத்தான
இலங்கை லங்காபுரியானது
கெட அழியும்படியாக
படை தொட்டு ஆயுதங்களைச் செலுத்தி (அவ்வளவிலும் இராவணன் சளைக்காமல்)
அமரில் அதிர { போர்க்களத்தில் நின்று குமுறின வளவிலே
இது காலம் என்று { இவனை முடிப்பதற்கு இதுவே தக்க ஸமய மென்று கொண்டு
அயன் வாளியினுல் { ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே
கதிர் நீள் முடி பத்தும் அறுத்து { (கிரீடங்களால்) ஒளிபெற்ற நீண்ட பத்துத் தலைகளையும் அறுத்து
அமரும் { அயோத்திமாநகரில் பிராட்டியும் தானுமாக வந்து சேர்ந்த
நீலம் முகில் வண்ணன் { காளமேக நிறத்தனுன்
எமக்கு இறைவற்கு { எம்பெருமானுக்கு
இடம் மா மலை ஆவது நீர்மலையே—,

[மாலுங்கடலார.] துஷ்டநிக்ரஹமும் சிஷ்டபரிபாலனமும் செய்தருளும் பொருட்டு ஸ்ரீராமனாகத் திருவவதரித்த காலத்துப் பஞ்சவடியில் பிராட்டியைப் பறிகொடுத்தபின்பு இலங்கையினின்றும் அவளை மீட்டுக்கொணர்வதற்காகக் கடலைக்கடக்க நேர்ந்தபோது வானரவீரர்களினால் மலைக்கொடுமுடிகளைக் கொண்டு கடலிலே போடுவித்து அணைகட்டி அதன் வழியாக இலங்கைசென்று சேர்ந்து அந்நகரி அழியும்படியாக ஆயுதங்களைச் செலுத்தினபோது இராவணன் சளைக்காமல் போர்க்களத்திலே நின்று குமுறினவளவிலே, 'இவனுக்கு நல்ல புத்தியுண்டாகி நல்வழிப்படக்கூடுமோவென்று ஆந்தனையும் பார்த்தோம்; இவனுக்கு விபரீதபுத்தியொழிய அநுகூலபுத்தி அற்பமுமில்லை; இனி இவனை முடிப்பதே நன்று; முடிப்பதற்கு இதுவே நல்ல காலம்' என்று அறுதியிட்டு ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே அவன் தலைகளையெல்லாம் அறுத்துத்தள்ளிப் பிராட்டியைக்கொண்டு அயோத்திமாநகர்க்கு மீண்டெழுந்தருளி அரசாண்ட பெருமான் உறையுமிடம் திருநீர்மலை என்றதாயிற்று. ... ... (ரு)

பாராருலகும் பனிமால்வரையும் கடலும் சுடருமிவையுண்டும்*எனக்
காராதேன நின்றவனெம்பெருமான் அலைநீருலகுக்கரசாகிய*அப்
பேரானை முனிந்த முனிக்கரையன் பிறரில்லை நுனக்கேனு மெல்லையினான்*
நீரார் பேரான் நெடுமாலவனுக்கிடம் மாமலையாவது நீர்மலையே. (சு)

- ஆர் பார் உலகும் — விசாலமான பூலோகமும்
- பனி மால் வரையும் — குளிர்ந்த பெரிய மலைகளும்
- கடலும் — ஸமுத்ரங்களும்
- சுடரும் — சந்திர ஸூரியர்களும்
- இவை — ஆகிய இவற்றையடங்கலும்
- உண்டும் — அமுது செய்தும்
- எனக்கு ஆராது என நின்றவன் — 'எனக்கு வயிறு நிறைய வில்லையே!' என்று சொல்லிக்கொண்டேயிருந்தவனும்
- எம்பெருமான் — எம்போலியர்க்கு ஸ்வாமியானவனும்,
- அலை நீர் உலகுக்கு அரசு ஆகிய அப்பேரானை முனிந்த முனிக்கு அரையன் — கடல் சூழ்ந்த உலகத்துக்கு ராஜாக்களென்கிற அந்தப் பேரையுடைய க்ஷத்ரிய குலத்தைச் சீறிக்களைந்த பரசுராம முனிவராகத் தோன்றினவனும்
- நுனக்கு பிறர் இல்லை எனும் எல்லையினான் — 'உனக்கு மேற்பட்டாரொருவருமில்லை' என்னும்படியாகப் பெருமையின் எல்லையிலே நிற்பவனும்
- நீர் ஆர் பேரான் — நீர்வண்ணனென்னும் திருநாமத்தையுடையவனுமான
- நெடு மால் அவனுக்கு — ஸர்வேச்வரனுக்கு
- இடம் மா மலை ஆவது நீர்மலையே—.

[பாராருலகும்.] திருநீர்மலையிலுள்ள பெருமான் எப்படிப்பட்டவனெனில்; "உலகமுண்ட பெருவாயன்" என்றபடி உலகிலுள்ள பதார்த்தங்களெல்லாவற்றையும் வயிறுநிறைய அமுதுசெய்தும் இன்னமும் இப்படிப்பட்ட உலகங்கள் பல்லாயிரம் உள்ளே யடங்கும்படி இடமுடையவன்; இருபத்தொரு தலைமுறையளவும் இவ்வுலகில் க்ஷத்ரியப்பூண்டு வேரறும்படி களைந்தொழித்த பரசுராம

முனிவரனுக அவதரித்தவன் ; தனக்கு மேற்பட்டா ரொருவருமில்லை யென்னும் படி பெருமையின் மேலெல்லையிலே நிற்குமவன் ; நீர்வண்ணனென்று திருநாம முடையவன் ; இப்படிப்பட்ட ஸர்வேச்வரனுக்கு உறைவிடம் திருநீர்மலை.

உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்ரியவம்சங்கள் பலவற்றை நாசஞ்செய்தற்பொருட்டு நாராயணமூர்த்தி ஜமதக்நிமுனிவரது மனைவியான ரேணுகையினிடம் இராமனாய்த் திருவவதரித்துப் பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனாற் பரசுராமனென வழங்கப்பெற்று, தனது தந்தையின் ஹோமதேனுவைக் கவர்ந்து அவனைக் கொன்றிட்டது காரணமாகக் கார்த்தவீர்யார்ஜுநனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அதனாலேயே க்ஷத்ரியவம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டான். இப்பரசுராமன் ஏழு சிரஞ்ஜீவிகளில் ஒருவன். இவனது வலிமையும் வெற்றியும் அற்புதமானது. சிவபிரானது கைலாஸகிரியைப் பெயர்த்தெடுத்த இராவணன் மிக வலியவனென்றும், அவனிலும் கார்த்தவீரியன் வலியவனென்றும், அவனிலும் பரசுராமன் வலியவனென்றும் இதிஹாஸங்களால் விளங்கும். விஷத்தையுண்டு கங்கையைத்தரித்து மேரு வில்வளைத்துத் திரிபுரமெரித்து மன்மதனை நீறுபடுத்தி யமனையுதைத்து ஸம்ஹாரத் தொழில் நிகழ்த்தும் பேராற்றலையுடைய உக்ரமூர்த்தியாவான் ருத்ரன் ; அக்கடவுள் வீற்றிருக்கின்ற கைலாஸகிரியை ஒருகால் இராவணன் வேரோடு பெயர்த்தனன் ; அங்ஙனம் மிக வலியவனாய்த் திக்விஜயஞ்செய்து திக்கஜங்களையும் வென்ற இராவணனைக் கார்த்தவீர்யார்ஜுநன் கட்டிச்சிறையிலிட்டனன் ; அவனைப் பரசுராமபிரான் தோள் துணித்துத் தொலைத்திட்டனன் என்க. எம்பெருமானுடைய தசாவதாரங்களுள் ஆறும் அவதாரமாயிருப்பன் இப்பரசுராமன்.

இப்படிப்பட்ட பரசுராமன் ஏழாம் அவதாரமான தசரதராமன் மீது கோபித்தலும், இவ்விருவரும் ஒருவரோடொருவர் போர்செய்தலும், ஒருவர் மற்றொருவரை வெல்லுதலும் பொருந்துமோ வெனின் ;— துஷ்டர்களாய்க் கொழுத்துத் திரிந்த அரசர்களைக் கொல்லும்பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்தி விசேஷம் அக்காரியம் முடிந்தபின்பு அவ்விஷ்ணுவின் அம்சாவதாரமான தசரதராமனுற் கவர்ந்து கொள்ளப்பட்ட தாகையால் பொருந்துமென்க. இதனால், ஆவேசாவதாரத்திற்காட்டிலும் அம்சாவதாரத்திற்கு உள்ள ஏற்றம் விளங்கும்.

ஸ்ரீமந்நாராயணனது விபவாவதாரங்கள் அளவற்றவை ; அவை முக்கியம் அமுக்கியம் என இருவகைப்படும். இவற்றில் முந்தியது சிறந்தது. பிந்தியது அதனிலும் தாழ்ந்தது. முக்கியமாவது ஸாக்ஷாதவதாரம். அமுக்கியமாவது ஆவேசாவதாரம். ஆவேசந்தான் ஸ்வரூபாவேச மென்றும் சக்தியாவேச மென்றும் இருவகையதாம். ஸ்வரூபாவேசமாவது—சேதநருடைய சரீரங்களில் எம்

பெருமான் தன்னுடைய ரூபத்துடன் ஆவேசித்து நிற்பது. பரசுராமன், பலராமன் போல்வார் இத்திறத்தார்கள். சக்தியாவேசமாவது—சேதநர்பக்கல் காரியகாலத்திலே எம்பெருமான் சக்திமாத்திரத்தால் தோன்றி விளங்குதல். கார்த்தவீர்யார்ஜுநன், அர்ஜுநன், வ்யாஸர் போல்வார் இத்திறத்தார். இவற்றில் சக்தியாவேசத்தைவிட ஸ்வரூபாவேசம் பிரபலம். இவற்றின் உண்மை நிலையை விஷ்வக்ஸேநஸம்ஹிதை முதலிய ஸ்ரீபாஞ்சராத்ரஸம்ஹிதைகளிலும் தத்வத்ரயத்திலும் அதன் வியாக்கியானத்திலும் பரக்கக் காணலாம். பரசுராமாவதாரம் ஸ்வரூபாவேசாவதாரம்.

முமுக்ஷுக்களுக்குப் பரசுராமாவதாரம் உபாஸனைக்கு உரியதன்றாகிலும் விரோதிகளைக் களைந்தொழித்த உபகாரத்துக்குத் தோற்றுத் துதிப்பதுமாத்திரமுண்டு. 1. "மன்னடங்க மழுவலங்கைக் கொண்ட இராமநம்பி" என்றும் **2.** "வென்றிமாமழுவேந்தி முன்மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்ற தேவா!" என்றும் ஆழ்வார்களருளிச்செய்வதும் விரோதிநிரஸநஸ்வபாவத்துக்குத் தோற்றுத் துதித்தமாத்திரமேயென்க.

மூன்றாமடியின் முதலில் "பேரானை" என்றது ஜாத்யேகவசநம் என்று கொண்டால் 'க்ஷத்ரியர்கள்' என்று பொருள்படும். அன்றி, கார்த்தவீர்யார்ஜுநனொருவனையே சொல்லிற்றாகவுமாம்.

"பிறரில்லைநுனக்கு" என்றது—பக்தர்கள் சொல்லும் சொல்லின் அநுகாரமென்க.

நீரார்பேரான் = திருநீர்மலை யெம்பெருமானுக்கு நீர்வண்ணன் என்று திருநாமம். "நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன்" என்ற திருநெடுந்தாண்டகம் காண்க. ... ... ... ... (சு)

புகராருருவாகி முனிந்தவனைப் புகழ்வீட முனிந்துயிருண்டு * அசுரன்
நகராயின பாழ்பட நாமமெறிந்ததுவன்றியும் வென்றிகொள் வாளவுணன் *
பகராதவ னாயிரநாமமடிப் பணியாதவனைப் பணியாலமரில் *
நிகராயவன் நெஞ்சிடந்தானவனுக்கிடம் மாமலையாவது நீர்மலையே. (எ)

| | | | |
|---|---|---|---|
| புகர் ஆர் உரு ஆகி | (கண்ணபிரானை தன்னைப்போலவே சங்கு சக்கரங்களைச் செய்வித்துத் தரித்துக் கொண்டதனால்) ஒளிமிக்க உருவை யுடையனாய் | புகழ் வீட முனிந்து | (அவனுடைய) புகழ் ஒழியும்படி சீறி |
| | | உயிர் உண்டு | (அவனது) பிராணனை அபஹரித்தவனும், |
| முனிந்தவனை | (தன்மீது) கோபத்தைக் காட்டினவனான பௌண்ட்ரக வாஸுதேவனை | அசுரன் | ஆஸுரப்ரக்ருதியான அவனுடைய |
| | | நகர் ஆயின | நகரங்களாக அமைந்திருந்த பல ஸ்தானங்களை |

1. பெரியாழ்வார் திருமொழி 5—4—6. 2. பெரிய திருமொழி 5—3—1.

நாமம் பாழ்பட எறிந்து — பேருங்கூட அழிந்துபோம்படியாக த்வம்ஸம் பண்ணினவனும்
அது அன்றியும் — அது தவிரவும்,
வென்றி கொள் வாள் — வெற்றிபொருந்திய வாளைத் துணையாகவுடையனாய்
ஆயிரம் நாமம் பகராதவன் — (தன்னுடைய) ஸஹஸ்ர நாமங்களில் ஒன்றையும் சொல்லாதவனாய்
அடி பணியாதவன் — திருவடிகளிலே வணங்காதவனாய்
அமரில் நிகர் ஆயவன் — போர்புரிவதில் தன்னோடு ஒத்தவனாயிருந்த
அவுணனை — இரணியாசுரனுடைய
நெஞ்சு — மார்வை
பணியால் — (ப்ரஹ்லாதனுடைய) சொல்நிமித்தமாக
இடந்தான் அவனுக்கு — பிளந்தவனுமான எம்பெருமானுக்கு
இடம் மா மலை ஆவது நீர்மலை—.

[புகராருருவாகி.] ஸ்ரீக்ருஷ்ணாவதாரகாலத்தில் பௌண்ட்ரகவாஸுதேவன் என்பானொரு அரசன் பிறந்திருந்தான்; பல மூடர்கள் திரண்டு 'நீதான் வாஸுதேவன்' என்று அவனைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். அதனால் அவனும் 'நானே வாஸுதேவன்' என்று மயங்கி மார்பு நெறித்துச் சங்கு சக்கரம் கிரீடம் முதலியவற்றைச் செய்வித்துத் தானணிந்துகொண்டு, தூதனையழைத்து "நீ கிருஷ்ணனிடம் போய் என் பெயரைச்சொல்லி 'இன்னான் வாஸுதேவனாயிருக்க, நீ அவனுடைய சங்கு சக்கரங்களைத் தரிக்கக்கூடாது; இன்று முதல் விட்டுவிட வேண்டியது; இல்லையாகில் அவனோடு யுத்தஞ்செய்து அவனை வென்றாயாகில் தரிக்கலாம்' என்று சொல்லவேண்டியது" என்று சொல்லியனுப்ப, அங்ஙனமே அந்தத்தூதன் வந்து கிருஷ்ணனிடம் அச்செய்தியைச் சொல்ல, கண்ணபிரான் சினமுற்றுப் பெரியதிருவடியின்மீதேறிச் சென்று போர்செய்து அப்பௌண்ட்ரகனைத் தனது திருவாழியினால் தலையறுத்துக் கொன்றொழித்தனன்—என்ற கதையை முன்னடிகளிலருளிச் செய்கிறார்.

பௌண்ட்ரகன் க்ருத்ரிமமான சங்குசக்கரங்களைச் செய்வித்து அணிந்துகொண்டதனால் ஒருதேஜஸ்ஸு தோன்றப்பெற்றமைபற்றிப் புகராருருவாகி முனிந்தவனென்றார். அவன் தனக்காக அமைத்துக் கொண்டிருந்த பல நகரங்களையும் கண்ணபிரான் நீறுபடுத்தினவீறு இரண்டாமடியில் கூறப்பட்டது. ஹிரண்யகசிபுவின் உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனை முடித்தமை சொல்வன முன்னடிகள்-என்றும் வியாக்கியானித்தருளினர் பெரியோர்.

நாம மெறிந்து = பெயருங்கூட இல்லையாம்படி செய்து.

இனி, பின்னடிகள் இரணியனை முடித்தமை கூறுவன.

ஆகவிப்படி துஷ்டர்களைக் களைந்தொழித்து சிஷ்டர்களைக் காத்தருளும் பெருமானுக்கு உறைவிடம் திருநீர்மலை—என்றாராயிற்று. ... (எ)

பிச்சச்சிறுபீலி பிடித்துலகில் பிணந்தின் மடவாரவர்போல் * அங்ஙனே
அச்சமிலர் நாணில ராதன்மையால் அவர்செய்கைவெறுத்தணிமா மலர்தூய் *
நச்சிநமனாரடையாமை நமக்கருள்செய்யென வுள்குழைந்தார்வமொடு *
நிச்சம்நினைவார்க் கருள்செய்யுமவற்கிடம் மாமலையாவது நீர்மலையே. (அ)

| | |
|---|---|
| உலகில் | இவ்வுலகத்திலே |
| பிச்சம் சிறு பீலி பிடித்து | பிச்சங்களையுடைத்தாய்ச் சிறிதான மயிலிறகைக் கையிலே வைத்துக் கொண்டு (இருப்பவர்களான ஜைநர்கள்) |
| பிணம் தின் மடவார் அவர் போல் அங்ஙனே | பிணங்களைப் பிடுங்கித் தின்கிற பிசாச ஸ்த்ரீகளைப்போலே |
| | (திகம்பரர்களாய்த் திரிகையாலே) |
| அச்சம் இலர் | பயமில்லாதவர்களாயும் |
| நாண் இலர் ஆதன்மையால் | வெட்கமில்லாதவர்களாயுமிருக்கையாலே |
| அவர் | அப்படிப்பட்ட ஜைநர்களினுடைய |
| செய்கை | நடத்தைகளை |
| வெறுத்து | வெறுத்துத் தள்ளிவிட்டு |
| அணி மா மலர் தூய் | அழகிய சிறந்த புஷ்பங்களைக்கொணர்ந்து ஸமர்ப்பித்து |
| நச்சி | பக்திபண்ணி |
| நமனார் அடையாமை நமக்கு அருள் செய் என | 'யமன் (எங்களைக்) கிட்டாதபடி (எமக்கு) அருள்புரியவேணும்' என்று |
| உள் குழைந்து | மனங்குழைந்து |
| ஆர்வமொடு | அன்புடனே |
| நிச்சம் | நித்யமாக |
| நினைவார்க்கு | அநுஸந்திக்கு மடியவர்களுக்கு |
| அருள் செய்யுமவற்கு | கிருபைபண்ணுகிற எம்பெருமானுக்கு |
| | இடம் மா மலை ஆவது நீர்மலை—. |

[பிச்சச்சிறுபீலி,] முன் ஒன்றரையடியால் ஜைநர்களின் நடவடிக்கையைப் பழித்துக் கூறுகின்றார். ஜீவஹிம்ஸை செய்யக்கூடாதென்கிற நூற்கொள்கையிலே ஜைநர்கள் மிகவும் ஊற்றமுடையராயிருப்பர்; தரையில் நடக்கும்போது பூச்சிகளும் புழுக்களும் காலில்மிதிபட்டு முடிந்து போகுமென்று ஜீவஹிம்ஸைக்கு வெருவி மயிலிறகுகளை விளக்குமாறுகக்கட்டிக் கையிலேகொண்டு தரையை விளக்கிக்கொண்டே நடந்துசெல்லுவார்கள்; இதனைச் சொல்லுகிறது "பிச்சச்சிறுபீலி பிடித்து" என்று. திகம்பரச்சாமிகளாய்த் திரிவது மூண்டாகையால் அதனைச் சொல்லுகிறது "பிணந்தின் மடவாரவர்போல் அச்சமிலர் நாணிலர்" என்று. பிணங்களைப்பிடுங்கித் தின்கிறபிசாசுகள் வெட்கமும் அச்சமுமின்றியே துணியில்லாமல் திரிவதுபோலத் திரிகின்றனராம் ஜைநர்கள். இதுபற்றியே 'ஜைநப்பிசாசுகள்' என்ற வ்யவஹாரம் உலகிற்பெரும்பாலும் வழங்குகின்றதென்பர். இப்படி அநாவச்யகமாயும் அநுசிதமாயுமுள்ள நடத்தைகளையுடைய ஜைநர்களின் செய்கையிலே ஜுகுப்ஸைகொண்டு அந்தரங்க பக்தியுடனே தன்னைவந்துபணிகின்ற பக்தர்கட்கு அருள்செய்யும் பெருமானுறையுமிடம் திருநீர்மலை—என்றதாயிற்று.

நித்யம் என்ற வடசொல் நிச்சமெனத்திரிந்தது. "நமக்கு நிச்சம் அருள் செய்" என்றும், "நிச்சம் உள்குழைந்து நினைவார்க்கு" என்றும், "நிச்சம் அருள் செய்யுமவற்கு" என்றும் மூன்றுவிதமாக அந்வயிக்கலாம்.

அவைதிகமதங்களில் அபிமானத்தை விட்டொழித்து வைதிகஸம்ப்ரதாயத்தில் அன்புபூண்டிருக்குமடியவர்கட்குத் திருவருள் செய்பவன் திருமால் என்கிறது இப்பாட்டு. ... ... ... ... ... (அ)

பேசுமளவன்றிது வம்மின் நமர்! பிறர்கேட்பதன்முன், பணிவார்வினைகள் *
நாசமது செய்திடுமாதன்மையால் அதுவே நமதுய்விடம் நாண்மலர்மேல் *
வாசமணி வண்டறை பைம்புறவில் மனமைந்தொடு நைந்துழல்வார் * மதியில்
நீசரவர்சென் றடையாதவனுக்கிடம் மாமலையாவது நீர்மலையே. (௯)

| | |
|---|---|
| நமர் | நம்முடையவர்களே! |
| இது பேசும் அளவு அன்று | இந்த திவ்யதேசவைபவம் நம்மால் சொல்லி முடிக்கப்போகாது ; |
| பிறர் கேட்பதன் முன் | (இது) நாஸ்திகாதிகளின் காதில் விழுவதற்கு முன்னமே |
| வம்மின் | வந்து கேளுங்கள் ; |
| அது | அந்த திவ்யதேசமானது |
| பணிவார் வினைகள் நாசம் செய்திடும் | தன்னை வணங்குமவர்களின் பாவங்களைத் தொலைக்கும் ; |
| ஆதன்மையால் | ஆகையாலே |
| அதுவே | அந்த திவ்யதேசமே |
| நமது உய்வு இடம் | நாம் உஜ்ஜீவிப்பதற்கு உளுப்பானது ; |
| | (அஃது எவ்விடமென்றால்) |
| மனம் ஐந்தொடு நைந்து உழல்வார் | நெஞ்சானது ஐந்து விஷயாந்தரங்களிலே செல்லப்பெற்று மிகவும் வருந்துகிறவர்களாயும் |
| மதி இல் | புத்தி கெட்டவர்களாயுமிருக்கிற |
| நீசர் அவர் | அற்ப மனிதர்கள் |
| சென்று அடையாதவனுக்கு இடம் | சென்று கிட்ட முடியாதவனான எம்பெருமானுக்கு இடமானதும் |
| நாள் மலர் மேல் | அப்போதலர்ந்த பூவின் மேலே (படிந்து) |
| வாசம் அணி வண்டு | பரிமளத்தை ஏற்றுக் கொண்ட வண்டுகள் |
| அறை | ரீங்காரம் செய்யப்பெற்ற |
| பை புறவில் | பரந்த சோலைகளையுடையதுமான |
| மா மலை ஆவது நீர்மலை | சிறந்த மலையாகிய திருநீர்மலையாம். |

[பேசுமளவன்றிது.] நாம் அடைந்து உஜ்ஜீவிப்பதற்குப் பாங்கான திவ்ய தேசம் திருநீர்மலை என்று சில அந்தரங்கர்களையழைத்து ஏகாந்தமாக அருளிச்செய்கிறார். நமர் என்றது அண்மைவிளி ; நம்முடையவர்காள்! என்று அந்தரங்கர்களான சில பகவத்விஷயரஸிகர்களை அழைக்கிறபடி. நமர்களே! பிறர்கேட்பதன்முன் வம்மின் = சிறந்த அர்த்தவிசேஷம் நாஸ்திகர்களின் செவிபிற்படக்கூடாதாகையால் உங்களுக்கு ஏகாந்தமாகச் சொல்லுகிறேன் வாருங்கள் என்றழைக்கிறார். சொல்லப்புகுவதற்கு முன்னே திவ்ய தேச வைபவத்தைத் தாம் அநுஸந்தித்து "இது பேசுமளவன்று" என வியக்கிறார். பணியுமவர்களின் தீவினைகள் முழுவதையும் உடனே நாசஞ் செய்யுமதான இத் திவ்யதேசமே நமக்கு உஜ்ஜீவநத்துக்கு உரிய திருப்பதியாமென்றாராயிற்று— முன்னடிகளில்.

மனம்ஐந்தொடு நைந்து உழல்வார் = சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்கிற ஐந்து விஷயங்களும் விஷயாந்தரங்களெனப்படும். இவற்றிலே ஊன்றுகிறவர்கள் ; புத்திகெட்ட அற்ப மனிதர்களேயாவர் ; அப்படிப்பட்டவர்களால் அடையக்கூடாதவன் எம்பெருமான் ; அப்பெருமானுக்கு உறைவிடம் திருநீர்மலை.

இரண்டாமடியினிறுதியில் "நாண்மலர் மேல்" என்றும் "நாண்மலர் தூய்" என்றும் இருவகையான பாடபேதமுண்டென்பர் பெரியவாச்சான் பிள்ளை ; பிந்தின பாடத்தில் "நாண்மலர்தூய் பணிவார்" என்று அந்வயமாகக் கூட்டுவது. .... ... ... (௯)

நெடுமாலவன் மேவிய நீர்மலைமேல் நிலவும்புகழ் மங்கையர்கோன் * அமரில்
கடமா களியானைவல்லான் கலியன் ஒலிசெய் தமிழ்மாலைவல்லார்க்கு * உடனே
விடுமால்வினை, வேண்டிடில் மேலுலகு மெளிதாயிடுமன்றி யிலங்கொலிசேர் *
கொடுமாகடல் வையகமாண்டு மதிக்குடை மன்னவராயடிகூடுவரே. (ம)

| | | | |
|---|---|---|---|
| நெடு மால் அவன் மேவிய | ஸர்வேச்வரன் நித்யவாஸம் செய்தருளப்பெற்ற | உடனே | அப்போதே |
| நீர்மலை மேல் | திருநீர்மலை விஷயமாக, | விடும் | அகன்றொழியும்; (ஆல்—அசை.) |
| நிலவும் புகழ் | நித்யமான புகழையுடையரும் | வேண்டிடில் | அபேக்ஷையுண்டாகில் |
| மங்கையர் கோன் | திருமங்கைநாட்டிலுள்ளார்க்குத் தலைவரும் | மேல் உலகும் | சுவர்க்கம் முதலிய மேலுலகங்களின் அநுபவமும் |
| அமரில் | போர்க்களத்திலே | எளிது ஆயிடும் | ஸுலபமாகும்; |
| கடம் மா களி யானை வல்லான் | மதத்தாலே மிகவும் களித்த யானையை நடத்தவல்லவருமான | அன்றி | அதுவுமல்லாமல், |
| கலியன் | திருமங்கையாழ்வார் | இலங்கு ஒலி சேர் கொடு மா கடல் வையகம் | விளங்காநின்ற கோஷத்தையுடைய வளைந்த பெரிய கடலால் சூழப்பட்ட பூமியை |
| ஒலிசெய் | அருளிச்செய்த | மதி குடை மன்னவர் ஆய் ஆண்டு | சந்திரனை யொத்த வெண்கொற்றக்குடையை யுடைய ராஜாக்களாய் அரசாண்டு (பின்பு) |
| தமிழ் மாலை | இத்தமிழ்த்தொடையை | அடி கூடுவர் | அவனது திருவடிகளைக் கிட்டப் பெறுவர்கள். |
| வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு | | |
| வினை | (உள்ள) பாவங்கள் | | |

[நெடுமாலவன்.] இத்திருமொழி கற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டுகிறார். இடைவிடாது பகவத்விஷயத்தை அநுபவிக்குமவரென்கிற பெரும் புகழையுடையரும், ராஜாதிராஜரான தன்மைக்கு ஏற்ப மதகளிற்றை நடத்திப் போர்செய்ய வல்லவருமான திருமங்கையாழ்வார் அருளிச்செய்த இத்தமிழ்ப் பாசுரங்களை ஓதவல்லவர்களுக்கு எத்தனை பாவங்களிருந்தாலும் அவையடங்கலும் அப்போதே அகன்றொழியும்; அதனால் மோக்ஷத்தைப்பெறுவர்கள். மோக்ஷத்தைக் கடுகப்பெறவேணுமென்கிற விருப்பமின்றிச் சுவர்க்கம் முதலிய மேலுலகங்களில் அநுபவங்களை விரும்புமவர்கட்கும் அவை எளிதாம். இவ்வுலகத்திலேயே வெண்கொற்றக்குடையின் கீழ் வாழ்ந்திருந்து நெடுநாள் அரசாட்சி செய்து பிறகு பரமபதஞ்சென்று அடிமை செய்யவேணுமென்று விருப்பமுண்டாகிலும் அதுவும் தலைக்கட்டலாகும்; ஆகவே இப்பிரபந்தம்—ஐஹிகம் ஆமுஷ்மிகம் என்ற இருவகைப் பலன்களையும் எளிதில் ஸாதித்துத் தரவல்லது—என்றதாயிற்று. ... ... ... (ம)

அடிவரவு:—அன்று காண்டா அலம் தாங்காத மாலும் பாரார் புகார் பிச்சம் பேசும் நெடுமால் பார்.

**நான்காந்திருமொழி உரை முற்றிற்று.**

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—ஐந்தாந்திருமொழி.

# பாராயதுண்டுமிழ்ந்த.

(திருக்கடல்மல்லைத் திருப்பதிவிஷயம்.)

பாராயதுண்டுமிழ்ந்த பவளத்தூணைப்
 படுகடலிலமுதத்தைப் பரிவாய்கீண்ட
சீரானை * எம்மானைத் தொண்டர்தங்கள்
 சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பினை *
போரானைக் கொம்பொசித்த போரேற்றினைப்
 புணர்மருத மிறநடந்த பொற்குன்றினை *
காரானை யிடர்கடிந்த கற்பகத்தைக்
 கண்டதுநான் கடன்மல்லைத் தலசயனத்தே. (க)

| பதம் | பொருள் |
|---|---|
| பார் ஆயது | உலகமாக வுள்ளவற்றை யெல்லாம் |
| உண்டு | (பிரளயம் கொள்ளாதபடி) திருவயிற்றிலே வைத்து |
| உமிழ்ந்த | (பிரளயம் கழிந்தபிறகு) வெளிப்படுத்தினவனும் |
| பவளம் தூணை | பவழத்தூண்போலே விரும்பத்தக்கவனும் |
| படு கடலில் அமுதத்தை | ஆழ்ந்த கடலிலுண்டான அமுதம்போலே போக்யனானவனும் |
| பரி வாய் கீண்ட சீரானை | குதிரை வடிவுடன் வந்த கேசியென்னுமஸுர னுடைய வாயைக் கிழித் தெறிந்த வீரலக்ஷ்மியை யுடையவனும் |
| எம்மானை | எனக்கு ஸ்வாமியானவனும் |
| தொண்டர் தங்கள் சிந்தை உள்ளே | அடியவர்களுடைய நெஞ்சினுள்ளே |
| முளைத்து | தோன்றி |
| எழுந்த | அபிவிருத்தியடைகின்ற |
| தீம் கரும்பினை | இனிய கரும்பு போன்றவனும் |

| பதம் | பொருள் |
|---|---|
| போர் ஆனை | போர் செய்யவந்த குவலயாபீடமென்னும் யானையினுடைய |
| கொம்பு | தந்தங்களை |
| ஒசித்த | முறித்தெறிந்த |
| போர் ஏற்றினை | யுத்தஸாமர்த்திய முள்ளவனும் |
| புணர் மருதம் இற நடந்த | இரட்டை மருதமரங்கள் முறியும்படி தவழ்ந்தவனும் |
| பொன் குன்றினை | பொன்மலைபோல் அழகியவனும் |
| கார் ஆனை இடர் கடிந்த | பெரிய கஜேந்திராழ்வா னுடைய துன்பத்தைத் தொலைத்தவனும் |
| கற்பகத்தை | கல்பவ்ருக்ஷம்போல ஸர்வ ஸ்வதானம் செய்பவனு மான எம்பெருமானை |
| நான் கண்டது | அடியேன் ஸேவிக்கப் பெற்றது |
| | (எவ்விடத்திலென்றால்) |
| கடல்மல்லை தலசயனத்து | ஸ்தலசாயிப்பெருமா ளுடையதான திருக்கடல் மல்லையிலே. |

[பாராயதுண்டமிழ்ந்த.] இத்திருமொழியாலும் மேல்திருமொழியாலும் திருக்கடல்மல்லைத் திருப்பதியை மங்களாசாஸநம் செய்தருளுகிறார். அத் திருப்பதியிலெழுந்தருளியுள்ள எம்பெருமானுக்கு 'ஸ்தலசாயீ' என்று வட மொழித்திருநாமம். ஸ்ரீபுண்டரீகமஹர்ஷியின் கையினால் பூவிடுவித்துக் கொண்டு இன்னும் இப்படிப்பட்ட பக்தர்கள் கிடைக்கக்கூடுமோ வென்றெதிர் பார்த்துக்கொண்டு தரைக்கிடை கிடக்கிறபடி. அது தோன்ற இத்திருப்பதியின் திருநாமத்தைக் கடன்மல்லைத்தலசயனம் என்று ஆழ்வார் அநுஸந்திக்கிறார்.

திருக்கடல்மல்லைப்பெருமான் எப்படிப்பட்டவன்?—; உலகங்களையெல் லாம் பிரளயத்திலே யெடுத்துத் தன் திருவயிற்றிலேவைத்து, அவை உள்ளே கிடந்து தளராதபடி பிறகு வெளிநாடுகாண உமிழ்ந்தவன்; பவழத்தூண் போன்றவன்; [அதாவது—தூணானது எப்படி பெருப்பெருத்த பாரங்களைத் தாங்கிக்கொண்டு நிற்கிறதோ, அப்படியே பக்தர்களின் யோக க்ஷேமபாரங் களைத் தாங்கிக்கொண்டிருப்பவன்; போக்யதை தோற்றுகைக்காகப் பவளத்தூண் எனப்பட்டது.] கடலில் நின்றும் கிளர்ந்த தேவபோக்யமான அமுதம் போன்ற வன்; க்ருஷ்ணாவதாரத்தில் தன்னைக்கொல்லக் கறுக்கொண்ட கம்ஸனாலேவப் பட்டுக் குதிரைவடிவங்கொண்டு வதைசெய்ய வந்த கேசியென்னு மஸுரனுடைய வாயைக் கீண்டெறிந்து அவனை முடித்த வீரலக்ஷ்மி பொருந்தியவன்; இப்படிப் பட்ட திவ்ய சேஷ்டிதத்தைக்காட்டி என்னை ஆட்படுத்திக்கொண்டவன்; பக்தர்களுடைய சிந்தையாகிற தோட்டத்திலே முளைத்து அவ்விடத்திலேயே அபிவிருத்தியடைகிற மதுரமான கரும்பு என்னலாம்படியிருப்பவன்; வில்விழா வென்கிற வியாஜத்தினால் கம்ஸனாலழைக்கப்பட்டு அவனது அரண்மனையி னுட்புகும்போது தன்னைக் கொல்லுமாறு நிறுத்தப்பட்டுக் கறுக்கொண் டெதிர்ந்து வந்த குவலயாபீடமென்னும் மதயானையின் கொம்பினைப் பறித் தெறிந்து அதனை முடித்த ரணவீரன்; வெண்ணெய் களவு செய்ததற்காக யசோதையினால் உரலோடு பிணைக்கப்பட்டு அதனையும் இழுத்துக்கொண்டு தவழ்ந்து சென்றபோது அஸுராவேசம்பெற்று வழியிடையேநின்ற இரட்டை மருதமரங்களை முறித்துத்தள்ளினவன்; பொன்மலைபோற் பளபளவென்று ஜ்வலிப்பவன்; முதலையின் வாயிலகப்பட்டுத் துடித்த கஜேந்திராழ்வானுடைய துயரத்தைத் தொலைத்து அவன் கையிற் செந்தாமரைப்பூவைத் தனது திருவடி களில் இடுவித்துக்கொண்டவன்; கற்பவிருக்ஷம் போலே ஸர்வஸ்வதானம் செய் தருள்பவன்; இப்படிப்பட்ட எம்பெருமானை அடியேன் திருக்கடல்மல்லையிலே இன்று ஸேவிக்கப்பெற்றேன் என்றாராயிற்று.

"பாரையுண்டு" என்னாது "பாராயதுண்டு" என்றது—அமுது செய்யா மல் மிச்சப்பட்ட வுலகம் எதுவுமில்லை என்றதைக்காட்டும். பாரென்று பேர் பெற்றவை எல்லாவற்றையும் உண்டு என்கை. பார் என்னுஞ் சொல் பூமிக்கு மாத்திரம் வாசகமாயினும் இங்கு இலக்கணையால் உலகமென்று ஸாமாந்யப் பொருள் பெற்றிருக்கும்.

"ப்ரவாளஸ்தூணு" என்ற வடசொற்றொடர் பவளத்தூண் எனத்திரிந்தது. படுகடல்=ரத்னங்கள் படுகிற [—உண்டாகிற] கடல் என்றும், ஆழ்ந்த கடல் என்றும் பொருள்.

கடன்மல்லைத்தலசயனத்து = தலசாயிப்பெருமா ளெழுந்தருளியிருப்பதனால் தலசயனமென்று பேர்பெற்றதும் கடற்கரையிலே யுள்ளதுமான மல்லாபுரியிலே—என்று பொருள் விரித்துக்கொள்க. புண்டரீகர் என்கிற ஒரு பரம பக்தர், கடலின் இக்கரையிலே ஒரு பெரிய தோட்டம் ஏற்படுத்தி அதில் சிறந்த புஷ்பங்களை யுண்டாக்கி அவற்றைத் தொடுத்தெடுத்துக் கொண்டுபோய் எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேணுமென்று பாரித்தார்; கடலைக் கடந்து செல்லவேண்டியிருந்தமையால் இக்கடலைக் கையால் இறைத்துவிட்டு வெறுந் தரையாக்கி நடந்தே செல்லுவோமென்று துணிந்து கடலை இறைக்கத்தொடங்கவே, எம்பெருமான் அவருடைய ஆதராதிசயத்தைக்கண்டு வியந்து உவந்து, தானே கடற்கடையிலே ஓடிவந்து அவரது தோப்பிலே தரைக்கிடை கிடந்து அவருடைய வழிபாடுகளை ஸ்வீகரித்தருளினன் என்பது புராணவரலாறு. (க)

**பூண்டவத்தம் பிறர்க்கடைந்து தொண்டுபட்டுப்**
**பொய்ந்நூலை மெய்ந்நூலென்றென்றுமோதி**
**மாண்டு * அவத்தம்போகாதே வம்மின் எந்தை**
**யென்வணங்கப்படுவானை * கணங்களேத்தும்**
**நீண்டவத்தைக் கருமுகிலை யெம்மான்தன்னை**
**நின்றவூர் நித்திலத்தைத் தோத்தார்சோலை ***
**காண்டவத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்தானைக்**
**கண்டதுநான் கடன்மல்லைத் தலசயனத்தே.** (உ)

அவத்தம் பூண்டு — ஸ்வரூபத்தைக் கெடுக்க வல்ல காரியங்களை ஏறிட்டுக்கொண்டு
பிறர்க்கு அடைந்து — பிறரை [நீசர்களை] ஆச்ரயித்து
தொண்டுபட்டு — (அவர்களுக்கு) அடிமை செய்தும்
பொய் நூலை — அபத்தங்களான பாஹ்யமதச் சுவடிகளை
மெய் நூல் என்று — யதார்த்தமான சாஸ்த்ரமாகக் கொண்டு
என்றும் — எப்போதும்
ஓதி — (அந்தச் சுவடிகளையே) வாசித்துக்கொண்டிருந்து
மாண்டு — முடிந்து
அவத்தம் போகாதே வம்மின் — பாழாய்ப் போகாமல் (உஜ்ஜீவிக்க) வாருங்கள்;
எந்தை — எனக்குத் தந்தையானவனும்
என் வணங்கப் படுவானை — என்போல்வாரும் வணங்குதற்கு உரியவனும்
கணங்கள் ஏத்தும் — (ஞானிகளின்) கூட்டங்களாலே துதிக்கப்படுபவனும்
நீண்ட அத்தை — அளவிறந்த அப்படிப்பட்ட வஸ்துவாக உள்ளவனும்
கரு முகிலை — காளமேகம் போன்றவனும்

எம்மான் தன்னை — அஸ்மத் ஸ்வாமியானவனும்

நின்றவூர் நித்திலத்தை — திருநின்றவூரில் (எழுந்தருளியிருக்கிற) முத்துக்கோவைபோலக் குளிர்ந்தவடிவை யுடையவனும்

தொத்து ஆர் சோலை காண்டவத்தை — பூங்கொத்துகள் நிறைந்த சோலைகளையுடைய காண்டவவனத்தை

கனல் எரிவாய்ப்பெய்வித்தானை — ஜ்வலிக்கிற அக்நியினுடைய வாயிலே புகுவித்தவனுமான பெருமானை

நான் கண்டது கடன்மல்லைத் தலசயனத்தே—.

[பூண்டவத்தம்.] தலசயனத்துறைவாரைத் தாம் ஸேவிக்கப் பெற்றது போல உலகிலுள்ளாரெல்லாரும் ஸேவிக்கப் பெறவேணுமென்கிற ஆசையினால், இங்கே ஸேவிக்கவாருங்களென்று மற்றும் பலரையும் அழைக்கிறார். வயிற்றுப் பிழைப்புக்காகப் பிறர்க்கு அடிமைப்பட்டுக் காலத்தைப் பாழாக்குவாரும், வேதபாஹ்யர்கள் வேதகுத்ருஷ்டிகள் என்று சொல்லப்படுகிற மதாந்தரஸ்தர் களின் திரளிலேபுகுந்து ஸ்வரூபநாசம் அடைவாரும் பலருண்டாகையாலே அவர்களையும் விடமாட்டாத காருண்யத்தினால் அவர்களையும் மங்களா சாஸநத் திற்கு ஆளாக்கிக் கொள்ளப் பாரிக்கிறார்.

அவத்தம் பூண்டு = அவத்தமாவது அவத்யம்; பொல்லாங்கு; ஸ்வரூபத் துக்கு ஹாநியை விளைக்கவல்ல காரியங்களைச் சொன்னபடி. ஸாத்விகர்களோடு ஸஹவாஸம், வைதிக புருஷார்த்தங்களைப் பெறவேணுமென்னும் விருப்பம் முதலியவற்றைத் தவிர்ந்து, ராஜஸர்களோடும் தாமஸர்களோடும் உறவுபண்ணு தல், நரகத்துக்கு வழிதேடிக்கொள்ளுதல் முதலிய தீமைகளை ஏறிட்டுக் கொண்டு, க்ஷுத்ரமநுஷ்யர்களிடத்தில் இழிதொழில் செய்தும், மதாந்தரஸ் தர்கள் ப்ரமத்தினாலும் வஞ்சனையினாலும் தப்புந்தவறுமாக எழுதிவைத்த புத்த கங்களை மெய்யான சாஸ்த்ரமென்று கொண்டு அவற்றோடே போதுபோக்கியும் பாழாய்ப்போகிற மனிசர்களே! இவ்விதமாக நீங்கள் கெட்டுப்போகாமல் என் சொல்லை ஆதரித்து இப்படி வாருங்கள்—என்று ஆழ்வார் அன்பார்ந்த சிந்தை யராய் அழைத்தவிடத்திலும் ஒருவரும் மீண்டுவரக்காணாமையாலே, அவர்களை விட்டொழிந்து, திருக்கடல்மல்லைப்பெருமானைத் தாம் ஸேவிக்கப்பெற்ற பாக்கி யத்தை வாயாரச்சொல்லி மகிழ்கிறார்—எந்தையேன்வணங்கப்படுவானை என்று தொடங்கி.

கணங்கள்ஏத்தும் = 'கணம்' என்ற வடசொல் கூட்டமென்று பொருள் பெறும்; ஞானிகளான மஹான்கள் கூட்டங்கூட்டமாக வந்து நின்று ஏத்தும் படியாக வுள்ளவன் என்று கருத்து.

"நீண்டவத்தைக் கருமுகிலை" என்றும், "நீண்டவத்தக் கருமுகிலை" என்றும் பாடபேதமுள்ளதாக வியாக்கியானம் காண்கிறது. முந்தினபாடத் தில், ஒருவகையாலும் அளவிடமுடியாத வஸ்துவாகவுள்ளவனை என்று பொருள். பிந்தின பாடத்தில், 'ஹஸ்தம்' என்னும் வடசொல் அத்தம் எனத் திரிந்திருப்பதாகக்கொள்க; யாசகர்கள் இருக்குமிடம் வரையில் நீண்டு செல்லு

கிற திருக்கையையுடைய காளமேகமென்று பொருளாம். உலகத்திற்காண்கிற காளமேகத்திற்குக் கை இல்லையாயினும், நீண்ட திருக்கைகளையுடைய விலக்ஷண மான காளமேகம் எம்பெருமான் என்கிறார் போலும்.

நின்றவூர்நித்திலத்தை = கீழ் இரண்டாந்திருமொழியில் ஆழ்வார் எவ்வுள் கிடந்தானை ஸேவித்தபின்பு திருவல்லிக்கேணிக்கு எழுந்தருள்வதற்கு முந்தியே திருநின்றவூரைச் சேர்ந்தார்; அத்திருப்பதியி லெழுந்தருளியுள்ள பத்தராவிப் பெருமாள் அப்பொழுது ஆழ்வார்க்கு முகங்கொடாமல் பிராட்டியோடு ஸரஸ ஸல்லாபம் செய்துகொண்டு பராங்முகமாயிருந்திடவே, ஆழ்வார் அத்திருப் பதியை விட்டு அப்பால் சென்று திருவல்லிக்கேணியையும் திருநீர்மலையையும் ஸேவித்து இப்போது திருக்கடல்மல்லையையடைந்து பெருமானை ஸேவித்து நிற்கும்பொழுது திருநின்றவூரெம்பெருமான் திருமகளால் தூண்டப்பட்டு இவ்வாழ்வார் திருவாக்கினால் பாடல்பெற்றுச் சிறப்புறக்கருதிக் கடன்மல்லையில் வந்து ஸேவைஸாதிக்க, இப்போது, "நின்றவூர் நித்திலத்தைக்......கண்டது நான் கடன்மல்லைத் தலசயனத்தே" என்று—திருநின்றவூர்ப் பத்தராவிப் பெருமாளையும் இங்கே ஸேவிக்கப் பெற்றதாக அருளிச்செய்கிறாரென்று பெரி யோர்களின் நிர்வாஹம்.

நித்திலம் = வடமொழியில், 'நிஸ்தலம்' என்கிறசொல் முத்து என்னும் பொருளதாகக் கவிகளால் பிரயோகிக்கப்படுகின்றது; "அயிவித்ரும [grantha] = அதிவித்ருமமஸ்த நிஸ்தலாளீருசம்" என்று வரதராஜஸ்தவத் திலே கூரத்தாழ்வானும் பிரயோகித்தருளினர். அந்த நிஸ்தல மென்னும் வட சொல்லே தமிழில் நித்திலமென்று திரிந்துகிடப்பதாகக் கூறுவர்; இது தனியே ஒரு தமிழ்ச்சொல் என்பாருமுளர். விலக்ஷணமான போக்யதையையும் குளிர்ந்த வடிவுடைமையையுங் கருதி எம்பெருமானை முத்துக்கொத்தாக ஆழ்வா ரருளிச்செய்கிறாரென்க.

காண்டவத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்த வரலாறு கீழ்த்திருமொழி யின் இரண்டாம் பாட்டினுரையில் விரித்துரைக்கப்பட்டது. ... (உ)

உடம்புருவில் மூன்றொன்றாய் மூர்த்திவேறாய்
உலகுய்யநின்றானை * அன்றுபேய்ச்சி
விடம்பருகு வித்தகனைக் கன்றுமேய்த்து
விளையாட வல்லானை வரைமீகானில் *
தடம்பருகு கருமுகிலைத் தஞ்சைக்கோயில்
தவநெறிக்கோர் பெருநெறியை, வையங்காக்கும் *
கடும்பரிமேல் கற்கியைநான் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடன்மல்லைத் தலசயனத்தே. (௩)

உலகு உய்ய — (ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களாலே) உலகங்கள் வாழ்வதற்காக (ஸ்ரீமந்நாராயண ஞெருவனே மூன்று வடிவுகொண்டு காரியஞ் செய்கையாலே)

உடம்பு உருவில் — சரீரசரீரிபாவத்தையிட்டுப் பார்க்குமளவில்

மூன்று ஒன்று ஆய் — மூன்று தத்துவமும் ஒருபடியாய்

மூர்த்தி வேறு ஆய்நின்ருனை — (உண்மையில்) ஸ்வரூபம் வேறுபட்டு நிற்குமவனும்

அன்று — கண்ணனுகப்பிறந்த அக்காலத்து

பேய்ச்சி — பூதனையினுடைய

விடம் — (முலையில் தடவியிருந்த) விஷத்தை

பருகு — பானம்பண்ணின

வித்தகனை — ஆச்சரியபூதனும்

கன்று மேய்த்து விளையாட வல்லானை — கன்றுகளை மேய்த்து விளையாடுகைக்காக வந்து பிறந்தவனும்

வரை மீ கானில் — மலைமேலுள்ள காடுகளிலே

தடம் — தடாகங்களிலே

பருகு — (கன்றுகளுக்கு நீர் குடிக்கும் விதத்தைப் பயிற்றுவிக்கைக்காகத் தான் இறங்கிக் கையை முதுகிலே கட்டிக்கொண்டு) தண்ணீர் குடித்தவனும்

கரு முகிலை — காளமேகம் போன்றவனும்

தஞ்சை கோயில் — தஞ்சை மாமணிக்கோயிலிலே

தவம் நெறிக்கு ஓர் பெரு நெறியை — தன்னைக் கிட்டுகைக்கான உபாயங்களிலே சிறந்த உபாயம் தானுக நிற்பவனும்

வையம் காக்கும் — உலகத்தைக் காப்பதற்காக

கடு பரி மேல் கற்கியை — கடுநடையுடைய குதிரையின்மேலே கல்கியவதாரம் செய்யப்போகிறவனுமான எம்பெருமானை

கடி பொழில் சூழ் கடல் மல்லை தல சயனத்தே — மணம்மிக்க சோலைகள் சூழ்ந்த திருக்கடன் மல்லையிலே

நான் கண்டுகொண்டேன்—.

[உடம்புருவில்.] உலகுஉய்ய உடம்புருவில் மூன்றுஒன்ருய் மூர்த்தி வேருய்நின்ருனை = பரமபுருஷனுன எம்பெருமானுக்கு சேதநாசேதநங்கள் முற்றும் சரீரங்கள் என்பது ஸித்தாந்தம்; "[Grantha] = அங்காநி அந்யா தேவதா:" என்று விசேஷித்தும் ஓதப்பட்டுள்ளது. ஆகவே, சரீர சரீரிபாவமாகிற விசிஷ்ட வேஷத்தையிட்டுப் பார்க்குமளவில் வேற்றுமை ஏற்படுவதற்கு வழியின்றியே "[Grantha] = ஸ ப்ரஹ்மா ஸ சிவ: ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்" என்றும் "[Grantha] = ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்றும் அபேதமேயுள்ளதாகச் சொல்லும்படியாயிருக்கும்; உலகத்தில், சரீரத்தோடு கூடின ஒரு ஆத்மாவைப்பற்றி நாம் வ்யவஹரிக்கும்போது, சரீரத்தைத் தனிப்பட்ட வஸ்துவாகவும் சரீரியான ஆத்மாவைத் தனிப்பட்ட வஸ்துவாகவும் பிரித்து இரண்டாக வ்யவஹரியாமல் இரண்டையுஞ் சேர்த்து ஒரே பொருளாக வ்யவஹரியா நின்ருேமன்ருே; இந்த ஐக்கிய வ்யவஹாரத்திற்கு சரீர சரீரி பாவமாகிற ஸம்பந்தமே நிமித்தம்; அதுபோலவே, பிரமன் முதலிய தேவதைகட்கும் எம்பெருமானுக்கும் சரீர சரீரி பாவஸம்பந்தம் சாஸ்த்ரஸித்

தமாயிருப்பதால் அந்த ஸம்பந்தத்தையிட்டு நோக்குமளவில் வேற்றுமை தோன்றாது ஒற்றுமை தோன்றும்; இதனையே 'உடம்புருவில் மூன்றொன்றாய்' என்பதனாலருளிச்செய்கிறார்.

[மூர்த்திவேறாய்நின்றானே.] உண்மையில் ஸ்வரூபபேதம் உண்டாகை யாலே அதைச் சொன்னபடி. ஆக இத்தால் தேறின பொருள் யாதெனில்;— "பிரமன் சிவன் இந்திரன் சந்திரன் முதலிய தெய்வங்களெல்லாம் நாராயணனே" என்று சாஸ்த்ரத்திற் பலவிடங்களிற் சொல்லப்பட்டுள்ளது; அவ்விடங்களை எப்படி நிர்வஹிக்கவேணுமென்றால்; 'பிரமன் முதலிய தெய்வங்களைச் சரீரமாகக்கொண்ட ஸர்வ சரீரியான ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே' என்று சொல்லிற்றாக நிர்வஹிக்கவேணும்; தெய்வங்கள் பலபலவுள்ளனவாக எவ்விடங்களிற் சொல்லப்பட்டுள்ளதோ, அவ்விடங்களில், ஸர்வசரீரியான ஸ்ரீமந்நாராயணனிற்காட்டில் சரீரங்களான தெய்வங்களுக்கு உள்ள ஸ்வரூப பேதம் சொல்லப்படுவதாக நிர்வஹிக்கவேணும்—என்கிற இந்த அர்த்தம் இப்பாட்டில் முதலடியாற் காட்டப்பட்டதாகக் கொள்க.

பிரமன் சிவன் முதலிய தெய்வங்களைத் தனிப்படவும் நிறுத்தினது ஏதுக் காகவென்னில்; ஸ்ருஷ்டி ஸம்ஹாரம் முதலிய சில லோகவ்யாபாரங்கள் நடை பெறுவதற்காக வென்பார் "உலகுய்ய" என்கிறார்.

"வரைமீகானில்தடம்பருகுகருமுகிலே" என்பதற்கு நஞ்சீயர் பொருள் சொல்லும்போது வேறொரு விதமாகச் சொல்லா நிற்க, அதைக்கேட்டுக்கொண்டிருந்த பிள்ளையழகியமணவாளப்பெருமாளரையர் "இவ்விடத்திற்கு பட்டரருளிச்செய்யும் பொருள் இப்படியன்றே" யென்று சொல்லி, பட்டரருளிச் செய்யும் விசேஷார்த்தத்தை ஸ்மரிப்பித்தாராம்; அதாவது—மலைமேல் காட்டிலேயுண்டான தடாகங்களில் கன்றுகள் தண்ணீர் குடிக்கப்புகுந்தால் இளங் கன்றுகளாகையாலே நீரிலே முன்னே யிறங்கிக்குடிக்க அஞ்சுமாம்; அக்கன்று கட்கு நீருண்ணும் விதத்தைப் பழக்குவிப்பதற்காகக் கண்ணபிரான் தான் தன் முதுகிலே கையைக்கட்டிக் கவிழ்ந்து நின்று தண்ணீரமுதுசெய்து காட்டுவன்; அதைச் சொல்லுகிறது "வரைமீகானில்தடம்பருகு" என்று.

தவநெறிக்குஒர்பெருநெறியை = எம்பெருமானைப் பெறுவதற்குக் கரும யோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலிய உபாயங்கள் பல விதிக்கப்பட்டிருந்தாலும், ஆனையின்மேல் ஏறநினைப்பார்க்கு ஆனையின் காலைப்பற்றியே ஏற வேண்டுவதுபோல் எம்பெருமானது திருவடிகளைப்பற்றியே அவனைப்பெறுதல் சிறக்குமென்றும் அவனே ஸித்தோபாயமென்றும் பரமைகாந்தி ஸித்தாந்தமாயிருத்தலால், எல்லாவுபாயங்களினுள்ளும் சீரிய உபாயம் தானேயாயிருப்பவ னெனப்பட்டது.

தருமங்கள் முற்றும் குன்றி அதருமங்கள் அதிகரித்துக் கலிமுற்றுங் காலத்தில் எம்பெருமான் குதிரையின்மீதேறிவந்து கல்கி யென்னுந் திருநாமமுடையனாய் துஷ்டர்களைத் தொலைத்து மண்ணின் பாரம் நீக்குவானென்று

நூற்கொள்கையுள்ளதனால் "கடும்பரிமேல் கற்கியை" என்கிறார்; இது பவிஷ்யதவதாரம். இப்படிப்பட்ட எம்பெருமானைத் திருக்கடன்மல்லையிலே ஸேவிக்கப் பெற்றேனென்றாராயிற்று. .... .... .... (௩)

பேய்த்தாயை முலையுண்ட பிள்ளைதன்னைப்
பிணைமருப்பிற் கருங்களிற்றைப் பிணைமானேக்கின் *
ஆய்த்தாயர் தயிர்வெண்ணெ யமர்ந்தகோவை
அந்தணர்தமமுதத்தைக் குரவைமுன்னே
கோத்தானை * குடமாடு கூத்தன்தன்னைக்
கோகுலங்கள் தளராமல் குன்றமேந்திக்
காத்தானை * எம்மானைக் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத்தலசயனத்தே. (௪)

| | |
|---|---|
| தாய் | தாய்வடிவையெடுத்துக் கொண்டு கொல்லவந்த |
| பேயை | பூதனையென்னும் பேய்ச்சியினுடைய |
| முலை | (விஷந்தடவின) முலையை |
| உண்ட | உறிஞ்சியமுதுசெய்த |
| பிள்ளைதன்னை | குமாரனும், |
| பிணை மருப்பின் கரு களிற்றை | இரண்டு கொம்பு முளைத்த கரிய யானைக்குட்டிபோல் இனியனும், |
| மான் பிணை நோக்கின் | மான் பேடையின் நோக்குப் போன்ற நோக்கையுடைய |
| ஆய் தாயர் | இடைத்தாயாரான யசோதையினுடைய |
| தயிர் வெண்ணெய் | தயிரிலும் வெண்ணெயிலும் |
| அமர்ந்த | ஊன்றியிருந்த |
| கோவை | ஸ்வாமியும், |
| அந்தணர் தம் அமுதத்தை | வைதிகர்களுக்குப் பரமபோக்யனும், |
| முன்னே | முன்பொருகால் |
| குரவை கோத்தானை | இடைப்பெண்களோடு ராஸக்ரீடை செய்தவனும் |
| குடம் ஆடு கூத்தன் தன்னை | குடக்கூத்தாடினவனும் |
| கோகுலங்கள் தளராமல் | (இந்திரன் பெய்வித்த பெருமழையினால்) பசுக்கூட்டங்கள் வருந்தாதபடி |
| குன்றம் ஏந்தி | கோவர்த்தனமலையைக் குடையாக ஏந்தி |
| காத்தானை | ரக்ஷித்தவனுமான |
| எம்மானை | எம்பெருமானை |

கடி பொழில் சூழ் கடன்மல்லைத் தலசயனத்தே கண்டுகொண்டேன்—.

[பேய்த்தாயைமுலையுண்ட.] திருக்கடல்மல்லையில் ஸேவைஸாதிக்கும் பெருமான் எப்படிப்பட்டவன்?—; தாய்வடிவுகொண்டு வஞ்சனையினால் முலை கொடுத்துக் கொல்லவந்த பூதனையை முலையுண்டு முடித்தாற்போலே நமது விரோதிகளையும் முடிக்கவல்லவன்; கொம்பு முளைத்த யானைக்குட்டியைக் கண்டால் எப்படி எல்லார்க்கும் ஆநந்தம் அதிகரிக்குமோ, அப்படி பரமாநந்த ஜநகமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவன்; யசோதைப்பிராட்டி ஏராரிடை நோவ எத்தனையோர்போதுமாய்க் கடைந்து சேமித்துவைத்த தயிர் வெண்ணெய் முதலியவற்றைத் தன்வயிறார விழுங்கிக் களித்தவன்; மேலுலகத்திலிருந்து கொண்டு தன்னையநுபவிக்கும் நித்யஸூரிகட்குப் போலவே இவ்வுலகத்திலிருந்தே யநுபவிக்கின்ற ஸநகாதி யோகியர்க்கும் மிகவும் போக்யனானவன்;

["அந்தணர் தமமுதத்தினை" என்றார் பெரியாழ்வாரும்.] ஒவ்வொரு இடைப் பெண்ணின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகப் பலவடிவெடுத்துக் கைகோத்து விளையாடுதலாகிற ராஸக்ரீடை [குரவைக்கூத்து] செய்தருளினவன்; பிராமணர்க்குச் செல்வம் மிஞ்சினால் யாகஞ்செய்வதுபோல இடையர்க்குச் செல்வம் மிஞ்சினால் அதனாலுண்டாகும் செருக்குக்குப் போக்குவீடாக ஆடுகிற கூத்தாகிய குடக்கூத்தையாடினவன்—தலையிலே அடுக்குக் குடமிருக்க இருதோள்களிலும் இருகுடங்களிருக்க, இருகைகளிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து அற்புதமாக ஆடினவன்; தேவேந்திரன் பசிக்கோபத்தினால் ஏழுநாள் விடாமழை பெய்வித்துக் கோகுலத்தைப்பாழ்படுத்த நினைத்தபோது ஒன்றின் மேலும் ஒருதுளியும் விழாதபடி கோவர்த்தனமலையைக் குடையாகவேந்தி நின்று காத்தருளினவன்.

இக்குணங்களெல்லாம் விளங்குகின்ற பெருமானைத் திருக்கடல் மல்லையிலே காணப்பெற்றேனென்றாராயிற்று. ... ... ... (ச)

பாய்ந்தானைத் திரிசகடம் பாறிவீழப்
  பாலகனாயாலிலையில் பள்ளியின்ப
மேய்ந்தானை * இலங்கொளிசேர் மணிக்குன்றன்ன
  ஈரிரண்டுமால்வரைத்தோ ளெம்மான்தன்னை *
தோய்ந்தானை நிலமகள்தோள் தூதிற்சென்றப்
  பொய்யறைவாய்ப் புகப்பெய்த மல்லர்மங்கக்
காய்ந்தானை * எம்மானைக் கண்டுகொண்டேன்
  கடிபொழில்சூழ் கடன்மல்லைத் தலசயனத்தே. (ரு)

| | |
|---|---|
| திரி சகடம் | உருளுகிற சகடமானது |
| பாறி | சின்னபின்னமாகச் சிதறி |
| வீழ | விழும்படி |
| பாய்ந்தானை | திருவடியாலுதைத்தவனும் |
| பாலகன் ஆய் | சிறுபிள்ளையாய் |
| ஆல் இலையில் | ஆலந்தளிரிலே |
| பள்ளி இன்பம் ஏய்ந்தானை | திருக்கண்வளர்தலாகிற ஸுகத்தை அநுபவித்தவனும் |
| இலங்கு ஒளி சேர் | மிக்க ஒளியை யுடைத்தான |
| மணி குன்று அன்ன | ரத்னமயமான பர்வதம் போன்றவனும் |
| மால் வரை | பெரிய மலைபோன்ற |
| ஈர் இரண்டு தோள் எம்மான் தன்னை | நான்கு திருத்தோள்களை யுடைய ஸ்வாமியான வனும் |
| நிலம் மகள் தோள் தோய்ந்தானை | பூமிப்பிராட்டியின் தோளோடே அணைந்தவனும் |
| தூதின் சென்று | (பாண்டவர்களுக்குத்) தூது செய்யுந் தொழிலுடனே (துரியோதனனிடம்) எழுந்தருளி |
| பொய் அவ் அறை வாய் புக பெய்த | (அத்துரியோதனன்) க்ருத்ரிமமாகச் செய்துவைத்த அந்த நிலவறையினுள்ளே நிறுத்தப்பட்டிருந்த |
| மல்லர் | மல்லர்கள் |
| மங்க | முடியும்படி |
| காய்ந்தானை | சீற்றங்கொண்டவனுமான |
| எம்மானை | எம்பெருமானை |

கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே கண்டுகொண்டேன்—.

[பாய்ந்தானை.] திருக்கடன்மல்லையில் ஸேவைஸாதிக்கும் பெருமான் எப்படிப்பட்டவன்?—; ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்த தான் நந்தகோபர் திருமாளிகையிலே ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தப்பெற்று (யசோதையும் யமுனை நீராடப்போய்) இருந்தகாலத்து, கம்ஸனுலேவப்பட்ட அஸுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்துத் தன்மேல் விழுந்து தன்னைக் கொல்ல முயன்றதை அறிந்த தான் பாலுக்கு அழுகிற பாவனையில் தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கியுதைத்து அச்சகடத்தைச் சிந்நபிந்நமாக்கினவன்; பிரளய காலத்தில் உலகங்களையெல்லாம் தனது திருவயிற்றினுள்ளே வைத்துத் தான் ஒரு சிறிய ஆலந்தளிரிலே சுகமாகக் கண் வளர்ந்தவன்; மிக்க வொளியையுடைய நீலகிரி போன்றவன்; மலைபோன்ற நான்கு திருத்தோள்களையுடையவன்; ஹிரண்யாக்ஷனைக் கொன்று ஸ்ரீ பூமிப்பிராட்டியோடே அணையப்பெற்றவன்; தான் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ் சென்றபொழுது துரியோதனன் ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப்பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளேயிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலேமூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸநமொன்றையமைத்து அவ்வாஸநத்தின்மீது தன்னை வீற்றிருக்கச்சொல்ல, அங்ஙனமே தான் அதன் மேலேறின மாத்திரத்திலே மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆஸநம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் மிகப் பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையுங் கால்களையுங் கொண்டு எதிர்த்து அப்பிலவறையிலிருந்த மல்லர்களை மடிவித்தவன்.

இப்படிப்பட்ட விரோதி நிரஸநஸ்வபாவங்கள் இன்றைக்கும் விளங்குமாறு ஸேவைஸாதிக்கும் பெருமானைத் திருக்கடல்மல்லையிலே காணப்பெற்றேன். ... ... ... ... (ரு)

கிடந்தானைத் தடங்கடலுள் பணங்கள்மேவிக்
கிளர்பொறிய மறிதிரிய வதனின்பின்னே
படர்ந்தானை * படுமதத்தகளிற்றின் கொம்பு
பறித்தானைப் பாரிடத்தை யெயிறுகீற
விடந்தானை * வளைமருப்பினேனமாகி,
இருநிலனும் பெருவிசும்பு மெய்தாவண்ணம்
கடந்தானை * எம்மானைக் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடன்மல்லைத்தலசயனத்தே. (சு)

தட கடலுள் { விசாலமான திருப்பாற் கடலிலே
பணங்கள் மேவி { (திருவனந்தாழ்வானது) படங்களின் கீழே பொருந்தி
கிடந்தானை பள்ளி கொள்பவனும்,
கிளர் பொறிய { கிளர்ந்த பலவகைப் புள்ளிகளையுடைய
மறி { (மாரீசனென்னும்) மாயாமிருகம்

திரிய — (எதிரேவந்து) ஸஞ்சரிக்க

அதனின் பின்னே படர்ந்தானை — அதன்பின்னால் தொடர்ந்து சென்றவனும்

படு மதத்த களிற்றின் — ஒழுகுகின்ற மதநீரையுடைய (குவலயாபீடமென்னும்) யானையினுடைய

கொம்பு பறித்தானை — தந்தங்களை முறித்து அவ் யானையை முடித்தவனும்

வளை மருப்பின் ஏனம் ஆகி — வளைந்த கோரப்பற்களை யுடைய வராஹரூபியாகி

பார் இடத்தை — விசாலமான பூமியை

எயிறு கீற இடந்தானை — பற்களாலே கொத்தி (அண்டபித்தியில் நின்றும்) ஒட்டுவிடுவித் தெடுத்தவனும்

இரு நிலனும் — விசாலமான இந்நிலவுலகும்

பெரு விசும்பும் — பெரிய மேலுலகங்களும்

எய்தா வண்ணம் — திருவடிகளுக்குப் போரா தென்னும்படி (மிக வளர்ந்து)

கடந்தானை — உலகளந்தவனுமான

எம்மானை — எம்பெருமானை

கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே கண்டுகொண்டேன்—.

[கிடந்தானைத்தடங்கடலுள்.] திருக்கடல்மல்லையிலே ஸேவைஸாதிக்கும் எம்பெருமான் எப்படிப்பட்டவன் ?—; திருக்கண்வளர்ந்தருளுகைக்குத் தகுதியான பரப்பையுடைய திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான் மேலேயிருந்து, பிராட்டிமார்களுடைய திருமுலைத்தடத்தாலும் கிளப்பவொண்ணாதபடி கண் வளர்ந்தருள்பவன்; இராவணனுடைய தூண்டுதலினால் மாரீசன் மாயமான் வடிவெடுத்துப் பஞ்சவடியில் பர்ணசாலையினெதிரே வந்து திரிய, அதனைக்கண்டு காதலித்த பிராட்டியின் வேண்டுகோளை மறுக்கமாட்டாத அன்பின் மிகுதியால் அந்த மாயாமிருகத்தைப் பிடித்துக்கொண்டு வருவதாக அதனைத் தொடர்ந்து நெடுந்தூர மெழுந்தருளினவன்; கம்ஸனது அரண்மனை வாயிலில் தன்னையெதிர்க்கவந்த குவலயாபீடமென்கிற மதயானையின் கொம்புகளைக் குப்பைக் கீரை பிடுங்குமாபோலே வருத்தமின்றிப் பிடுங்கினவன்; வராஹாவதாரமெடுத்து இந்த மாநிலத்தை அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்துக் கொணர்ந்தவன்; தன்னுடைய வியாப்திக்குக் கீழுலகங்களும் மேலுலகங்களும் இடம் போரவில்லை யென்னும்படியாக விம்மி வளர்ந்து உலகளந்தருளினவன்; எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்தருளின பரம க்ருபாகுணத்தைக் காட்டி என்னை ஆட்படுத்திக்கொண்டவன். அவன் தானே திருவடிகளைக் கொண்டு வந்து தலைமேல் வைத்தவக்காலத்தில் தப்பிப்போன பாவியேன் இப்படிப்பட்ட எம்பெருமானை இன்று திருக்கடல்மல்லையில் ஸேவிக்கப்பெற்றேன்.

கிளர்பொறிய மறி='மறி' என்று ஆண் மானுக்குப் பெயர். (பிணை என்று பெண்மானுக்குப் பெயர்; "மறியொடு பிணைசேர் மாலிருஞ் சோலை" என்ற திருவாய்மொழியுங் காண்க.) மாரீசன் விசித்திரமான புள்ளிகளையுடைய மானாக வந்தமைபற்றிக் "கிளர் பொறிய" எனப்பட்டது. "அதனின் பின்னேபடர்ந்தானை" என்றதில், மாரீசனைக் கொன்றொழித்ததும் விவக்ஷிதம். (௬)

பேணாத வலியரக்கர் மெலியவன்று
பெருவரைத்தோ ளிறநெரித்தன்றவுணர்கோனை *
பூணாகம் பிளவெடுத்த போர்வல்லோனைப்
பொருகடலுள் துயிலமர்ந்த புள்ளூர்தியை *
ஊணாகப் பேய்முலைநஞ் சுண்டான் தன்னை
உள்ளுவாருள்ளத்தே யுறைகின்றானை *
காணாது திரிதருவேன் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடன்மல்லைத் தலசயனத்தே. (எ)

அன்று — முன்னொரு காலத்தில்,
பேணாத — (தன்னை ஸர்வேச்வரனாக) மதியாத
வலி அரக்கர் — மிடுக்கையுடைய ராக்ஷஸர்கள்
மெலிய — ஒழியும்படி
(அவ்வரக்கர்களுடைய)
பெரு வரை தோள் இற நெரித்து — பெரியமலைபோன்ற தோள்கள் முறியும்படி அழித்தவனும்,
அன்று — ப்ரஹ்லாதன் துன்பப்பட்ட அக்காலத்து
அவுணர் கோனை — அசுரர்தலைவனான இரணியனுடைய
பூண் ஆகம் பிளவு எடுத்த — ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்த மார்வைப் பிளந்தொழித்தவனும்
போர் வல்லோனை — யுத்தத்தில் ஸமர்த்தனானவனும்
பொரு கடலுள் துயில் அமர்ந்த — அலையெறிகின்ற திருப்பாற்கடலிலே திருக்கண் வளர்ந்தருள்பவனும்
புள் ஊர்தியை — கருடப்பறவையை வாஹனமாகவுடையவனும்
பேய் முலை நஞ்சு — பூதனையின் முலையில் தடவியிருந்த விஷத்தை
ஊண் ஆக உண்டான் தன்னை — உணவாகக்கொண்டு அமுது செய்தவனும்
உள்ளுவார் உள்ளத்தே உறைகின்றானை — தன்னைச் சிந்திப்பவர்களின் நெஞ்சிலே நித்யவாஸம் செய்பவனுமான எம்பெருமானை
காணாது திரிதருவேன் — (வெகுகாலமாக) ஸேவியாமல் அலைந்துகொண்டிருந்த அடியேன்
(இன்று)
கடி பொழில் சூழ் கடன்மல்லைத் தலசயனத்தே கண்டுகொண்டேன்—.

[பேணாதவலியரக்கர்.] திருக்கடல்மல்லையிலே ஸேவைஸாதிக்கும் பெருமான் எப்படிப்பட்டவன்?—; தன்னை மதியாத ராக்ஷஸவர்க்கங்கள் ஒழிந்து போம்படியாகத் தோள்களைத் துணித்துத் தொலைத்தவன்; தானே ராஜாதிராஜன் என்று இறுமாந்து பலவகையாபரணங்களினால் தன்னை யலங்கரித்துக் கொண்டிருந்த இரணியனுடைய மார்பைப் பிளந்தெறிந்த பெருமிடுக்கன்; அந்த ஆயாஸம் தீரத் திருப்பாற்கடலில் வந்து திருக்கண் வளர்ந்தருளினவன்; ஆபத்தையடைந்த ஆச்ரிதர்களின் கூக்குரலைக்கேட்டுப் பெரிய திருவடியின் தோளின்மீதேறி அரைகுலையத் தலைகுலைய வோடிவந்து அவர்கட்குக் காட்சி கொடுக்குமவன்; தன்னைக் கொல்லுமாறு கம்ஸனால் ஏவப்பட்ட பூதனையென்னும் பேய்மகள் தாய்வடிவுகொண்டு வந்து முலைகொடுக்க, அதற்கு இறாய்த்துப் பின்வாங்காமல், நஞ்சூதீற்றிய அம்முலைப்பாலை அமுதமுண்பதுபோல வுண்டு

அவனுயிரை மாய்த்தவன் ; இப்படிப்பட்ட திருக்குணங்களைச் சிந்தித்து உருகுகின்ற பக்தர்களின் ஹ்ருதயத்தை ஒருகாலும் விட்டுப்பிரியாதவன் ;—இப்படிப்பட்ட எம்பெருமானைக் காணப்பெறாமல் தடுமாறித்திரிந்த பாவியேன் இன்று திருக்கடன்மல்லையிலே காணப்பெற்றேன். ... ... (எ)

பெண்ணாகி யின்னமுதம் வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன் றடலரியாய்ப் பெருகினானை *
தண்ணார்ந்த வார்புனல்சூழ் மெய்யமென்னும்
தடவரைமேல் கிடந்தானைப் பணங்கள்மேவி *
எண்ணானை யெண்ணிறந்த புகழினானை
இலங்கொளிசே ரரவிந்தம் போன்றுநீண்ட
கண்ணானை * கண்ணாரக் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடன்மல்லைத் தலசயனத்தே (அ)

பெண் ஆகி — மோஹினியுருவமெடுத்து
இன் அமுதம் வஞ்சித்தானை — இனிய அமிருதத்தை (அசுரர்கள் புஜிக்கவொண்ணாதபடி) வஞ்சித்தவனும்
அன்று — முன்பொரு காலத்தில்
பிறை எயிறு — சந்திரனையொத்த பற்களையுடைய
அடல் அரி ஆய் — பலசாலியான நரஸிம்ஹ மூர்த்தியாய்
பெருகினானை — வளர்ந்தவனும்,
தண் ஆர்ந்த வார் புனல் சூழ் — குளிர்த்தி பொருந்திப் பெருகுகின்ற ஜலத்தாலே சூழப்பட்ட
மெய்யம் என்னும் — திருமெய்யமென்கிற
தட வரை மேல் — பெரிய திருமலையின்மீது
பணங்கள் மேவி கிடந்தானை — (திருவனந்தாழ்வானுடைய) படங்களின்கீழே பொருந்திப் பள்ளி கொண்டிருப்பவனும்
எண்ணானை — (யோகிகளால்) சிந்திக்கப் படுமவனும்
எண் இறந்த புகழினானை — கணக்கில்லாத கீர்த்திகளையுடையவனும்
இலங்கு ஒளி சேர் அரவிந்தம் போன்று நீண்ட கண்ணானை — மிக்க ஒளியையுடைய தாமரையிதழ்போலே நீண்ட திருக்கண்களையுடையவனுமான எம்பெருமானை
கடி பொழில் சூழ் கடன்மல்லைத் தல சயனத்தே கண் ஆரக் கண்டுகொண்டேன்—.

[பெண்ணாகியின்னமுதம்.] இன்று நான் திருக்கடல்மல்லையிலே கண்ணாரக் காணப்பெற்ற எம்பெருமான் எப்படிப்பட்டவன் ?—; துர்வாஸமுனியின் சாபத்தினால் தேவர்களின் செல்வம்யாவும் ஒழிந்துபோக, அசுரர் வந்து பொருது அமரரை வென்றபின்பு இந்திரன் தேவர்களோடு ஓடிவந்து தன்னைச் சரணம்புக, தான் கடல்கடைந்து அமுதமளிப்பதாக வாக்களித்துக் கடல் கடைந்தபிறகு, தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத் தரித்து அம்ருத பூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அத்திருப்பாற்கடலில் நின்றும் தான் தோன்றினபோது தன் கையிலிருந்த அம்ருதகலசத்தை அசுரர்கள் பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள, உடனே ஜகந்மோஹனகரமான ஒரு

பெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்கட்கு ப்ரஸாதித்தவன்; சிறுக்கனான ப்ரஹ்லாதன் முரட்டு ஹிரண்யனாலே நோவுபட்ட வக்காலத்தில், பிறைபோன்ற பற்களையுடைய பயங்கரமான நரஸிம்ஹமாகித் தூணைப்புடைத்துக்கொண்டு விம்மி வெளிக்கிளம்பினவன்; பரமபோக்யமான திருமெய்யமலையென்னுந் திருப்பதிதன்னிலே திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொண்டிருப்பவன்; உறங்குவான்போலே உலகங்களைப் பாதுகாக்கும் வகைகளைச் சிந்தித்துக்கொண்டிருப்பவன்; குணாநுஸந்தாநம் பண்ணுகிற பக்தர்கட்கு அநுஸந்தித்துத் தலைக்கட்டமுடியாத திருக்கல்யாண குணங்களையுடையவன்; குணமொன்று மில்லையென்றாலும் விடவொண்ணாத படியான கண்ணழகு படைத்தவன்;—இப்படிப்பட்ட பெருமானைக் கண்களின்பட்டினிதீர இன்று திருக்கடன்மல்லையிலே காணப்பெற்றேன் என்றாராயிற்று.

எண்ணனை என்பதற்கு—எண்ணுகிறவன் என்றும், எண்ணப்படுகிறவன் என்றும், எண்ணாதவன் என்றும் மூன்றுவகையாகப் பொருள் கொள்ளலாம்;—எண்ணுகிறவன் என்னும் பொருளில், நம்போன்ற ஸம்ஸாரிகளைக் காத்தருளும் வகையை எண்ணிக்கொண்டிருப்பவன் என்றதாகிறது; எண்ணப்படுகிறவன் என்னும் பொருளில், "நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யஸூரிகள் பணியுமாறு இருக்கவேண்டிய பெருமான் இப்படி ஸம்ஸாரிகளின் நடுவே வந்து கிடப்பதே!, இஃது என்ன நீர்மை!" என்று பக்தர்களால் எண்ணப்படுமவன் என்றதாகிறது; எண்ணாதவன் என்னும் பொருளில், நமது குற்றங்குறைகளை ஒரு பொருளாக இட்டெண்ணாதவன் என்றதாகிறது.

அரவிந்தம்—தற்சமவடசொல். ... ... ... (அ)

தொண்டாயார் தாம்பரவு மடியினானைப்
படிகடந்த தாளாளற் காளாயுய்தல்
விண்டானை * தென்னிலங்கை யரக்கர்வேந்தை
விலங்குண்ண வலங்கைவாய்ச் சரங்களாண்டு *
பண்டாய வேதங்கள் நான்குமைந்து
வேள்விகளும் கேள்வியோ டங்கமாறும்
கண்டானை * தொண்டனேன் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ் கடன்மல்லைத் தலசயனத்தே. (கூ)

| | |
|---|---|
| தொண்டு ஆயார் தாம் | அடிமைப்பட்டவர்கள் |
| பரவும் | துதிக்கப்பெற்ற |
| அடியினானை | திருவடிகளை யுடையவனும், |
| படி கடந்த தாள் ஆளற்கு ஆள் ஆய் உய்தல் விண்டானை தென் இலங்கை அரக்கர் வேந்தை | பூமியை யளந்த திருவடிகளையுடையனை தனக்கு ஆட்பட்டு உஜ்ஜீவிப்பது தவிர்ந்தவனான இராவணனை |

| | |
|---|---|
| விலங்கு உண்ண | மிருகங்கள் தின்னும்படி |
| வலம்கைவாய் | வலத்திருக்கையாலே |
| சரங்கள் ஆண்டு | அம்புகளைப் பிரயோகித்தவனும், |
| பண்டு ஆய | நித்யமான |
| நான்கு வேதங்களும் | நாலு வேதங்களையும் |
| ஐந்து வேள்விகளும் | பஞ்சமஹாயஜ்ஞங்களையும் |
| கேள்வியோடு | ஸ்மிருதிகளையும் |
| அங்கம் ஆறும் | ஆறு அங்கங்களையும் |
| கண்டானை | பிரவர்த்திப்பித்தவனுமான எம்பெருமானை |
| தொண்டனேன் | அடியேன் |

கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே கண்டுகொண்டேன்—.

[தொண்டாயார்தாம்பரவும்.] 'ஆயார்' என்றது ஆனர் என்றபடி; தொண்டராக ஆனவர்கள்—"ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம்" என்றிருப்பவர்கள்; அப்படிப்பட்டவர்களால் போற்றப்படும் திருவடிகளையுடையவன்; 'நம் உடைமையை நாம் இழக்கலாகாது' என்று தானே தன் திருவடிகளைக்கொண்டுவந்து எல்லார் தலையிலும் வைத்து ஸத்தை பெறுவித்த சிறந்த குணத்தில் ஈடுபட்டு ஆட்படாமல் மார்பு நெறித்திருந்த இராவணனுடைய உடலை நாயும் நரியும் கழுகும் முதலிய மிருகங்கள் தின்னும்படி அம்புகளைச்செலுத்தி முடித்தவன்; ஆத்துமாக்கள் தன்னைப் பணிந்து உய்ந்துபோவதற்காகப் பலவகைப்பட்ட சாஸ்த்ரங்களையும் அநுஷ்டாநங்களையும் ஏற்படுத்தினவன்; இப்படிப்பட்ட பெருமானை அடியேன் இன்று திருக்கடல்மல்லையிலே ஸேவிக்கப்பெற்றேன்.

முதலடியில், தாளாளற்கு என்றது—தளாளனாகிய தனக்கு என்றவாறு. ருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன நான்கு வேதங்களாம். இவை வேதவ்யாஸரால் பிரிக்கப்பட்ட பிரிவின் பெயர்களாதலால், அதற்கு முன்னிருந்த தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் என்ற நான்கும் என்னவுமாம்.

ஐந்து வேள்விகளாவன:—பிரமயஜ்ஞம், தேவயஜ்ஞம், பூதயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞ மென்பனவாம். பிரமயஜ்ஞமாவது—வேதத்தில் நித்தியம் ஒரு ப்ரச்நமோதுவது; தேவயஜ்ஞமாவது—அக்நிஹோத்ரஞ் செய்வது; பூதயஜ்ஞமென்பது—பிராணிகட்குப் பலியிடுவது; பித்ருயஜ்ஞமென்பது—பித்ருக்களை யுத்தேசித்துத் தர்ப்பணம் விடுவது; மநுஷ்யயஜ்ஞமென்பது—விருந்தாளிகளுக்கு உணவு முதலியன கொடுப்பது.

மநுஸ்மிருதி, பராசரஸ்மிருதி முதலிய ஸ்மிருதிகள் கேள்வி யெனப்படும். அன்றியே, "கேள்வியோடங்கமாறும்" என்று சேர்த்து அந்வயித்து, உபதேச பரம்பரையாலே வருகிற ஆறு அங்கங்களும் என்று பொருள் கொள்ளவுமாம். சிக்ஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பன ஆறு அங்கங்களாம். ... ... ... ... (க)

படநாகத் தணைக்கிடந் தன்றவுணர்கோனைப்
படவெகுண்டு மருதிடைபோய், பழனவேலி *
தடமார்ந்த கடன்மல்லைத் தலசயனத்துத்
தாமரைக்கண் துயிலமர்ந்த தலைவர்தம்மை *
கடமாரும் கருங்களிறுவல்லான் வெல்போர்க்
கலிகன்றி யொலிசெய்த வின்பப்பாடல் *
திடமாக விவையைந்துமைந்தும் வல்லார்
தீவினையை முதலரிய வல்லார்தாமே. (௰)

| | |
|---|---|
| படம் நாகம் அணை கிடந்து | படங்களையுடைய சேஷ சயனத்திலே பள்ளி கொள்பவனும் |
| அன்று | முன்பொருகால் |
| அவுணர் கோனை பட வெகுண்டு | அசுரர் தலைவனை இரணியனை முடியும்படி சீறினவனும் |
| மருது இடை போய் | இரட்டை மருதமரங்களின் நடுவே தவழ்ந்து சென்றவனும் |
| பழனம் வேலி | நீர் நிலங்களைச்சுற்றிலு முடைத்தாய் |
| தடம் ஆர்ந்த | தடாகங்கள் நிறையப்பெற்ற தான |
| கடல்மல்லை தலசயனத்து | திருக்கடல்மல்லையிலே |
| தாமரை கண் துயில் அமர்ந்த | தாமரைபோன்ற திருக்கண்கள் துயில்கொண்டிரா நின்ற |
| தலைவர் தம்மை | ஸ்வாமியுமான தலசயனத்துறைவாரைப் பற்றி, |
| கடம் ஆரும் கரு களிறு வல்லான் | மதம்மிக்க பெரிய யானையை நடத்தவல்லவரும் |
| போர் வெல் | யுத்தத்திலே வெற்றி பெறுமவருமான |
| கலிகன்றி | திருமங்கையாழ்வார் |
| ஒலி செய்த | அருளிச்செய்த |
| இன்பம் | இன்பம் விளைக்கவல்ல |
| இவை ஐந்து ஐந்து பாடலும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| திடம் ஆக | உறுதியாக |
| வல்லார் தாம் | ஓதவல்லவர்கள் |
| தீ வினையை | பாவங்களை |
| முதல் அரிய வல்லார் | வேரறுக்க வல்லவராவர்கள். |

[படநாகத்தணை.] தான் பள்ளிகொள்ளப் பெறுதலாலே மகிழ்ச்சியின் மிகுதியினால் விகஸித்த படங்களையுடைய திருவனந்தாழ்வான் மேலே (திருப்பாற் கடலில்) திருக்கண் வளர்ந்தருள்பவனும், பக்தர்களுக்கு விரோதிகள் ஏற்பட்டால் அப்படுக்கைவாய்ப்பையும் விட்டொழிந்து நரஸிம்ஹாதிரூபேண அவதரித்து இரணியன் முதலான அசுரர்களை யொழிப்பவனும், க்ருஷ்ணாவதாரத்தில் இரட்டை மருத மரங்களினிடையே தவழ்ந்து சென்று, நாரத சாபத்தினால் அம்மரங்களாய்க்கிடந்த குபேர புத்திரர்களை உய்வித்தவனும், இப்படிப்பட்ட ச்ரமங்களெல்லாம் தீருகைக்காகவும் நம்மை நோக்குகைக்காகவும் நீர்வளம் பொருந்திய திருக்கடல்மல்லையிலே வந்து பள்ளிகொண்டிருப்பவனுமான எம்பெருமானைக் குறித்து ஆழ்வார் இனிதாக அருளிச்செய்த

இத்திருமொழியை ஓதவல்லவர்கள் முன்னைத்தீவினைகளை வேரோடறுத்துத் தொலைத்திட்டு நித்யாநந்தம் அநுபவிக்கப் பெறுவர்களென்று—இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டிஞராயிற்று.

"திடமாக" என்பதனை "ஐந்து மைந்தும் வல்லார்" என்பதிலும் அந்வயிக்கலாம்; "தீவினையை முதலரிய வல்லார்" என்பதிலும் அந்வயிக்கலாம்; பிந்தின அந்வயத்தில், நிச்சயமாகப் பாவத்தைப் போக்கிக்கொள்ளுவர்கள் என்றபடி. ... ... ... ... (கo)

அடிவரவு:—பாராயது பூண்டு உடம்பு பேய் பாய்ந்தானை கிடந்தானை பேணுத பெண் தொண்டாயார் படம் நண்ணுத.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.







ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—ஆறுந்திருமொழி.

# நண்ணாத வாளவுணர்.

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில், திருக்கடன்மல்லைத் தலசயனத்துறைவாரைத் தாம் ஸேவித்து மகிழ்ந்தமையை அருளிச்செய்தார்; எம்பெருமானுக்கு அடிமைப்படுவதிற் காட்டிலும் பாகவதர்களுக்கு அடிமைப்படுதல் விசேஷம்-என்கிற ஸகல சாஸ்த்ரஸாரப்பொருளை ஸ்ரீஸ்தலசாயிப்பெருமானுடைய திருவருளால் ஸ்மரிக்கப்பெற்று, அந்த பாகவதபக்தி நிஷ்டையிலே தாம் ஊன்றினபடியை இத்திருமொழியில் வெளியிடுகிறார். கீழ்த்திருமொழி போலவே இத்திருமொழிக்கும் திருக்கடன்மல்லைத் திருப்பதியே விஷயமாயினும், இப்போது இவர்க்கு உத்தேச்யம் அத்திருக்கடல்மல்லையன்று; அத்திருப்பதியிலெழுந்தருளியிருக்கிற எம்பெருமானும் உத்தேச்யனல்லன்; அத்திருப்பதியையோ அப்பெருமானையோ இடைவிடாது சிந்திக்கின்ற பாகவதர்களுண்டே, அவர்கள்தாமே உத்தேச்யர் என்பது வெளியாகின்றது.

ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்பு வைத்தால், அவ்வன்பு அளவற்றதாயுமிருந்தால், அஃது அவ்வஸ்துவோடே நின்றுவிடாமல் அதனோடு ஸம்பந்தஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனைவரும் தத்தம் அநுபவத்தாலறிவர்; அப்படியே பாகவதபக்தியென்பது பகவத்பக்தியின் எல்லைநிலமாக உண்டாமது. பகவத்பக்தியின் உறைப்பையே பாகவதபக்தி வெளிப்படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகைகளிலே நாம் ஆதரம் வைத்து அவற்றைக் கண்களி லொற்றிக்கொள்வதும் தலைமேல் அணிந்துகொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்; இதனால், நமக்கு ஸ்வாமியிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதேயன்றோ வெளியாகின்றது. அதுபோலவே, 'திருக்கடல்மல்லையையும் அவ்விடத்தெம்பெருமானையும் பணிகின்ற பாகவதர்களே எனக்கு உத்தேச்யர்' என்று அருளிச்செய்கிறமுகத்தால் அத்திருப்பதியினிடத்தும் அப்பெருமானிடத்தும் தமக்குள்ள பக்திப்பெருங்காதலே விளக்கப்பட்டதா மென்றுணர்க.

மேல் ஏழாம்பத்தில் திருச்சேறைத் திருப்பதியை மங்களாசாஸநம் செய்கிற "கண்சோரவெங்குருதி" என்னுந் திருமொழியிலும் இந்த பாகவத நிஷ்டை அருளிச்செய்யப்பட்டுள்ளமை அறியத்தக்கது. ... ... *

நண்ணாத வாளவுணரிடைப்புக்கு * வானவரைப்
பெண்ணாகி யமுதூட்டும் பெருமானார் * மருவினிய
தண்ணார்ந்த கடன்மல்லைத் தலசயனத் துறைவாரை *
எண்ணாதேயிருப்பாரை யிறைப்பொழுதுமெண்ணோமே. (க)

பெண் ஆகி — மோஹினியவதாரமெடுத்து,
நண்ணாத வாள் அவுணரிடை புக்கு — ப்ரதிகூலர்களான அசுரர்களின் நடுவே புகுந்து
(அவர்களை வஞ்சித்துவிட்டு)
வானவரை — தேவர்களுக்குமாத்திரம்
அமுது ஊட்டும் — அமுதமளித்த
பெருமானார் — ஸ்வாமியாயும்,
மருவ இனிய — பொருந்தி வாழ்வதற்குப் பாங்கான
தண் ஆர்ந்த — குளிர்த்திநிரம்பிய
கடல்மல்லைத் தலசயனத்து — திருக்கடல்மல்லை யென்னும் திருப்பதியில்
உறைவாரை — நித்யவாஸம் செய்பவராயுமிருக்கிற ஸ்தலசாயிப் பெருமாளை
எண்ணாதே இருப்பாரை — சிந்தியாமலிருப்பவர்களை
இறை பொழுதும் — அற்பகாலமும்
எண்ணோம் — ஒரு பொருளாக நினைக்க மாட்டோம்.

[நண்ணாதவாளவுணர்.] திருக்கடல்மல்லைத் தலசயனத்துறைவாரைச் சிந்தை செய்யாதவர்கள் பதார்த்தகோடியிலேயே சேராதவர்களாகையால் அபதார்த்தங்களான அவர்களை நான் ஒரு பொருளாகவே மதிக்கமாட்டேனென்கிறார். தலசயனத்துறைவாரைச் சிந்திக்கும் மஹான்களையே நான் அநவரதம் சிந்திப்பேன் என்பது இதில் வெளிப்படையாம்.

தலசயனத்துறைவாருடைய திருக்குணங்களில் ஒன்றையநுபவிக்கிறார் முன்னடிகளில். வேறொரு பலனையும் விரும்பாமல் எம்பெருமானையே பரமப்ரயோஜநமாக விரும்பவேண்டுவது ஸ்வரூபப்ராப்தம்; அப்படி தன்னை விரும்பாமல் வேறொரு அற்பபலனை விரும்பி அது பெறுவதற்காகத் தன்னை வந்து பணிவாருண்டாகில், ‘இவர்கள் நம்மையே பரமப்ரயோஜநமாகக் கொள்ளும் உத்தமாதிகாரிகளாக இல்லாவிட்டாலும், வேறொரு பலனை விரும்பினார்களாகிலும், அப்பலனைப் பெறுவதற்கு வேறொரு க்ஷுத்ரதேவதையைத் தேடி ஓடாமல் நம்மிடம் வந்தார்களே!; நம்மை உபேயமாகக் கொள்ளாவிடினும் உபாயமாகவாவது கொண்டார்களே!’ என்று திருவுள்ளமுவந்து அருமையான காரியங்களைச் செய்து அவர்களுடைய மனோரதத்தை நிறைவேற்றுபவன் எம்பெருமான்—என்று இக்குணவிசேஷத்தை விளக்கவேண்டி, “நண்ணாதவாளவுணரிடைப்புக்கு வானவரைப் பெண்ணாகி அமுதூட்டும் பெருமானார்” என்கிறார்.

முன்னொருகாலத்தில், இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச்சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவருகையில்

துர்வாஸமஹாமுநி எதிர்ப்பட்டு அவளை வணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆநந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனைக்கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில் அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால்மிதித்துத்துவைத்தது; அதுகண்டு முநிவரன் கடுங்கோபங்கொண்டு இந்திரனைநோக்கி 'இவ்வாறு செல்வச்செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துவிடக்கடவன' என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம்யாவும் ஒழிந்தன; ஒழியவே அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறுகப்பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின் கீழேசென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன். இப்படி ஸ்ரீமந்நாராயணன் அக்கடலினிடையே மஹா கூர்மமாய் மந்தரபர்வதத்திற்கு ஆதாரமாய் எழுந்தருளியிருக்க, வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப்பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்லவலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால் தான் ஒரு திருமேனியைத்தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும் வேறொரு திருமேனியைத்தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று வாஸுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக்கடைந்தனன். அப்பால் அந்த ஸ்ரீ மஹாவிஷ்ணு தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத்தரித்து அம்ருதபூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அந்த க்ஷீரஸமுத்ரத்திலிருந்து தோன்றினன். அப்பொழுது அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அம்ருதகலசத்தை பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள அந்த எம்பெருமான் ஜகந்மோஹநமான ஒரு பெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்களுடைய கோஷ்டிக்குமாத்திரம் ப்ரஸாதித்தனன்.

[இப்படி எம்பெருமான் மோஹிநீரூபத்தால் அசுரர்களை மயக்கித் தேவர்கட்கே அமிருதத்தைப்பங்கிட்டுக் கொடுத்துவருகையில், ராஹுவென்னும் ஓர் அசுரன் தான் இருக்கவேண்டிய அசுரர் கூட்டத்தைவிட்டுத் தந்திரமாகத் தேவகோஷ்டியினிடையிலே புகுந்து கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண,

அதனை ஸூர்ய சந்திரர்கள் குறிப்பித்தமாத்திரத்தில், எம்பெருமான் அவனை அகப்பையாலடித்துத் தலைவேறு உடல்வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர் நீங்காத அந்தத்தலையும் உடலும் விஷ்ணுவின் அநுக்ரஹத்தால் ராஹு-கேதுக்கள் என இரண்டு க்ரஹங்களாகி ஸூர்யன் முதலிய ஏழு க்ரஹங்களோடு சேர்ந்து, தம்மேற் கோள்சொன்ன ஸூர்ய சந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சில காலத்தில் அவர்களைப் பிடித்துக்கொள்ளுகின்றன; அதுவே க்ரஹணமெனப் படுகின்றது—என்பதும் இங்கு அறியத்தக்கது.]

நண்ணாத=பகவத்விஷயத்தில் பகையை இயற்கையாகவுடைய என்றபடி. ஸாதுக்களைக் கண்டவுடனே கொல்வதற்காக வாட்படையைக் கையோடே வைத்துக்கொண்டிருப்பவர்களாதலால் "வாளவுணர்" என்றார்.

மருவ+இனிய, மருவினிய; தொகுத்தல்விகாரம். எம்பெருமான் பொருந்தி வாழ்வதற்கிடான திருக்கடல்மல்லை என்றபடி. இப்பெருமானைச் சிந்தியாதவர்கள் சைதந்யமுடையரல்லர் என்றாராயிற்று. "ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானாரல்லாதார், மானிடவரல்லரென்று என்மனத்தே வைத்தேனே" என்பர் பதினோராம்பத்திலும். ... ... ... (க)

பார்வண்ண மடமங்கை பனிநன்மா மலர்க்கிழத்தி *
நீர்வண்ணன் மார்வகத்தி லிருக்கையை முன்நினைந்தவனூர் *
கார்வண்ண முதுமுந்நீர்க் கடன்மல்லைத் தலசயனம் *
ஆரெண்ணும் நெஞ்சுடையா ரவரெம்மை யாள்வாரே. (உ)

| | |
|---|---|
| பார் வண்ணம் மடம் மங்கை | ஆத்மகுணங்கள் நிறைந்த பூமிப்பிராட்டியும் |
| பனி நல் மா மலர் கிழத்தி | குளிர்ந்த சிறந்த தாமரை மலரில் தோன்றிய ஸ்ரீதேவியும் |
| நீர் வண்ணன் | கடல்வண்ணனான எம்பெருமானுடைய |
| மார்வு அகத்தில் | திருமார்பிலும் இடப்பக்கத்திலும் |
| இருக்கையை | எழுந்தருளியிருக்கும் படியை |
| முன் நினைந்து | முந்துற அநுஸந்தித்து |
| | (அதற்குப்பிறகு) |
| அவன் ஊர் | அப்பெருமானெழுந்தருளியிருக்குமிடமாகிய |
| கார் வண்ணம் முது முந்நீர் கடல்மல்லை தலசயனம் | கரிய கடலின் கரையிலேயுள்ள திருக்கடல்மல்லைத் திருப்பதியை |
| எண்ணும் நெஞ்சு உடையார் ஆர் | சிந்திக்கவல்ல மனமுடையவர்கள் எவரோ |
| அவர் | அப்படிப்பட்ட பாகவதர்கள் |
| எம்மை ஆள்வார் | அடியோங்களை அடிமை கொள்ளத்தக்கவர்கள். |

[பார்வண்ணமடமங்கை.] திருக்கடன்மல்லையையே சிந்திக்கும் சிந்தையுடையவர்கள் எவர்களோ அவர்கள்தாம் எமக்கு ஸ்வாமிகள் என்கிறார். திருக்கடன்மல்லையைச் சிந்திப்பது அவ்விடத்துள்ள ஸ்தலசாயிப்பெருமானை அடிபணிவதற்காகவன்றோ; இவ்வுலகத்திலுள்ளவர்களடங்கலும் பெரும்பாலும் குற்றங்குறைகட்குக் கொள்கலமாயிருக்கையாலே எம்பெருமானை அடிபணிதல்

கூடுமோ? நம்முடைய அபராதங்களைக்கண்டு தண்டிப்பனே! என்று பலரும் அஞ்சிக்கிடப்பர்களாகையாலே எம்பெருமானை அடிபணிதல் கூடாதகாரிய மன்றோ? என்று ஒரு சங்கை பிறக்கக்கூடுமாதலால் அதற்குப் பரிஹாரமாக முன்னடிகளருளிச்செய்கிறார்;—சேதநர்கள் எத்தனையபராதங்கள் செய்திருந்தாலும் அவற்றை நற்றமாக உபபாதித்து உரைக்கவல்ல பெரியபிராட்டியாரும், அவற்றைப் பொறுப்பிக்கவல்ல பூமிப்பிராட்டியாரும் எம்பெருமானை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப்பிரியாமல் கூடவேயிருக்கிற இருப்பை நினைத்தால், தமது குற்றங்குறைகளுக்காக அஞ்சவேண்டிய ப்ரஸக்தியேயில்லையென்று காட்டுகிறார்.

இரண்டாமடியில் "நீர்வண்ணன் மார்வத்தில்" என்பது சிலருடைய பாடமாயினும் அது ஒவ்வாது; "மார்வகத்தில்" என்பதே வியாக்கியானத்திற்கிணங்கிய பாடம்; மார்வகத்தில் என்றது—மார்விலும் அகத்திலும் எனப் பொருள்படுதலால் உம்மைத்தொகை. பனிநன்மா மலர்க்கிழத்தியான பெரிய பிராட்டியார் மார்வில் இருக்கையையும், பார்வண்ண மடமங்கையாகிய பூமிப்பிராட்டியார் அகத்தில் [—அருகில்] இருக்கையையும் தெரிந்துகொண்டு 'இனி நாம் நமது குற்றங்கட்காக அஞ்சவேண்டிய காரணமில்லை' என்று தைரியமுடையராய் அப்பெருமானது ஊராகிய திருக்கடல்மல்லையைத் தியானிப்பவர்கள் எமக்குத் தலைவர் என்றாராயிற்று.

பார்வண்ணம்=பூமிஸ்வரூபமான என்றபடி. "திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ" என்கிறபடியே ஸ்ரீதேவியும் பூதேவியும் வலவருகில் ஒருத்தியும் இடவருகில் ஒருத்தியுமாக எழுந்தருளியிருக்க, பூமிப்பிராட்டியை மாத்திரம் அருகிலிருப்பதாகவும் பெரியபிராட்டியாரைத் திருமார்விலிருப்பதாகவும் இப்பாசுரத்தில் சொல்லியிருப்பானேன்? என்னில்; பெரியபிராட்டியார் ஸ்ரீதேவியென்னுந் திருநாமத்துடனே உபய நாய்ச்சிமார்களுள் ஒருத்தியாய் வலப்பக்கத்திலெழுந்தருளியிருப்பதுந்தவிர "அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா!" என்கிறபடியே திருமார்பு நாய்ச்சியாரென்னுந் திருநாமத்துடனே திருமார்பிலும் எழுந்தருளியிருக்கிறாளாகையாலும், எம்பெருமானுக்குப் புருஷகாரஞ் செய்வதற்கு அவ்விருப்பு மிகவும் அநுகூலமாகையாலும் இங்கு அவ்விருப்பையெடுத்துப் பேசினாரென்றுணர்க.

மலர்க்கிழத்தி=தாமரைமலரிற்பிறந்த தலைவி என்றபடி. நீர்வண்ணன் என்ற திருநாமம் திருநீர்மலைப் பெருமாளுடையதாயினும், கடல்வண்ணனென்ற பொருளைக்கொண்டு இங்குத் தலசயனத் துறைவாரிடத்தில் அத்திருநாமம் பிரயோகிக்கப்பட்டதென்க. ... ... ... (உ)

> ஏனத்தி னுருவாகி நிலமங்கை யெழில்கொண்டான் *
> வானத்திலவர் முறையால் மகிழ்ந்தேத்தி வலங்கொள்ள *
> கானத்தின் கடன்மல்லைத் தலசயனத் துறைகின்ற *
> ஞானத்தி னொளியுருவை நினைவாரென் நாயகரே. (ங)

| | |
|---|---|
| ஏனத்தின் உரு ஆகி | வராஹரூபியாய்த் திருவவதரித்து |
| நிலம் மங்கை | பூமிப்பிராட்டியை |
| எழில் | (முன்னிருந்த அழகு சிறிதும் குறையாமல்) அவ்வழகுடனே |
| கொண்டான் | (அண்டபித்தியில் நின்றும்) மீட்டுக்கொணர்ந்தவனும், |
| வானத்திலவர் | தேவர்கள் |
| மகிழ்ந்து | ஆநந்தத்துடனே |
| முறையால் | தங்கள் தங்கள் அதிகாரத்திற்குத் தகுதியாக |
| ஏத்தி | துதித்து |
| வலம் கொள்ள | பிரதக்ஷிணம் செய்வதற்குப் பாங்காக, |
| கானத்தின் கடல்மல்லை தலசயனத்து உறைகின்ற | காட்டினிடையேயிருக்கிற திருக்கடல்மல்லையிலெழுந்தருளியிருப்பவனும், |
| ஞானத்தின் ஒளி உருவை | ஞானவொளிபொருந்திய திருமேனியையுடையவனுமான பெருமானை |
| நினைவார் | சிந்திக்கும் பாகவதர்கள் |
| என் நாயகர் | அடியேனுக்குத் தலைவராவர். |

[ஏனத்தினுருவாகி.] திருக்கடல்மல்லையில் ஞானப்பிரான் என்ற திருநாமத்துடனே திருக்கோயில் கொண்டிராநின்ற எம்பெருமானை மங்களாசாஸநம் செய்தருளுகிறார் இதில். பூமியைப் பாயாகச்சுருட்டியெடுத்துப்போன ஹிரண்யாக்ஷனைக்கொன்று பூமியைக்கொணர்ந்து பழையபடி விரிப்பதற்காகவும், பூமிக்கு நேர்ந்த பிரளயாபத்தைப் போக்கியருளுதற்காகவும் வராஹாவதாரஞ் செய்தருளினவனும், நித்யஸூரிகளும் இவ்விடத்திலே வந்து வழிபாடுகள் செய்யுமாறு திருக்கடல்மல்லையிலே திருக்கோயில் கொண்டிருப்பவனுமான ஞானப்பிரானைத் தியானிக்கும் பாகவதர்களே எனக்குத் தலைவர்—அவர்கட்கே நான் அடிமைப்பட்டிருப்பவன் என்றாராயிற்று.

1. "பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்கு" என்றபடி அண்டபித்தியில் ஒட்டிக்கொள்ளுதலால் நிலைமைமாறி அழகு அழிந்திருந்த பூமிப்பிராட்டியின் அழகை மறுபடியும் பழையபடியே நிலைநிறுத்தினான் என்பார் நிலமங்கையெழில்கொண்டான் என்றார். வானத்திலவர் என்றது—பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளையாகவுமாம்; ஸ்வர்க்காதி லோகங்களிலுள்ள மற்ற தேவதைகளையாகவுமாம்.

இரண்டாமடியினிறுதியில் "வரங்கொள்ள" என்று பாடமாகில், தங்களுக்கு வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்ளுமாறு என்று பொருளாகுக.

கானத்தின்கடன்மல்லை என்றது—சுற்றிலும் காடுகள் அடர்ந்த கடல்மல்லையென்றவாறு. திருமால் வராஹரூபியாகத் திருவவதரித்த காலத்தில் நெடுங்காலம் காட்டிலே விளையாடினதாகப் புராண வரலாறு உண்டு; 2. "வானத்தெழுந்த மழைமுகில்போலெங்குங், கானத்துமேய்ந்துகளித்து விளையாடி, ஏனத்துருவாய்" என்றார் பெரியாழ்வாரும். அப்படி காடுகளிலே விளையாடின ஸ்ரீவராஹமூர்த்திக்கு இங்கும் காடுகளுண்டென்பார் கானத்தின்கடன்மல்லையென்றார். ஸ்ரீவராஹப்பெருமாளுக்கு ஞானப்பிரான் என்று திருநாமம் வழங்

1. நாச்சியார் திருமொழி 11—8. 2. பெரியாழ்வார் திருமொழி 2—10—9.

குதல் ஸம்ப்ரதாயமாதலால் அதுதோன்ற "ஞானத்திணேளியுரு" என்ருர். நம்மாழ்வாரும் திருவிருத்தத்தில் "எறிதிரைவையம் முற்றும் ஏனத்துருவாயிடந்தபிரான்—ஞானப்பிரான்" என்றருளிச் செய்ததுகாண்க. ஞானத்திணேளியுரு=ஞானப்ரகாசமே உருவெடுத்து நிற்பவன்; ஞானவொளிமயமான திவ்யமங்கள விக்ரஹமுடையவன். ... ... ... (௩)

விண்டாரை வென்றாவி விலங்குண்ண மெல்லியலார் *
கொண்டாடு மல்லகலமழலேற வெஞ்சமத்துக்
கண்டாரை * கடன்மல்லைத் தலசயனத்துறைவாரை *
கொண்டாடும் நெஞ்சுடையா ரவரெங்கள் குலதெய்வமே. (௪)

| | | | |
|---|---|---|---|
| விண்டாரை | சத்துருக்களான ராவணுதி ராக்ஷஸர்களை | அழல் ஏற | அக்நி ஆக்ரமித்து புஜிக்கும் படியாகவும் |
| வென்று | தோற்கடித்து | வெம் சமத்து | பயங்கரமான போர்க் களத்திலே |
| ஆவி | (அவர்களுடைய) உயிரை | கண்டாரை | பார்த்துக்கொண்டிருந்த |
| விலங்கு | (நாய் நரி முதலிய) மிருகங்கள் | கடல்மல்லைத் தலசயனத்து உறைவாரை—; | |
| உண்ண | மேல்விழுந்து தின்னும்படி யாகவும், | கொண்டாடும் நெஞ்சு உடையாரவர் | புகழ்ந்து பேசும்படியான நெஞ்சுபடைத்த பாகவதர்கள் |
| மெல் இயலார் கொண்டாடும் மல் அகலம் | மாதர்கள் கொண்டாடப் பெற்றதும் மிடுக்கை யுடையதுமான (அவர்களது) மார்வை | எங்கள் குலம் தெய்வம் | எங்கள் குலத்துக்குத் தெய்வங்களாவர். |

[விண்டாரைவென்று.] தலசயனத்துறைவாரைப் புகழும் பாகவதர்களே எங்கள் குலத்துக்குத் தெய்வமென்கிருர். தலசயனத்துறைவார் எப்படிப்பட்டவர்?—; நல்லவார்த்தை சொல்லச்செய்தேயும் எதிரம்பு கோக்கும் அஹங்காரிகளான ஆஸுரப்ரக்ருதிகளின் செருக்கை நீக்குமவர்; அப்படிப்பட்ட அஹங்காரிகளின் உடலை நாயும் நரியும் பிடுங்கித் தின்னும்படியாகவும், மாதர்களேறியநுபவித்த அவர்களது மார்பை அக்நிபகவானேறி அநுபவிக்கும்படியாகவும் போர்க்களத்திற் செய்தவர்; இப்படிப்பட்டவர் நம்முடைய அஹங்காரத்தையும் தொலைத்து நம்மை ஆட்கொள்ளுதற்காகத் திருக்கடன்மல்லையிலே வந்து தரைக்கிடை கிடக்கிருர்; எனக்கு அவர் உத்தேச்யரல்லர்; அவரைக் கொண்டாடிக்கொண்டு போதுபோக்குகின்ற பாகவதர்களே எனக்கும் எனது குலத்துக்கும் உத்தேச்யர்—என்ருராயிற்று. ... ... (௪)

பிச்சச்சிறுபீலிச் சமண்குண்டர் முதலாயோர் *
விச்சைக் கிறையென்னு மவ்விறையைப் பணியாதே *
கச்சிக் கிடந்தவனூர் கடன்மல்லைத்தலசயனம் *
நச்சித்தொழுவாரை நச்சென்றன் நன்னெஞ்சே! (௫)

| | |
|---|---|
| பிச்சம் சிறு பீலி | (மயிலிறகுகளினால் செய்யப்பட்ட) குடையையும் சிறிய விசிறியையு முடைய |
| சமண் குண்டர் முதலாயோர் | நீசரான சமணர் முதலானவர்கள் |
| விச்சைக்கு இறை என்னும் | ஸர்வஜ்ஞனென்று சொல்லிக்கொண்டாடுகிற |
| அவ் இறையை | அந்த அமணச்சாமியை |
| பணியாதே | பணியாமல், |
| கச்சி கிடந்தவன் ஊர் கடல்மல்லை தலசயனம் நச்சி தொழுவாரை | கச்சியில் (திருவெஃகாவில்) பள்ளிகொள்ளும் பெருமானது திவ்யதேசமாகிய திருக்கடல்மல்லையை விரும்பித் தொழுகின்ற பாகவதர்களை |
| என் தன் நல் நெஞ்சே!— | எனது நல்ல நெஞ்சமே! |
| நச்சு | நீ விரும்பித்தொழு. |

[பிச்சச்சிறுபீலி.] இவ்வுலகில் அவைதிகங்களான மதங்கள் பலவுண்டு; அவற்றில் போய்ச்சேருகிற ஜனங்கள் அதிகமேயன்றி, வைதிகஸம்ப்ரதாயத்திற் புகுமவர் குறைவாகவே யிருப்பர்; அப்படி அவைதிகமதங்களிற்சேர்ந்து தேவதாந்தரங்களைப் பணியாமல் திருக்கடன்மல்லைத் தலசயனத்துறைவாரைப் பணியுமவர்கள் எவரோ, அந்தப் பாகவதர்களையே தமது நெஞ்சு பணியக்கடவதென்கிறார். அவைதிகமதங்களில் ஒன்றான ஜைநமதத்தையெடுத்துப் பேசுகிறார்—பிச்சச்சிறுபீலி இத்யாதியால்.

சமண்குண்டர் என்றது—குண்டரான சமணர் என்றபடி; குண்டர்—நீசர்; சமணராவார்—அருகனை வழிபடுஞ்சமயத்தோராகிய ஆருகதரெனப்படும் ஜைநராவர்; இவர்கள் மிக்க தார்மிஷ்டர்களென்று தோற்றும்படியாக மயிற்பிச்சங்களைக் கட்டிக் கையிலேகொண்டு, எறும்பு முதலிய சிற்றுயிர்கட்குக் கொஞ்சமும் ஹிம்ஸை உண்டாகாதபடி அப்பீலிப்பிச்சங்களால் தரையை விளக்கிக்கொண்டு நடந்து செல்வதுபற்றிப் பிச்சச்சிறுபீலிச்சமண்குண்டர் என்றார்.

பிச்சச்சிறுபீலி யென்பதற்கு இரண்டு வகையாகப் பொருள்கொள்ள இடமுண்டு;—'புச்சம்' என்ற வடசொல் பிச்சமெனத் திரிந்திருப்பதாகக்கொண்டு, கண்டம்கண்டமாயிருக்கிற மயிலிறகுகளைக்கொண்ட சமணர்கள் என்றுரைத்தல் ஒன்று. பிச்சம் என்கிற தமிழ்ச்சொல் மயிலிறகினாற் செய்த குடையையும் பீலி என்பது விசிறியையும் சொல்லுமாதலால், குடையையும் விசிறியையும் கொண்ட சமணர் என்றுரைத்தல் மற்றொன்று. இப்பொருளை பெரியவாச்சான்பிள்ளைக்குத் திருவுள்ளமானது;—"நிழலுக்கீடாக ஒரு கையிலே பிச்சத்தைப் பிடித்து, ஒரு கையிலே பீலித்தழையைப் பிடித்து, கண்டார்க்கு 'இவர்களும் சில தார்மிகரே!' என்று தோற்றும்படி அநுகூலவேஷத்தைப் பரிக்ரஹித்து" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

இச்சமணர்கள் 'ஸர்வஜ்ஞன்' என்றொரு தெய்வத்தைக்கொண்டு, அத்தெய்வமே கல்விகட்குக் கடல் என்று சொல்லி அதனைப் பணிவர்களாம்—அதை இரண்டாமடியிலருளிச்செய்கிறார். "வித்யா" என்ற வடசொல் விச்சையென விகாரப்படும்,

"சமண்குண்டர் முதலாயோர்" என்ற ஆதிசப்தத்தினால் பௌத்தரையும் லோகாயதிகரையும் கொள்க. முதலாயோரென்ற எழுவாய் எவ்விடத்தில் அந்வயிக்கிறதென்னில், இரண்டாமடியிலுள்ள என்னுமென்பதில் அந்வயிக்கிறது. சமணர்களால் சொல்லப்படுகிற தெய்வத்தைப் பணியாமல் என்கை.

கச்சிக்கிடந்தவனூர் = 'காஞ்சீ' என்ற வடசொல் கச்சியென்று கிடக்கிறது. காஞ்சீபுரியில் திருவெஃகாவென்னுந் திருப்பதியில் யதோக்தகாரியாகப் பள்ளிகொண்டருளும் பெருமானே திருக்கடல்மல்லையில் ஸ்தலசாயியாக ஸேவைஸாதிக்கிறானென்று ஒற்றுமை நயந்தோற்ற அருளிச்செய்கிறபடி. "வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர்மல்லைபாய் மதிட்கச்சியூராய்" என்ற திருநெடுந்தாண்டகப் பாசுரமும் இங்குப் பொருத்தமாக அநுஸந்திக்கத்தகும். பரவாஸுதேவனாகிய ஒரு சிறந்த விலையுயர்ந்த ரத்னத்தை அவனது வாத்ஸல்யமென்கிற ஒரு கப்பலானது [த்வீபாந்தரத்தினின்றும் த்வீபாந்தரத்திற்குச் சரக்குகளைக்கொண்டு தள்ளுவதுபோல] திருக்கடல்மல்லையென்கிறவொரு தீவிலே கொணர்ந்து தள்ளிற்றும்; 'கானத்தின்கடல்மல்லை' என்றபடி காட்டு நிலமாகிய அவ்விடத்திலே அந்த ரத்னத்தைப் பேணுவாரில்லாமையாலும் ரத்னம் விலைபோவது மஹாநகரங்களிலாகையாலும் அந்தக் கப்பலானது அந்த ரத்னத்தை அங்கிருந்து கொணர்ந்து காஞ்சீபுரத்திலே தள்ளிற்றும்—என்றிப்படி சமத்காரமாகச் சொல்லும் விசேஷார்த்தம் விளங்குமாறு "கச்சிக்கிடந்தவனூர் கடன்மல்லைத் தலசயனம்" என்றருளிச் செய்தமை கண்டுகொள்க. ... (௫)

புலங்கொள் நிதிக்குவையோடு புழைக்கைம்மா களிற்றினமும் *
நலங்கொள் நவமணிக்குவையும் சுமந்தெங்கும் நான்றொசிந்து *
கலங்களியங்கும் மல்லைக் கடன்மல்லைத் தலசயனம் *
வலங்கொள் மனத்தாரவரை வலங்கொள்ளென் மடநெஞ்சே! (௬)

| | |
|---|---|
| புலன் கொள் | இந்திரியங்களைக் கவர்கின்ற [மநோஹரமான] |
| நிதி குவையோடு | பொற்குவியல்களையும் |
| புழை கை மா களிறு இனமும் | துதிக்கையையுடைய பெரிய யானைக்கூட்டங்களையும் |
| நலம் கொள் நவமணி குவையும் | நல்ல நவரத்னக்குவியல்களையும் |
| சுமந்து | தாங்கிக்கொண்டு |
| நான்று ஒசிந்து | (ஏறின சரக்குகளின் கனத்தாலே) மிகவும் உள்ளிழிந்து |
| கலங்கள் | கப்பல்களானவை |
| எங்கும் | பார்த்தவிடமெங்கும் |
| இயங்கும் | ஸஞ்சரிக்கப்பெற்ற |
| மல்லை | பெருமையையுடைத்தான |
| கடல் | கடலின் கரையிலுள்ள |
| மல்லைத் தலசயனம் | மல்லாபுரியை |
| வலம் கொள் மனத்தாரவரை | ப்ரதக்ஷிணம் பண்ணவேணுமென்கிற விருப்பமுடைய பாகவதர்களை, |
| என் மட நெஞ்சே | எனக்கு விதேயமான மனமே! |
| வலம் கொள் | நீ அநுவர்த்திப்பாயாக, |

[புலன்கொள்நிதி.] திருக்கடல்மல்லையென்னுந் திருப்பதி கடற்கரையிலே உள்ளதாகையாலும், அக்கடலிலே த்வீபாந்தரங்களிலிருந்து சிறந்த வஸ்துக்களை ஏற்றிக்கொண்டுவரும் கப்பல்கள் பெரும்பான்மையாகக் காணப்படுதலாலும் இந்த நிலைமையைப் பேசுகிறார் இப்பாசுரத்தில்.

நிதி என்னும் பல பொருளொருசொல் இங்கு, பொன் என்ற பொருளில் வந்தது. சிறந்த பொற்குவியல்களையும் யானைக்கூட்டங்களையும் நவமணித்திரள்களையும் அளவு மீறித்தாங்கிக்கொண்டு வருகையாலே பாரம் கனத்துத் துவண்டிராநின்றனவாம் மரக்கலங்கள்.' அப்படிப்பட்ட நற்சரக்குக்களமைந்த பல கப்பல்கள் உலாவப்பெற்ற கடலின் கரையிலேயுள்ள மல்லாபுரியை வழிபட நினைக்கும் பாகவதர்களையே அடியேன் வழிபடக்கடவேன் என்றாராயிற்று.

"நான்றொசிந்த" என்றபாடமும் நன்கு பொருந்தும். நான்று='நால்' என்னும் வினையடியாப் பிறந்த இறந்தகால வினையெச்சம்; தொங்கலாடி என்றபடி. ஓசிதல்—தளர்தல். ஏறினசரக்கின் கனத்தாலுண்டான நிலைமையைச் சொன்னபடி. கலம்=மரக்கலம்; அதாவது—கப்பல். ... ... (சு)

பஞ்சிச்சிறுகூழை யுருவாகி மருவாத *
வஞ்சப்பெண் நஞ்சுண்ட வண்ணல், முன்நண்ணாத *
கஞ்சைக் கடந்தவனூர் கடன்மல்லைத் தலசயனம் *
நெஞ்சில் தொழுவரைத் தொழுவாயென் தூய்நெஞ்சே! (எ)

| பதம் | பொருள் | பதம் | பொருள் |
|---|---|---|---|
| பஞ்சி சிறு கூழை உரு ஆகி | பஞ்சுபோலே மிருதுவாய்ச் சிறிதான மயிர்முடியை யுடையளான யசோதைப்பிராட்டியின் உருவெடுத்துக்கொண்டு (வந்தவளும்) | நண்ணாத | தன்னிடத்து அன்பு கொள்ளாமலிருந்த |
| மருவாத | நெஞ்சில் இரக்கமற்றவளும் | கஞ்சை | கம்ஸனை |
| வஞ்சம் | வஞ்சகமுடையவளுமான | கடந்தவன் | வென்று முடித்தவனுமான பெருமானுடைய |
| பெண் | பூதனையென்னும் பேய்மகளினுடைய | ஊர் | திவ்யதேசமாகிய |
| நஞ்சு | (முலையில் தடவியிருந்த) விஷத்தை | கடல்மல்லை தலசயனம் | திருக்கடன்மல்லையை |
| உண்ட | அமுதுசெய்த | நெஞ்சில் தொழுவாரை | நெஞ்சாரத் தொழுகின்ற பாகவதர்களை |
| அண்ணல் | ஸ்வாமியும், | என் தூய் நெஞ்சே | எனது பரிசுத்தமான மனமே! |
| முன் | முன்னொருகால் | தொழுவாய் | நீ தொழக்கடவை. |

[பஞ்சிச்சிறுகூழை.] "பஞ்சிச்சிறு கூழையுருவாகி" என்றது பூதனையினிடத்தில் அந்வயிக்கவுமாம், கண்ணபிரானிடத்தில் அந்வயிக்கவுமாம். பூதனையினிடத்து அந்வயிக்கும்போது "பஞ்சிச்சிறுகூழை" என்னுமளவும் அன்மொழித்தொகையாய், பஞ்சுபோல் மெல்லிய சிறிய கூந்தலையுடையவள் என்று

பொருள்பட்டு யசோதைப்பிராட்டிக்கு வாசகமாகி, அவளுடைய வேஷத்தை ஏறிட்டுக்கொண்டு வந்தாளென்றதாகிறது. 'நம்முடைய தாயான யசோதை தான் நமக்கு முலைகொடுக்கவருகிறாள்' என்று கண்ணபிரான் கருதவேணு மென்று தாய்வேடம்பூண்டு வந்தாளிறே பூதனை.

இனி, "பஞ்சிச்சிறுகூழையுருவாகி" என்றதைக் கண்ணபிரானிடத்து அந்வயிக்கில், பிடித்துக்கட்ட வொண்ணாதபடியான மயிர்முடியையுடைய இளம் பிள்ளையான பருவத்திலேயே வஞ்சப் பெண்ணின் விஷத்தையுண்டவன் என்றதாம். ஆக, பூதனையின் முலையைச் சுவைத்துண்டவனும் கம்ஸனை முடித்தவனுமான பெருமான் எழுந்தருளியிருக்கிற திருக்கடல்மல்லையைச் சிந்தைசெய்யும் பாகவதர்களையே எனது நெஞ்சம் சிந்தைசெய்யக் கடவதென்றாராயிற்று.

'கம்ஸ' என்ற வடசொல் 'கஞ்சு' எனச் சிதைந்தது. 1. "கஞ்சைக் காய்ந்த கருவில்லி" என்றாள் சூடிக்கொடுத்தநாச்சியாரும். ... (எ)

செழுநீர் மலர்க்கமலம் திரையுந்து வன்பகட்டால் *
உழுநீர் வயலுழவருழப் பின்முன் பிழைத்தெழுந்த *
கழுநீர் கடிகமழும் கடன்மல்லைத் தலசயனம் *
தொழுநீர் மனத்தவரைத் தொழுவாயென் தூய்நெஞ்சே! (அ)

| | | | |
|---|---|---|---|
| உழு நீர் | எப்போதும் உழுது கொண்டேயிருக்க வேண்டும்படியான இயற்கையையுடைய | உழ | உழுதல் செய்ய, |
| வயல் | கழனிகளிலே | பின் முன் | பின்னும் முன்னும் |
| உழவர் | க்ருஷிபண்ணுகிற உழவர்கள், | பிழைத்து எழுந்த | உழவுக்குத் தப்பி யெழுந்த |
| செழு நீர் திரை | அழகிய நீரின் அலைகளையும் | கழுநீர் | செங்கழுநீர் மலர்களினுடைய |
| கமலம் மலர் | தாமரை மலர்களையும் | கடி கமழும் | பரிமளம் வீசப்பெற்ற |
| உந்து | தள்ளுகிற | கடல்மல்லை தலசயனம் | திருக்கடல்மல்லையை |
| வல் பகட்டால் | வலிய எருதுகளைக்கொண்டு | தொழு நீர் மனத்தவரை | வணங்குவதையே இயற்கையாகவுடைய நெஞ்சு படைத்த பாகவதர்களை |
| | | | என் தூய் நெஞ்சே! தொழுவாய்—. |

[செழுநீர்மலர்.] திருக்கடன்மல்லையின் நில நீர் வளங்களை அநுபவித்தருளிச் செய்கிறார். முதலடியில் "திரையுந்து" என்றபாடத்திற்காட்டிலும் "திரையுந்தி" என்றபாடம் வியாக்கியானத்திற்கு மிகவு மிணங்கும். உழவர்கள் கழனிகளை உழும்போது அங்குள்ள தாமரைமலர்களையும் நீர் வெள்ளங்களையும் காலாலே தள்ளிக்கொண்டே வலிய எருதுகளைக்கொண்டு உழுவர்களாம்; அப்படி அவர்கள் உழச்செய்தேயும் முன்னிலும் பின்னிலும் பலமலர்கள்

1. நாச்சியார்திருமொழி. 13—3.

தப்பிப்பிழைத்தெழுந்து பரிமளம் வீசுகின்றனவாம்; அப்படிப்பட்ட வயல்கள் சூழ்ந்த திருக்கடன்மல்லைத் திருப்பதியைத் தொழுவதையே இயல்வாகவுடைய பாகவதர்கள் யாவரோ, அவரையே என்னெஞ்சு தொழக்கடவது என்றுராயிற்று.

"உழுநீர்" என்ற அடைமொழி—வயலுக்குமாகலாம், உழவர்க்குமாகலாம். எப்போதும் உழுவதையே இயற்கையாகவுடையராயிருப்பர் உழவர்; வயலும் எப்போதும் உழப்பட்டுக்கொண்டேயிருக்கும். பகடு=எருது. (இது யானைக்கும் பெயராம்.) ... ... ... ... (அ)

பிணங்களடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகனோடு *
இணங்கு திருச்சக்கரத்தெம்பெருமானார்க்கிடம் * விசும்பில்
கணங்களியங்கும் மல்லைக் கடன்மல்லைத் தலசயனம் *
வணங்கு மனத்தாரவரை வணங்கென்றன் மடநெஞ்சே! (௯)

| | |
|---|---|
| பிணங்கள் அடு காடு அதனுள் | பிணங்களைச் சுடுகிற சுடுகாட்டிலே |
| நடம் ஆடு | நடமாடுகின்ற |
| பிஞ்ஞகனோடு | ருத்ரனோடுகூட |
| இணங்கு | பொருந்தியிருக்கிற |
| திரு சக்கரத்து எம்பெருமானார்க்கு இடம் | சக்ரபாணியான பெருமானுக்கு இடமானதும் |
| விசும்பில் கணங்கள் | தேவஸமூஹங்கள் |
| இயங்கும் மல்லை | வந்து ஸஞ்சரிக்கும் பெருமையையுடையதுமான |
| கடல்மல்லைத் தலசயனம் | திருக்கடன்மல்லையை |
| வணங்கும் மனத்தாரவரை | வணங்குதற்குரிய சிந்தைபடைத்த பாகவதர்களை |

என்தன் மட நெஞ்சே! வணங்கு—.

[பிணங்களடுகோடு.] எம்பெருமானுடைய ஸௌசீல்யகுணத்தை அநுபவிக்கிறார் முன்னடிகளில். தாமஸதெய்வமான ருத்ரனுக்கும் தனது திருமேனியின் வலப்பக்கத்தில் இடங்கொடுத்து ஆதரிக்குமவனும் எம்பெருமான். திருவாய்மொழியில் "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" (1—3—9) என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் "வஹெஸ்ரகாக்ஷஸ ஜ ரூநாநு உக்ஷிணம் வாஸ்ர்வ ஶாஸ்ரிதாநு=பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்" என்ற மோக்ஷதர்மவசநத்தை எடுத்துக்காட்டியிருப்பது இங்கே அநுஸந்தேயம். "தவஸா தொஷிதஸ்தேந விஷ்ணுநா ப்ரஹவிஷ்ணுநா। ஸ்வபார்ஸ்வே உக்ஷிணே ஸம்ஹோ: நிவாஸ: வரிகல்பித:=தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா। ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போர் நிவாஸ: பரிகல்பித:" என்றொரு வசநமும் இருபத்தினாலாயிரப்படியிற் காண்பதுண்டு. [சிவன் பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தானம் அமைத்துக் கொடுத்தருளினன்—என்பது இதன்பொருள்.]

"ஏறாளுமிறையோனும் திசைமுகனுந் திருமகளும், கூறாளுந்தனியுடம்பன்" என்றும், "அக்கும்புலியினதளு முடையாரவரொருவர், பக்கம் நிற்க நின்ற பண்பர்" என்றும் ஆழ்வார்கள் அடிக்கடி அருளிச்செய்கிறார்களே, சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப் பற்றியிருக்கிறார்களோ? என்றொரு சங்கை பிறக்கக்கூடும்; இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூருவர்களின் வியாக்கியானங்களிலேயே உள்ளன; கீழ் உதாஹரித்த திருவாய்மொழிப் பாசுரத்தின் வியாக்கியானங்களிலே—"ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே யிருப்பர்களோ வென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹா குணமாகையாலே ஆழ்வார்கள் எப்போது மொக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள். ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஓரோ கலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந்தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமாபோலே." என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத் தக்கன.

"பிணங்களிடுகாடு" என்ற பாடத்திற்காட்டிலும் "பிணங்களடுகாடு" என்ற பாடம் சிறக்கும். அடுதல்—சுடுதல். சவங்களை தஹநம்செய்கிற காடு—ச்மசான பூமி; அங்கே நடமாடுகிறவன் ருத்ரன். (பிஞ்ஞகன் என்று ருத்ரனுக்குப் பெயர்.) அவனோடு இணங்குதலாவது—அவனுக்கும் தனது திருமேனியிலே இடங்கொடுத்துப் பொருந்தவிட்டுக்கொள்ளுதல். "திருச்சக்கரத்தெம்பெருமானார்" என்றது—திருவாழியாழ்வான் முதலிய நித்யஸூரிகட்குத் தன் திருமேனியிலே இடம் கொடுத்தருளியிருப்பதுபோலவே அஹங்காரியான ருத்ரனுக்கும் இடங்கொடுப்பவன் என்ற கருத்தை வெளிப்படுத்தும்.

இப்படிப்பட்ட ஸௌசீல்யம் வாய்ந்த எம்பெருமான் உறையுமிடம் திருக்கடல்மல்லை; சுவர்க்கம் முதலிய மேலுலகங்களிலுள்ள தேவகணங்களும் தங்கள் தங்கள் அதிகாரம் நிலைநிற்குமாறு வேண்டிக்கொள்ள அங்கே வந்து வழிபாடுகள் செய்யாநிற்பர்; இப்படிப்பட்ட சிறந்த திவ்யதேசத்தை வணங்கும் பாகவதர்களையே என் நெஞ்சு வணங்கக்கடவது என்றாராயிற்று. .... (௯)

கடிகமழு நெடுமறுகிற் கடன்மல்லைத் தலசயனத்து *
அடிகளடியே நினையுமடியவர்கள் தம்மடியான் *
வடிகொள் நெடுவேல்வலவன் கலிகன்றியொலிவல்லார் *
முடிகொள் நெடுமன்னவர்தம் முதல்வர் முதலாவாரே. (௰)

| | | | |
|---|---|---|---|
| கடி கமழும் | பரிமளம் வீசுகின்ற | அடிகள் | எம்பெருமானுடைய |
| நெடு மறுகின் | நீண்ட வீதிகளையுடைய | அடியே | திருவடிகளையே |
| கடல்மல்லை தலசயனத்து | திருக்கடல்மல்லையி லெழுந்தருளியிருக்கிற | நினையும் | தியானிக்கின்ற |

| | | | |
|---|---|---|---|
| அடியவர்கள் தம் | பாகவதர்கட்கு | ஒலி | இவ்வருளிச்செயலை |
| அடியான் | தாஸபூதரும், | வல்லார் | ஓதவல்லவர்கள், |
| வடிகொள் நெடு வேல் வலவன் | கூர்மை பொருந்திய பெரிய வேலைக்கொண்டு பொருவதில் வல்லவருமான | முடிகொள் நெடு மன்னவர் தம் முதல்வர் முதல் ஆவார் | கிரீடமணிந்த ராஜாதிராஜர்களுக்கும் தலைவராகப் பெறுவர்கள். |
| கலிகன்றி | திருமங்கையாழ்வாருடைய | | |

[கடிகமழுநெடுமறுகின்.] நறுமணம் கமழாநின்றுள்ள பெரிய வீதிகளையுடைய திருக்கடல்மல்லையிலே ஸ்தலசயனமாகப் பள்ளிகொண்டிராநின்ற பெருமானுடைய திருவடிகளைச் சிந்திக்கும் பாகவதர்களுக்கே அடிமைப்பட்டிருக்கும் திருமங்கையாழ்வாரருளிச்செய்த [பாகவத சேஷத்வப்ரகாசகமான] இத்திருமொழியைக் கற்பவர்கள், உலகத்தைக் காப்பதற்கு உரிய அரசர்களுக்கும் தலைமைபெற்ற அரசர்களாக விளங்கி லீலாவிபூதிச் செல்வத்தைக் குறையற அநுபவிக்கும் பாக்கியமுடையராவர் என்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

பாகவத சேஷத்வமே பரம புருஷார்த்தமென்று பரமபோக்யமாக அருளிச்செய்துவந்த ஆழ்வார் பலன் சொல்லுமிடத்து அஹங்காரத்திற்கு மூலகாரணமும் பாகவதசேஷத்வத்திற்குப் பிரதிபந்தகமுமான இஹலோக ஐச்வரியத்தைப் பலனாகச்சொல்வதேன்? என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்டார்; அதற்கு அவர் ரஸோக்தியாக ஒரு உத்தரம் அருளிச்செய்தாராம்; அதாவது— "திருமங்கையாழ்வார் திருவவதரித்தபின்பு த்யாஜ்யமான ஐச்வர்யமும் பரம புருஷார்த்தமாய் விட்டதுகாணும்; பணமுள்ளவிடங்களிற்சென்று கொள்ளையடித்து பகவத் பாகவத்கைங்கரியங்கள் பண்ணுகிறவராகையாலே ஹேயமான ஐச்வரியமும் இவ்வாழ்வார் திருவுள்ளத்தால் உத்தேச்யமாய் விட்டதிறே" என்றாராம். ஆரார் எந்த எந்த பலனை விரும்பினாலும் அந்த அந்த பலன் இவ்வருளிச்செயல் மூலமாகக் கிடைக்குமென்பது உண்மைப்பொருள்.

அன்றியே, ஈற்றடிக்கு வேறொருவகையாகவும் நிர்வாஹமுண்டு;—முடிகொள் நெடுமன்னவர்—இவ்வுலகத்தில் அரசர்களாக இருக்கும் க்ஷத்ரியர்கள்; அவர்களுக்கும் முதல்வர்—அவர்களிற் காட்டிலும் எத்தனையோ மடங்கு மேம்பாடுடைய ப்ரஹ்மா முதலிய தேவர்கள்; அவர்களுக்கும் முதல்வர்—அவர்கட்கும் நிர்வாஹகரான நித்யஸூரிகள். ஆக, இத்திருமொழி கற்றவர்கள் நித்யஸூரிகளோடு ஒத்து நித்ய கைங்கரியம் பண்ணப்பெறுவர்களென்று பரம புருஷார்த்தத்தையே இதற்குப் பலனாகச் சொல்லிற்றாகவுரையிடலாம்; பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளமும் இங்ஙனேயாம். ... ... (ய)

அடிவரவு—நண்ணாத பார் எனத்தின் விண்டாரை பிச்சம் புலம் பஞ்சி செழுநீர் பிணங்கள் கடி திவளும்.

## ஆறாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—ஏழாந்திருமொழி.

# திவளும் வெண்மதிபோல்.



**அவதாரிகை:**—எம்பெருமானை அநுபவித்தல் பலவகைப்பட்டிருக்கும்; அவனுடைய திருநாமங்களைச் சொல்லியநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லியநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளின திவ்யதேசங்களின் வளங்களைப் பேசியநுபவித்தல், அங்கே அபிமானமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப்பேசி யநுபவித்தல்—என்றிப்படி பலவகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரமவிலக்ஷணமான மற்றொருவகையுமுண்டு; அதாவது—ஆழ்வார் தாமான தன்மையைவிட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவித்தல். இப்படி அநுபவிக்குந்திறத்தில், தாய்பாசுரம், தோழிபாசுரம், மகள்பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. அப்போது ஆழ்வார்க்குப் பரகாலர் என்ற ஆண்மைப்பெயர் நீங்கி, 'பரகாலநாயகி' என்று பெண்மைப் பெயர் வழங்கப்பட்டு வரும். தாய் சொல்வது போலவும் தலைமகள் சொல்வதுபோலவும் தோழி சொல்வதுபோலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும், பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆறுனது பல வாய்க்கால்களாகப் பெருகினாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமாபோலே, இம்மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் "மன்னுமாமாடமங்கையர் தலைவன் மானவேற்கலியன் வாயொலிகள்" என்று ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும்.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டிட்டு ஸ்த்ரீபாவனையை ஏறிட்டுக்கொள்ளுதல் ஏதுக்காக வென்னில்; ஆழ்வார் தாமாக ஏறிட்டுக்கொள்ளுகிறாரல்லர்; அந்த அவஸ்தைதானே பரவசமாக வந்து சேருகின்றது. புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்குமுன் உலகமடங்கப் பெண்தன்மையதாயிருக்கையாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்திரிய நாற்றமேயின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருக்கையாலும் இவ்வகைகளுக்கேற்ப ஸ்த்ரீபாவனை வந்தேறியன்று என்றே கொள்ளலாம். தண்டகாரண்யவாஸிகளான முனிவர் இராமபிரானது ஸௌந்தர்யத்திலீடுபட்டுப் பெண்மை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக் கூடினர் என்ற ஐதிஹ்யமுமுண்டு. ஆழ்வார்கள் அப்படியன்றியே அப்போதே பெண்மையை யடைந்து புருஷோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர்.

ஆண் பெண் என்ற வ்யவஹாரங்கள் சிற்றின்பநுகர்ச்சிக்கன்றோ ஏற்பட்டவை; பேரின்பவநுபவத்திலே ஊன்றின ஆழ்வார்கள் பெண்மை யெய்துவதாகவும், கொங்கை முதலிய சொற்களையிட்டுப் பாசுரங் கூறுவதாகவும் நிகழ்கிறவிது என்னே? எனின்; விஷயாந்தரகாமம் என்றும் பகவத்விஷயகாமம் என்றும் காமம் இருவகைப்படும்; வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட பக்தியே ஆழ்வார்களுக்கு ச்ருங்கார முறைமையில் பரிணமித்து நிற்கும். சிற்றின்பவநுபவத்திற்குக் கொங்கை முதலியன ஸாதநமாயிருப்பதுபோல, பகவத் விஷயாநுபவத்திற்குப் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் இன்றியமையாதனவாயிருப்பதால் அவையே கொங்கை முதலிய சொற்களால் இவ்வருளிசெயல்களிற் கூறப்படுகின்றனவென்று கொள்க.

ச்ருங்காரரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்தபக்திரஸமாகவே பாசுரங்கள் அருளிச்செய்யக் கூடுமாயினும், ஆழ்வார்கள் ச்ருங்காரரஸத்தையுங்கலந்து பாசுரங்கள் பேசுவதற்குக்காரணம் யாதெனில்; ஆரோக்யத்திற்குக் காரணமாகிய வேப்பிலையுருண்டையை உட்கொள்ள இருயக்குமவர்களுக்கு வெல்லத்தை வெளியிற் பூசிக்கொடுத்துத் தின்பிப்பதுபோலச் சிற்றின்பம் கூறும் வகையாற் பேரின்பத்தைக்காட்டி நாட்டுகின்றனரென்ப.

பகவத்விஷயத்தில் அபிநிவேசம் மீதூர்ந்தகாலத்தில் தன் நிலைமாறிப் பெண்நிலைபெற்றுப் பேசுமிடத்தில் தாய்பாசுரமென்றும் தலைவிபாசுரமென்றும் தோழிபாசுரமென்றும் இப்படி வகுத்துக் கூறுவதற்கும் உட்கருத்து உண்டு;—தோழியாகப் பேசுவதற்குக் கருத்து:—நாயகனையும் நாயகியையும் இணக்கிச் சேர்க்குமவள் தோழியாவள்; திருமந்திரத்தில் பிரணவத்தினால் எம்பெருமானோடு இவ்வாத்மாவுக்குச் சொல்லப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வம் முதலிய ஸம்பந்தங்களை உணருகையே அப்பெருமானோடு இவ்வாத்மா சேருகைக்கு ஹேதுவாகையாலே அந்த ஸம்பந்த ஞானமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தோழி யென்பதாகக் கொள்க.

பெற்று வளர்த்துப் பெண்பிள்ளை யௌவன பருவத்தில் நாயகனிடத்துள்ள அன்பு மிகுதியால் அவனிருப்பிடத்துக்குச் செல்லவேணுமென்று பதறுமளவில் படிகடந்து புறப்படுகை குலமரியாதைக்குப் பொருந்ாதென்று தடுப்பவள் உலகில் தாய் எனப்படுவள்; ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பேற்றை விளம்பித்துப் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணுமென்கிற ஆவலைப்பிறப்பித்து அதனால் படிகடந்து நடக்கவேண்டி வந்தவளவில் இது ப்ரபந்நர் குடிக்கட்டுப்பாட்டுக்குச் சேராதென்று விலக்கி 'எம்பெருமான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்க வேணும்' என்று சொல்லித் துடிப்பை அடக்கப்பார்கிற நம:பதத்திற் கூறப்பட்ட உபாய அத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தாய் என்பதாகக் கொள்க.

உறவினர் கூட்டக் கூடுகையன்றியே தானாகவே புணர்ந்து நாயகனுடைய மேம்பாட்டிலே ஈடுபட்டுக் குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டியல்லது நான் உயிர்வாழ்ந்திருக்கமாட்டேன்' என்னும் பதற்றத்தையுடைய வளாயிருப்பள் உலகில் மகள்; பிரணவத்தினாலும் நமஸ்ஸாலும் சேஷியென்றும் சரண்யனென்றும் உணரப்பட்ட எம்பெருமானுக்கு நாராயண பதத்தினாற் கூறப்பட்ட ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றின் சேர்க்கையாலுள்ள பெருமையை அநுஸந்தித்து அதனாலே அவனைத் தாமதித்து அநுபவிக்க நிற்க மாட்டாமல் 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டை அதிக்கிரமித்து, கிட்டி யநுபவித்தாலொழியத் தரிப்புற்றிருக்கவொண்ணாதபடி நடக்கிற ப்ராஜ்ஞா வஸ்தையை மகள் என்பதாகக் கொள்க.

இம்மூன்று அவஸ்தைகளுள் முதல் அவஸ்தை நடக்கும்படியைத் தோழி பாசுரத்தாலும், இரண்டாவது அவஸ்தை நடக்கும்படியைத் தாய் பாசுரத்தாலும், மூன்றாவது அவஸ்தை நடக்கும்படியை மகள் பாசுரத்தாலும் வெளியிடுவ ரென்றதாயிற்று. ஆகவே, தாய் பாசுரமாகச் செல்லுகிற இத்திருமொழியில்—ஆழ்வார்க்கு நாயகியவஸ்தை ஒருபுறத்திலும் தாயின் அவஸ்தை மற்றொரு புறத்திலும் நடக்கிறபடியாலே எம்பெருமானை அநுபவிப்பதில் ஆழ்வார்க்கு விரைவு உண்டானமையும், 'நாம் பதறக்கூடாது' என்கிற அத்யவஸாயமும் மற்றொரு புறத்திலுண்டானமையும் விளங்கும். தன்ஸ்வரூபத்தை நோக்கு மளவில் அத்யவஸாயம் உண்டாகும்; அவனுடைய வைலக்ஷண்யத்தை நோக்கு மளவில் பதற்றம் உண்டாகும். இத்திருமொழியில்—"ஆசைவிடாளால்" "போதுமோ நீர்மலைக்கென்னும்" இத்யாதி வாசகங்களாலே மகளது பதற்றம் வெளியாம்; "உன்மனத்தா லென்னினைந்திருந்தாய்" என்ற வினாக்களால் அத்யவஸாயமும் வெளியாம்.

திருவிடவெந்தை யெம்பெருமானை அநுபவிப்பதில் ஆழ்வார்க்குண்டான அளவற்ற அபிநிவேசம் இத்திருமொழியாகப் பரிணமித்துவிட்டதுபோலும்.

திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை
செழுங்கட லமுதினிற் பிறந்த
வவளும் * நின்னாகத்திருப்பதுமறிந்தும்
ஆகிலுமாசை விடாளால் *
குவளையங்கண்ணி கோல்லியம்பாவை
சொல்லுநின் தாள்நயந்திருந்த
விவளை * உன்மனத்தாலென் நினைந்திருந்தாய் ?
இடவெந்தை யெந்தைபிரானே ! (க)

இடவெந்தை எந்தை பிரானே } திருவிடவெந்தையி லெழுந்தருளியிருக்கிற எம்பெருமானே !,

திவளும் வெண் மதி போல் திருமுகத்து { ஒளிவிடாநின்ற வெளுத்த சந்திரனைப்போன்று அழகிய முகத்தை புடையளாய்

அரிவை — நித்ய யௌவனமுடையளாய்
செழு கடல் அமுதினில் பிறந்த — செழுமைதங்கிய கடலில் அமுதத்தோடு கூடப் பிறந்தவளான
அவளும் — அந்தப் பெரியபிராட்டியாரும்
நின் ஆகத்து — உனது திருமார்பிலே
இருப்பதும் — எழுந்தருளியிருப்பதை
அறிந்தும் ஆகிலும் — (இப்பரகாலநாயகி) அறிந்திருக்கச்செய்தேயும்
ஆசை விடாள் — (உன்னிடத்தில்) ஆசையை விடுகின்றிலள்;
குவளை அம் கண்ணி — கருநெய்தல்போன்று அழகிய கண்ணையுடையளும்
கொல்லி அம் பாவை — கொல்லிமலையிலுள்ள அழகிய பதுமை போன்றவளும்
நின் தாள் நயந்திருந்த — உனது திருவடிகளையே ஆசைப்பட்டுக்கொண்டிருப்பவளுமான
இவளை — இப்பெண் விஷயத்திலே
உன் மனத்தால் என் நினைந்திருந்தாய் — என்ன செய்வதாக நீ நினைத்திருக்கிறாய்?
சொல்லு — அதை வெளியிட்டருள்.

[திவளும்வெண்மதிபோல்] திருமங்கையாழ்வாராகிற பரகாலநாயகியைப் பெற்றெடுத்த திருத்தாயார் திருவிடவெந்தைப் பெருமானிடத்திலே தன் மகள் காதல்கொண்டு இருக்கிறபடியையும், காதலின்படியே அநுபவம் கைகூடாமையாலே பலவகை விகாரங்களை அடைந்திருக்கிறபடியையும் ஒவ்வொரு பாட்டில் ஒவ்வொரு வகையாகப்பேசி 'இப்படிப்பட்ட இப்பெண்பிள்ளை விஷயத்திலே நீ செய்ய நினைத்திருப்பது என்னோ பிரானே!' என்று கேட்பதாகச் செல்லுகிறது. உண்மையில், ஆழ்வாரைக்காட்டிலும் வேறுபட்ட 'தாய்' என்பவளொருத்தி இல்லாமையாலே ஆழ்வார் தாமே தம்முடைய காதலின் கனத்தியை அந்யாபதேசத்தாலே பேசி 'இப்படிப்பட்ட ப்ராவண்யமுடைய என் விஷயத்திலே உபேக்ஷைசெய்திடத் திருவுள்ளமோ? அன்றி அங்கீகரித்துக் கொள்ளவே திருவுள்ளமோ? இரண்டிலொன்றைச் சோதிவாய்திறந்து அருளிச்செய்யவேணும்' என்று கேட்கிறாராயிருக்கிறது.

உலகத்தில் ஒரு புருஷன் ஒரு ஸ்த்ரீயினிடத்தில் அளவற்ற அன்புவைத்திருப்பதாகக் கண்டால் அவனிடத்தில் மற்றையோர் ஆசைவைப்பது கூடாது. ஏனெனில், அவனுடைய ஆசைப்பெருக்கம் முழுதும் ஒரு வ்யக்திவழியிற் பாய்ந்துவிட்டதனால் அது மற்றொரு வ்யக்தியிற் பாயமாட்டாது; அலக்ஷியஞ் செய்யவே நேரிடும். ஆகவே, ஏற்கனவே ஒரு வ்யக்தியினிடத்தில் காதல் கொண்டிராநின்ற புருஷனை மற்றையோர் காதலிப்பது விவேகிக்ருத்யமன்று; இஃது உலகில் ஏற்பட்ட விஷயம். இந்த நியாயத்தைக்கொண்டு பார்க்குமளவில், இடவெந்தை யெந்தைபிரானே! உன் திறத்தில் என்மகள் ஆசைவைப்பது கூடாது; அழகிற்சிறந்தவளும் பாற்கடலிற் பிறந்தவளுமான திருமகளை நீ ஒரு நொடிப்பொழுதும் விடாது திருமார்பிலேயே அந்தரங்கமாகக் கொண்டிருக்கின்றாய்; இதனால் திருமகளிடத்து உனக்குள்ள அன்பும் ஆதரவும் அளவற்றதென்பது நன்கு விளங்கும்; இங்ஙனே அந்யாஸக்தனானவுன்னை என் பெண்

பிள்ளை ஆசைப்படுவது தகுதியன்றுதான்; ஆயினும் கொண்ட ஆசையைக் குறைத்துக் கொள்ளுகின்றாளில்லை; தன்னுடைய வைலக்ஷண்யத்தை நோக்கி 'திருமகளிடத்திற் காட்டிலும் நம்மிடத்தில்தான் எம்பெருமான் அதிகமாகக் காதல்கொள்வான்' என்றெண்ணி இவள் உன்னையே விரும்பாநின்றாள். யார் எது விரும்பினாலும் உனது திருவுள்ளம் உவந்தாலன்றிப் பலன் கைபுகமாட்டா தாகையால் இப்பெண்பிள்ளை திறத்திலே நீ செய்ய நினைத்திருப்பது யாதோ? அறிகின்றிலேன்; அறியச் சொல்லவேணுமென்று பரகாலநாயகியின் திருத்தாயார் சொன்னாளாயிற்று.

அரிவை என்னுஞ் சொல்—இருபத்தைந்து வயதுப் பெண்ணையும் தெய்வப் பெண்ணையும் சொல்லும்; பெண்கட்குப் பொதுப்பெயராக வழங்குதலுமுண்டு. முக்தர்கள் எப்போதும் இருபத்தைந்து வயதே உடையவர்களாய் நித்ய யௌவநசாலிகளாயிருப்பதுபோலப் பிராட்டியும் நித்யயுவதியாயிருக்கின்றமை தோற்ற இங்கு அரிவை எனப்பட்டாளென்க.

எம்பெருமான் தேவர்கட்கு அமுதமளிக்கக் கடல் கடைந்தகாலத்து அக் கடலில் நின்று முண்டான பல பொருள்களினிடையே திருமகளும் தோன்றினளாகப் புராணவரலாறு உள்ளது பற்றிச் செழுங்கடலமுதினிற் பிறந்த என்றார். இரண்டாமடியின் முதலில் "இவளும்" என்ற பாடம் ஒவ்வாது; அவளும் என்பதே பாடம்.

ஸ்ரீ ராமாவதாரத்திலே பிராட்டியைப் பிரிந்திருந்தகாலத்தில் "நஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம் = நஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்" [—கண்ணழகுபடைத்த அவளை விட்டகன்று ஒரு நொடிப் பொழுதும் உயிர்தரிக்கமாட்டேன்] என்று கதறினான் இராமபிரான்; அதனால் அவன் நாயகியினது கண்ணழகிலே மிக ஈடுபட்டிருப்பனென்றுணர்ந்த இத் திருத்தாயார் தன் மகளினது கண்ணழகை யெடுத்துரைக்கின்றாள் குவளையங் கண்ணி என்று. 'குவலயம்' என்ற வடசொல் குவளை என விகாரப்பட்டது. "குவாலயம் குவலயம் குவாலம் குவலம் குவம்" என்ற வடமொழி நிகண்டின் படி 'குவலம்' என்ற வடசொல்லு முண்டாதலால் அதுவே குவளையெனத் திரிந்ததென்று கொள்ளினுமாம்.

சிசுக்களுக்குத் தாயின் முலைபோல அடியவர்களுக்கு எம்பெருமானது பாதாரவிந்தமே உத்தேச்யமாதலால் நின்தாள்நயந்திருந்தவிவளை என்றார். திருமகளானவள் ஸ்வரூபஜ்ஞாநமில்லாமல் திருமார்வை விரும்பினாள், என் பெண் பிள்ளை நற்குடிப்பிறந்து நல்லறிவுவாய்ந்தவளாகையால் திருவடியையே விரும்புகின்றாள் என்று ஒரு சமத்காரம் பொலியப் பேசுகிறபடி.

உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்? = இக்கேள்வியினால் ஸகலசாஸ்த்ர ஸாரப்பொருளை வெளியிடுகிறாராழ்வார் என்று குறிக்கொண்மின்; சேதநனுடைய க்ரியாகலாபமொன்றும் பேற்றுக்கு ஸாதநமன்று, பரமபுருஷனுடைய திருவுள்ளத்திலிரக்கமே பலனைப் பெறுவிக்கவல்லது என்க.

இடவெந்தை= இத்தலத்தி லெழுந்தருளியுள்ள ஸ்ரீவராஹப்பெருமாள் தமது தேவியை இடப்பக்கத்திற் கொண்டிருத்தலால் இத்தலத்திற்குத் திருவிடவெந்தை என்று திருநாமமாயிற்று. திருக்கடல் மல்லையில் (ஞானப்பிரான் ஸந்நிதியில் எழுந்தருளியுள்ள வராஹப்பெருமாள் தேவியை வலப்பக்கத்திற் கொண்டிருப்பர்; அத்தலத்தை வலவெந்தை யென்பதுமுண்டு.)

ஆக இப்பாட்டால் எம்பெருமானை நோக்கி ஆழ்வார் தாமே வேற்று வாயாலே [தாய் பாசுரமாகப்] பேசினதாயிருந்தாலும், தம்முடைய காதல் நிலைமையைத் தாமே பேசிக்கொண்டதாகவே நெஞ்சிற்கொள்க. எம்பெருமானே! நீ பிராட்டியினிடத்தில் பித்துக்கொண்டவனென்பது எனக்குத் தெரிந்து அதுவேகாரணமாக உன்னை நான் விரும்பாநின்றேன்;—நம்முடைய குற்றங்களைப் பொறுப்பித்து நம்மை அங்கீகரிப்பிக்கவல்ல புருஷகாரபூதையான பிராட்டியானவள் திருமார்வை விட்டுப் பிரியாதிருக்க நாம் இழக்கலாமோ வென்று, அஞ்சாமல் உன்னருகே வருகின்றேன் என்பது முன்னடிகளின் கருத்து.

"குவளையங்கண்ணி" என்றும் "கொல்லியம்பாவை" என்றும் ஆழ்வார் தம்மைத்தாமே சிறப்பித்துக் கூறிக்கொள்ளலாமோ எனின்; ஆம்; குற்றமொன்றுமில்லை; இவ்விசேஷணங்களால் ஆழ்வார் தமது அவயவ ஸௌந்தரியத்தை வருணித்துக் கொள்வதாகப் பொருள்கொள்ளவேண்டா; எம்பெருமான் மேல்விழுந்து தம்மைத் திருவுள்ளம் பற்றுகைக்கு உறுப்பான வைலக்ஷண்யம் தம்மிடத்திலுண்டு என்று விண்ணப்பஞ் செய்வதாகக் கொள்க; "குவளையங்கண்ணி" என்று கண்ணின் அழகைச் சொன்னது உட்கண்ணாகிய ஞானத்தின் சிறப்பைச் சொன்னபடி; 1. "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே விஷயாந்தரங்களை விட்டுப் பகவத்விஷயமொன்றையே பற்றுவதான ஞானம் தமக்குள்ளபடியைச் சொல்லிக் கொண்டாரென்க. "கொல்லியம்பாவை" என்றதும் மாம்ஸபிண்டமான சரீரத்தின் அழகைச் சொல்லிக்கொண்டதன்று; ஆத்மாவின் வைலக்ஷண்யத்தைச் சொல்லிக்கொண்டவாறு.

கொல்லியம்பாவை='வல்வில் ஓரி' என்னும் சிற்றரசனுக்கு உரியதாய்க் கொல்லியெனும் பெயர் கொண்டதான மலையின்கணுள்ள ஒரு பெண்பாற் பிரதிமை. இது தேவசிற்பியால் அமைக்கப்பட்ட அழகிற்சிறந்த பதுமையாம். அம்மலையிலுள்ள தேவரையும் முனிவரையும் துன்புறுத்த வருகின்ற அசுரரும் அரக்கரும் இப்பதுமையின் சிரிப்பைக்கண்டு மயங்கி உயிர்துறப்பர்களாம். அசுரருமரக்கரும் அங்கு அணுகும்போது அவர்களது வாடை பட்டவுடன் இது தானே நகைசெய்யுமாறு பொறியுள் வைக்கப்பட்டதென்பர். இது நகைத்துக்கொல்லுமென்பது, "திரிபுரத்தைச், செற்றவனும் கொல்லிச்செழும் பாவையும் நகைக்கக், 'கற்றதெல்லாமிந்தநகைகண்டேயோ?" என்ற சித்திர

1. முதல் திருவந்தாதி. 67.

மடற்பாடலினால் விளங்குகின்றது. இப்பாவை, கண்டாருள்ளமும் விழியும் கவர்ந்து பெருங்காமவேட்கையுறுவித்து இறுதியில் கொல்லுமென்றுங் கூறுவர். இது தெய்வ நிர்மாணமென்ப. ஒருகாலத்தில் திருமகள் தன்முன் போர்க்கெழுந்த அவுணர் மோஹித்து விழும்படி இக்கொல்லியம்பாவையுருக்கொண்டு ஆடினள் என்று சிலப்பதிகாரம் கூறும். ["செருவெங்கோலமவுணர் நீங்கத், திருவின் செய்யோளாடிய பாவையும்" (கடலாடுகாதை 60, 61.) என்றது காண்க] இக்கொல்லிப்பாவை கொல்லிமலையிலுள்ள தென்பதும் தெய்வத்தால் செய்துவைக்கப்பட்ட தென்பதும் அழகில் மிக்கதென்பதும், காற்றினாலும் மழையினாலும் மற்றெவ்வகை ஊறுபாடுகளாலும் தன் அழகிய நல்வடிவம் கெடாதென்பதும் நற்றிணை முதலிய நூல்களிற் காணத்தகும். 185, 192, 201-ஆம் பாடல்கள் காண்க. இப்பாவையின் அழகைத் தலைவியின் நலத்திற்கு உவமை கூறுதல் அகநானூறு, புறநானூறு முதலிய நூல்களிலும் விசேஷமாகவுண்டு. (அகநானூறில் 62, 209-ஆம் பாடல்களும், புறநானூறில் 251-ஆம் பாடலும் காண்க.) சீவகசிந்தாமணி 197, 667-ஆம் பாடல்களிலும், குறுந்தொகை 89, 100-ஆம் பாடல்களிலும் இக்கொல்லிப்பாவையின் ப்ரஸ்தாவம் காணத்தக்கது. ஆகவே, தமிழ்க்கவிகள் கொல்லிப்பாவையை ஒப்புயர்வற்ற அழகிற் சிறந்த மாதர்க்கு உவமைகூறுதல் மரபு என்றுணர்க. இப்பாசுரத்தில் "கொல்லியம்பாவை போன்றவள்" என்று சொல்லாமல் "கொல்லியம்பாவை" என்றே சொல்லிவைத்தது முற்றுவமை. "தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே" (திருவாய்மொழி 6—9—9.) என்றதுபோல. ... ... ... (க)

துளம்படு முறுவல் தோழியர்க்கருளாள்
துணைமுலை சாந்துகொண்டணியாள் *
குளம்படு குவளைக்கண்ணிணை யெழுதாள்
கோலநன்மலர் குழற்கணியாள் *
வளம்படு முந்நீர் வையமுன்னளந்த
மாலென்னும் மாலினமொழியாள் *
இளம்படி யிவளுக்கென்னினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (உ)

இடவெந்தை எந்தை பிரானே!—;

மால் இனம் மொழியாள் — தன்னுடைய வியாமோஹத்துக்குத் தகுதியான பேச்சையுடையவளான இப்பெண்பிள்ளையானவள்,

துளம் படு முறுவல் — மாதுளம் விரைபோன்ற பற்களினின்றும் உண்டாகின்ற புன்சிரிப்பை

தோழியர்க்கு — தன் தோழிமார்களை நோக்கி

அருளாள் — அருள்கின்றாளில்லை;

துணை முலை — சேர்த்தியழகுடைய முலைகளை

சாந்து கொண்டு — சந்தனத்தாலே

அணியாள் — அலங்கரிக்கின்றாளில்லை;

| | |
|---|---|
| துளம் படு குவளை கண் இணை | தடாகத்திலுள்ள [செவ்விமாருத] குவளை மலர்போன்ற கண்களில் |
| எழுதாள் | மையிட்டுக்கொள்கிறாளில்லை; |
| குழற்கு | கூந்தலில் |
| கோலம் நல் மலர் அணியாள் | அழகிய சிறந்த புஷ்பங்களைச் சூட்டிக் கொள்ளுகிறாளில்லை; |
| வளம் படு முந்நீர் வையம் முன் அளந்த மால் என்னும் | (ரத்னம் முதலிய) நற்சரக்குகளுக்கிடமான கடலால் சூழப்பட்ட பூமியை முன்னொருகால் அளந்த ஸர்வேச்வரன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள்; |
| இளம் படி இவளுக்கு என் நினைந்திருந்தாய் | (விரஹம்பொருத) ஸுகுமாரஸ்வபாவையான இவள் விஷயத்திலே என்ன செய்வதாகத் திருவுள்ளம் ?. |

[துளம்படுமுறுவல்.] தன்மகள் லௌகிகவியாபாரங்களிலே நெஞ்சு செல்லாமல் பகவத்விஷயத்திலேயே அநவரதம் ஊன்றியிருக்குமாற்றைச் சொல்லி, இப்படிப்பட்ட இவளை அங்கீகரிக்கத் திருவுள்ளமோ அகற்றிவிடத் திருவுள்ளமோ? என்று கேட்கிறாள் பரகாலநாயகியின் திருத்தாயார். உலகத்தில் பெண்பிள்ளைகளெல்லாரும் தோழிகளுடனே சிரித்து வார்த்தை சொல்லிக் கொண்டிருப்பர்கள்; மங்கலவாழ்ச்சிக்குச் சின்னமாக மார்விலே சந்தனம் பூசிக்கொள்ளுதலும் கண்களிலே மையிட்டுக்கொள்ளுதலும் முடியிலே மலரணிந்துகொள்ளுதலும் செய்வர்கள; போதுபோக்குக்காக ஏதோ ஸம்ஸார வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருப்பர்கள்; ஆக இப்படியெல்லாம் உலகத்துப் பெண்களின் நிலைமையை நாம் காண்கிறோம்; பரகாலநாயகியாகிய இப் பெண்ணின் நிலைமைபோவென்னில்; உலகரீதிக்கு வேறுபட்டதாயிருக்கின்றது; இவளுக்கு பகவத்காமமே அதிகரித்திருப்பதால் முகத்தில் சிரிப்பு உண்டாவதேயில்லை; உயிர்த்தோழிகளைக்கண்டாலும் சிரிப்பதில்லை; மார்பில் சந்தனம் பூசிக்கொள்ளுவதில்லை; கண்ணில் மையிட்டுக்கொள்ளுவதில்லை; தலையில் பூமுடித்துக்கொள்வதில்லை; வாய்விட்டு ஏதாவது சொல்லநேர்ந்தால் "அன்றிவ்வுலகளந்தாய்!" என்றும் "மாலேநெடியோனே கண்ணனே!" என்று மித்யாதி வார்த்தைகளையே வாய் வெருவுகின்றாள்; பெருமானே! உன்னைவிட்டுப் பிரிந்து தரித்திருக்கமாட்டாத ஸுகுமாரமான தன்மையை யுடையளாயிராநின்றாள்; இப்படிப்பட்ட அநந்யபக்தையான இவள் திறத்திலே நீ என்ன செய்யத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாயோ பிரானே! என்று வினவுகின்றாளாயிற்று.

துளம்படுமுறுவல்—'மாதுளம்' என்ற சொல் முதற்குறையாகித் துளம் என்று கிடக்கிறது; மாதளம் விரையைச் சொன்னபடி: இங்கு இலக்கணையால் மாதளவிரைபோன்ற பற்கள் என்னுமளவும் பொருள் கொள்க. பற்களினின்று உண்டாகிற புன்சிரிப்பு என்கை. ஞானிகள் இவ்வுலகத்து மனிசரோடே சிரித்துப் பேசமாட்டார்களாதலால் ஆழ்வார்தாமும் அப்படியிருக்கிற நிலைமையை இதனால் சொன்னபடி. இஹலோக போகங்களொன்றிலும் ஆழ்வார்க்கு விருப்பமில்லாமையை மேல்வாக்கியங்கள் விளக்குவன.

"குளம்படு குவளை" என்றது—தன்னிலத்திலேயிருந்துகொண்டு சிறிதும் செவ்விகுன்றாத குவளைமலர் என்றபடி. மாலினமொழியாள்=மால்—தனது மயக்கத்திற்கு, இனம்—தகுதியான, மொழியாள்—பேச்சையுடையவள்: பைத்தியக்காரன் சொல்லும் சொற்கள் உள்ளுள்ள பித்தத்தை வெளியிடுமவையாயிருப்பதுபோல, இப்பெண் பேசும் பேச்சுக்கள் உள்ளுள்ள வியாமோஹத்தை வெளியிடுவனவாயிராநின்றன வென்றபடி.

இப்பாட்டால் ஆழ்வார் தாம் சொல்லிக்கொள்வது:—பிரானே! இவ்வுலகில் என்னோடுகூட ஸஜாதீயர்களாயுள்ள மனிசரிடத்தில் எனக்கு நேசமுண்டாவதில்லை; அவர்களோடு உல்லாஸமாகப் பேசுவதற்கு விருப்பமுண்டாவதேயில்லை: 1. "புறஞ்சுவர் கோலஞ்செய்து" என்கிறப்போல் தேஹத்தையே பேணித்திரிகின்ற பிராகிருதர்களோடு ஒப்புடையேனல்லேன்; ஊர்வம்புகளைப் பிதற்றிப் போதுபோக்குவாரைப் போலன்றியே எப்போதும் உனது திவ்ய சேஷ்டிதங்களையே வாய்வெருவிக் கொண்டிருக்கின்றேன்; என்னுடைய பேச்சுகளை நீ ஆராய்ந்தால் நான் உன்பக்கல் கொண்டுள்ள வியாமோஹம் நன்கு புலப்படும்; என்வடிவைக்கண்டாயாகில் நான் உனது பிரிவை ஒருநொடிப்பொழுதும் ஆற்றகில்லேனென்பது விளங்கும்; இப்படிப்பட்ட என்னை நீ அபேக்ஷிக்கிறாயோ, உபேக்ஷிக்கிறாயோ? சொல்லாய் பெருமானே! என்றாராயிற்று. (உ)

சாந்தமும் பூணும் சந்தனக்குழம்பும்
 தடமுலைக்கணியிலும் தழலாம் *
போந்தவெண்திங்கள் கதிர்சுடமெலியும்
 பொருகடல் புலம்பிலும் புலம்பும் *
மாந்தளிர்மேனி வண்ணமும் பொன்னும்
 வளைகளுமிறைநில்லா * என்தன்
ஏந்திழையிவளுக்கென்நினைந்திருந்தாய்?
 இடவெந்தையெந்தைபிரானே! (ங)

இடவெந்தை யெந்தை பிரானே!—;

| | |
|---|---|
| சாந்தமும் | கலவைச் சந்தனத்தையும் |
| பூணும் | முத்துவடத்தையும் |
| சந்தனம் குழம்பும் | குழம்பான சந்தனத்தையும் |
| தட முலைக்கு அணியிலும் | (இவள் தனது) பெரிய முலைகளில் அணிந்துகொண்டாலும் |
| தழல் ஆம் | (அவையெல்லாம்) நெருப்பாகவேயிராநின்றன; |
| போந்த | வெளிவந்து தோற்றின |
| வெண் திங்கள் | வெளுத்த சந்திரனுடைய |
| கதிர் | கிரணங்களானவை |
| சுட | (நெருப்புப்போல்) தஹிக்க |
| மெலியும் | (அதனாலே) நோவுபடாநின்றாள்; |
| பொரு கடல் | அலையெறிகின்ற கடலானது |
| புலம்பில் | கோஷம்செய்யத்தொடங்கினால் |

1. திருமாலை 6.

| | | | |
|---|---|---|---|
| புலம்பும் | (இவளும்) கூக்குரலிடா நின்றாள்; | இறை | சற்றேனும் |
| மாந்தளிர் | மாந்தளிர்போன்ற | நில்லா | தங்குகின்றில; |
| மேனி வண்ணமும் | (இவளது) உடம்பின் நிறமும் | என்தன் ஏந்து இழை இவளுக்கு | எனது பெண்பிள்ளையாகிய இவள் விஷயத்திலே |
| பொன் ஆம் | பசலைநிறமாக மாறிவிட்டது; | என் நினைந்திருந்தாய் | என்ன செய்வதாகத் திருவுள்ளம்? |
| வளைகளும் | கையில் வளைகளும் | | |

[சாந்தமும்பூணும்.] பரகாலநாயகியின் ஆற்றாமையைக்கண்ட திருத்தாயார் 'இவளுடைய தாபமெல்லாம் தீரும்படி இவளுக்குக் குளிர்ச்சியான சில உபசாரங்களைச் செய்திடுவோம்' என்றெண்ணி, ஸாமாந்யமாக உலகத்திலே தாபமுற்றவர்களுக்கு லௌகிக பரிஹாரங்கள் செய்வதுபோலச் சிலகாரியங்கள் செய்யத் தொடங்கினாள்; மார்பிலே சந்தனத்தைப்பூசி முத்துவடத்தைப் பூட்டினாள்; நல்ல நிலாவிலேகொண்டு நிறுத்தினாள்; கடற்கரையினருகே கொண்டு சென்றாள்; இவை யொன்றும் தாபத்தைத்தணிக்க உபயோகப்படவில்லை; சந்தனச்சேறும் முத்துவடமும் நெருப்பைவாரிக் கொட்டினாற்போலே யிருந்தன; நிலவு மேலேபட்டவாறே உடம்பு இளைக்கத் தொடங்கிற்று; கடலிரைச்சை காதில் விழுந்தவாறே கதறத்தொடங்கினாள்; மாந்தளிரின் நிறம்போன்ற நிறமும் விகாரப்படாநின்றது; உடல் ஈர்க்குப்போல இளைத்துப்போனபடியாலே கைவளைகள் கழன்றுவிழத் தொடங்கின; திருவிடவெந்தைத் திருமாலே! உனது திருவருளுக்கு இலக்காகப் பெறாமையாலே இங்ஙனே நிலைதளும்பி நின்று வருந்துகின்ற என்மகள் திறத்திலே நிக்ரஹமேயோ செய்ய நினைத்திருப்பது? அன்றி அநுக்ரஹம் செய்யத் திருவுள்ளமுண்டோ? என வினவுகின்றாள்.

சாந்தமும் சந்தனக்குழம்பும் ஒன்றுதானே; அப்படியிருக்க "சாந்தமும்......சந்தனக்குழம்பும்" என்று சொல்லுவானென்? எனில்; சாந்து என்று கல்லைச்சந்தனத்தைச் சொன்னபடி; மற்றொன்று வெறுஞ் சந்தனத்தைச் சொன்னபடி.

விரஹகாலத்தில் மாதர்களின் மேனியில் தோன்றும் பசலைநிறத்தைப் பொன்னிறமென்பர் கவிகள். பாசிபடர்ந்தாற்போன்ற நிறம். "வளைகளும் இறை நில்லா" என்பதனால் கைகள் துரும்பாக இளைத்தபடி சொல்லிற்றாம்.

ஏந்திழையிவளுக்கு = இழை என்று ஆபரணத்துக்குப் பெயர்; ஏந்துதல்—தரித்தல்; தரிக்கப்பட்ட ஆபரணத்தையுடைய இவள் விஷயத்திலே என்ற தாயிற்று இம்மகளைநான் ஆபரணங்களோடே நித்தியமாகக் காணவிரும்பி யிருக்கின்றேன்; உன்னுடைய ஸம்ச்லேஷம் வாய்த்தாலல்லது இந்த விருப்பம் நிறைவேறாதாகையால் இவளோடே ஸம்ச்லேஷித்து என்னை உகப்பிக்கவேணுமென்பது உள்ளுறை. பகவத்குணங்களை அநுஸந்தித்துக் கண்ணும் கண்

ணீருமாயிருத்தலும் மயிர்க்கூச்செறிந்திருத்தலுமே பக்தர்கட்கு ஆபரண மாகையால் ஏந்திழை யென்று அவற்றையுடையரானமை சொல்லுகிற தென்க. ... ... .... ... (௩)

ஊழியிற்பெரிதால் நாழிகையென்னும்
ஒண்சுடர் துயின்றதாலென்னும் *
ஆழியும்புலம்புமன்றிலுமுறங்கா
தென்றலும் தீயினிற்கொடிதாம் *
தோழியோ! வென்னும்துணைமுலையரக்கும்
சொல்லுமினென்செய்கேனென்னும் *
ஏழையென்பொன்னுக்கென்நினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (௪)

இடவெந்தை எந்தை பிரானே—; (இப்பெண்பிள்ளையானவள்)

நாழிகை ஊழியின் பெரிது என்னும் { 'ஒரு நாழிகைப் பொழுதானது ஒரு கல்பத்தைக் காட்டிலும் நெடிது' என்கிறாள்;

ஒண் சுடர் துயின்றது என்னும் { 'ஸூர்யன் செத்துப் போய்விட்டான்' என்கிறாள்;

தோழி { 'அடீ ஸகியே!' (என்று தோழியை அழைத்து அவளிடம் என்ன சொல்லுகிறாளென்னில்;)

ஆழியும் புலம்பும் { 'ஸமுத்ரமோ கோஷம் செய்யாநின்றது;

அன்றிலும் உறங்கா { அன்றிற்பறவையோ உறங்குகிறதில்லை;

தென்றலும் தீயினில் கொடிது ஆம் { தென்திசைக்காற்றோ நெருப்பைவிட தீக்ஷ்ணமாயிருக்கின்றது

ஓ { ஐயோ! (என்ன பண்ணுவேன்)'

என்னும் என்று சொல்லாநின்றாள்;

துணை முலை அரக்கும் { 'இரண்டு முலைகளையும் வேரோடே பிடுங்கி யெறிபவள் போலே யிராநின்றாள்;

என் செய்கேன் சொல்லுமின் என்னும் { (இப்படிப்பட்ட கஷ்டங்களுக்கு) என்ன பரிஹாரம் பண்ணுவேன், சொல்லுங்கள்' என்று (அடிக்கடி) சொல்லா நின்றாள்;

ஏழை { மிகவும் சாபல்ய முடையளான

என் பொன்னுக்கு { எனது பெண்மகள் விஷயத்திலே

என் நினைந்திருந்தாய்?—.

[ஊழியிற்பெரிதால்.] பரகாலநாயகியின் வாய் வெருவுதல்களைத் திருத்தாயார் பாசுரமிட்டுப் பேசுகின்றாள். [நாழிகை ஊழியிற்பெரிதால் என்னும்] நாயகனைப் பிரிந்த நாயகி ஆற்றாதாளாய் அவனில்லாமல் இரவுகழிக்க முடியாத படியைச் சொல்லும்போது 'ஒரு நாழிகைப் பொழுதானது எத்தனையோ யுகமாய்ப் பெருகிச் செல்லுகின்றதே!' என்று இரவு நீடித்தலைச் சொல்லுவது வழக்கம்; அப்படியே இப்பரகாலநாயகியும் சொல்லுகின்றாள். நாயகநாயகிகள் கூடியிருக்குங்காலத்தில் நீண்டகாலங்களும் ஒரு நொடிப்பொழுதாய்க் கழிந்து

விடுமென்பதும், பிரிந்தகாலத்து ஒரு கணப்பொழுதும் பல்லூழியூழிகளாய்க் கழியுமென்பதும் அநுபவஸித்தம்; "பலபலவூழிகளாயிடும், அன்றியோர் நாழிகையைப் பலபல கூறிட்ட கூறாயிடும்......அன்பர் கூடிலும் நீங்கிலும் யாம் மெலிதும்" என்ற திருவிருத்தம் காண்க. 1. "கொடியார் கொடுமையிற்றாங் கொடிய இந்நாள், நெடிய கழியுமிரா" என்ற திருக்குறளையும் "காதலரொடு நாம் இன்புற்ற முன்னாள்களில் குறியவாய், அவர் பிரிவாற்றேமாகின்ற இந்நாள்களிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள்" என்ற அதன் உரையையும் இங்கு உணர்க நாழிகை—'நாடிகா' என்னும் வடமொழியின் திரிபு.

[ஒண்சுடர்துயின்றதாலென்னும்] நோயாளிகட்கும் காதலரைப்பிரிந்த விரஹிகட்கும் பகற்போது ஒருவாறு ஆற்றக்கூடியதாய் இராப்பொழுது சிறிதும் பொறுக்கவொண்ணாததாய்க் கழிவது வழக்கம். ஆகவே 'பல்லைக்கடித்துக் கொண்டு இராப்பொழுதைப் போக்கிவிடுவோ' மென்று ஸூர்யோதயத்தை எதிர்பார்த்துக்கொண்டேயிருப்பர்கள்; உண்மையில் இரவு முப்பது நாழிகையாயிருந்தாலும் விரஹகாலத்தில் முப்பதுயுகம்போல நெடுகிச்செல்லுமாதலால் 'பாழும் ஸூர்யன் செத்துப்போய்விட்டானோ? ஜீவித்திருந்தானாகில் வந்து தோன்றமாட்டானோ? இப்படி இராக்காலமேயாய்ச் செல்லுமோ!' என்று இரவு நீடித்தலைக்குறித்துக் கதறுவர்கள்; 2 "பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர் காண்கிலேனென்று, ஒண்சுடரோன் வாரா தொளித்தான்" என்றாள் பராங்குசநாயகி; இவளோவென்னில் 'ஸூர்யன் செத்தேபோனான்' என்கிறாள். "துயின்றது" என்பதற்கு 'உறங்கிற்று' என்று பொருளாயினும் தீர்க்க நித்திரையாகிய மரணமென்ற பொருளிலும் இதனைப் பிரயோகிப்பதுண்டு.

தோழி!, 'ஆழியும் புலம்பும், அன்றிலுமுறங்கா, தென்றலும் தீயினில்கொடிதாம், ஓ!' என்னும் = மகளானவள் தனது தோழியைநோக்கிச் சொல்லுகிற வார்த்தைகளைத் தாயார் அநுவாதஞ்செய்கிறாள்; (மகள் சொல்லுவதாவது:—) தோழீ! கடலானது எப்போதும் கர்ணகடோமாகக் கத்துகின்றதே!; அன்றிற் பறவையும் கண்மூடாமல் கத்துகின்றதே!; எல்லார்க்கும் குளிர வீசுகின்ற தென்றலும் எனக்கு நெருப்பைக்காட்டிலும் உஷ்ணமாக வீசுகின்றதே! இவை என்ன கஷ்டங்கள்!! என்கிறாளாம். விரஹிகளுக்குக் கடலோசை உத்தீபகமாகும். அன்றில் என்பது ஒரு பறவை; அது பெரும்பாலும் பனைமரத்தில் வாழும்; அது எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாது நிற்கும்; கணப்பொழுது ஒன்றை ஒன்று விட்டுப்பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறாமல் ஒன்றை ஒன்று இரண்டு மூன்றுதரம் கத்திக்கூவி அதன் பின்பும் தன் துணையைக்கூடாவிடின் உடனே இறந்துபடும்: இப்பறவையை வடநூலார் க்ரௌஞ்சம் என்பர்; ஆணும் பெண்ணுமான அந்த அன்றிற் பறவை இணைபிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக் கோத்துக்கொண்டு உறங்கும் பொழுது அவ்வுறக்கத்திலே வாயலகு தன்னில்நெகிழ்ந்தவளவிலே துயி

1. திருக்குறள்—படர் மெலிந்திரங்கல்—9, 2. திருவாய்மொழி 5-4-4.

னுணர்ந்து அப்பிரிவைப்பொறுமல் மெலிந்து பெருந்தொனியாகக்கத்துகிற மிக இரங்கத்தக்க சிறுகுரல் காமோத்தீபகமாய்ப் பிரிவாற்றுமைத்துயரை வளர்த்து விரஹிகளை மிக வருத்தும் என்றுணர்க.

[துணைமுலை அரக்கும்.] அரக்குதலாவது-ஸ்தானத்தைவிட்டுப் பெயர்த்தல். "கொள்ளும் பயனென்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும், அள்ளிப் பறித்திட்டவன் மார்விலெறிந்து என்னழலைத்தீர்வேனே" என்று ஆண்டாள் அருளிச்செய்ததுபோல இப்பரகாலநாயகியும் செய்யப்பார்க்கிறுளென்றவாறு.

எம்பிரானே! உன்னைவிட்டுப்பிரிந்து ஒரு நொடிப்பொழுதும் போக்க முடியவில்லை; இவ்விருள்தருமா ஞாலத்திலே என்னை வைத்திட்டு ஞானவொளி மழுங்கச்செய்திருக்கிறுய்; ஞானமென்னும் நிறைவிளக்கு அணைந்துபோ யிருக்கிறது; ஸம்ஸாரஸாகரம் கொந்தளிக்கின்றது; இவ்வுலகத்துப் பொருள்க ளெல்லாம் எனக்குப் பாதகமாயிராநின்றன; உன்னிடத்தில் நான் பக்திவைத் ததனாலன்றோ இப்பாடுபட நேர்கின்றது, அந்த பக்தியை அகற்றிவிட்டால் உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலத்தவர்களைப்போலே நானும் சுகமே வாழ்வேனன்றோ; ஆகையாலே பக்தியைத் தவிர்த்துக்கொள்ளலாமா வென்றும் எனக்குத்தோன்றுகின்றது; பாவியேன்திறத்தில் என்ன திருவுள் ளமோ? சொல்லவேணும்—என்று ஆழ்வார் தாம் விண்ணப்பஞ் செய்தா ராயிற்று.

"ஏழையேன் பொன்னுக்கு" என்ற சிலருடைய பாடம் வியாக்கியானத் திற்கு இணங்காது. என்பொன்னுக்கு='பொன்' என்ற சொல்லால் மகளைக் குறித்தது அன்பின் மிகுதியாலாம். ... ... ... (௪)

ஓதிலுமுன்பே ரன்றிமற்றேதாள்
உருகுநின் திருவுருநினைந்து *
காதன்மைபெரிது கையறவுடையள்
கயல்நெடுங் கண்டுயில்மறந்தாள் *
பேதையேன்பேதை பிள்ளைமைபெரிது
தெள்ளியள் வள்ளிநுண்மருங்குல் *
ஏதலர்முன்னு வென்நினைந்திருந்தாய்
இடவெந்தையெந்தைபிரானே. (௫)

இடவெந்தை யெந்தை பிரானே!—;

| | |
|---|---|
| ஓதிலும் | (இம்மகள்) வாய்விட்டு எதைச் சொன்னாலும் |
| உன் பேர் அன்றி | உனது திருநாமம் தவிர |
| மற்று | வேறொன்றையும் |
| ஓதாள் | சொல்லுகின்றிலள்; |
| நின் திருஉரு நினைந்து உருகும் | உனது திருமேனியைச் சிந்தித்து உருகினபடியே யிராநின்றுள்; |
| காதன்மை பெரிது | (உன்விஷயத்தில் இவளுக்கு) ஆசை பெருகுகின்றது; |
| கையறவு உடையள் | ஒன்றும் செய்யமாட்டாதே யிராநின்றுள்; |

| பதம் | பொருள் |
|---|---|
| கயல் நெடு கண் துயில் மறந்தாள் | கயல்மீன் போன்று நீண்ட கண்களிலே உறக்கத்தை மறந்துவிட்டாள் ; |
| பேதையேன் பேதை | அறிவு கெட்டவளான என்னுடைய இப்பெண்பிள்ளை |
| பிள்ளைமை பெரிது | மிகவும் இளம்பிராயமாயிருக்கச் செய்தேயும் |
| தெள்ளியள் | (உனது ஸ்வரூபகுணங்களிலே) தெளிவுள்ளவளாயிராநின்றாள் ; |
| வள்ளி நுண் மருங்குல் | கொடிபோன்று நுட்பமான இடையையுடைய இம்மகளைப்பற்றி |
| ஏதலர் முன்னா | சத்ருக்கள் முன்பாக |
| என் நினைந்திருந்தாய் | என்ன செய்வதாகத் திருவுள்ளம்?. |

(அவமானப்படுத்துவாயோ, பஹுமானப் படுத்துவாயோ?.)

[ஓதிலுமுன்பேரன்றி.] "ஓதிலும்" என்ற சொல்லாற்றலால் வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்லுவதே மிக அருமை என்பது விளங்கும். ஒருகால் வாய்திறந்தாளாகில் 'அம்மா அண்ணா' என்கிற பேச்சேகிடையாது, 'கோவிந்தா! கோபாலா!!' என்று பகவானுடைய திருநாமங்களையே சொல்லுகின்றாள்.

[இவ்விடத்திலே, "[illegible] = விக்ரேதுகாமா கில கோபகந்யா முராரி பாதார்ப்பித சித்த வ்ருத்தி:-தத்யாதிகம் மோஹவசாதவோசத் கோவிந்த தாமோதர மாதவேதி." என்ற ச்லோகரத்நம் நினைக்கத்தக்கது. திருவாய்ப்பாடியில் கண்ணபிரான் பிறந்து வளர்ந்தருளுங்காலத்திலே ஓர் இடைப்பெண் இடைவிடாது கண்ணபிரானையே சிந்தித்துக்கொண்டு வியாமோஹமடைந்திருந்தாள்; அதுகண்ட அவளது மாமியானவள் அந்த சிந்தனையை மாற்றிவிடக்கருதி, தயிர் நெய் பால் முதலியவற்றை அவளிடம் கொடுத்து 'இவற்றை விற்றுவா' என்று சொல்லி வீதிகளிலே அனுப்பினாள்; அப்பெண்பிள்ளை கண்ணபிரானையன்றி வேறொன்றுமறியாதவளாகையாலே, மாமியின் நிர்ப்பந்தத்துக்காகக் கூடையைத் தலையிலே வைத்துக்கொண்டு தெருவிலே புறப்பட்டாளாகிலும் 'தயிர்!, நெய்!, பால்!' என்று விற்பது தவிர்ந்து, "கோவிந்தன் வாங்கலையோ கோவிந்தன்!, தாமோதரன் வாங்கலையோ தாமோதரன்,!! மாதவன் வாங்கலையோ மாதவன் !!!' என்று இங்ஙனே ஸ்ரீக்ருஷ்ணநாமங்களையே கூவிக்கொண்டு சென்றனளாம்: அதுபோலே இப்பரகாலநாயகியும் ஓதிலுமுன்பேரன்றி மற்றோதாள்.]

[நின்திருவுருநினைந்து உருகும்.] திருநாமங்களை வாய்விட்டுச் சொன்னவாறே அத்திருநாமங்களின் பொருளாகிய ஸ்வரூபம் ரூபம் குணம் முதலியவை நினைவுக்கு வந்தன; ஸ்வரூபகுணாதிகளிற் காட்டிலும் ரூபத்தில் ஊற்றம் அதிகமாகையாலே ரூபத்தையே சிந்தித்து உருகாநின்றாள்; 'கடல்போலும் கார்முகில் போலும் குளிர்ந்த திருமேனி என்னே'! என்று அநுஸந்தித்து நீர்ப்பண்டம் போன்று உருகுகின்றாள்.

[காதன்மைபெரிது.] உன்னுடைய திருமேனியழகு பெரிதா, இவளுடைய ஆசை பெரிதா என்று பார்த்தால் இவளாசையே பெரிதாயிருக்கின்றது. [கையறவுஉடையள்.] கையறவாவது—செயலறுதலும் உதவியின்மையும்: ஒன்றுஞ் செய்யமுடியாமை செயலறுதலெனப்படும். ஒன்றுஞ்செய்ய முடியாதவளாய்ச் செயலற்றிருக்கின்றாள் என்றுவது, ஸஹாயமற்றிருக்கின்றாள் என்றுவது பொருள்கொள்க.

[பேதையேன்பேதை இத்யாதி.] நான் அறிவுகெட்டவளாகையாலே என்வயிற்றிற் பிறந்த இப்பெண்ணும் அறிவுகெட்டதாயிற்று. இன்னமும் இவளுக்கு இளம்பிராயம் நீங்கவில்லை; அப்படியிருக்கவும் உன்னுடைய ஸ்வரூபரூப குணங்களிலே மிகவும் தெளிவுள்ளவளாயிராநின்றாள்; இப்படிப்பட்ட இவளுக்கு ஏதாகிலும் அவமானம் நேரவேணுமென்று எதிர்பார்க்கும் சத்ருக்கள் பலருளர்; அவர்கள் கண்ணெதிரே இவள் திறத்து நீ செய்ய நினைத்திருப்பது என்னே? இவளை அநுக்ரஹித்து அவர்களுக்கு முகபங்கம் செய்ய நினைத்திருக்கிறாயோ? அன்றி இவளை நிக்ரஹித்து அவர்களை மகிழ்விக்க நினைத்திருக்கிறாயோ? இரண்டத்தொன்று சொல்லிக்காண்—என்கிறாள் திருத்தாயார்.

ஏதலர்முன்னா = ஏதலரென்று சத்துருக்களுக்குப் பெயர்; ஆழ்வார்க்கு சத்துருக்கள் இங்கு ஆரென்னில்; 'எம்பெருமானே உபாயம்' என்கிற தம்முடைய அத்யவஸாயத்திற்கு எதிர்த்தலையாக 'கருமம் ஞானம் முதலிய உபாயாந்தரங்களே அவனைப்பெறுதற்கு ஸாதநம்' என்று கொண்டிருக்கிற உபாயாந்தரநிஷ்டர்களை இங்கு ஏதலரென்கிறது 'நம்முடைய முயற்சியால் நாம் பேறுபெறவேண்டியிருக்க அவனே உபாயமென்று மார்விலே கைவைத்துறங்குவதும் ஒரு சாஸ்த்ரார்த்தமாகுமோ?' என்றிருக்கும் ஸித்தோபாய விரோதிகளின் முன்னே என்னுடைய உறுதியைச் சிறப்பித்து எனக்கு உதவப்போகிறாயோ, அன்றி அவர்களுடைய கொள்கையை ஆதரித்து என்னை உதறிவிடப்போகிறாயோ என்று ஆழ்வார் வினவுகின்றாராயிற்று. ... (ரு)

தன்குடிக்கேதும் தக்கவா நினையாள்
தடங்கடல் நுடங்கெயிலிலங்கை *
வன்குடிமடங்க வாளமர்தொலைத்த
வார்த்தைகேட் டின்புறுமயங்கும் *
மின்கொடி மருங்குல் சுருங்கமேல்நெருங்கி
மென்முலை பொன்பயந்திருந்த *
என்கொடியிவளுக் கென்நினைந்திருந்தாய்?
இடவெந்தையெந்தைபிரானே! (சு)

| | | | |
|---|---|---|---|
| இடவெந்தை எந்தை பிரானே!—; (இப்பெண் பிள்ளையானவள்) | | ஏதும் | சிறிதும் |
| தன் குடிக்கு தக்க ஆ | தனது குலமரியாதைக்குத் தகுந்தபடியை | நினையாள் | ஆராய்கின்றிலள்; |
| | | தட கடல் | பெரிய கடலோடும் |

| | |
|---|---|
| நுடங்கு எயில் | வளைந்த மதிளோடும்கூடின |
| இலங்கை | இலங்கையிலிருந்த |
| வல் குடி | வலிய ராக்ஷஸகுலமானது |
| மடங்க | அழியும்படி |
| வாள் அமர் தொலைத்த வார்த்தை கேட்டு | கொடிய போர்க்களத்திலே ஒழித்த செய்தியைக் கேட்டு |
| இன்புறும் | (ஒரு பிராட்டிக்காக இவ்வளவு காரியம் செய்வதே ! என்று) ஈடுபடாநின்றாள் ; |
| மயங்கும் | (அப்பிராட்டிக்குப்போல நமக்கும் ஒரு காரியம் செய்வதில்லையே ! என்று வருந்தி) மூர்ச்சிக் கின்றாள் ; |
| மின் கொடி மருங்குல் சுருங்க | மின்னலும் வஞ்சிக்கொடி யும்போன்ற இடையா னது நுடங்கும்படி |
| மெல் முலை | மெல்லிய முலைகளானவை |
| மேல் நெருங்கி | மார்பின்மேலே (ஒன்றோடொன்று) நெருக்கமுற்று |
| பொன் பயந்திருந்த | பசலைநிறமுடைத்தாம்படி யிருக்கின்ற |
| என் கொடி இவளுக்கு | எனது இப்பெண்பிள்ளை திறத்திலே |
| என் நினைந் திருந்தாய் | என்ன செய்வதாகத் திருவுள்ளம் ? |

[தன்குடிக்கேதும்.] இப்பெண்பிள்ளை ப்ரபந்நகுல மரியாதைக்குத் தகுந்த படி வர்த்திக்கப் பார்க்கிறாளில்லை ; சேஷபூதர் சேஷியினிடத்திலே பாரத்தை வைத்தபின்பு 1. "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்றாற்போலே அவன் செய்தபடி செய்துகொள்க வென்று ஆறியிருப்பதே ப்ரபந்நகுலமரியாதையாகும் ; இவள் அப்படி ஆறியிராமல் பதறுகின்றாளாகை யாலே தன்குடிக்கேதும் தக்கவா நினையாள்.

'ஸீதாபிராட்டி இராமபிரானைப் பிரிந்து பத்து மாஸம் அசோகவனத் திலே வஸித்தாள், அவளை மீட்டுக்கொள்ளுதற்காகப் பெருமான் படாதனபாடு பட்டான், அரிய பெரிய ஆனைத்தொழில்கள் செய்தான், உண்ணாது உறங்காது ஒலிகடலையூடறுத்து அணைகட்டி இலங்கைபுக்கு இராக்கதர்களைக் களைந் தெடுத்து இப்படிபலகாரியங்கள் செய்தருளினன்—என்று புராணம் வல்லார் வாய்க் கேட்டு 'அப்படியா ? அன்பர்களைப் பெறுதற்கு இவ்வளவு பரிச்ரமங் கள் படுகிறவனா அவன் !, நல்லது' என்று இன்புறுகின்றாள் ; உடனே, 'அப் பிராட்டியைப் பெறுதற்கு அத்தனை காரியங்கள் செய்த மஹாநுபாவன் நம்மை மாத்திரம் உபேக்ஷித்திருப்பதேன் ?' என்று வருந்தி மூர்ச்சையடைகின்றாள்.

'உன்மகள் மூர்ச்சையடைந்தாலெனக்கென்ன ?' என்று எம்பெருமான் சொல்லிவிடாமைக்காகவும் 'இவ்வழகியை நாம் இழக்கலாகாது' என்று அவன் மேல்விழுந்து அநுபவிக்கப் புகுவதற்காகவும் மகளினது அவயவ ஸௌந்தரி யத்தை வருணித்துப் பேசுகின்றாள் மின்கொடி யென்று தொடங்கி. இவ் வழகு தெரிந்துவைத்தா இவளை நீ இழந்திருக்கிறாய் என்றவாறு. மின் கொடிபோலேயிருக்கும் இடையானது சிறுத்தும் மேலே தனங்கள் நெருங்கி

1. திருவாய்மொழி, 5—8—8.

யும் பசலைநிறம் பூத்துமிருக்கப்பெற்ற இம்மகள் திறத்திலே என்ன செய்யத் திருவுள்ளம்? ... ... ... ... (சு)

உளங்கனிந்திருக்கு முன்னையே பிதற்றும்
உனக்கன்றி யெனக்கன்போன்றிலளால் *
வளங்கனிபொழில்சூழ் மாலிருஞ்சோலை
மாயனேயென்று வாய்வெருவும் *
களங்கனி முறுவல் காரிகைபெரிது
கவலையோடவலம் சேர்ந்திருந்த *
இளங்கனியிவளுக் கென்நினைந்திருந்தாய்?
இடவெந்தை யெந்தைபிரானே! (எ)

இடவெந்தை எந்தை பிரானே!—;

(இப்பெண்பிள்ளை எப்போதும் உன்னையே சிந்தித்திருக்கையாலே)

உளம் கனிந் திருக்கும் } நெஞ்சு கனிந்திருக்கின்றாள்;

உன்னையே பிதற்றும் } உன்னைப்பற்றியே வாய் பிதற்றாநின்றாள்;

உனக்கு அன்றி } உன்விஷயத்தில் தவிர

எனக்கு என்விஷயத்தில்

அன்பு ஒன்று இலள் } அன்பு சிறிதும் உடைய ளல்லள்;

வளம் கனி பொழில் சூழ் மாலிருஞ் சோலை மாயனே என்று வாய் வெருவும் } செழிப்பான பழங்களை யுடைய சோலைகளாலே சூழப்பட்ட திருமாலிருஞ் சோலையிலெழுந்தருளி யிருக்கிற ஆச்சரியனே! என்று வாய் வெருவு கின்றாள்;

களங்கனி முறுவல் காரிகை } களாப்பழம்போல் இனிதான முறுவலையும் அழகையும் உடையளாய்

பெரிது கவலை யோடு அவலம் சேர்ந்திருந்த } மிக்க மனக்கவலையும் இளைப்பும் உடையளாயிருக்கிற

இள க(ன்)னி இவளுக்கு } இளங்கன்னியாகிய இம்மகள் திறத்திலே

என் நினைந்திருந்தாய்?-;

[உளங்கனிந்திருக்கும்.] இப்பெண்பிள்ளையானவள் பரிபக்குவமான நெஞ்சையுடையளாயிருக்கின்றாள்; நெஞ்சின் நிலைமை எப்படி தெரிந்ததென்றால், [உன்னையேபிதற்றும்] வெறுமனே வாய்பிதற்றும்போதும் உன்னைப் பற்றின பேச்சுத்தவிர வேறொன்றுமில்லாமையாலே நெஞ்சு கனிந்திருப்பது நன்கு தெரிகின்றது; நெஞ்சு கனியாதிருந்தால் இப்படி உன்னையே வாய் பிதற்றுவளோ?. உலகத்தில் சிறுமிகள் தாய்தந்தையர் பக்கல் அன்புவைக்கக் காண்கிறோம்; இவளுக்கு அது கிடையாது; தாயென்றும் தமப்பனென்றும் தோழியரென்றும் பலரிடத்திலே பாலிபாயக்கடவதான அன்புமுழுவதையும் உன்னொருவனிடத்திலேயன்றோ இவள் கொண்டிருக்கின்றாள்; உன்பேரைச் சொல்லுவதும் நீ உகந்தருளின திருப்பதிகளின் பேரைச்சொல்லுவதுந்தவிர

வேறொன்றறியாளிவள்—வளங்கனிபொழில்சூழ்மாலிருஞ்சோலைமாயனே! என்று வாய் வெருவுகின்றாள்காண்.

இங்ஙனே திருத்தாயார் பெண்பிள்ளையின் நிலைமையைச் சொன்னவிடத்தும் எம்பெருமான் சிறிதும் இரக்கம் காட்டாதிருக்க, இவ்வழகியை நீ இழக்கலாமோ? என்கிறாள் மேலே. [களங்கனிமுறுவல்.] களங்கனி வாய்க்கு இனிப்பாயிருப்பதுபோல் முறுவல் காட்சிக்கு இனிதாயிருப்பதால் முறுவலுக்குக் களங்கனியை உவமைகூறினரென்க. ஆகவே இது பயனுவமையாம்: (பயனைப் பற்றிவரும் உவமை—பயனுவமை.) "மாரிவண்கை, கற்பகவள்ளல்" என்றவிடங்களிற்போல. "பண்பும் தொழிலும் பயனு மென்றிவற்றுள், ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்து, ஒப்புமைதோன்றச் செப்புவது உவமை" (31.) என்றார் தண்டியலங்காரத்தும்: இங்கே, களங்கனியாலுண்டாகிறபயனும் முறுவலாலுண்டாகிற பயனும் ஒத்திருத்தலால் [-இரண்டும் இனிப்பாயிருத்தலால்] இவ்வுவமை ஒக்குமென்க.

[இளங்கனியிவளுக்கு.] 'கன்னி' என்பது கனி யென்று தொகுத்தல் விகாரம் பெற்றிருக்கின்றது: 'கந்யா' என்னும் வடசொல் கன்னியென விகாரப்படும். ... ... ... ... (எ)

அலங்கெழு தடக்கை யாயன்வாயாம்பற்கு
அழியுமாலென் னுள்ளமேன்னும் *
புலங்கெழு பொருநீர்ப் புட்குழிபாடும்
போதுமோ நீர்மலைக்கென்னும் *
குலங்கெழுகொல்லி கோமளவல்லி
கொடியிடை நெடுமழைக்கண்ணி *
இலங்கெழில் தோளிக்கென் நினைந்திருந்தாய்?
இடவேந்தை யெந்தைபிரானே! (அ)

இடவெந்தை எந்தை பிரானே!—;

அலம் கெழு தட கை ஆயன் வாய் ஆம்பற்கு என் உள்ளம் அழியும் என்னும் — 'கலப்பை விளங்குகின்ற பெரிய திருக்கையை யுடையனான கோபால க்ருஷ்ணனுடைய திருப்பவளத்தில் வைத்து ஊதுகிற இலைக்குழலோசைக்கு என்னெஞ்சு அழிகின்றது' என்கிறாள்;

புலம் கெழு — மனோஹரமான

பொரு நீர் — அலையெறிகின்ற நீர்ப் பெருக்கையுடைய

புட்குழி — திருப்புட்குழி விஷயமாக

பாடும் — பாட்டுகள் பாடாநின்றாள்;

நீர்மலைக்கு போதுமோ என்னும் — திருநீர்மலைக்குப் போவோமென்கிறாள்;

குலம் கெழு கொல்லி கோமளவல்லி — மிகச்சிறந்த கொல்லி மலையிலுள்ள பாவை போன்றவளும்

கொடி இடை — வஞ்சிக்கொடிபோன்ற இடையையுடையவளும்

நெடு மழை கண்ணி — பெருமழைபோலே நீர்த்தாரைகள் பெருகப்பெற்ற கண்களையுடையவளும்

இலங்கு எழில் தோளிக்கு — விளங்குகின்ற அழகிய தோள்களையுடையவளுமான இப்பெண்பிள்ளை திறத்திலே

என் நினைந்திருந்தாய்?—.

[அலங்கெழுதடக்கை.] கண்ணபிரான் திருப்பவளத்திலே வைத்து ஊதுகிற புல்லாங்குழலினோசை என்னெஞ்சைக் கொள்ளைகொள்கின்றதென்கிறாள்; திருப்புட்குழியென்னுந் திருப்பதியின் நீர்வளநிலவளங்களை எடுத்துப் பாடுகின்றாள்; திருநீர்மலைக்குப் போகவேணுமென்று பயணமெடுக்கின்றாள்; தன்னுடைய அபேக்ஷிதமொன்றும் நிறைவேறாமையாலே கண்ணுங்கண்ணீருமாய்ச் சோர்கின்றாள்: இப்படிப்பட்ட இப்பெண்பிள்ளை திறத்திலே நீ செய்ய நினைத்திருப்பது நிக்ரஹமோ அநுக்ரஹமோ? என்கிறாள்—பரகாலஜநநி.

ஆம்பல் என்ற சொல் பலபொருள்களுடையது; இங்கு இசைக்குழலென்னும் பொருளது. குழலூதுபவன் கண்ணபிரானாயிருக்க, அலங்கெழு தடக்கையாயன் என்று ஹலாயுதனை பலராமனைச் சொல்லிற்றென்னென்னில்; 1. "மீனோடாமை கேழலரிகுறளாய் முன்னு மிராமனாய்த்தானாய்ப், பின்னுமிராமனாய்த்தாமோதரனாய்க் கற்கியுமானான்" என்ற ஒற்றுமை நயம் தோற்றச் சொன்னபடி 2. "அலம்புரிதடக்கையாயனே!" என்றார் கீழும்; 3. "அலமுமாழிப் படையுமுடையான்" என்பர் மேலும்.

புட்குழி = புள்ளை [ஜடாயுவென்னும் பெரியவுடையாரை] க்குழியிலிட்டு ஸம்ஸ்கரித்த அவஸரமாக எம்பெருமான் ஸந்நிதிபண்ணியிருக்கின்ற தலமாதல் பற்றித் திருப்புட்குழியென்று இத்தலத்திற்குத் திருநாமமென்பர்.

போதுமோநீர்மலைக்குஎன்னும் = இவ்வாழ்வார்க்குத் திருநீர்மலையில் விசேஷமான அபிமானமுண்டென்பது உணரத்தக்கது. 4. "கலைவாழ்பிணையோடணையுந் திருநீர்மலைவாழெந்தை" என்றும் 5. "நிதியே திருநீர்மலை நித்திலத்தொத்தே" என்றும் 6. "அருவிசோர்வேங்கடம் நீர்மலையென்று வாய்வெருவினாள்" என்றும் 7. "நெருநல்கண்டது நீர்மலை" என்றும் 8. "நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேனென்னும்" என்றும் இப்படி அடிக்கடி திருநீர்மலையைப்பற்றிப் பேசாதிரார். 'போதும்' என்பதில் 'போ'— வினைப்பகுதி; தும்— தன்மைப்பன்மைவிகுதி; போவோம் என்றபடி.

குலங்கெழுகொல்லிக் கோமளவல்லி = 'கொல்லி' என்பதற்கே இலக்கணையால் கொல்லிமலையிலுள்ள பாவைபோன்றவள் என்று பொருள் கொள்ளலாம்; அன்றி, கொல்லி—கொல்லிமலையிலுள்ள, கோமளவல்லி—அழகிய கொடிபோன்ற பாவையையொத்தவள் என்றும் உரைக்கலாம். [கொல்லிப்பாவையைப்பற்றின விவரணம் இத்திருப்பதிகத்தின் முதற்பாட்டினுரையிற் காணத்தக்கது.]

நெடுமழைக்கண்ணி = பரமபக்தர்களின் நிலைமையைச் சொல்லுமிடத்து, "ஆஹ்லாதசீதநேத்ராம்பு:" [குளிர்ந்த ஆநந்தபாஷ்பம் தளும்பப்பெற்றவன்]

---

1. பெரிய திருமொழி 8–8–10.
2. ஷை 1–6–2.
3. ஷை 9–3–8.
4. ஷை 5–2–8.
5. பெரிய திருமொழி 7–1–7.
6. ஷை 8–2–3.
7. ஷை 10–1–1.
8. திருநெடுந்தாண்டகம் 18.

என்று சொல்லியிருக்கிறபடியே எப்போதும் ஆழ்வார் பகவத்குணங்களை நினைந்து கண்ணுங்கண்ணீருமா யிருக்குமிருப்பைச் சொல்லுகிறது. இப்படிப் பட்ட இப்பெண்பிள்ளை திறத்திலே செய்யத் திருவுள்ளம் பற்றியிருப்பது யாது கொல்?. ... ... ... ... (அ)

பொன்குலாம்பயலை பூத்தனமென்தோள்
பொருகயற் கண்டுயில்மறந்தாள் *
அன்பினாலுன்மே லாதரம்பெரிதிவ்
வணங்கினுக் குற்றநோயறியேன் *
மின்குலா மருங்குல் சுருங்கமேல்நெருங்கி
வீங்கிய வனமுலையாளுக்கு *
என்கோலாம் ? குறிப்பிலென்நினைந்திருந்தாய் ?
இடவெந்தையெந்தைபிரானே ! (கூ)

இடவெந்தை யெந்தை பிரானே!—; (இப்பெண்பிள்ளையினுடைய)
மெல் தோள் — மென்மைதங்கிய தோள்களானவை
பொன் குலாம் பயலை பூத்தன — பொன்னிறமென்று சொல்லத்தக்க பசலை நிறத்தைக் கொண்டன;
பொரு கயல் கண் துயில் மறந்தாள் — ஒன்றோடொன்று போர் செய்கிற இரண்டு மீன்கள் போன்ற கண்களிலே உறக்கத்தை மறந்துவிட்டாள்;
உன் மேல் — உன்விஷயத்திலே
அன்பினால் — ஆசையினாலே
ஆதரம் பெரிது — ஆதரவு பெருகிச் செல்லுகின்றது;
இவ் அணங்கினுக்கு உற்ற நோய் அறியேன் — இப்பெண்ணுக்கு உண்டான வியாதியை அறிகின்றேனில்லை;
மின் குலாம் மருங்குல் சுருங்க — மின்னல்போன்று கொண்டாடத்தக்க இடையானது துவளும்படியாக
மேல் நெருங்கி — மார்பின்மேலே ஒன்றோடொன்று நெருக்கமுற்று
வீங்கிய — வளர்ந்துவாராநின்ற
வனம் முலையாளுக்கு — அழகிய முலைகளையுடையளான இம்மகளுக்கு
என் ஆம் கொல் — என்ன ஆகுமோ?
குறிப்பில் என் நினைந்திருந்தாய் — (இவளைப்பற்றித்) திருவுள்ளத்தில் என்ன நினைத்திருக்கிறாய்?.

[பொன்குலாம்பயலை.] நாயகனை அணைத்துக்கொள்ளுவதற்குத் தோள்கள் உபகரணமாகையாலும், அந்தத்தோள்கள் இவளுக்குப் பயன்படவொண்ணாதபடி நீ உபேக்ஷித்திருக்கையாலும் [—அதாவது—அணைத்துக்கொள்ளுமாறு நீ கைக்கு எட்டாதபடியால்] இவளது தோள்களானவை பசலைநிறம் படரப்பெற்றுள்ளன; இவளுடைய கண்களில் உறக்கமென்பது அடியோடு நீங்கி நெடுநாளாயின; அன்பினாலுண்டாகும் ஆதரவு உன்மேலன்றி மற்றெதிலுமில்லை.

பசலைநிறத்தைப்பற்றிக் குறுந்தொகையில் ஒரு செய்யுளுண்டு; அதாவது—"ஊருண்கேணி யுண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடு

வுழித்தொடுவுழி நீங்கி விடுவுழிவிடுவுழிப் பரத்தலானே." (399.) என்பதாம். ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப்பெறுகிற கேணியினுள்ளே படர்ந்து கிடக்கும் பாசிபோன்றது பசலைநிறம்; தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்டவிடங்களில் பாசி நீங்கும்; கையை எடுத்துவிட்டோமாகில் அவ்விட மெல்லாம் பாசி மூடிக்கொள்ளும்; அதுபோல, கணவனுடைய கைபடுமிடங் களில் பசலைநிறம் நீங்கும்; அணைத்த கை நெகிழ்த்தவாறே அப்பசலைநிறம் படரும்; ஆதலால் பாசிபோன்றது பசலைநிறம் என்றபடி. (தொடுவுழித்தொடு வுழி—தொட்டவிடங்கள்தோறும். விடுவுழிவிடுவுழி—விட்டவிடங்கள் தோறும். பரத்தலான்—வியாபிக்கிறபடியினாலே.)

[இவ்வணங்கினுக்குற்ற நோயறியேன்.] இதற்குக் கருத்தென்னவென்று ஆராயவேணும்; "அன்பினாலுன் மேலாதரம் பெரிது" என்று சொல்லுகிற திருத்தாயார் தன் மகள் பகவத்விஷயத்திலீடுபட்டிருக்கின்றாளென்பதை வெளிப்படையாக்கிவைத்தபின் "இவ்வணங்கினுக்குற்ற நோய் அறியேன்" என்று சொல்லக்கூடுமோ? உலகத்தில் பாமரஜனங்களுக்கு உண்டாகிற வியாதி போன்ற வியாதி தன் மகளுக்கு முண்டாயிற்றென்று திருத்தாயார் நினையா திருக்க, "உற்ற நோயறியேன்" என்று எங்ஙனே சொல்லலாம்? என்று சங்கைபிறக்கக்கூடும்; கேண்மின்;—எம்பெருமானே! இவளுக்கு இப்படிப்பட்ட மனோவியாதியுண்டானது உன்னுடைய கடாக்ஷத்தில் ஆசைப்பட்டா? புன் முறுவலில் ஆசைப்பட்டா? திருமேனியோடணைய ஆசைப்பட்டா? என்று நிச்சயிக்கமாட்டுகிறிலேன் என்றவாறு.

மூன்றாமடியின் உள்ளுறைபொருளாவது :—1. "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்னுமாபோலே ஆச்ரயத்தினளவல்லாத பக்திப்பெருங் காதலையுடையேன் என்றவாறு. [குறிப்பில் என்னிலைந்திருந்தாய் இடவெந்தை யெந்தைபிரானே!.] 'தாய் உதவுவள், தமப்பன் உதவுவன், உறவினர் உதவுவர்; நமக்கென்ன? என்று நினைத்திருக்கிறாயோ? இப்படியாகில் நீ பரமபதத்தை விட்டு இந்நிலத்திலேவந்து திருவிடவெந்தையிலே ஸந்நிதிபண்ணியிருப்பது பிரயோஜநமற்றதாகுமிறே என்றவாறு. ... ... (கூ)

அன்னமுமீனு மாமையுமரியு
மாயவேம்மாயனே! அருளாய் *
என்னுமின்தோண்டர்க் கின்னருள்புரியும்
இடவெந்தையெந்தைபிரானை *
மன்னுமா மாடமங்கையர் தலைவன்
மானவேல் கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல் பாடுவோர் நாளும்
பழவினைபற்றறுப்பாரே. (ய)

1. இரண்டாந்திருவந்தாதி 100.

| | |
|---|---|
| அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய | "ஹம்ஸரூபியாகவும் மத்ஸ்ய ரூபியாகவும் கூர்மரூபி யாகவும் நரஸிம்ஹரூபி யாகவும் திருவவதரித்த |
| எம் மாயனே | எம்பெருமானே ! |
| அருளாய் என்னும் | கிருபைபண்ணவேணும்" என்று பிரார்த்திக்கின்ற |
| இன் தொண்டர்க்கு | பரமபக்தர்களுக்கு |
| இன் அருள் புரியும் | பரமக்ருபையைச் செய்தருள்கின்ற |
| இடவெந்தை எந்தை பிரானை | திருவிடவெந்தைப் பெருமான் விஷயமாக, |
| மன்னு மா மாடம் மங்கையர் தலைவன் | சாச்வதமான பெரிய மாடங்களையுடைய திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவரும் |
| மானம் வேல் | சிறந்த வேலாயுதத்தை யுடையவருமான |
| கலியன் | ஆழ்வார் |
| வாய் ஒலிகள் பன்னிய | விஸ்தரித்து அருளிச்செய்த |
| பனுவல் | இப்பாசுரங்களை |
| பாடுவார் | பாடுமவர்கள் |
| நாளும் | எந்நாளும் |
| பழவினை பற்று அறுப்பார் | கல்மஷ ஸம்பந்தமற்றிருப்பர்கள். |

[அன்னமுமீனும்.] கீழ் ஒன்பது பாட்டும் தாய்பாசுரமாகச் சென்றன. தாமான தன்மையிலேநின்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டும் பாசுரம் இது. 'ஹம்ஸரூபியாயும் மத்ஸ்யரூபியாயும் அவதரித்து வேதங்களை உத்தரிப்பித்த உபகாரகனே!, கூர்மரூபியாயவதரித்துத் தேவர்கட்கு அமுதளித்தவுபகாரகனே !, நரசிங்கமூர்த்தியாயவதரித்து ப்ரஹ்லாதனை நோக்கின பரமோபகாரகனே !, ஆச்சரியமான சீலகுணங்களையுடையவனே! அவர்கட்கெல்லாம் அருளினாற்போலே எமக்கும் சிறிது அருளவேணும்' என்று பிரார்த்திக்கின்ற அநந்யப்ரயோஜநரான தொண்டர்கட்கு அருள்புரிவதற்காகவே திருவிடவெந்தையிலே ஸந்நிதிபண்ணி யெழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வாரருளிச்செய்த இப்பாசுரங்களைப் பாடுமவர்கள் முன்னைத்தீவினைகளைமுற்றும் வேரறுத்திடுவர்கள்—எம்பெருமானுக்கு நித்யகைங்கரியம் பண்ணப் பெறுவர்களென்றவாறு.

கீழ் ஒன்பது பாட்டும் வேற்றுவாயாலே பேசி, இதில் கலியன்வாயொலிகள் என்கையாலே தம்முடைய பக்திப்பெருங்காதலைத் தாமே அந்யாபதேசத்தாலே பேசிக்கொண்டாரென்பது விளங்கும்.

"உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்?" என்று பாசுரந்தோறும் எம்பெருமானை வினவிக்கொண்டேவந்தவர் அதற்கு ஒரு மறுமொழியும் பெறாமல் எங்ஙனே பதிகத்தை முடித்துவிட்டார்? என்று சிலர் கேட்கலாம்; மறுமொழி பெற்றே முடித்தாரென்றுணர்க. "என்னினைந்திருந்தாய்?" என்று கேட்ட ஆழ்வாரைநோக்கி 'நீர் கவலைபற்றிரும்; உம்மை நாம் கைவிடுவோமோ? உம்மிடத்தில் பரிபூர்ணக்ருபை செய்வதாகவே திருவுள்ளம்பற்றி யிருக்கிறோம்; இல்லையாகில் அங்குநின்றும் இங்குவந்து திருவிடவெந்தையிலே நிற்போமோ?

அஞ்சாதேகொள்ளும், உமக்கு அருள்புரிந்தோம்' என்று எம்பெருமான் சோதிவாய்திறந்து அருளிச்செய்ததுகொண்டு தேறுதலடைந்து இத்திருமொழியைத் தலைக்கட்டினரென்பது "அருளாயென்னுமின்தோண்டர்க்கின்னருள்புரியுமிடவேந்தையெந்தைபிரானை" என்றவிதனால் நன்கு விளங்காநின்றதிறே. ... ... ... ... (௧௦)

**அடிவரவு**:—திவளும் துளம் சாந்தம் ஊழியில் ஓதிலும் தன் உளம் அலம் பொன் அன்னம் திரிபுரம்.

ஏழாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---





ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—எட்டாந்திருமொழி.

# திரிபுரமூன்றெரித்தானும்.

அவதாரிகை :—ஸ்ரீராமபிரான் தண்டகாரணியத்தில் எழுந்தருளியிருந்த போது அங்குள்ள மஹர்ஷிகளெல்லாரும் திரண்டு பெருமாளுடைய பர்ண சாலைக்கு ஓடிவந்து 'ராக்ஷஸர்களாலே நாங்கள் புண்பட்டிருக்கிறபடியைப் பாராய் பிரானே!, இது ஒரு குத்து, இது ஒருவெட்டு, கண்டருளாய்' என்று சொல்லி அரக்கர் நலிந்த தங்களுடம்பைக் காட்டினபோது பெருமாள் சோதி வாய் திறந்து சொல்லுகிறார்—"𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑌨𑍍𑌤𑍁 𑌭𑌵𑌨𑍍𑌤𑍋 𑌮𑍇 𑌹𑍍𑌰𑍀𑌰𑍇𑌷𑌾 𑌹𑌿 𑌮𑌮𑌾𑌤𑍁𑌲𑌾 । 𑌯𑌦𑍀𑌦𑍃𑌶𑍈𑌰𑌹𑌂 𑌵𑌿𑌪𑍍𑌰𑍈𑌃 𑌉𑌪𑌸𑍍𑌥𑍇𑌯𑍈𑌰𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 = ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா—யதீத்ருசைரஹம் விப்ரை: உபஸ்தேயைருபஸ்தித:." என்றார் ; அதாவது—மஹர்ஷிகாள் ! அடியேனை மிகவும் க்ஷமித்தருளவேணும் ; இப்போது அடியேனுக்குண்டான வெட்கம் சொல்லுந்திறமன்று. உங்களுக்கு ஒருவிதமான நோவும் வாராதபடி நான் நோக்கிக்கொள்ளவேண்டியவன் ; என் கடமையை நான் தவிர்ந்து உங்களை நோவுபட விட்டிருந்தேன் ; இஃது எனக்குப் பெரிய குற்றம். அதற்குமேல், நானாகவே உங்களாச்ரமத்தில் வந்து 'இப்படி நீங்கள் நோவுபட நேர்ந்ததா ?' என்று விசாரிப்பதும் செய்யாமல், நீங்கள் பட்ட நோயை நீங்களே என்னிடம் வந்து கதறும்படியாக நான் பிறபட்டேன் ; இஃது எனக்கு மிகப்பெரிய குற்றம் ; ஆகையாலே இவ்வளவு குற்றவாளியான நான் உங்களைக் காணும் போது மிகவும் வெள்கிநிற்கின்றேன்—என்றார். ரிஷிகள் விஷயத்திலே இப்படி பேசுகிற எம்பெருமான் ஆழ்வார்கள் விஷயத்திலே இதிலும் பதின்மடங்கு அதிகமாகப் பேசுவனன்றே. ஆழ்வார்கட்கும் ரிஷிகட்கும்—பர்வதத்துக்கும் பரமாணுவுக்குமுள்ள வாசி உண்டிறே ;

கீழ்த்திருமொழியில், ஆழ்வார் தாமான தன்மையையிழந்து பட்டபாடு களைத் திருவுள்ளம்பற்றின எம்பெருமான் 'இவ்வாழ்வாரை இப்படியோ நாம் துடிக்கவிட்டோம்!; தம்துடிப்பைத் தாமே முறையிட்டுக்கொள்ளும்படியாகவும் நாம் பிறபட்டோமே!' என்று முடிமேல் மோதிக்கொண்டு, அடியார்களுக்குத் தாம் உதவின குணங்களையும் பரம விலக்ஷணமான வடிவழகையும் பிரகாசப் படுத்திக்கொண்டு திருவட்டபுயகரமென்னும் கச்சித்திருப்பதியிலே ஆழ்வார்க் குப் பரமபோக்யமாக ஸேவைஸாதித்தான் ; ஆழ்வாரும் (கீழ்த்திருமொழியின் அநுபந்தமாகவே) பரகாலநாயகியான நிலைமையிலேயே நின்று அப்பெருமானை ஸேவித்தார் ; என்றைக்கும் எங்குங் கண்டறியாத திருக்கோலமாயிருந்தது ;

1. "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன்" என்றாற்போலே அப்பெருமானை இன்னானென்று அறியமாட்டிற்றிலர்; அறிந்துகொள்ளாமலிருக்க மனமில்லை; ஸ்வபுத்தியாலே அறிந்துகொள்ளவும் முடியவில்லை; என்னசெய்வது? 'நீர் ஆர்?' என்று கேட்கலாமென்று பார்த்தாலோ, வாய் எழும்பவில்லை. முகத்தை நேரே பார்த்து வார்த்தைசொல்ல முடியாதபடி சோதிவெள்ளம் அலையெறிந்து தள்ளுகின்றது; அதனால், முகம்நோக்கி 'நீர் ஆர்?' என்று கேட்கமாட்டிற்றிலர்; 'இவர் நம்முடைய பர்த்தாவாகவேயிருக்கக்கூடும்' என்று நெஞ்சிலே ஒரு தோற்றமும் தோன்றினமையால் வெட்கத்தாலும் 'நீர் ஆர்?' என்று கேட்கமாட்டிற்றிலர்; கேட்டுத் தெரிந்துகொள்ள விருப்பமோ அதிகரித்துவிட்டது; அவர்தம்மையே நேரே முகம்பார்த்துக் கேளாமல் வேறொருவரை நோக்கி 'இப்பெரியவர் ஆர்கொல்?' என்று கேட்க, அதற்கு எம்பெருமான்றானே 'நான் அட்டபுயகரத்தேன்' என்று மறுமொழி கூற, படுக்கைத்தலையிலே இப்படி சில வார்த்தைகள் நடந்துகொண்டிருப்பதைப் பரகாலநாயகியின் தாய்மார் தோழிமார் முதலானார் செவியுற்று 'நங்காய்! ஏதேனும் ப்ரமித்தாயோ? இவை என்ன வார்த்தைகள்?' என்று கேட்க; 'ப்ரமித்தேனல்லேன்; ஒரு மஹாபுருஷரை ஸேவிக்கப்பெற்றேன், 'இவரார் கொல்?' என்று கேட்டேன்; திருவட்டபுயகரத்துநாயனார் 'நான்தான் அட்டபுயகரத்தேன்' என்று உத்தரமருளிச் செய்கிறார்காண்மின்—என்று பரகாலநாயகி தன் தாய்மார்க்கும் தோழிமார்க்கும் நடந்த வரலாறு சொல்லுவதாயிருக்கிறது இத்திருமொழி.

ஆழ்வார் எம்பெருமானை அநுபவிக்கும் விதங்களில் இதுவும் ஒரு ஆச்சரியமான விதமாகுமென்றுணர்க. கீழ்த்திருமொழி—தாய்பாசுரம்; இத்திருமொழி—தலைவி பாசுரம். ... ... *

திரிபுர மூன்றெரித்தானும்
　　மற்றைமலர்மிசைமேலயனும் வியப்ப *
முரிதிரை மாகடல்போல்முழங்கி
　　மூவுலகும் முறையால்வணங்க *
எரியனகேசர வாளெயிற்றொடு
　　இரணியனாக மிரண்டுகூறு *
அரியுருவாமிவரார்கொலென்ன
　　அட்டபுயகரத்தே னென்றாரே. (க)

| | | | |
|---|---|---|---|
| திரி புரம் மூன்று எரித்தானும் | எங்கும் திரிந்துகொண்டு உலகங்கட்குத் துன்பம் விளைத்துக் கொண்டிருந்த மூன்று பட்டணங்களைக் கொளுத்தி யொழித்தவனை சிவபிரானும் | மலர் மிசை மேல் அயனும் | தாமரை மலரிற் பிறந்து மேன்மை பொருந்திய பிரமனும் |
| | | வியப்ப | ஆச்சரியப்படவும், |
| | | மூ உலகும் | மூன்று லோகங்களிலுமுள்ளவர்கள் |

1. பெரியதிருமொழி 10-10-9.

| | |
|---|---|
| முரி திரை மா கடல் போல் முழங்கி | அலையெறிகின்ற பெரிய கடல்போலே (ஸ்தோத்ர) கோஷங்களைச் செய்துகொண்டு |
| முறையால் | முறைதவறாது |
| வணங்க | வணங்கவும், |
| இரணியன் ஆகம் இரண்டு கூறு ஆ | இரணியாசுரனுடைய உடல் இரண்டு பிளவாம்படியாக |
| எரி அன கேசரம் | நெருப்புப்போன்ற உளைமயிர்களோடும் |
| வாள் எயிற்றோடு | வாள்போன்ற கோரப்பற்களோடும்கூடி |
| அரி உரு ஆம் இவர் | நரசிங்கவுருக்கொண்ட பெருமானைப் போன்றுள்ள இப்பெரியவர் |
| ஆர் கொல் என்ன | யார்? என்று நான் சொல்ல, |
| | (அதற்கு அவர்) |
| அட்டபுய கரத்தேன் என்றார் | 'அட்டபுயகரக்ஷேத்ரத்திலுள்ளவன் நான்' என்று மறுமொழி கூறினர். |

[திரிபுரமூன்று.] ஒரு பெரியவர்வந்து ஸேவைஸாதித்தார், அப்போதைய நிலைமை இப்படிப்பட்டிருந்ததென்கிறாள் பரகாலநாயகி: சிவனும் பிரமனும் கண்டு ஆச்சரியப்படும்படியாகவும், மூவுலகத்திலுள்ளவர்களும் அலையெறிகின்ற கடல்போல் ஸ்தோத்ர கோஷங்களைச் செய்துகொண்டு வணங்கவும், நெருப்புப் போன்ற உளைமயிர்களோடும் வாள்போன்ற கோரப்பற்களோடுங்கூடி, இரணியன் இருபிளவாம்படியாக நரசிங்கவுருக்கொண்டு தோற்றின இம்மஹாநுபாவர் ஆர்? என்று நான் கேட்டேன்; அதற்கு அவர் "நான் அட்டபுயகரத்தேன்—அட்டபுயகரத்தில் வஸிப்பவன்காண்; 'அன்றொருகால் ப்ரஹ்லாதனுக்காக வந்து உதவினமாத்திரமன்று; உனக்கு உதவுகைக்காக இங்கே வந்து ஸமயம் பார்த்து நிற்கிறவனன்றோ நான்' என்றார்—என்கிறாள்.

எதிரேவந்து தோற்றினவருடைய ஸ்வரூபஸ்வபாவங்கள் ஆழ்வார்க்குத் தெரியாதிருந்தால் 'இவராார்கொல்?' என்று கேட்கலாம்; "திரிபுர" மென்று தொடங்கி "அரியுருவாமிவர்" என்னுமளவும் மூன்றரையடிகளால் அவனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களைத் தாம் நன்கறிந்தமையைச் சொல்லிவைத்து 'இவரார் கோல்?' என்று கேட்பது பொருந்துமோ? எனின்; இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்கிறார்—"அடையாளம் சொல்லா நிற்கச்செய்தே நிச்சயிக்க வொண்ணாதபடியிறே விஷயஸ்வபாவம்!" என்று. "இன்னாரென்றறியேன் அன்னேயாழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன்" என்னுமாபோலேயாம். "அடையாளம் சொல்லாநிற்கச் செய்தே அறியேனென்னப் பண்ணுகிறது அவன்வைலக்ஷண்யம்" என்று அவ்விடத்திலும் வியாக்கியான ஸ்ரீஸூக்தியுள்ளது. அஸாதாரணலக்ஷணங்களைத் தெரிந்துகொண்டபின் இன்னாரென்றறியாமை யென்பதொன்றுண்டோ வென்று பலர்க்கும் நெஞ்சில் கலக்கமாகவே யிருக்கும்; ஆழ்வாருடைய நிலைமை வாய்த்தாலன்றித் தெளிவு பிறவாது; என்செய்வோம்?. 'எதிரே வந்து தோன்றுகின்ற இவருடைய லக்ஷணங்களைப் பார்த்தால் இவர் எம்பெருமானாயிருக்கக்கூடும்' என்று நினைக்கலாகிறது; ஆனால், 'தௌர்ப்பாக்ய சாலிகளான நமக்கு அவர் இவ்வளவு ஸுலபமாக ஸேவைஸாதிக்க ப்ராப்தி இருக்கமாட்டாதே' என்று நம்முடைய தண்மையைக்கூடவே நினைத்துக்

கொண்டால் 'வேறுயாரேனு மொருவரோ இவர்' என்று ஸந்தேஹிக்க இடமுண்டாகிறது—என்பதாகக்கொள்க. பிராட்டி அசோகவநிகையில் வருந்திக்கிடந்தபோது சிறியதிருவடி வந்து எதிரே கைகூப்பி நின்று மெய்யே வார்த்தை சொல்லச் செய்தேயும் 'இஃது இந்நிலத்தில் ஸம்பாவிதமாகக் கூடியதன்றே' என்று சிந்தித்த பிராட்டி "𑌕𑌿𑌂 𑌨𑍁 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑍋𑌹𑍋𑌽𑌯𑌂 𑌭𑌵𑍇𑌦𑍍𑌵𑌾𑌤𑌗𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌯𑌂 । 𑌉𑌨𑍍𑌮𑌾𑌦𑌜𑍋 𑌵𑌿𑌕𑌾𑌰𑍋 𑌵𑌾 𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌯𑌂 𑌮𑍃𑌗𑌤𑍃𑌷𑍍𑌣𑌿𑌕𑌾 = கிம் நு ஸ்யாத் சித்தமோஹோயம் பவேத் வாதகதிஸ்த்வியம்—உந்மாதஜோ விகாரோவா ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா." என்று 'இது மதிமயக்கத்தால் வந்ததோ? காற்றுப்போக்கின் தோற்றரவோ? பித்தவிகாரத் தோற்றமோ? கானல் காட்சியோ?' என்று பலவகையாகச் சங்கிக்கவில்லையா?. நிற்க.

திரிபுரம் மூன்றுளரித்தானும்=முற்காலத்தில் தாரகாஸுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து பிரமனிடம் பெருவரம்பெற்று வானத்துப்பறந்து செல்லுந்தன்மை வாய்ந்த மூன்று பட்டணங்களை யடைந்து மற்றும்பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்தவிடங்களிற் பறந்துசென்று பலவிடங்களின் மேலும் இருந்து அவ்விடங்களைப் பாழாக்கி வருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்த்ரஸூர்யர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில்நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்நியை முனையாகவுடைய அம்பாகவும் அமைத்துக்கொண்டு யுத்தஸந்நத்தனாய்ச் சென்று போர் தொடங்கும்போது சிரித்து அச்சிரிப்பில்நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன்—என்பது திரிபுரமூன்றெரித்த வரலாறு.

திரிபுரம்—திரிந்து கொண்டிருந்த பட்டணங்கள் எனப் பொருள்படுதலால் வினைத்தொகை; இனி, 'த்ரிபுரம்' என்னும் வடசொல் திரிபுர மெனத்திரிந்ததாகவுங் கொள்ளலாம். இங்ஙனாகில், "திரிபுரமெரித்தான்" என்னுமளவே போதுமாயிருக்கத் 'திரிபுரமூன்று' என்றது என்? என்று கேள்விபிறக்கும்; இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல்—"பஞ்ச பஞ்சஜநா:, ஸப்த ஸப்தர்ஷய: என்னுமாபோலே தனித்தனியே நாமதேயமாகவுமாம்" என்று.

சிவனும் பிரமனும், தாங்களும் சில அற்புதமான காரியங்களைச் செய்பவர்களாயிருந்தாலும் எம்பெருமானுடைய அரியபெரிய அற்புதச் செயல்களைக் கண்டு, கொக்கு கடலைக்கண்டாற்போலே ஆச்சரியப்படுவர்களென்க.

முரிதிரைமாகடல்=மடிந்து மடிந்து எறிகின்ற அலைகளையுடைய கடல் என்றபடி. எரியன='அன்ன' என்னும் குறிப்புப்பெயரெச்சம் 'அன' என்று தொக்கிக்கிடக்கிறது. கேசரம்—'கேஸரம்' என்ற வடசொல் விகாரம்; சிங்கத்தின் பிடரிமயிர்கட்குக் கேஸரமென்று பெயர். (கேஸரீ—சிங்கம்.)

"அரியுருவாகிய நீர் ஆர்?" என்று அப்பெரியவரையே முகம்நோக்கிக் கேட்கமுடியாமல் தலைகுனிந்து வேறொருவரை நோக்கிக் கேட்பதுபோல் இவ ரார்கொல்? என்று நான் கேட்டேன், அதற்கு அவர்தாமே 'நான் அட்டபுய கரத்தேன்' என்று மறுமொழி கூறினார் என்கிறாள் பரகாலநாயகி.

அட்டபுயகரத்தேன்= அட்டபுயகரத்திலுள்ளவன் நான் என்று பொருள். 'அஷ்டபுஜன்' என்பது எம்பெருமானுடைய திருநாமம்; எட்டுத்திருக்கைகளை யுடையவன் என்று பொருள். க்ருஹம் என்ற வடசொல் கரமெனத்திரியும்; ஆகவே, அஷ்டபுஜனுடைய க்ருஹம்—அட்டபுயகரம்; (திவ்யதேசத்தைச் சொன்னபடி.) அவ்விடத்திலுள்ளவன் நான் என்றதாயிற்று. 'நான் அட்ட புயன்' என்றே எம்பெருமான் மறுமொழி கூறியிருக்கலாமே; தலையைச்சுற்றி மூக்கைப் பிடிப்பதுபோல இங்ஙனே ஏதுக்குச் சொன்னான்? என்று கேள்வி பிறக்கும்; கேண்மின்; 'நான் அட்டபுயன்' என்று சொல்லிக் கொண்டால் தன்னை எம்பெருமானாகத் தானே வெளியிட்டதாக விளங்கிவிடும்; அப்படி ஸ்பஷ்டமாகச் சொல்லிக்கொள்ள எம்பெருமானுக்குத் திருவுள்ளமில்லை; வேற்றுமனிதனாகப் பொய்சொல்லிக்கொள்ளவும் விருப்பமில்லை; ஆகவே, வெகு சாதுர்யமாகச் சொல்லிக்கொள்ளுகிறான் அட்டபுயகரத்தேன் என்று. 'அஷ்ட புஜ க்ஷேத்திரத்திற்கு நான் அதிபதி' என்றதாகவுமாம், 'அஷ்டபுஜ க்ஷேத்தி ரத்திலே கிடப்பானொருவன் நான்' என்று ஸாமாந்யமாகச் சொல்லிக்கொண்ட தாகவுமாம்.

துஷ்யந்தமஹாராஜன் வேட்டையாடிக்கொண்டே சகுந்தலையின் இருப் பிடத்தை அடைந்தபோது இவனின்னானென்று தெரிந்துகொள்ள விரும்பி 'நீயார்?' என்று கேட்டார்க்கு அரசன் விடைகூறும்போது $ "ஸ்வ திய: வைாஸெவண ராஜ்ஞா யஉ-லாயிகாஸெ நியு-க்ஷ: ஸொஹம்" [புரு வம்சத்து அரசனாலே தருமகாரியங்களைச் செய்யுமாறு நியமிக்கப்பட்டவன் நான்] என்று சாதுரியமாக விடைகூறினது இங்கு நினைக்கத்தக்கது புரு வம்சத்து அரச னாகிய தன் தந்தையினால் நியமிக்கப்பட்ட அரசன் தான் என்றும், புருவம்சத்து ராஜாவுக்கு வேலைக்காரன் தான் என்றும் இருவகையாகப் பொருள்படுமாறு உரைத்தது காண்க.

"அட்டபுயவகரம்" என்பது அட்டபுயகரம் என மருவிற்றென்றலும் பொருந்தும்; அகரமாவது அக்ரஹாரம். .... .... (க)

வெந்திறல்வீரரில் வீரரொப்பார்
வேதமுரைத் திமையோர் வணங்கும் *
செந்தமிழ் பாடுவோர்தாம் வணங்கும்
தேவரிவர்கொல்? தெரிக்கமாட்டேன் *

---

$ சாகுந்தள நாடகம்—முதல் அங்கம்.

வந்து குறளுருவாய் நிமிர்ந்து
மாவலிவேள்வியில் மண்ணளந்த *
அந்தணர்போன் றிவரார்கோலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| இமையோர் | தேவர்கள் | தெரிக்க மாட்டேன் | அறிகின்றிலேன்; |
| வேதம் உரைத்து | வேதவாக்கியங்களைச் சொல்லி | மாவலி வேள்வியில் | மஹாபலியின் யாகபூமியிலே |
| வணங்கும் | வணங்கநின்ற | குறள் உரு ஆய் வந்து | வாமநவுருக்கொண்டுவந்து |
| வெம் திறல் வீரரில் வீரர் ஒப்பார் இவர் | மிக்க வலிவுகொண்ட வீரர்களிலுங் காட்டில் மஹாவீரரான இராம பிரானைப் போன்றுள்ள இப்பெரியவர் | | (மாவலி நீர் வார்த்து தத்தம் பண்ணினவாறே) |
| | | நிமிர்ந்து | திரிவிக்கிரமனாக வளர்ந்து |
| | | மண் அளந்த | பூமியை அளந்துகொண்ட |
| செம் தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர் கொல் | அழகிய தமிழ்ப் பாசுரங்களைப் பாடின முதலாழ்வார்கள் வணங்கப்பெற்ற திருவேங்கடமுடையானோ? | அந்தணர் போன்ற இவர் ஆர் கொல் என்ன | பிரமசாரியைப்போலுமிரா நின்ற இப்பெரியவர் ஆர்? என்ன, |
| | | | அட்டபுயகரத்தேன் என்றார்—. |

[வெந்திறல்வீரரில்.] இராமபிரானாகவும் திருவேங்கடமுடையானாகவும் திரிவிக்கிரமனாகவும் மாறிமாறி ஸேவைஸாதித்த படியைச் சொல்லிக்கொள்ளுகிறாள் பரகாலநாயகி. இராமபிரானுக்கு "மஹாவீரன்" என்று திருநாமப்ரஸித்தியுண்டாதலால் வெந்திறல்வீரரில்வீரரொப்பார் எனப்பட்டது. இவரைப்பார்த்தால் சக்ரவர்த்தி திருமகனாரைப் போலிருக்கிறதே! என்று சொல்லிக்கொண்டபடி. இதனால், இராமபிரானைப்போலே மிடுக்காக முன்வந்து நின்றமை தோன்றும். 1 மைவண்ணநறுங்குஞ்சிக் குழல்பின்தாழ மகரஞ்சேர் குழையிருபாடிலங்கியாட, எய்வண்ண வெஞ்சிலையே துணையாய்இங்கே இருவராவந்தார் என் முன்னே நின்றார்" என்னும்போது ஸேவைஸாதித்ததுபோலவே ஸேவைஸாதித்திருக்கவேணும்.

"வேதமுரைத்திமையோர் வணங்கும்" என்ற அடைமொழி இராமபிரானுக்கு அந்வயிக்கும்; இராவணவதம் செய்து முடிந்தபின்பு பிரமன் முதலான தேவர்கள் வந்து "பவாந் நாராயணோ தேவ:" என்று தொடங்கித் துதித்த படியைச் சொல்லிற்றாகிறது. ஆக, முதலடியால்—மேன்மையை அநுபவித்துப் பேசினாராயிற்று. இனி நீர்மையை அநுபவித்துப் பேசுகிறார் மேல். செந்தமிழ் பாடுவார்தாம் வணங்குந் தேவரிவர்கொல்?—இங்கே 'செந்தமிழ்பாடுவார்' என்றது முதலாழ்வார்களை நோக்கியாம்; அவர்கள்வணங்கும் தெய்வம் திருவேங்கடமுடையானென்பது ப்ரஸித்தம்; மூன்று திருவந்தாதிகளிலும் அடிக்கடி திருவேங்கடமுடையானுடைய ப்ரசம்ஸையே வருதலால். [தெரிக்கமாட்

1. திருநெடுந்தாண்டகம் 21.

டேன்.] இவருடைய மேன்மையைப்பார்த்தால் இராமபிரானைப் போலேயிருந்தது; தாழநின்று பரிமாறும் சீலத்தைப் பார்த்தால் திருவேங்கடமுடையானென்னலாயிருந்தது; இவரை இன்னாரென்று நிச்சயித்தறிய மாட்டுகின்றிலேன் என்கிறாள்.

நான் இப்படி சொன்னவாறே, அவர் இவ்விருவகைத் தோற்றத்தையும் மாற்றி, நீர்மையும் மேன்மையும் ஒரு ஆச்ரயத்திலேயே விளங்கும்படி வாமநத்ரிவிக்ரமவடிவாக ஸேவைஸாதிக்க, வந்து குறளுருவாய்நிமிர்ந்து மாவலிவேள்வியில் மண்ணளந்தவந்தணர்போன்றிவரார்கோல்? என்றேன்; நான்தான் அட்டபுயகரத்தேன் என்று விடைகூறினார்—என்கிறாள். இவ்விடத்தில் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகாண்மின்;—“கழஞ்சுமண் இரந்து வந்தவனல்லேன், உன்னையிரந்து வந்தவன் நானென்கிறார்: பிறர்க்காக இரந்தவனல்லேன், எனக்காக இரந்துவந்தவனென்கிறார்” என்று.

“வேதமுரைத்திமையோர் வணங்கும்” என்ற விசேஷணத்தைச் செந்தமிழ் பாடுவார்க்கு இயைக்கலாமென்பர் சிலர். ... ... (உ)

செம்பொனிலங்கு வலங்கைவாளி
திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள் *
உம்ப ரிருசுடராழியோடு
கேடகமொண்மலர் பற்றியெற்றே! *
வெம்பு சினத்தடல் வேழம்வீழ
வெண்மருப்பொன்று பறித்து * இருண்ட
வம்புதம்போன் றிவரார்கோலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (௩)

| | |
|---|---|
| வலம் கை | வலத்திருக்கையிலே |
| இலங்கு | விளங்குகின்ற |
| செம் பொன் | பசும்பொன்னாற் செய்யப்பட்ட |
| வாளி | அம்புகளையும் |
| திண் சிலை | திண்ணிதான சார்ங்க வில்லையும் |
| தண்டொடு | கௌமோதகியென்னும் கதையையும் |
| சங்கம் | ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் |
| ஒள் வாள் | அழகிய நந்தகவாளையும், |
| உம்பர் | (ஆயுதங்களெல்லா வற்றினும்) மேற்பட்டு |
| இரு சுடர் | மிக்க தேஜஸ்ஸையுடைய |
| ஆழியோடு | திருவாழியாழ்வானையும் |
| கேடகம் | கேடயத்தையும் |
| ஒண் மலர் | அழகிய புஷ்பத்தையும் |
| பற்றி | தரித்துக்கொண்டு, |
| வெம்பு சினத்து அடல் வேழம் வீழ | மிக்க கோபத்தையும் மிடுக்கையுமுடைய குவலயாபீடமென்னும் யானை முடியும்படியாக |
| வெண் மருப்பு ஒன்று | (அவ்யானையினுடைய) வெளுத்த ஒரு கொம்பை |
| பறித்து | பிடுங்கிக் கையிலே கொண்டு |
| இருண்ட அம்புதம் போன்ற இவர் ஆர் கொல் என்ன | காளமேகத்தை ஒத்திருக்கின்ற இவர் யார்? என்று நான் கேட்க |

அட்டபுயகரத்தேன் என்றார்—.
எற்றே!—இது என்ன ஆச்சரியம்!

[செம்பொனிலங்கு.] பஞ்சாயுதங்களோடுங்கூடி, கண்ணபிரானுடைய சிறுச் சேவகமும் திருமேனியழகும் தோன்றுமாறு ஸேவைஸாதித்தபடியை அநுபவித்துப்பேசுகிறாள். எதிரிகளை வெல்வதற்கும் என்னைப்போன்ற சிறுமிகளை வசப்படுத்திக்கொள்வதற்கும் உறுப்பாக திவ்யாயுதங்களை அணிந்துகொண்டு வந்தார் என்கிறாள். ஒரு ஆபரணமுமில்லாதிருந்தாலும் திவ்யஸௌந்தரமாய்த் திகழ்கின்ற திருக்கையிலே திவ்யாயுதங்களையும் ஏந்திக்கொண்டு வந்துநின்றார் என்கிறாள். அஷ்டபுஜனுகையாலே எட்டுத்திருக்கைகளிலும் எட்டு வஸ்துக்களையும் தரித்துக்கொண்டு வந்தமை சொல்லுகிறது முன்னடிகளில். 1. வாளி, 2. சிலை, 3. தண்டு, 4. சங்கம் 5. வாள், 6. ஆழி 7. கேடகம் 8. மலர்—என்பன. கேடகம் எனினும் கேடயம் எனினும் கடகம் எனினும் ஒக்கும் மலர் என்பது ஆயுதமன்றுகிலும் அழகுக்குடலாக ஏந்தினதாம். மன்மதன் மலர்களை ஆயுதமாகவுடையனுதலால் மலர்க்கு ஆயுதகோடியிலும் அந்வயமுண்டென்னலாம். எற்றே!—இஃது எத்தன்மைத்து! என வியந்துகூறுவது.

அன்று கம்ஸனுடைய அரண்மனைவாசலிற் புகும்போது தன்மேற் சீறி வந்த குவலயாபீடமென்னும் மதயானையின் கொம்பை முறித்து விலக்ஷணமான வடிவழகு தோன்ற நின்றாப்போலே வந்து நிற்கிறாரே, இவர் ஆர்கொல்? என்ன, அட்டபுயகரத்தேன் என்றார்.

இரண்டு திருக்கைகளிலும் தரித்துள்ள வஸ்துக்களையெல்லாம் சொல்லி வைத்து, முதலடியில் "வலங்கை" என்று வலத்திருக்கையைமாத்திரம் கூறியிருந்தாலும் சங்கு முதலியவற்றுக்கு இடமாக இடத்திருக்கையும் கூறிற்றாகவே கொள்க. அன்றி, வலத்திருக்கையொன்றிலேயே எல்லாவற்றையும் விலக்ஷணமாக ஏந்திக்கொண்டு ஆழ்வார்க்கு ஸேவைஸாதித்தமையைச் சொல்லிற்றாகவுங் கொள்ளிற் குறையில்லை.

அம்புதம்—வடசொல்; நீரைக்கொடுப்பது என்று மேகத்திற்குக் காரணப் பெயர். ... .... .... .... (௩)

மஞ்சுயர் மாமணிக் குன்றமேந்தி
மாமழைகாத் தொருமாயவானை
யஞ்ச * அதன் மருப்பன்றுவாங்கும்
ஆயர்கோல்? மாயமறியமாட்டேன் *
வெஞ்சுடராழியும் சங்குமேந்தி
வேதமுனோதுவர் நீதிவானத்து *
அஞ்சுடர்போன்றிவரார்கோலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (௪)

| | |
|---|---|
| மஞ்சு உயர் { மேகமண்டலம் வரையில் உயர்ந்ததும் | மா மணி குன்றம் { சிறந்த ரத்னங்களையுடையதுமான கோவர்த்தனகிரியை |

| | | | |
|---|---|---|---|
| ஏந்தி | (குடையாக) எடுத்துப் பிடித்து | வெம் சுடர் ஆழியும் | தீக்ஷ்ணமான சோதியை யுடைய சக்கரத்தையும் |
| மா மழை காத்து | பெருமழையைத் தடுத்தவராயும், | சங்கும் | சங்கையும் |
| அன்று | கம்ஸனரண்மனையி னுட்புகும்போது | ஏந்தி | தரித்துக்கொண்டு |
| ஒரு மாயம் ஆனை அஞ்ச | ஒப்பற்றதும் மாயச்செயல் களையுடையதுமான (கம்ஸனுடைய) யானை யானது நடுங்கும்படியாக | முன் | கண்ணெதிரே |
| | | வேதம் ஓதுவர் | வேதங்களை ஓதிக்கொண் டிருப்பவராய் |
| அதன் மருப்பு | அவ்யானையின்கொம்பை | நீதி வானத்து அம் சுடர் போன்ற இவர் | முறைதவறாத பரமபதத்தி லேயுள்ள பரஞ்சோதி போன்றவரான இவர் |
| வாங்கும் | பறித்தெறிந்தவராயுமுள்ள | | |
| ஆயர் கொல் | கோபால கிருஷ்ணரோ இவர்? | | |
| மாயம் அறிய மாட்டேன் | (இன்னாரென்று நிச்சயிக்க முடியாத இந்த) ஆச்சரியத்தை அறிகிறே னில்லை; | ஆர் கொல் என்ன—; அட்டபுயகரத்தேன் என்றார்—. | |

[மஞ்சுயர்மாமணி.] திருவாய்ப்பாடியில் இடையர்கள் வழக்கப்படி இந்திரனுக்குச் செய்துவந்த ஆராதனையை விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடுவித்த போது இந்திரன் பசிக்கோபத்தாலே ஏழுநாள் விடாமழை பெய்விக்க, ஒருவர்க்கும் ஒரு தீங்கு நேரிடாதபடி அம்மலையையே குடையாகவெடுத்துக் காத்தருளினவனும், குவலயாபீட யானையின் கொம்பைக் குப்பைக்கீரைபிடுங்குமாபோலே பிடுங்கி அதனைக் கொன்றொழித்தவனுமான கண்ணபிரானோ இவர்! என்று நான் சங்கித்திருக்கும்போது, திருவாழியும் திருச்சங்கும் பளபளவென்று தோன்றவும் வாயில் வேதவொலிகள் வெளிப்படவும் நின்று 'ஸாக்ஷாத் பரமபத நாதரோ இவர்!' என்னும்படியாயிருந்தார்; அவர் இங்கே வருவதற்கு ப்ரஸக்தியில்லாமையாலே, 'அவரைப்போலேயிருக்கிற இவர் ஆர்?' என்றேன்; நான்தான் அட்டபுயகரத்தேன் என்றார்—என்கிறாள். .... (௪)

கலைகளும் வேதமும் நீதிநூலும்
கற்பமும் சொற்பொருள்தானும் * மற்றை
நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும்
நீர்மையினா லருள்செய்து * நீண்ட
மலைகளும் மாமணியும் மலர்மேல்
மங்கையும் சங்கமும் தங்குகின்ற *
அலைகடல்போன் றிவரார்கொலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (௫)

| | | | |
|---|---|---|---|
| கலைகளும் | (வேதத்தின் உபநிஷத் பாகமான) வேதாந்தங் களையும் | வேதமும் | (கர்மகாண்டமான) வேதங் களையும் |
| | | நீதி நூலும் | இதிஹாஸங்களையும் |

| | |
|---|---|
| கற்பமும் | கல்பஸூத்ரங்களையும் |
| சொல் | வியாகரண சாஸ்த்ரத்தையும் |
| பொருள்தானும் | மீமாம்ஸா சாஸ்த்ரத்தையும் |
| நிலைகளும் | அவரவர்க்கு உரிய ஸ்தானங்களையும் |
| வானவர்க்கும் | தேவர்களுக்கும் |
| பிறர்க்கும் | மற்றுமுள்ள மனிசர்க்கும் |
| நீர்மையினால் | கிருபையினால் |
| அருள் செய்து | அளித்தவரும் |

| | |
|---|---|
| நீண்ட மலைகளும் மா மணியும் மலர்மேல் மங்கையும் சங்கமும் தங்குகின்ற அலைகடல் போன்ற | பெரியமலைகளும் சிறந்த கௌஸ்துபமணியும் பிராட்டியும் சங்கும் எப்போதும் நிலைத்திருக்கப்பெற்ற அலையெறிகின்ற கடல் போன்ற வருமான |

இவர் ஆர்கொல் என்ன—;

அட்டபுயகரத்தேன் என்றார்—.

[கலைகளும்வேதமும்.] சாஸ்திரங்களாகிய கடல்களைத் தந்தருளின கருங்கடலோ இவர்! என்றேன் நான்; அட்டபுயகரத்தேன் என்றார் அவர்—என்கிறாள். "கலைகள்" என்கிற சொல் பொதுவாக சாஸ்திரங்களையெல்லாம் சொல்லுமாயினும், இவ்விடத்தில் பிரகரணபலத்தால் வேதாந்தபாகத்தைச் சொல்லுகிறது. வேதம் என்ற சொல்—கர்மகாண்டமும் ப்ரஹ்மகாண்டமுமாகிய உபயபாகத்திற்கும் பொதுவான சொல்லாயினும் இங்கே கர்மகாண்டத்தளவிலே நிற்கிறது, கலைகள் என்பதற்கு ப்ரஹ்மகாண்டத்தைப் பொருளாகக் கொண்டதனால்.

நீதிநூல்—இதிஹாஸங்களெல்லாம் நீதியையுணர்த்தும் நூல்களாம். கற்பம்—வேதங்களில் விதிக்கப்பட்ட கருமங்களை அநுஷ்டிக்கவேண்டிய முறைமைகளையுணர்த்தும் நூல் கல்பஸூத்ரமெனப்படும். சொல்—'இது சுத்தமான சொல், இது அசுத்தமான சொல்' என்று அறிவதற்கு உறுப்பான வியாகரண சாஸ்த்ரம். பொருள்—வேதங்களின் உண்மைப்பொருளை நன்கு விசாரித்து உணர்த்தும் நூலாகிய மீமாம்ஸை. ஆகிய இப்படிப்பட்ட சாஸ்த்ரங்களையெல்லாம் தானான தன்மையினாலும் முனிவர்களை அநுப்ரவேசித்த தன்மையினாலும் வெளியிட்டவன் எம்பெருமானேயாவன்.

மற்றைநிலைகளும்=மேற்சொன்ன சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கருமங்களை முறைதவறாது அநுஷ்டிப்பவர்களுக்கு (அவரவர்களுடைய விருப்பத்திற்குத்தக்கபடி) ஓவ்வொரு ஸ்தானம் வருவதாகச் சொல்லப்பட்டுள்ளவற்றையும் எம்பெருமானே ஏற்படுத்தி வைத்தானென்கிறது.

[நீண்டமலைகளும் இத்யாதி.] எம்பெருமான் கடல்போன்றிருப்பவனென்று பலரும் சொல்லுவதுண்டு; ஆனால் நிறம் ஒத்திருப்பதைப்பற்றி அப்படி சொல்லுவர்கள்; இங்குச்சொல்லுவதாவது—கடலிலுள்ள வஸ்துக்களெல்லாம் எம்பெருமானிடத்திலும் உள்ளமையால் கடலோடு உவமை சொல்லப்படுகிறது. முன்னொருகாலத்தில் மலைகளெல்லாம் சிறகுடனே பறந்து நாடுநகரங்கட்குத் துன்பம் விளைத்துக்கொண்டிருக்கையில் இந்திரன் தனது

வஜ்ராயுதத்தினால் அவற்றின் சிறகுகளைத் துணித்துக்கொண்டுவர, அப்போது மைநாகம் முதலிய பல மலைகள் கடலினுட்சென்று ஒளிந்துகொண்டு இன்றைக்கும் அவ்விடத்திலேயே தங்கிக்கிடக்கின்றன வென்று நூல்கள் கூறும். எம்பெருமானுடைய திருத்தோள்கள் மலைபோன்றிருத்தலால் கடலும் மலைகளையுடையது, எம்பெருமானும் மலைகளையுடையன்; கடல் ரத்நாகரமாகையாலே மாமணிகளையுடையது; எம்பெருமானும் 1. "குருமாமணிப்பூண்" எனப்பட்ட ஸ்ரீகௌஸ்துபத்தையுடையவன்; கடலைக்கடைந்தபோது அதில் நின்றும் பிராட்டி அவதரித்தனளென்று புராணவரலாறு உள்ளதனால், மலர்மங்கை தங்கப்பெற்றது கடல்; எம்பெருமானும் * அகலகில்லேனிறையு மென்றலர்மேல் மங்கையுறைமார்பன். சங்குக்கு உறைவிடம் கடல்; எம்பெருமானும் இடங்கைச் சங்கமுடையான்; ஆக இப்படிகளாலே கடலைப்போன்றுள்ளவன் எம்பெருமான் என்றதாயிற்று. ... ... ... (௫)

எங்ஙனும் நாமிவர்வண்ணமெண்ணில்
ஏதுமறிகில மேந்திழையார் *
சங்கும் மனமும்நிறைவுமெல்லாம்
தம்மனவாகப் புகுந்து * தாமும்
பொங்குகருங்கடல் பூவைகாயா
போதவிழ்நீலம் புனைந்தமேகம் *
அங்ஙனம்போன் றிவரார்கொலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (௬)

| | |
|---|---|
| நாம் | நாம் |
| இவர் வண்ணம் | இவருடைய படிகளை |
| எங்ஙன் எண்ணிலும் | எவ்விதமாக அறியப் பார்த்தாலும் |
| ஏதும் அறிகிலம் | ஒன்றும் அறிய மாட்டுகின்றிலோம்; |
| ஏந்து இழையார் | ஆபரணம் பூண்டிருப்பவர்களான மாதர்களுடைய |
| சங்கும் | வளைகளும் |
| மனமும் | நெஞ்சும் |
| நிறைவும் எல்லாம் | அடக்கமுமாகிய எல்லாமும் |
| தம்மன ஆக | தம்முடையதாம்படி |
| புகுந்து | இவ்விடம் வந்து சேர்ந்து, |
| பொங்கு கரு கடல் | அலையெறிகின்ற கரிய ஸமுத்ரமென்ன |
| பூவை | பூவைப்பூவென்ன |
| காயா | காயாம்பூவென்ன |
| போது அவிழ் நீலம் | காலத்திலே அலர்ந்த கருநெய்தற்பூவென்ன |
| புனைந்த மேகம் | அழகிய மேகமென்ன |
| அங்ஙனம் போன்ற இவர் தாம் | இவற்றைப் போலேயிருக்கிற இவர் |

ஆர்கொல் என்ன—;
அட்டபுயகரத்தேன் என்றார்—.

[எங்ஙனும்நாமிவர்.] மேலெழுந்தவாரியாகப் பார்த்துவிடாதே உள்ளிழிந்து எவ்வளவுதூரம் ஆராய்ந்துபார்த்தாலும் இப்பெரியவருடைய படிகளொன்றும் தெரிகின்றதில்லை; இவர் இங்குவந்தது ஸ்த்ரீகளுடைய ஸர்வஸ்

வத்தையும் கொள்ளை கொள்ளுதற்காகவேயாம்; இவருடைய வடிவோ பூவையும் காயாவும் நீலமும் மேகமும் போன்றுள்ளது; இப்படிப்பட்ட இவர் ஆர்? என்றேன்; நான்தான் அட்டபுயகரத்தேன் என்றார்—என்கிறாள்.

எங்ஙனும் என்ற விடத்துள்ள உம்மையைப்பிரித்து எண்ணில் என்பதோடு கூட்டியுரைக்கப்பட்டது. அறிகிலம்=அறியகில்லோம் என்றவாறு. ஏந்திழையார்சங்கும் மனமும்நிறைவுமெல்லாம் தம்மனவாகப் புகுந்து—'ஏந்திழையார்' என்று பொதுவாக மாதர்களைச் சொல்லுகிறது; அவர்களுடைய சங்கும் மனமும் நிறைவும் தம்மனவாகப் புகுகையாவது—இவரைக்கண்டவுடனே விரும்பினபடி கலவிசெய்யப் பெறுமையாலே உடல் இளைத்துக் கைவளைகள் கழன்றொழியும்படியும், நெஞ்சு இவரிடத்திலேயே பதிந்திருக்கும்படியும் அடக்கத்தை விட்டுப் பதறி மேல்விழும்படியும் செய்து கொள்ளுகை. தம்மன—தம்முடையவை.

“புனைந்தமேகம்” என்றவிடத்து, புனைந்த என்பதற்கு—கீழ்ச்சொன்ன கடல் முதலியவற்றோடு ஒருகோர்வையாகச் சேர்க்கப்பட்ட என்றும் பொருள் கொள்ளலாம். ... ... ... .... (௬)

முழுசிவண்டாடிய தண்டுழாயின்
மொய்ம்மலர்க் கண்ணியும் * மேனியஞ்சாந்
திழுசியகோலமிருந்தவாறும்
எங்ஙனஞ்சொல்லுகேன் ஓவிநல்லார் *
எழுதிய தாமரையன்ன கண்ணும்
ஏந்தெழிலாகமும் தோளும்வாயும் *
அழகியதாமிவ ரார்கொலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (எ)

| | |
|---|---|
| வண்டு | வண்டுகள் |
| முழுசி | (தேனிலே) முழுகி |
| ஆடிய | கூத்தாடா நிற்கப்பெற்ற |
| தண் துழாயின் | குளிர்ந்த திருத்துழாயினால் |
| மொய் | செறியத் தொடுக்கப்பட்ட |
| மலர் கண்ணி இருந்த ஆறும் | பூமாலை சாத்தியிருக்கும் படியையும் |
| மேனி | திருமேனியிலே |
| அம் சாந்து இழுசிய கோலம் இருந்த ஆறும் | அழகிய சந்தனம் பூசப்பெற்ற அலங்காரமிருக்கும்படியையும் |
| எங்ஙனம் சொல்லுகேன் | என்னவென்று சொல்லுவேன்; |
| ஓவி நல்லார் | சித்ரமெழுதுவதில் வல்லவர்கள் |
| எழுதிய | எழுதினவை யென்னலாம் படியுள்ள |
| தாமரை அன்ன கண்ணும் | தாமரை யிதழ்போன்ற திருக்கண்களும் |
| ஏந்து எழில் ஆகமும் | மிக்க அழகையுடைய திருமார்வும் |
| தோளும் | திருத்தோள்களும் |
| வாயும் | திருப்பவளமும் |

| | | |
|---|---|---|
| அழகியது ஆம் இவர் | அழகியவாக அமையப் பெற்ற இவர் | ஆர்கொல் என்ன—; அட்டபுயகரத்தேன் என்றார்—. |

[முழுசிவண்டாடிய.] திருமேனியின் இயற்கையழகிலும் செயற்கை யழகிலும் ஈடுபட்டுப் பேசும் பாசுரமிது. தேனொழுகுகின்ற திருத்துழாய்மாலையைச் சாத்திக்கொண்டிருந்த அழகும் சந்தனக்காப்பு சாத்திக்கொண்டிருந்த அழகும் என்னசொல்லுவேன்!; அன்றியும், திருக்கண்களும் திருமார்பும் திருத்தோள்களும் திருப்பவளமும் சித்திரமெழுதவல்லவர்களால் எழுதப்பட்டவைபோன்று எவ்வகைக்குறையும் கூறவொண்ணாதபடி அழகு விஞ்சியிருந்தன; இப்படிப்பட்ட மஹாநுபாவர் யார்? என்றேன்; நான்தான் அட்டபுயகரத்தேன் என்றார்—என்கிறாள்.

"வண்டு முழுசி ஆடிய" என்றதனால் திருத்துழாய் மாலையில் மதுவெள்ளத்தின் பெருமை சொல்லிற்றும். [மேனி அஞ்சாந்துஇழுசிய கோலம்.] முன்பு க்ருஷ்ணாவதாரத்தில் கம்ஸனால் வில்விழவுக்கு அழைக்கப்பட்டு மதுரைக்கு எழுந்தருளும்போது, 1. "நாறியசாந்தம் நமக்கிறை நல்கென்னத், தேறியவளும் திருவுடம்பில்பூச" என்கிறபடியே கூனியிடம் இரந்துபெற்ற அழகிய சந்தனத்தைப் பூசிக்கொண்டு பொலிந்த அழகை ஏட்டிலே கேட்டிருந்தோம்; இன்று நேரே காணப்பெற்றோம் என்கிறாள் போலும்.

ஓவிநல்லார்=சித்திரமெழுதுபவர்கட்கு 'ஓவியர்' என்று பெயர்; நல் ஓவியர் என்க. "ஓவினல்லார்" எனப்பாடங்கொண்டு, 'ஓவில் நல்லார்' என்று பிரித்து, ஓவில்—சித்திரமெழுதுவதில், நல்லார்—சிறந்தவர்கள் என்றுபொருள் கொள்வாருமுளர். "ஓவிநல்லாரெழுதிய" என்ற அடைமொழியைத் தாமரையிலே அந்வயித்து, சித்திரக்காரரால் எழுதப்பட்ட தாமரை யாதொன்றுண்டு, அதுபோன்ற திருக்கண்கள் என்றுரைப்பாருமுண்டு ... ... (எ)

மேவியெப்பாலும் விண்ணோர் வணங்க
வேதமுரைப்பர் முந்நீர்மடந்தை
தேவி * அப்பாலதிர்சங்கமிப்பால்
சக்கரம் மற்றிவர் வண்ணமெண்ணில் *
காவியொப்பார் கடலேயுமொப்பார்
கண்ணும் வடிவும் நெடியராய் * என்
ஆவியொப்பா ரிவரார்கொலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (அ)

| | | |
|---|---|---|
| விண்ணோர் | நித்யஸூரிகள் | |
| எப்பாலும் மேவி | சுற்றிலும் சூழ்ந்துகொண்டு | |
| வணங்க | வணங்கப்பெற்று | |
| வேதம் உரைப்பர் | (இப்பெரியவர்) வேதங்களை உருச்சொல்லுகின்றார்; | |
| முந்நீர் மடந்தை | கடலிற்பிறந்த கமலையானவள் | |

1. பெரியாழ்வார் திருமொழி 1—8—4.

| | | | |
|---|---|---|---|
| தேவி | பட்டமஹிஷியாயிரா நின்றாள்; | காவி ஒப்பார் | கருநெய்தல் பூவின் நிறத்தை ஒத்திருக்கின்றார்; |
| அதிர் சங்கம் | முழங்குகின்ற சங்கானது | கடலும் ஒப்பார் | ஸமுத்ரத்தையும் ஒத்திருக்கின்றார்; |
| அப்பால் | இடத்திருக்கையிலுள்ளது; | கண்ணும் வடிவும் நெடியர் ஆய் | திருக்கண்களிலும் வடிவழகிலும் அளவிறந்தவராய் |
| சக்கரம் | திருவாழியானது | என் ஆவி ஒப்பார் இவர் | என் உயிரை ஒத்திருக்கின்ற இவர் |
| இப்பால் | வலத்திருக்கையிலுள்ளது; | | ஆர்கொல் என்ன—; |
| மற்று | இதற்குமேல் | | அட்டபுயகரத்தேன் என்றார்—. |
| இவர் வண்ணம் எண்ணில் | இவருடைய நிறத்தை ஆராய்ந்து சொல்லப் புகுந்தால் | | |

[மேவியெப்பாலும்.] என்முன்னே வந்து தோற்றின பெரியவர் தனியராய் வந்திலர்; நித்யஸூரிகள் சுற்றிலும் சூழ்ந்து வணங்காநிற்க வந்தார்; வாயில் நல்வேதமோதும் வேதியரென்று விளங்கும்படி வேதங்களை ஓதிக்கொண்டு வந்தார்; அருகில் திருமகள் தேவியாகத் திகழ்ந்தனள்; இருபுறத்திலும் திருவாழி திருச்சங்குகள் பொலிந்தன; கருநெய்தற்பூவோ! கடல்தானோ! என்னும் படியான வடிவுதோன்றிற்று; அவ்வடிவழகுக்கும் கண்ணழகுக்கும் எல்லை காணமுடியவேயில்லை: "஬ஹிஃ ப்ராண இவாபர:—பஹி: ப்ராண இவா பர:" என்னுமாபோலே நம்முடைய பிராணன்தான் இங்ஙனே உருவெடுத்து வெளித்தோன்றுகின்றதோ என்று நினைக்கலாம்படி பரமப்ரீதிக்கு இலக்காயிருந்தார். இப்படி நித்யஸூரிகளும் பிராட்டிமாரும் திவ்யாயுதங்களும் திவ்ய மங்கள விக்ரஹமும் ஸ்பஷ்டமாக விளங்கச்செய்தேயும் இவரை இன்னாரென்றறுதியிடமாட்டாத நான் இவரார்கொல்? என்றேன்; 'நான்தான் அட்டபுயகரத்தேன்' என்றார்— என்கிறாள்.

"மேவியெப்பாலும் விண்ணோர் வணங்க வேதமுரைப்பர்" என்னுமளவும் ஒரு வாக்கியமாகக்கருதி 'நித்யஸூரிகள் வேதங்களைச்சொல்லித் துதிப்பர்கள்' என்று சிலர் பொருளுரைப்பர்; அங்ஙனே ப்ரமிக்கவேண்டா; விண்ணோர்களாலே வணங்கப்பட்டும், தம் வாயாலே வேதங்களை யோதிக்கொண்டும் வந்து தோன்றினார் என்று தெளிபொருள் கொள்க.

முந்நீர்மடந்தை = கடலிற்பிறந்த பெண்மகள்—ஸ்ரீமஹாலக்ஷ்மி. முந்நீரென்று கடலுக்குப்பெயர்; ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூன்றுவகை நீரையுடையது எனப் பண்புத்தொகையன்மொழியாகிய காரணப் பெயரென்பது பழையகொள்கை. இதனை மறுத்துக்கூறுகின்றார் அடியார்க்கு நல்லார்: ஆற்றுநீரென்பது மழைநீரேயாகையாலும், இவ்விரண்டுமில்லாதபோது ஊற்றுநீருமில்லையாகையாலும் இவற்றை முந்நீரென்பது பொருந்தாது என்று சொல்லி வேறு பொருள்கூறுகின்றார்; அதாவது—முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பதாம். முச்செய்கையாவது-மண்ணைப் படைத்தலும் மண்ணையழித்தலும் மண்ணைக்காத்தலுமாம். நீரினின்று நிலம்

பிறந்ததென்று வேதமோதுதலால் படைத்தலும், நீரின்றி உலகம் பிழையாதாதலால் காத்தலும், இறுதியில் நீரினால் மூடப்பட்டு உலகம் அழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்களும் கடலுக்கு உரியனவாம். நச்சினார்க்கினியர் கருத்தும் இதுவே. நம் பூருவாசாரியர்கள் மூன்றுவகை நீரையுடையதென்னும் பொருளையே ஆதரிப்பர். முன்னீர் என றன்னகரமாகப்பாடமோதி, பழையநீர் என்றுரைப்பாருமுண்டு; ஆதியிற் கடவுள் நீரையே படைத்தாரென்று புராணங்கூறும்.

மடந்தை—பத்தொன்பது வயதுள்ள பெண்: பொதுவாகப் பெண்பாலுக்கும் பெயராக வழங்கும். தேவீ—வடசொல். ... ... (அ)

தஞ்சமிவர்க்கென் வளையுநில்லா
நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு *
வஞ்சிமருங்குல் நெருங்கநோக்கி
வாய்திறந்தொன்று பணித்ததுண்டு *
நஞ்சமுடைத்திவர் நோக்கும்நோக்கம்
நானிவர்தம்மை யறியமாட்டேன் *
அஞ்சுவன் மற்றிவராரர்கொலென்ன
அட்டபுயகரத்தே னென்றாரே. (கூ)

தஞ்சம் — நிச்சயமாக
என் வளையும் — எனது கைவளைகளும்
இவர்க்கு நில்லா — இவரைநோக்கி (என் கையில்) நிற்கின்றன வில்லை;
சிந்தித்தேற்கு — நான் ஆராயுமளவில்
நெஞ்சமும் — எனது மனமும்
தம்மதே — இவருடையதேயாம்;
வஞ்சி மருங்குல் — வஞ்சிக்கொடிபோன்ற (எனது) இடையானது
நெருங்க — அவளும்படியாக
நோக்கி — கடாக்ஷித்து
வாய் திறந்து — தனது திருப்பவளத்தைத் திறந்து
ஒன்று பணித்தது உண்டு — ஒருவார்த்தை சொன்னதுமுண்டு;
இவர் நோக்கும் நோக்கம் — இவர் பார்க்கிற பார்வையானது
நஞ்சம் உடைத்து — விஷங்கலந்ததுபோலே கொடிதாயிருக்கின்றது;
நான் இவர் தம்மை அறிய மாட்டேன் — நான் இவருடைய படியை அறிகின்றிலேன்;
இவர் ஆர் கொல் என்ன — இவரார் என்று கேட்கவும்
அஞ்சுவன் — பயப்படுகின்றேன்;
(ஆயினும் தாமே) அட்டபுயகரத்தேன் என்றார்—.

[தஞ்சமிவர்க்கு.] என்னுடைய கை வளைகளும் என்னுடைய நெஞ்சமும் என் பக்கலில் சிறிதும் தங்குகின்றன வில்லை; அவரிடத்திலேயே சென்று சேர்ந்துவிட்டன; (அதாவது—உடம்பு மெலிந்து மூர்ச்சையுமடைந்தேன் என்றவாறு.) இப்படி என்னிடத்திலுள்ளவற்றை யெல்லாம் கொள்ளைகொண்ட பின்பும் ‘இவளிடத்தில் இன்னமும் ஏதாவது தங்கியிருப்பதுண்டாகில் அதை

யும் கொள்வோம்' என்றெண்ணி என் இடையை உற்றுநோக்கி ஏதோவொரு வார்த்தையும் வாய்விட்டுச்சொன்னார்; அவர் பார்க்கிற பார்வையோ கண்ணாலே கொளுத்துவாரைப்போலே கொடிதாகப்பார்க்கின்றார்; இவர் நம்மை ரக்ஷிக்கவந்தவரா? அல்லது பக்ஷிக்கவந்தவரா என்று எனக்கு விளங்கவில்லை; இவரார்கொல்? என்று கேட்கவும் எனக்கு அச்சமுண்டாகிவிட்டது; என்னுடைய அச்சத்தைத்தெரிந்துகொண்டு அவர் தாமே 'என்னை வேற்றுருவாக நினைத்து அஞ்சவேண்டா; நீ அஞ்சவேண்டாதபடி அட்டபுயகரத்திலே எளியனாய் வந்து நிற்கிறவனன்றோ நான்' என்றார்—என்கிறாள்.

"என்வளையும் இவர்க்கு நில்லா" என்றது-இவர்க்காகி, என்னிடத்தில் நில்லா என்றபடி. "இங்கே குடியிருப்பாய் அவர்க்காக வர்த்திக்கிறனவா யிருந்தன" என்பது வியாக்கியான வருளிச்செயல். தத்யம் [தத்யம்] என்ற வடசொல் தஞ்சமெனத்திரிந்தது; உண்மையாக என்கை. .... .... (கூ)

மன்னவன் தொண்டையர்கோன்வணங்கும்
　　நீண்முடிமாலை வயிரமேகன் *
தன்வலி தன்புகழ்சூழ்ந்த கச்சி
　　அட்டபுயகரத்தாதிதன்னை *
கன்னிநன் மாமதிள் மங்கைவேந்தன்
　　காமருசீர்க் கலிகன்றி * குன்றா
வின்னிசையால்சொன்ன செஞ்சொல்மாலை
　　ஏத்தவல்லார்க் கிடம் வைகுந்தமே. (ய)

| | |
|---|---|
| தொண்டையர் கோன் | தொண்டைமண்டலத்திலுள்ளவர்கட்குத் தலைவனான |
| மன்னவன் | அரசனாலே |
| வணங்கும் | வணங்கப்பட்ட |
| நீள் முடி மாலை | நீண்ட திருவபிஷேகத்தையுடைய ஸர்வேச்வரனையும், |
| வயிரமேகன் தன் வலி புகழ் சூழ்ந்த கச்சி | வயிரமேகனென்னும் பிரபுவின் பராக்கிரமமும் கீர்த்தியும் மலிந்த காஞ்சீபுரியிலே |
| அட்ட புயகரத்து | திருவட்டபுயகரத்திருப்பதியிலே எழுந்தருளியிருப்பவனையுமுள்ள |
| ஆதி தன்னை | முதல்வனை எம்பெருமானைக்குறித்து |

| | |
|---|---|
| கன்னி நல் மா மதிள் மங்கை வேந்தன் | அழிவற்ற நல்ல பெரிய மதில்களையுடைய திருமங்கைக்குத் தலைவரும் |
| காமரு சீர் | விரும்பத்தக்க குணங்களையுடையவருமான |
| கலிகன்றி | கலியன் |
| குன்றா இன் இசையால் சொன்ன | குறைவில்லாத இனிய இசையுடனே அருளிச்செய்த |
| செம் சொல் மாலை | அழகிய இச்சொல் மாலையைக்கொண்டு |
| ஏத்த வல்லார்க்கு | (எம்பெருமானைத்) துதிக்க வல்லவர்களுக்கு |
| இடம் வைகுந்தம் | இருப்பிடம் வைகுண்டமாகும். |

[மன்னவன்.] திருவட்டபுயகரத்தெம்பெருமான் விஷயமாகத் திருமங்கை மன்னனருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கள் வைகுந்தம் சென்று சேர்ந்து நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள்; (அல்லது) இத்திருமொழியை ஓதுமவர்கள் எவ்விடத்தில் வஸிக்கிறார்களோ அவ்விடமே பரமபதம்—என்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. முற்காலத்தில் பலபல அரசர்கள் பல திவ்யதேசங்களை அபிமானித்து ஸந்நிதி ஜீர்ணோத்தாரணம் முதலிய சிறப்புகளைச் செய்துவந்தார்கள்; இத்திருவட்டபுயகரத்தை வயிரமேக னென்னும் ஒரு தொண்டைநாட்டரசன் அபிமாநித்திருந்தமையால் அதனை யருளிச்செய்கிறார் முன்னடிகளில்.

தொண்டையர்கோன் என்பது பொதுப்பெயர்; வயிரமேகன் என்பது சிறப்புப்பெயர். தொண்டையர்கோனாகிய வயிரமேகன் என்றும் அந்வயித்து உரைப்பர். ... ... ... ... (ய)

அடிவரவு:—திரி வெந்திறல் செம்பொன் மஞ்சு கலை எங்ஙனும் முழுசி மேவி தஞ்சம் மன்னவன் சொல்லு.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—ஒன்பதாந்திருமொழி,

# சொல்லுவன் சொற்பொருள்.

அவதாரிகை :—கீழ்த்திருமொழியில் திருவட்டபுயகரத்து நாயனாரை மங்களாசாஸநம் செய்து, இத்திருமொழியில் பரமேச்சுரவிண்ணகரத்தெம்பெருமானை மங்களாசாஸநம் செய்கிறார். திருக்கச்சிமாநகரில் ஸ்ரீவைகுண்டபெருமாள் ஸந்நிதியென்று ப்ரஸித்தமாகவுள்ள திவ்யதேசமே இத்திருநாமம் பூண்டது. பரமேச்சுரன் [பரமபதநாதன்] எழுந்தருளியிருக்கிற திவ்யநகரமாதல்பற்றிப் பரமேச்சுரவிண்ணகரமெனப்பட்டது. தொண்டைமான் சக்ரவர்த்தி திருவட்டபுயகரத்தில் சிறப்புகள் செய்ததுபோல் பல்லவராஜன் இப்பரமேச்சுர விண்ணகரத்தில் பல திருப்பணிகள் செய்ததாக ப்ரஸித்தியுண்டாகையால் பாசுரந்தோறும் அப்பல்லவராஜனுடைய பெயரையும் புணர்ந்து பேசுகிறார். இத்திருமொழியில் ஒவ்வொரு பாட்டிலும் முன்னடிகளெல்லாம் பகவத்குணகீர்த்தனமாகவும் பின்னடிகள் பல்லவராஜனுடைய புகழ்ச்சியைப் பேசுவனவாகவும் உள்ளன. 1. “என்னாவிலின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்” என்றும் 2. “இழியக்கருதி ஓர் மானிடம் பாடலென்னாவதே” என்றும் நரஸ்துதியை இகழ்ந்து வெறுக்குமாழ்வார்கள் மனிசரில் ஒருவரான அரசர்களை இப்படி புகழ்ந்து பேசுதல் தகுதியோவென்று சிலர் சங்கிப்பர் ; உலகிலுள்ள க்ஷுத்ரகவிகளைப்போலே தங்கள் வயிறு வளர்க்கவேண்டி ஸ்துதிசெய்கிறார்களல்லர் ஆழ்வார்கள் ; இவ்வுலகில் எத்தனையோ அரசர்கள்தோன்றி பகவத்விமுகராயும் ஸ்வப்ரயோஜநபரராயும் காலங்கழியாநிற்க, இங்ஙனே சில அரசர்கள் பகவத்விஷயத்திலே அபிமாநம்பூண்டு கிஞ்சித்கரிக்கப்பெற்றார்களே! என்னும் உவப்பினால் அவர்களைப் புகழ்ந்து பேசுகிறவிது எம்பெருமானுடைய ஸ்தோத்ரத்திலே அந்தர்ப்பவிக்குமேயன்றி, கேவலம் நரஸ்துதியாகி அவத்யமாகமாட்டாது.

மேல் ஆறும்பத்திலும் திருநறையூர்ப்பதிகங்களுள் ஒன்றான அம்பரமும் பெருநிலனும் என்ற திருமொழியில் செங்கணான்கோச் சோழனைப் புகழ்ந்து பேசுவர். எம்பெருமானோடு, எம்பெருமானுகந்தருளின நிலங்களோடு, அந்நிலங்களை அபிமானித்திருக்கும் மனிசரோடு வாசியற எல்லாம் ஆழ்வார்க்கு உத்தேச்யமாயிருக்குமென்க. ... ... ... *

---

1. திருவாய்மொழி 3-9-1.    2. திருவாய்மொழி 3-9-3.

சொல்லுவன் சொற்பொருள் தானவையாய்ச்
சுவையூறொலி நாற்றமும் தோற்றமுமாய் *
நல்லரன் நாரணன் நான்முகனுக்கிடந்தான்
தடஞ்சூழ்ந் தழகாயகச்சி *
பல்லவன் வில்லவனென்றுலகில்
பலராய்ப் பலவேந்தர் வணங்குகழற்
பல்லவன் * மல்லையர்கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (க)

| பதம் | பொருள் |
|---|---|
| சொல்லு வன்சொல் பொருள் அவை தான் ஆய் | ஸாமாந்யசப்தங்களும் நித்யசப்தமான வேதமும் இவற்றின் பொருளுமாகிய இவை, தானேயாய் |
| சுவை ஊறு ஒலி நாற்றமும் தோற்றமும் ஆய் | ரசம் ஸ்பர்சம் சப்தம் கந்தம் ரூபம் ஆகிய பஞ்ச விஷயங்களும் தானேயாய் |
| நல்அரன் நாரணன் நான்முகனுக்கு | சிவனுக்கு அந்தர்யாமியாயிருந்துகொண்டும் தானான தன்மையாலும் பிரமனுக்கு அந்தர்யாமியாயிருந்துகொண்டும் லோககாரியங்களை நடத்துமவனான எம்பெருமானுக்கு |
| இடம் | இருப்பிடம் (எதுவென்றால்) ; |
| தடம் சூழ்ந்து அழகாய கச்சி | தடாகங்கள் சூழப்பெற்று அழகு பொலிந்த காஞ்சீபுரியிலே,— |
| உலகில் | இவ்வுலகத்திலே |
| பல்லவன் வில்லவன் என்று பலர் ஆய் பல வேந்தர் | பல்லவனென்றும் வில்லவனென்றும் பல பெயர்களாலே சொல்லக்கூடிய பல அரசர்களாலே |
| வணங்கு கழல் | வணங்கப்பட்ட பாதத்தையுடையவனும் |
| மல்லையர் கோன் | மல்லாபுரியென்கிற திருக்கடல் மல்லையிலுள்ளார்க்குத்தலைவனுமான |
| பல்லவன் | பல்லவராஜன் |
| பணிந்த | கைங்கரியங்கள் செய்யப்பெற்ற |
| பரமேச்சுர விண்ணகரம் அது | பரமேச்வர விண்ணகரமென்கிற திவ்ய தேசமாம். |

[சொல்லுவன்சொற்பொருள்.] எம்பெருமானுறையுமிடம்—கச்சியிலே பரமேச்சுர விண்ணகரம்; அப்பெருமான் எப்படிப்பட்டவன்?;—உலகத்திலுள்ள ஸகல ஸாமாந்ய சப்தங்களாலும் விசேஷசப்தமாகிய வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுபவன்; ஞானேந்திரியங்கள் ஐந்தினாலும் அநுபவிக்கக் கூடியவன்; படைத்தல் காத்தல் அழித்தலென்னும் முத்தொழில்களையும் மூன்றுருக்கொண்டு நிர்வஹிக்குமவன். இப்படிப்பட்ட எம்பெருமான் நீர்வளம் நிறைந்த கச்சித்திருப்பதியிலே பல்லவராஜனுடைய கைங்கரியங்களுக்குக் கொள்கலமான பரமேச்சுர விண்ணகரத்திலே எழுந்தருளியுள்ளான்—என்றாயிற்று.

சொல்லு என்றவிடத்து, உகரம்—சாரியை; சொல் என்றபடி: சொல்லாவது உலகத்தில் வழங்கப்படும் சப்தராசிகள். கல் மண் முதலிய சொற்களெல்

லாம் அவ்வப்பொருள்களுள் அந்தராத்மாவாய் உறைபவனான எம்பெருமா னளவும் சொல்லிநிற்குமென்பது வேதாந்திகளின் கொள்கை: இது, வட மொழியில் அபர்யவஸாநவ்ருத்தி எனப்படும். இனி, வன்சொல்லாவது—என்று மழியாமல் வலிதாயிருக்கக்கூடிய சப்தம்; அதுதான் வேதம்.

[சுவையூறொலி நாற்றமும் தோற்றமுமாய்.] ரஸம், ஸ்பர்சம், சப்தம், கந்தம், ரூபம் என்பன பஞ்சவிஷயங்க ளெனப்படும். உலக விஷயங்களைச் சிறிதுமறி யாத யோகிகட்கு இவையெல்லாம் எம்பெருமான் தானேயாயிருப்பன். ஆழ்வா னருளிச்செய்த வரதராஜஸ்தவத்தில்—"த்வக் ஊர்க் நிவிவாஸதி ஜிஹ்வா—த்வக்ச த்ருக்ச நிபிபாஸதி ஜிஹ்வா" (24) என்ற ச்லோகம் காண்க.

இரண்டாமடியில் "நல்லரன் நான்முகன் நாரணனுக்கு" என்றும் ஒரு பாடமுண்டு; அரனுக்கும் நான்முகனுக்கும் அந்தர்யாமியான நாராயணனுக்கு என்று பொருளாம்.

இரண்டாமடியின் முடிவிலுள்ள "தடஞ்சூழ்ந்தழகாய கச்சி" என்பது பரமேச்சுர விண்ணகரத்தில் அந்வயிக்கும்; கச்சியிலுள்ளதான பரமேச்சுர விண்ணகரமென்கை. மேற்பாசுரங்களிலும் இங்ஙனமே காண்க.

[பல்லவன்வில்லவனித்யாதி.] முற்காலத்தில் பல்லவனென்றும் வில்லவ னென்றும் பல அரசர்களிருந்தனர்; அவர்கள் வணங்கப்பெற்ற பாதத்தை யுடையவன் என்று பல்லவராஜனுடைய பெருமேன்மையைப் பேசினாராயிற்று. இவ்வரசன் மல்லாபுரியென்னும் திருக்கடல்மல்லையைப் படைவீடாகக்கொண்டு அரசாட்சி புரிந்துவந்தமைபற்றி மல்லையர்கோன் எனப்பட்டான். பணிந்த என்றது—இவ்வரசனுடைய பல கைங்கரியங்களுக்குப் பாத்திரமான என்றபடி.

கழற்பல்லவன் என்றதற்கு—பல்லவம்போன்ற பாதத்தையுடையவன் என் றும் பொருள்கொள்வர் சிலர். பல்லவமாவது—தளிர்; வடசொல். ... (க)

கார்மன்னு நீள்விசும்பும் கடலும்
சுடரும் நிலனும்மலையும் * தன்னுந்தித்
தார்மன்னு தாமரைக்கண்ணனிடம்
தடமாமதிள்சூழ்ந் தழகாயகச்சி *
தேர்மன்னு தென்னவனை முனையில்
செருவில் திறல்வாட்டிய திண்சிலையோன் *
பார்மன்னு பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (உ)

| | | | |
|---|---|---|---|
| கார் மன்னு நீள் விசும்பும் | மேகங்கள்பொருந்திய பெரிய ஆகாசமென்ன | நிலனும் | பூமியென்ன |
| | | மலையும் | குலபர்வதங்களென்ன |
| கடலும் | ஸமுத்ரங்களென்ன | | (ஆகிய இவையெல்லாம்) |
| சுடரும் | சந்திரன் ஸூரியன் முதலிய சுடர்ப் பொருள்களென்ன | தன் உந்தி தார் மன்னு | தனது திருநாபிக்கமலத்தில் நின்றும் உண்டாகப் பெற்ற |

தாமரைக் கண்ணன் } புண்டரீகாக்ஷனுக்கு
இடம் இருப்பிடமாவது—;
தடம் மா மதிள் சூழ்ந்த அழகாய கச்சி { தடாகங்களாலும் பெரிய மதிள்களாலும் சூழப்பட்டு அழகான காஞ்சீபுரியிலே,—
முனையில் போர்க்களத்திலே
தேர் மன்னு தென்னவனை } மஹாரதனை பாண்டிய ராஜனுடைய
செரு வில் திறல் வாட்டிய } சண்டைசெய்யும் வில்லின் வலியைப் பங்கப்படுத்தின
திண் சிலையோன் } வலிய வில்லையுடையனாய்
பார் மன்னு { இப்பூமியில் நெடுங்காலம் வாழ்ந்திருந்த
பல்லவர் கோன் } பல்லவராஜன்
பணிந்த கைங்கரியம் செய்யப்பெற்ற
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—.

[கார்மன்னு.] புவனங்களனைத்தையும் தனது திருநாபிக்கமலத்தினின்று தோற்றுவித்த தாமரைக்கண்ணனெழுந்தருளியிருக்குமிடம் பரமேச்சுர விண்ணகரமென்கிறார். விசும்பு, கடல், சுடர், நிலம், மலை முதலான பொருள்கள் உந்திக்கமலத்திலே மன்னியிருக்கையாவது இவற்றுக்கெல்லாம் பிறப்பிடமாயிருக்கை. இத்தால்—உலகங்களைப் படைப்பவனான நான்முகக்கடவுளைப் பிறப்பித்த உந்திக்கமலத்தையுடையவன் என்பதாகக்கொள்க. உந்தித்தார்= தார் என்று புஷ்பத்துக்கும் பெயர்.

பின்னடிகளால் பல்லவராஜனுடைய பராக்கிரமத்தைப்புகழ்ந்து பேசுகிறார்; சக்ரவர்த்தி திருமகனுடைய பராக்ரமத்தைப் பேசுவதுபோலவே உள்கனிந்து பேசுகிறார் காண்மின் திவ்யதேசத்துக்கு அவன் அபிமானியாய்ப் பரமபாகவதனாயிருக்கையாலே. முற்காலத்தில் பாண்டியராஜனுக்கும் இப்பல்லவராஜனுக்கும் பெரும்போர் விளைந்ததென்றும், அதில் இவ்வரசன் வெற்றிபெற்றானென்றும் கூறுவர்.

தேர்மன்னு தென்னவனை = தேர்வீரனான பாண்டியனை யென்றபடி. அதிரதர், மஹாரதர், ஸமரதர், அர்த்தரதர் என்று தேர்வீரர் நால்வகைப்படுவர் ;— தமக்கு வேறு துணையில்லாமல் தாம் ஒரு தேரின்மேலிருந்து தமது தேர் குதிரை ஸாரதிகளுக்கு அழிவுவராமற் காத்துக்கொண்டு பல்லாயிரம் தேர் வீரர்களோடு போர்செய்து வெல்லும் வல்லமையுள்ளவர்—அதிரதரென்றும்; கீழ்ச்சொன்னபடியே தாமிருந்து பதினோராயிரந் தேர்வீரர்களோடு பொருபவர்-மஹாரதரென்றும்; ஒரு தேர்வீரரோடு தாமும் ஒருவராய் நின்று எதிர்க்க வல்லவர்-ஸமரதரென்றும்; அங்ஙனமே பொருது தமது தேர் முதலியவற்றை யிழந்துவிடுபவர் அர்த்தரதரென்றுஞ் சொல்லப்படுவர்.

[முனையில் செருவில்.] முனையென்றாலும் செரு என்றாலும் யுத்தத்துக்குப் பரியாயநாமமாகையால் செருவில் என்றதை 'செரு—வில்' என்று பிரித்து, போர்செய்யவல்ல வில் என்று உரைக்கலாயிற்று; பாண்டியனுடைய வில்லைப் பங்கப்படுத்தின வில்லையுடைய பல்லவராஜன் கிஞ்சித்கரிக்கப்பெற்ற பரமேச்சுர விண்ணகரம்—தாமரைக்கண்ணனிடம் என்றாராயிற்று. (செருவில் முனையில்—போர்முகத்திலே என்றுமுரைக்கலாம்.) ... ... (உ)

உரந்தரு மெல்லணைப் பள்ளிகொண்டான்
ஒருகால்முன்னம் மாவுருவாய்க் கடலுள் *
வரந்தரு மாமணி வண்ணனிடம்
மணிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி *
நிரந்தவர் மண்ணையில் புண்ணுகர்வேல்
நெடுவாயிலுகச் செருவில்முனநாள் *
பரந்தவன் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ரு)

முன்னம் ஒருகால் — முன்பொருகால்
மா உரு ஆய் — விலக்ஷணமான வடிவையுடையனாய்
கடலுள் — திருப்பாற்கடலிலே
உரம் தரு மெல் அணை — வலிமிக்க மிருதுவான சேஷசயனத்திலே
பள்ளி கொண்டான் — திருக்கண்வளர்ந்தவனும்
வரம் தரும் — வாதனென்று திருநாமமுடையவனும்
மா மணி வண்ணன் — நீலமணிபோன்ற நிறத்தனுமான பெருமானுக்கு
இடம் — இடமாவது,—
மணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி — ரத்நமயமான மாடங்களாலே சூழப்பட்டு அழகுபொலிந்த கச்சிப்பதியிலே,—
முனநாள் — முற்காலத்தில்,
மண்ணையில் நிரந்தவர் — மண்ணையென்னும் நகரத்திலுள்ள சத்ரு ராஜாக்களானவர்கள்
புண் நுகர் வேல் நெடு வாயில் உக — மாம்ஸங்களைக்கவர்கின்ற வேலாயுதத்தின் கொடிய வாயிலே பட்டு முடியும்படியாக
செருவில் — போர்க்களத்திலே
பரந்தவன் — வியாபித்தவனான
பல்லவர் கோன் பணிந்த — பல்லவராஜன் பணிவிடை செய்யப்பெற்ற
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—.

[உரந்தருமெல்லணை.] திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான்மீது சயனித்தருள்பவனும் திருவத்திமாமலையில் பேரருளாளப் பெருமாளாய் வரதராஜன் என்று திருநாமம்பூண்டு ஸேவைஸாதிப்பவனுமான எம்பெருமானே பரமேச்சுரவிண்ணகரத்தில் ஸ்ரீவைகுண்டநாதனைக் காட்சிதந்தருள்கிறானென்கிறார்.

உரந்தருமெல்லணை=உரமாவது வலிவு; எம்பெருமான் பிராட்டிமாருடனே தன்மீது ஏறித்துகைத்தால் வருத்தமின்றிப் பொறுத்திருக்கவல்ல வலிவுடையவனிறே திருவனந்தாழ்வான். இப்பாட்டில் வரந்தருமாமணிவண்ணன் என்று ஸ்ரீஹஸ்திகிரிநாதனை பேரருளாளனை மங்களாசாஸநம் செய்தமையால் இதனை இரட்டித்து ஓதுவர் கச்சித்திருப்பதியோர்.

பின்னடிகளால் பல்லவராஜனுடைய பேராண்மையைப் பேசுகிறார். இவ்வரசன் பல ராஜவீரர்களைப் போரில்வென்று விளங்கினவனாதலால், மண்ணை

யென்னும் நகரத்திலிருந்த வீரர்களை வென்றொழித்தமையை இப்பாட்டில் பேசுகிறார். மண்ணையிலிருந்த சத்துருக்கள் இவ்வரசனது வேற்படையின் வாயிலே மாண்டொழிந்தனராம். உக = உகுதலாவது பொடியாயப் போதல் ... (௩)

அண்டமுமெண்டிசையும் நிலனும்
அலைநீரோடு வானெரிகால்முதலா
வுண்டவன் * எந்தைபிரானதிடம்
ஒளிமாடங்கள்சூழ்ந்தழகாய கச்சி *
விண்டவரிண்டைக் குழாமுடனே
விரைந்தாரிரியச் செருவில்முனிந்து *
பண்டொருகால் வளைத்தான்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௪)

அண்டமும் அண்டங்களையும்
எண் திசையும் எட்டுத்திசைகளையும்
நிலனும் பூமியையும்
அலை நீரொடு கடல்களையும்
வான் ஆகாசத்தையும்
எரி அக்நியையும்
கால் காற்றையும்
முதலா இவை முதலான மற்றும் பல பொருள்களையும்
உண்டவன் (பிரளயம்கொள்ளாதபடி) திருவயிற்றிலேவைத்து நோக்கின
எந்தை பிரானது எம்பெருமானுக்கு
இடம் இடமாவது,—
ஒளி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி—;
பண்டு ஒருகால் முன்னொருகாலத்தில்
செருவில் போர்க்களத்திலே
விரைந்தார் சண்டைசெய்ய விரைந்து வந்தவர்களான
விண்டவர் பகைவர்கள்
இண்டை குழாமுடனே நெருங்கின (தங்களது) கூட்டங்களோடே
இரிய சிதறியோடும்படி
முனிந்து சீறி
வளைத்தான் வில்லைவளைத்தவனான பல்லவராஜன்
பணிந்த கைங்கரியம் செய்யப்பெற்ற
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—.

[அண்டமுமெண்டிசையும்.] பிரளயப் பெருங்கடலில் ஒரு பதார்த்தமும் அழியாதபடி அனைத்தையும் திருவயிற்றிலேவைத்து நோக்கின பெருமான் ஸம்ஸாரப் பெருங்கடலில்நின்றும் நம்மை நோக்குதற்காகப் பரமேச்சுரவிண்ணகரத்தை விரும்பிவந்து நிற்கிறானென்கிறார். இத்தலத்திற்கு அபிமாநியான பல்லவராஜன் எப்படிப்பட்டவன்?—விண்டவரிண்டைக்குழாமுடனே விரைந்தாரிரியச்செருவில் முனிந்து பண்டொருகால்வளைத்தவன்; போர்க்களத்திலே தன்னைப் பங்கப்படுத்துவதாக விரைந்துவந்த விண்டவர் [சத்துருக்கள்], இண்டைக்குழாமுடனேஇரிய—தாங்கள் மாத்திரமேயல்லாமல் தங்களைச் சேர்ந்த கூட்டங்களும் சிதறியோடும்படியாயிற்று இப்பல்லவன் வில்வளைத்த மிடுக்கு.

"செருவில் வளைத்தான்" என்று கூட்டி அந்வயித்து, செரு—போர் செய்கின்ற வில்—வில்லை, வளைத்தான் என்றுரைப்பாருமுண்டு. வளைத்தான் என்பதற்கு, சூழ்ந்துகொண்டானென்றும் பொருளுண்டாகையால், சிதறியோடவேண்டும் படி பகைவரை ஆக்ரமித்துக் கொண்டானென்றும் உரைக்கலாம். ... (௪)

தூம்புடைத்திண்கை வன்தாள்களிற்றின்
துயர்தீர்த்தரவம்வெருவ * முனநாள்
பூம்புனல்பொய்கை புக்கானவனுக்கிடந்தான்
தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
தேம்பொழில் குன்றெயில் தென்னவனைத்
திசைப்பச் செருமேல் வியந்தன்றுசென்ற *
பாம்புடைப் பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௫)

| | |
|---|---|
| முன நாள் | முன்னொரு காலத்தில் |
| தூம்பு உடை திண் கை வன் தாள் களிற்றின் | துளையையுடைய துதிக்கையையும் வலிவுள்ள காலையுமுடைய கஜேந்திராழ்வானது |
| துயர் | துன்பத்தை |
| தீர்த்து | போக்கினவனும், |
| பூம்புனல் பொய்கை | அழகிய நீரையுடைய பொய்கையிலே |
| அரவம் | காளிய நாகம் |
| வெருவ | அஞ்சும்படியாக |
| புக்கான் அவனுக்கு | பாய்ந்தவனுமிருக்கிற எம்பெருமானுக்கு |
| இடம் | இருப்பிடமாவது,— |
| | தடம் சூழ்ந்து அழகாய கச்சி—; |
| தேம் பொழில் குன்று எயில் தென்னவனை | தேன் நிறைந்த சோலைகளையும் மலைபோன்ற மதிள்களையுமுடைய பாண்டிய நாட்டின் அரசன் |
| திசைப்ப | அறிவு கலங்கும்படி |
| அன்று | முன்பு |
| செரு மேல் | போர்க்களத்திலே |
| வியந்து சென்ற | விருப்பத்துடனே போய்ச் சேர்ந்தவனும் |
| பாம்பு உடை | நாகத்தைக் கொடியாகவுடையவனுமான |
| பல்லவர் கோன் | பல்லவராஜன் |
| பணிந்த | கிஞ்சித்கரிக்கப்பெற்ற |
| | பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—. |

[தூம்புடைத்திண்கை.] முதலையின் வாயிலகப்பட்டுத் துடித்த கஜேந்திராழ்வானுடைய துயரத்தைப் போக்கினவனும், யமுனையின் ஓருமடுவை விஷத்தால் கெடுத்துக் கொடுமைபுரிந்த காளியநாகத்தின் கொழுப்பை யடக்கினவனுமான பெருமான் கஜேந்திரன் போன்ற பக்தர்களைப் பாதுகாப்பதற்கும் காளியன்போன்ற பாகவதவிரோதிகளைப் படுகொலைபடிப்பதற்கும் பரமேச்சுரவிண்ணகரத்தில் ஸந்நிதிபண்ணியிராநின்றானென்கிறார்.

யானையினுடைய துதிக்கையில் துளையுள்ளதனால் தூம்புடைத்திண்கை எனப்பட்டது. களிற்றின்துயர்தீர்த்து—கஜேந்திராழ்வான் பறித்துக் கையில் வைத்துக்கொண்டிருந்த தாமரைப்பூவைத் திருவடியிலே சாத்தப் பெற்று

என்கை. பூம்புனல்பொய்கை—காளியன் அப்பொய்கையில் வந்து சேருவதற்கு முன்னே இருந்த நிலைமையைச் சொல்வதாகக் கொள்க. அன்றி, எதிர்மறையிலக்கணையால், கெட்டுப்போன ஜலத்தையுடைய பொய்கை என்னவுமாம்.

தேம்பொழில் = 'தேம்' என்னும் பதத்திற்குப் பல பொருள்களுண்டு; ஈரம், கள், தித்திப்பு, தேன், வாசனை. "தென்னவனை" என்றவிடத்து—ஐகாரம் சாரியை. பாம்புடை = ஒவ்வொரு அரசனுக்கு ஒவ்வொன்று த்வஜமாயிருக்கும்; பல்லவராஜன் நாகலோகத்தளவுஞ் சென்று வென்று வந்தவனென்பதற்கு அறிகுறியாக நாகத்தைக் கொடியாகவுடையனுயிருப்பனும். (குருவம்சத்து அரசர்களில் துரியோதனன் அரவுநீள்கொடியோன் எனப்படுவன்.) ... (ரு)

திண்படைக் கோளரியினுருவாய்த்
திறலோனகலம் செருவில்முனநாள் *
புண்படப் போழ்ந்த பிரானதிடம்
பொருமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி *
வெண்குடைநீழல் செங்கோல்நடப்ப
விடவெல்கொடிவேற் படைமுன்னுயர்த்த *
பண்புடைப் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (சு)

| | |
|---|---|
| முனநாள் | முன்னொரு காலத்திலே |
| திண் படை | கூர்மையான (நகங்களாகிற) ஆயுதங்களையுடைய |
| கோள் அரியின் உரு ஆய் | வலிமிக்க நரஸிம்ஹ மூர்த்தியாய்த்தோன்றி |
| செருவில் | போர்க்களத்தில் |
| திறலோன் அகலம் | மஹாபலசாலியான இரணியனது மார்வை |
| புண் பட போழ்ந்த | புண்படும்படி கிழித்தெறிந்த |
| பிரானது | எம்பெருமானுக்கு |
| இடம் | இருப்பிடமாவது,— |
| பொரு மாடங்கள் சூழ்ந்து | ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற மாடங்கள் நிறைந்திருப்பதனால் |
| அழகாய | அழகுபொலிந்திருக்கிற |
| கச்சி | கச்சிப்பதியிலே,— |
| வெண் குடை நீழல் | வெண் கொற்றக் குடையின் நிழலில் (வீற்றிருந்து கொண்டு) |
| செங்கோல் நடப்ப | தனது கட்டளை விலைச் செல்லும்படி (அரசாண்டவனும்) |
| விடம் வெல் கொடி | பாம்பாகிற வெற்றிக் கொடியையும் |
| வேல் படை | வேல் என்னு மாயுதத்தையும் |
| முன் உயர்த்த | சேனைகளின்முன்னே உயர எடுத்தவனும் |
| பண்பு உடை | நீதி தவறாதவனுமான |

பல்லவர் கோன்—; பணிந்த—;
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—.

[திண்படை.] நரசிங்கமூர்த்தியாய்த் தூணில்தோன்றி இரணியனது மார்பைப் பிளந்தொழித்த பெருமான் அப்படிப்பட்ட ஆஸுரப்ரக்ருதிகளை அழித்திடுதற்காக இன்றைக்கும் வந்து தங்குமிடம் பரமேச்சுரவிண்ணகரம் என்கிறார்.

திண்படை = நரஸிம்ஹமூர்த்திக்கு நகங்கள் தவிர வேறு ஆயுதமொன்று மில்லாமையினால் அந்த நகங்களையே இங்குத் திண்படை யென்கிறார்.

பல்லவராஜனுடைய பெருமேன்மையைப் பேசுகிற மூன்றுமடியின் பிற்பகுதியில் "விட வெல்கொடி" என்றும், "விடை வெல்கொடி" என்றும் "விறல் வெல்கொடி" என்றும் மூன்றுவகையான பாடங்கள் உள்ளனவாக வியாக்கியானம் காண்கிறது. முந்தினபாடத்தில், விடம் என்றது விஷமுடைத்தான நாகத்தைச் சொன்னபடியாய் நாகக்கொடியோன் என்றதாகிறது: இரண்டாவது பாடமே பெரும்பான்மையாக வழங்குகின்றது; விடை என்று இளம் பாம்புக்கும் பெயருண்டென்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்கிறார். எருது என்னும் பொருளையே கொண்டாலும் குறையில்லை; பல்லவனுக்கு ஆதிகாலமாக விருஷபக்கொடி இருந்ததென்றும், பின்பு நாகலோகத்தளவுஞ்சென்று வென்றுவந்தது காரணமாக நாகக்கொடி உண்டாயிற்றென்றும் வரலாறு உள்ளதாகச் சொல்லக் கேள்வியுண்டு. ... ... ... (சு)

இலகியநீண்முடி மாவலிதன் பெருவேள்வியில்
மாணுருவாய் முனநாள் *
சலமொடு மாநிலங் கொண்டவனுக்கிடந்தான்
தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
உலகுடை மன்னவன் தென்னவனைக்
கன்னிமாமதிள்சூழ் கருவூர்வெருவ *
பலபடைசாய வென்றான்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (எ)

முன நாள் — முன்னொருகால்,
இலகிய நீள் முடி — விளங்காநின்ற நீண்ட கிரீடத்தையுடைய
மாவலி தன் — மஹாபலியினது
பெரு வேள்வியில் — பெரிய யாகத்திலே
மாண் உரு ஆய் — வாமந ரூபியாய் (சென்று)
சலமொடு — கபடமான வகையாலே
மா நிலம் கொண்டவனுக்கு — உலகத்தையெல்லாம் ஆக்ரமித்துக்கொண்ட பெருமானுக்கு
இடம் — இருப்பிடமாவது,
தடம் சூழ்ந்து அழகாய கச்சி—;
கன்னி மா மதிள் சூழ் கருவூர் வெருவ — அழிவில்லாத பெரிய மதில்களாலே சூழப்பட்ட கருவூர் என்னும் நகரம் நிலைகலங்கவும்
பல படை சாய — சதுரங்க ஸேனை முடியும் படியாகவும்,
உலகு உடை மன்னவன் தென்னவனை வென்றான் — உலகங்களை அடிமையாகவுடைய அரசனாயிருந்த பாண்டியனைவென்ற பல்லவன்
பணிந்த—; பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—.

[இலகியநீண்முடி.] குறட்பிரமசாரியாய் மாவலியின் யாகபூமியிலெழுந்தருளி வஞ்சனைவகையினால் மூவடிமண் நீரேற்று மூவுலகத்தையும் திருவடிக்

கீழ்க்கொண்ட பெருமான் நம்போன்ற அஹங்காரிகளையும் திருவடிக்கீழ்க் கொள்ளுதற்காக வந்துநிற்குமிடம் பரமேச்சுரவிண்ணகர மென்கிறார்.

சலமோடு='ஜலம்' என்றவடசொல் சலமெனத்திரிந்ததென்று கொண்டால், மாவலியானவன் தத்தம் பண்ணுதற்காக விட்ட நீர்த்தாரையுடனே என்று பொருளாம்; 'ச்ஜலம்' என்ற வடசொல் சலமெனத் திரிந்ததென்று கொண்டால் க்ருத்ரிமவகையினால் என்றதாகிறது. சிறியவடிவைக்காட்டிப் பெரியவடிவாலே அளந்துகொண்டது க்ருத்ரிமமிறே.

பாண்டியராஜனுடைய நகரங்களுள் ஒன்றான கருவூரையும் பல்லவராஜன் வென்று கைக்கொண்டபடியைப் பின்னடிகளில் பேசினாராயிற்று. ... (எ)

குடைத்திறல் மன்னவனாயொருகால்
குரங்கைப் படையா * மலையால்கடலை
யடைத்தவனெந்தைபிரானதிடம்
அணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
விடைத்திறல் வில்லவன் நென்மெலியில்
வெருவச் செருவேல் வலங்கைப்பிடித்த *
படைத்திறல் பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (அ)

ஒரு கால் — முன்னொரு காலத்தில்,
குடை திறல் மன்னவன் ஆய் — வெண் கொற்றக்குடையையும் பெருமிடுக்கையுமுடைய சக்ரவர்த்தி திருமகனாய் (அவதரித்து)
குரங்கை — வாநரவீரர்களை
படையா — ஸேனையாகக்கொண்டு
மலையால் — மலைகளினால்
கடலை — தெற்கு ஸமுத்ரத்தை
அடைத்தவன் — அணைகட்டி யடைத்தவனான
எந்தை பிரானது — எம்பெருமானுக்கு
இடம் — இருப்பிடமாவது,—
அணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி—;
நென் மெலியில் — நென்மெலி யென்னும் நகரத்தில்
விடை திறல் — காளையின் வலிவுபோன்ற வலிவையுடையனான
வில்லவன் — வில்லவனென்கிற அரசன்
வெருவ — அஞ்சி நடுங்கும்படி
செரு வேல் — யுத்தத்திற்குக் கருவியான வேற்படையை
வலம் கை பிடித்த — வலக்கையிலே பிடித்தவனும்
படை திறல் — ஆயுதங்களை ஆளத்தக்க மிடுக்கை யுடையனுமான
பல்லவர் கோன்—; பணிந்த—;
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—.

[குடைத்திறல்.] சக்ரவர்த்திதிருமகனாகத் திருவவதரித்துப் பித்ருவாக்ய பரிபாலநத்துக்காக அரணியஞ்சென்றகாலத்து இராவணனாற் கவர்ந்து செல்லப்பட்ட பிராட்டியை இலங்கையில் நின்றும் மீட்டுக்கொணர்தற்காகத் தென் கடலைக் கடக்கநேர்ந்தபோது வாநரவீரர்களைத் துணைகொண்டு நீரினுள்ளே அமிழ்ந்துபோகவேண்டிய மலைகளாலே திருவணைகட்டின மஹாநுபாவன்

எழுந்தருளியிருக்குமிடம் கச்சியிலே பரமேச்சுரவிண்ணகரமாம். அத்திருப்பதி பல்லவராஜனுடைய பணிவிடைகளைப்பெற்றது; அவ்வரசனேவெனில், நென்மெலியென்னும் நகரத்திலே பெருமிடுக்கனுயிருந்த வில்லவன் என்னும் எதிரரசன் அஞ்சி நடுங்கும்படியாக வேற்படையைக் கையிலே பிடித்தவன். சத்துருக்களை வென்று திரட்டின பொருள்களைக்கொண்டு பல்லவன் கைங்கரியங்கள் செய்யப்பெற்ற பரமேச்சுரவிண்ணகரம் எம்பெருமானுக் கிருப்பிடமென்றாராயிற்று. ... ... ... ... (அ)

பிறையுடை வாணுதல் பின்னைதிறத்து
முன்னேயொருகால் செருவிலுருமின் *
மறையுடை மால்விடையேழடர்த்தாற்கிடந்தான்
தடஞ்சூழ்ந் தழகாயகச்சி *
கறையுடைவாள் மறமன்னர்கெடக்
கடல்போல் முழங்கும் குரல்கடுவாய் *
பறையுடைப் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (கூ)

| | |
|---|---|
| முன்னே ஒருகால் | முன்னொருகால் |
| பிறை வாள் உடை நுதல் பின்னை திறத்து | சந்திரகலைபோன்று ஒளியையுடைத்தான நெற்றியையுடையளான நப்பின்னைக்காக |
| உருமின் | இடிபோன்ற கர்ஜனையை யுடையவைகளாய் |
| மறை உடை | எதிர்த்துவருகையை யுடையவைகளான |
| மால் விடை ஏழ் | பெரிய ஏழு ரிஷபங்களை |
| செருவில் | போர்க்களத்தில் |
| அடர்த்தாற்கு | வலியடக்கின பெருமானுக்கு |
| இடம் | இருப்பிடமாவது—, |

தடம் சூழ்ந்து அழகாய கச்சி—;

| | |
|---|---|
| கறை உடை வாள் | ரத்தக்கறை மாறாத வாளை யுடையவர்களும் |
| மறம் | த்வேஷமுடையவர்களுமான |
| மன்னர் | எதிரரசர்கள் |
| கெட | முடிந்துபோம்படியாக |
| கடல்போல் முழங்கும் குரல் | கடல்போலே கோஷம் செய்கிற குரலையுடைய |
| கடுவாய்ப் பறை உடை | கடுவாய்ப் பறையை உடையவனான |

பல்லவர் கோன்—; பணிந்த—;
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே—.

[பிறையுடைவாணுதல்.] அழகிற்சிறந்த நப்பின்னைப்பிராட்டியை மணந்துகொள்ளுதற்காக, அவளது தந்தையின் ஏற்பாட்டின்படி யாவர்க்கு மடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழெருதுகளையும் ஏழு திருவுருக்கொண்டு சென்று வென்று வலியடக்கின பெருமானுறையுமிடம் கச்சிதன்னிற் பரமேச்சுரவிண்ணகரமாம். அத்திருப்பதி பல்லவராஜனால் பணிவிடை செய்யப்பெற்றது; அவ்வரசனேவெனில், எதிரரசர்கள் குடல் குழம்பும்படி கடல்போல் கர்ஜிக்கவல்ல கடுவாய்ப்பறையை நிருபகமாகவுடையவன்.

உருமின் = 'உரும்' என்றாலும் 'உருமு' என்றாலும் இடிக்குப்பெயர்; இலக்கணையால் இடிபோன்ற குரலைச்சொல்லுகின்றதிங்கெனக் கொள்க.

கடுவாய்ப்பறையுடை = பல்லவராஜனிடமிருந்த பறைக்கு-'கடுவாய்ப்பறை' என்று பெயர் வழங்கிவந்ததாகச் சில செப்பேடுகளிற் காண்கிறது. (கூ)

பார்மன்னு தொல்புகழ்ப் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகர்மேல் *
கார்மன்னு நீள்வயல் மங்கையர்தம்தலைவன்
கலிகன்றி குன்றாதுரைத்த *
சீர்மன்னு செந்தமிழ் மாலைவல்லார்
திருமாமகள் தன்னருளால் * உலகில்
தேர்மன்னரா யொலிமாகடல்சூழ்
செழுநீருலகாண்டு திகழ்வர்களே. (ய)

| | |
|---|---|
| பார் மன்னு தொல் புகழ் | இப்பூமியிலே நிலைத்து நின்ற பெரும்புகழை யுடைய |
| பல்லவர் கோன் | பல்லவராஜன் |
| பணிந்த | கைங்கரியங்கள் செய்யப் பெற்ற |
| பரமேச்சுர விண்ணகர் மேல் | பரமேச்சுரவிண்ணகர மென்னும் திருப்பதி விஷயமாக |
| கார் மன்னு நீள் வயல் மங்கையர் தம் தலைவன் | சினைகொண்ட பெரிய கழனிகளையுடைய திருமங்கைநாட்டிலுள் ளார்க்குத் தலைவரான |
| கலிகன்றி | கலியன் |
| குன்றாது | இலக்கணக்குறை யொன்று மின்றி |
| உரைத்த | அருளிச்செய்த |
| சீர் மன்னு செம் தமிழ் மாலை | அழகுபொருந்திய செந்தமிழினாலாகிய இப்பாமாலைகளை |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| திரு மா மகள் தன் அருளால் | பெரிய பிராட்டியாருடைய கிருபையினால் |
| உலகில் | இவ்வுலகத்திலே |
| தேர் மன்னர் ஆய் | தேரைநடத்தவல்ல அரசர்களாகி |
| ஒலி மா கடல் சூழ் | ஆரவாரிக்கின்ற பெரிய கடலாலே சூழப்பட்ட |
| செழு நீர் உலகு | செழிப்பான நீர்மையை யுடைய உலகையெல்லாம் |
| ஆண்டு | ஆண்டுகொண்டு |
| திகழ்வர்கள் | விளங்குவர்கள். |

[பார்மன்னுதொல்புகழ்.] இப்பூமண்டலத்தில் நிலைநின்ற புகழையுடைய பல்லவராஜன் பணிவிடைகள்செய்யப்பெற்ற பரமேச்சுரவிண்ணகர விஷயமாகத் திருமங்கையாழ்வார் பொருத்தமாகத் திருவாய்மலர்ந்தருளிய இச்சொல்மாலைகளை ஓதவல்லவர்கள் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் திருவருளுக்கு இலக்காகி இவ்வுலகை அரசாளவல்ல ராஜாதிராஜர்களாகி விளங்குவர்களென்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. .... ... (ய)

அடிவரவு:—சொல்லு கார் உரம் அண்டமும் தூம்பு திண் இலகிய குடை பிறை பார் மஞ்சாடு.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—பத்தாந்திருமொழி.

# மஞ்சாடுவரையேழும்.

அவதாரிகை:—இவ்விரண்டாம்பத்தின் முதல் திருமொழியோடே வடநாட்டுத் திருப்பதிகளின் அநுபவத்தைத் தலைக்கட்டி, அதற்குமேல் தொண்டைநாட்டுத் திருப்பதிகளின் அநுபவத்திலே இழிந்த ஆழ்வார், திருவெவ்வுளூர் திருவல்லிக்கேணி திருநீர்மலை திருக்கடன்மல்லை திருநின்றவூர் திருவிடவெந்தை திருப்புட்குழி திருவட்டபுயகரம் திருப்பரமேச்சுரவிண்ணகரம் ஆகிய திருப்பதிகளைக் கீழ்த்திருமொழியளவாக அநுபவித்து, இனி நடுநாட்டுத் திருப்பதிகளான திருக்கோவலூரையும் திருவயிந்திரபுரத்தையும் அநுபவிக்க விரும்பி இத்திருமொழியால் திருக்கோவலூரில் ஆழங்காற்படுகிறார்.

கோபாலன் எனப்படுகிற ஆயனார் எழுந்தருளியிருக்கும் திவ்யதலமாதல் பற்றி இதற்கு 'திருக்கோவலூர்' என்று திருநாமமாயிற்று. 'கோபால' என்ற வடசொல் 'கோவல்' எனத் திரிந்தது. கோபாலபுரமெனக. "பாவருந்தமிழாற் பேர்பெறு பனுவற்பாவலர் பாதிநாளிரவின், மூவரும்நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுதநன்னாடு" என்று புகழ்ந்து கூறும்படி முதலாழ்வார் மூவரும் ஒருவரையொருவர் சந்தித்து அந்தாதி பாடின தலம் இது. ... *

மஞ்சாடுவரையேழும் கடல்களேழும்
வானகமும் மண்ணகமும் மற்றுமெல்லாம் *
எஞ்சாமல் வயிற்றடக்கி யாலின்மேலோ
ரிளந்தளிரில் கண்வளர்ந்தவீசன்தன்னை *
துஞ்சாநீர் வளஞ்சுரக்கும் பெண்ணைத்தென்பால்
தூயநான்மறையாளர் சோமுச்செய்ய *
செஞ்சாலி விளைவயலுள் திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (க)

| பதம் | பொருள் |
|---|---|
| மஞ்சு ஆடு வரை ஏழும் | மேகங்கள் உலாவப்பெற்ற குலபர்வதங்கள் ஏழும் |
| கடல்கள் ஏழும் | ஸமுத்ரங்கள் ஏழும் |
| வானகமும் | ஸ்வர்க்கம் முதலிய மேலுலகங்களும் |
| மண்ணகமும் | மண்ணுலகமும் |
| மற்றும் எல்லாம் | மற்றுமுள்ள எல்லாப் பொருள்களும் |
| எஞ்சாமல் | அழிந்து போகாதபடி |
| வயிறு அடக்கி | (இவற்றையெல்லாம்) திருவயிற்றிலே எடுத்துவைத்து |

| | |
|---|---|
| ஓர் | ஒப்பற்ற |
| ஆலின் | ஆலமரத்தினுடைய |
| இள தளிரின் மேல் | பால்மாறாத இளந்தளிரிலே |
| கண் வளர்ந்த | துயில் கொண்ட |
| ஈசன் தன்னை | ஸ்வாமியை,— |
| வளம் நீர் | மணிகள் முத்துக்கள் முதலியவற்றைக் கொழிக்கின்ற நீரானது |
| அஞ்சா | ஒருகாலும் மாறாமல் |
| சுரக்கும் | பெருகிவரப்பெற்ற |
| பெண்ணை | பெண்ணையாற்றினுடைய |
| தென்பால் | தென்கரையிலே, |
| தூய | ஒருபலனையும் விரும்பாமையாகிற மனத்தூய்மையையுடையவர்களாய் |
| நால் மறை ஆளர் | நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்தவர்களான வைதிகோத்தமர்கள் |
| சோமு செய்ய | ஸோமயாகங்களைப்பண்ண (அத்தாலே) |
| செம் சாலி | செந்நெற்பயிர்களானவை |
| விளை வயலுள் | விளைநிலமான வயல்களிலே |
| திகழ்ந்து தோன்றும் | செழித்து விளங்கப்பெற்ற |
| திருக்கோவலூர் அதனுள் | திருக்கோவலூரென்னும் திருப்பதியிலே |
| நான் கண்டேன் | நான் ஸேவிக்கப்பெற்றேன். |

[மஞ்சாவேரையேழும்.] திருக்கோவலூரில் இன்று நான் ஸேவிக்கப்பெற்ற பெருமான் ஆபத்திலேவந்து உதவும் உபகாரசீலன். மலைகள் கடல்கள் வானுலகு மண்ணுலகு முதலிய எல்லாவற்றையும் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்துக் காத்தருளி ஒரு ஆலந்தளிரிலே சிறு குழந்தையாகத் திருக்கண் வளர்ந்தருளின முழுமுதற்கடவுள் காண்மின்—என்கிறார் முன்னடிகளால்.

இனி, பின்னடிகள் திருப்பதியின் நீர் நிலவளம் கூறுவன. நீர் வரவு மாறாதே பெருகிச் செல்லுவதும், பொன் முத்து மாணிக்கங்களைக் கொழித்து எறடாநின்றுள்ளதுமான பெண்ணையாற்றின் [தக்ஷிணபினாகிநீநதியின்] தென் கரையிலேயுள்ளது திருக்கோவலூர். அவ்விடத்து அநந்யப்ரயோஜநரான பல வைதிகர்களுண்டு; அவர்கள் பலனைக்கருதாது ஸோமயாகங்களைப் பண்ணிக் கொண்டிருப்பர்கள். அப்படி அவர்கள் ஒரு பலனையும் கருதாது வேள்வி புரிந்தாலும், ஒரு தேசத்தையும் நோக்காமல் வழிச்செல்லுமவனுக்கும் ஏதாவது ஒரு தேசப்ராப்தி தன்னடையே நேரிடுமாபோலே இவர்களது யாகமும் பகவானது நினைவினால் ஒரு பலனைக் கொடுக்கவற்றாகையாலே த்ருஷ்ட பலன்கள் ஸம்பவிக்கும்—செந்நெற்பயிர்கள் வயல்களிலே செழிப்புற்று விளங்கும்; இப்படிப்பட்ட திருக்கோவலூரிலே ஆபத் ரக்ஷகனை பெருமானை ஸேவிக்கப் பெற்றேன் என்றாராயிற்று.

ஸோமம் என்ற வடசொல் சோமு எனத் திரிந்தது. ஸோமலதையின் ரஸத்தைப் பருகுதலை அங்கமாகவுடையதும் மூன்றுவருஷங்களால் ஸாதிக்கத் தக்கதுமாம் ஸோமயாகம். சாலி—வடசொல். ... ... (௧)

கொந்தலர்ந்த நறுந்துழாய் சாந்தந்தூபம்
 தீபங்கொண்டமரர்தொழப் பணங்கொள்பாம்பில் *
சந்தணிமென் முலைமலராள் தரணிமங்கை
 தாமிருவ ரடிவருடுந் தன்மையானை *
வந்தனைசெய்திசையே ழாறங்கமைந்து
 வளர்வேள்வி நான்மறைகள் மூன்றுதீயும் *
சிந்தனைசெய்திருபொழுதுமொன்றுஞ்செல்வத்
 திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (உ)

| | |
|---|---|
| அமரர் | பிரமன்முதலான தேவர்கள் |
| கொந்து அலர்ந்த நறு துழாய் | கொத்துக்கொத்தாக அலர்கின்ற மணம்மிக்க திருத்துழாய் மலர்களையும் |
| சாந்தம் | சந்தனத்தையும் |
| தூபம் | தூபத்தையும் |
| தீபம் | தீபத்தையும் |
| கொண்டு | கையிலேந்திக்கொண்டு |
| தொழ | ஆச்ரயிக்க |
| பணம் கொள் பாம்பில் | (ஆநந்தத்தினால்) படமெடுத்திருக்கிற திருவனந்தாழ்வான் மேலே, |
| சந்து அணி மெல் முலை மலராள் | சந்தனத்தாலே அலங்கரிக்கப்பட்ட மெல்லிய முலைகளையுடைய பெரிய பிராட்டியும் |
| தரணி மங்கை | பூமிப்பிராட்டியும் ஆகிற |
| இருவர் தாம் | இரண்டு தேவிமார்களும் |
| அடி வருடும் தன்மையானை | திருவடிகளைப் பிடிக்கும்படியாக வுள்ள எம்பெருமானை, |
| ஏழ் இசை | ஸப்தஸ்வரங்களையும் |
| ஆறு அங்கம் | ஆறு அங்கங்களையும் |
| ஐந்து வளர் வேள்வி | பஞ்ச மஹா யஜ்ஞங்களையும் |
| மூன்று தீயும் | மூன்று அக்நிகளையுங் கொண்டு |
| வந்தனை செய்து | எம்பெருமானை யடிபணிந்து |
| நால் மறைகள் | நான்கு வேதங்களை |
| இரு பொழுதும் | இரவும் பகலும் |
| சிந்தனை செய்து | அநுஸந்தித்துக்கொண்டு |
| ஒன்றும் | (வைதிகர்கள்) பொருந்தி வாழ்தற்கிடமான |
| செல்வம் | அழகு பொலிந்த |

திருக்கோவலூரதனுள்—;
நான் கண்டேன்—.

[கொந்தலர்ந்த.] திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொள்ளும் பெருமான் அஸ்மதாதிகளைக் காத்தருள்வதற்காகத் திருக்கோவலூரில் வந்து நின்று ஸேவைஸாதிக்கக் கண்டேனென்கிறார். திருப்பாற்கடலில் எங்ஙனேயிருக்கிற பெருமானென்னில்; திருவாராதனத்துக்கு உரிய உபகரணங்களாகிய திருத்துழாய் சாத்துப்படி தூபதீபங்கள் முதலானவற்றைப் பிரமன் முதலிய தேவர்கள் சேகரித்துக்கொண்டுவந்து தொழும்படியாகவும், திருமகளும் மண்மகளும் திருவடி வருடும்படியாகவும் துயில்கொள்ளும் பெருமான்.

கீழ்ப்பாட்டிலுள்ள “ஆயநான்மறையாளர்” என்னும் எழுவாய்ப்பதத்தை

இப்பாட்டின் பின்னடிகளிலும் வருவித்துக் கொள்ளில் குறையில்லை. இத் திருப்பதியில் வாழ்கின்ற வைதிகர்கள் ஞானத்திலும் அனுட்டானத்திலும் குறையற்றவர்களென்கிறார்.

வந்தனை, சிந்தனை—ஐயிரண்டு வடசொற்கள். தூபம், தீபம், பணம், அமரர், தரணி—வடசொற்கள். ... ... ... (உ)

கொழுந்தலரும் மலர்ச்சோலைக் குழாங்கொள்பொய்கைக்
கோள்முதலை வாளெயிற்றுக் கொண்டற்கெள்கி *
அழுந்திய மாகளிற்றினுக்கன்றாழியேந்தி
அந்தரமேவரத்தோன்றி யருள்செய்தானை *
எழுந்தமலர்க் கருநீலமிருந்தில்காட்ட
இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன்காட்ட *
செழுந்தடநீர்க்கமலம் தீவிகைபோல்காட்டும்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (ங)

அன்று — முன்பொருகால்,
கொழுந்து — தளிர்களையும்
அலரும் மலர் — விகஸிக்கின்ற புஷ்பங்களையுமுடைய
சோலை குழாம் கொள் பொய்கை — சோலைகளின் கூட்டங்கள் சூழ்ந்த தடாகத்திலே
கோள் முதலை — வலிவுள்ள முதலை
வாள் எயிறு — (தனது) வாள்போன்ற பற்களினால்
கொண்டற்கு — காலைக் கவ்வினதற்கு
எள்கி — மெலிந்து
அழுந்திய — வருந்தின
மா களிற்றினுக்கு — கஜேந்திராழ்வானுக்காக
ஆழி ஏந்தி — திருவாழியை எடுத்துக்கொண்டு
அந்தரம் மேவர தோன்றி — ஆகாசம் இடமடையும்படி வந்து தோன்றி
அருள் செய்தானை — (அவ்வானைக்குக்) கிருபை பண்ணின பெருமானை,—
எழுந்த — (நீரில்நின்றும்) மேற்கிளம்பின
கரு நீலம் மலர் — கருநெய்தற்பூவானது
இருந்தில் காட்ட — கரிபோல் விளங்கவும்
இரு புன்னை — பெரிய புன்னை மரங்களானவை
அரும்பி — அரும்புகளுண்டாகப் பெற்றதனால்
முத்து — முத்துக்களையும்
(மலர்களுண்டாகப் பெற்றதனால்)
செம் பொன் — பசும்பொன்னையும்
காட்ட — தோற்றுவிக்கவும்,
செழு நீர் தடம் கமலம் — செழித்த நீரையுடைய தடாகங்களில் தாமரைகள்
தீவிகை போல் காட்டும் — விளக்குப்போலே விளங்கவும்பெற்ற
திருக்கோவலூரதனுள், நான் கண்டேன்—.

[கொழுந்தலரும்.] முற்பிறவியின் வாஸனையாலே நாடோறும் தாமரைப் பூக்களைப்பறித்து எம்பெருமானை அர்ச்சிப்பதாக விரதம் பூண்ட கஜேந்திரன் பூப்பறித்தற்கு ஒரு பொய்கையிலே சென்றிழிந்தவாறே அங்குறையும் முதலையினால் கவ்வப்பட்டு வருந்தி 'ஆதிமூலமே!' என்று கதறினபோது, அரைகுலை

யத் தலைகுலையப் பதறியோடிவந்து திருவாழியைச்செலுத்தி முதலையைத் துணித்து ஆனைக்கு அருள்செய்ததுபோல, நம்முடைய விரோதிகளையுந் தொலைத்து நம்மையுங் காத்தருள்வதற்காக வந்து ஸந்நிதி பண்ணியிருக்கும் பெருமானைத் திருக்கோவலூரிலே ஸேவிக்கப்பெற்றேனென்கிறார்.

இரண்டாமடியில், "அந்தரமேவர" என்பதை, 'அந்தரம் மேவர' என்று பிரிக்க. மே—வினைப்பகுதி; 'வர' என்பது துணைவினை: மேவ என்றபடி. மேவுதலாவது—இடமடையும்படி நிரம்பியிருத்தல் கஜேந்திராழ்வானுக்கு அருள்செய்ய எம்பெருமான் எழுந்தருளினபோது ஆகாசம் இடமடையும்படி யெழுந்தருளினனென்றது—அவனெழுந்தருளின பெருமையைச் சொன்னபடி. **அருள்செய்தானை**=அவ்யானையின் கையிலிருந்த பூவைப் பெற்றுக்கொண்டு, அதன் காலில் புண் ஆறும்படி உபசாரங்கள் செய்தவற்றை நினைக்க.

பின்னடிகளால் திருக்கோவலூரின் வயல்வாய்ப்பையும் பொழில்வாய்ப்பையும் வருணிக்குமாழ்வார், அவ்வூரை ஒரு பொற்களரியாக உருவகப்படுத்தி வருணிக்கிறார்: (பொற்களரியாவது—தட்டானுடைய காரியச்சாலை) அஃது எப்படியிருக்குமென்றால், அங்கே கரிகள் கொட்டப்பட்டு நிரம்பியிருக்கும்; பொன்களும் முத்துக்களும் நிறைந்திருக்கும்; நெருப்பு ஜ்வலித்துக்கொண்டிருக்கும். இங்கே, கருநீலமலர்கள் கரியாகவும், புன்னைமொக்குகள் முத்தாகவும், புன்னைப்பூக்கள் பொன்னாகவும், தாமரைப்பூக்கள் நெருப்பாகவும் திகழ்வனவாம். .... .... .... .... .... (௩)

தாங்கரும்போர் மாலிபடப் பறவையூர்ந்து
  தராதலத்தோர் குறைமுடித்த தன்மையானை *
ஆங்கரும்பிக் கண்ணீர்சோர்ந் தன்புகூரும்
  அடியவர்கட் காரமுதமானான்தன்னை *
கோங்கரும்பு சுரபுன்னை குரவார்சோலைக்
  குழாவரிவண்டிசைபாடும் பாடல்கேட்டு *
தீங்கரும்பு கண்வளருங் கழனிசூழ்ந்த
  திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (௪)

| | |
|---|---|
| தாங்க அரு போர் | ஒருவராலும் தாங்க முடியாத [கொடிய] யுத்தம் நடத்தவல்ல |
| மாலி | மாலியென்னுமரக்கன் |
| பட | முடியும்படி |
| பறவை | கருடனை |
| ஊர்ந்து | (போர்க்களத்தில்) நடத்தி (மாலியைக் கொன்றொழித்து) |
| தராதலத்தோர் குறை முடித்த | பூமியிலுள்ள ஸத்துக்களுடைய குறைகளைத் தீர்த்த |
| தன்மையானை | பெருமையுடையவனும், |
| கண் நீர் அரும்பி சோர்ந்து | கண்ணீர் அரும்பரும்பாகப் பெருகி [ஆநந்த பாஷ்பங்கொண்டு] |
| அன்பு கூரும் | பக்தி பண்ணுகிற |
| அடியவர்கட்கு | பக்தர்களுக்கு |

| | |
|---|---|
| ஆங்கு | அப்போதே |
| ஆர் அமுதம் ஆனான் தன்னை | அருமையான அமுதம் போன்றிருப்பவனுமான பெருமானை,— |
| கோங்கு அரும்பு | கோங்கின் பூக்களும் |
| சுரபுன்னை | ஸுரபுன்னைகளும் |
| குரவு | குரவுகளும் |
| ஆர் | செறிந்திருக்கிற |
| சோலை | சோலைகளிலே |
| குழாம் வரி வண்டு | கூட்டங் கூட்டமாகக்கூடிய அழகிய வண்டுகள் |
| இசை பாடும் பாடல் கேட்டு | (மதுபான மயக்கத்தாலே) இசை பாடுகிற பாடல்களைக் கேட்டு |
| (அத்தாலே நீர் பாய்ந்தாற்போலேயாய்) | |
| தீம் கரும்பு | இனிய கரும்புகளானவை |
| கண் வளரும் | ஒரு கண் ஏறி வளரப்பெற்ற |
| கழனி | கழனிகளினால் |
| சூழ்ந்த | சூழப்பட்ட |
| திருக்கோவலூரதனுள், நான் கண்டேன்—. | |

[தாங்கரும்போர்மாலிபட.] திருக்கோவலூரில் அடியேனுக்கு ஸேவை ஸாதித்த எம்பெருமான் எப்படிப்பட்டவன்?—; கருடனை வாஹனமாகக் கொண்டு போர்க்களத்திற்புகுந்து திருவாழியினால் மாலியென்னுமரக்கனுடைய தலையையறுத்தொழித்து ஸாதுக்களை வாழ்வித்தவன்; இப்படிப்பட்ட வீரச் செயல்களையும் மற்றுமுள்ள ஸௌசீல்ய ஸௌலப்ய குணங்களையும் நினைந்து நைந்து உள் கரைந்துருகிக் கண்ணீர்பெருக நிற்கும் பரமபக்தர்களின் நெஞ்சிலே தித்தித்திருப்பவன்.

இப்படிப்பட்ட பெருமான் எழுந்தருளியிருக்கிற திருக்கோவலூர் எப்படிப்பட்டதென்னில்; கோங்கு, சுரபுன்னை, குராமுதலிய புஷ்ப வ்ருக்ஷங்கள் நிறைந்த சோலைகளிலே வண்டுகள் கூட்டங்கூடி மதுவைப்பருகிக் களித்துப் பாடுகிற பாட்டுக்களையே விளைநீராகக்கொண்டு வயல்களிலே கரும்புகள் வளர்கின்றனவாம்; அப்படிப்பட்ட கழனிகளால் சூழப்பட்ட திருக்கோவலூரில் கண்டேன்.

மாலி, மாலியவான், சுமாலி என்னுமரக்கர் மூவரும் ஸஹோதரர்கள். இவர்கள் திருமாலுடன் போர்புரிந்து பராஜயமடைந்த வரலாறு உத்தரஸ்ரீ ராமாயணத்தில் ஏழாவது ஸர்க்கத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. மாலியென்பவன் கருடாரூடனான திருமாலுடனே போர்புரியும்போது சிறிது பங்கப் பட்டுத் தேரைவிட்டு இழிந்து கதையினால் கருடனை முகத்தில் மோதினன்; இங்ஙனம் புடைபட்ட பக்ஷிராஜன் மிகத்துன்புற்று அவ்வேதனைக்கு ஆற்றாது ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் போர்க்களத்தினின்றும் பின்புறமெழுந்தருளப்பண்ணிக் கொண்டுபோக, திருமால் பராமுகமாகத் திரும்பியிருக்கையிலும் அவன்மீது தமது சக்கராயுதத்தைவிடுக்க, அது மாலியினது முடியை அறுத்துத்தள்ளிய தென்க.

தராதலம்—வடசொல்.

கண்ணீர்சோர்ந்துஅன்புகூருமடியவர்களாவார்—“ஆஹ்லாதசீத நேத்ராம்பு:” என்கிறபடியே ‘கங்குலும் பகலுங் கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்

கும்' என்றிருக்கின்ற பக்தர்கள்; அவர்கட்கு 'எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே' என்னும்படியிருப்பன் எம்பெருமான்.

"வரிவண்டு இசைபாடும் பாடல் கேட்டுத் தீங்கரும்பு கண்வளரும்" = கரும்புக்கு நீர்பாய்ச்ச, கணுக்கள் விட்டுவளருமாபோலே, வண்டுகளின் இசைப் பாடலாகிய இன்பரசம் பாயப்பெற்றுக் கரும்புகள் கணுக்கள் வளரப்பெறுகின்றனவாம். இத்தால்—வண்டுகளின்பாடல் ரஸமயமாயிருக்கின்ற தென்றவாறும். இனி, கண்வளரும் என்பதற்கு 'உறங்கும்' என்று பொருள் கொள்ளவும் இடமுண்டு: கண்ணபிரான் குழலூதிய காலத்தில் சராசரப் பொருள்கள்யாவும் குழலினிசையில் ஈடுபட்டு மெய்மறந்து நின்றதுபோலே, வண்டுகள் பாடும் இசையைக்கேட்டு அஃறிணைப் பொருளாகிய கரும்பும் அசைவு அற்று நிற்கும் படியைச் சொன்னவாறு. "மருண்டு மான்கணங்கள் மேய்கைமறந்து மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர, இரண்டு பாடும் துலுங்காபுடைபெயரா எழுது சித்திரங்கள் போல நின்றனவே" என்றாற்போல. ... ... (௪)

கறைவளர்வேல் கரன்முதலாக் கவந்தன்வாலி
கணையொன்றினால்மடிய விலங்கைதன்னுள் *
பிறையெயிற்று வாளரக்கர் சேனையெல்லாம்
பெருந்தகையோ டுடன்துணித்த பெம்மான்தன்னை *
மறைவளரப் புகழ்வளர மாடந்தோறும்
மண்டபமொண்டொளியனைத்தும் வாரமோத *
சிறையணைந்த பொழிலணைந்த தென்றல்வீசும்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (௫)

| | | | |
|---|---|---|---|
| கறை வளர் | (ரத்தமாம்ஸங்களின்) கறை ஏறிக்கிடக்கிற | பெம்மான் தன்னை | பெருமானை,— |
| வேல் | வேற்படையையுடைய | மாடம் தோறும் | ஒவ்வொரு வீடுகளிலும் |
| கரன் முதலா | கரன் முதலாக | மறை வளர | வேதகோஷம் ஓங்கவும் |
| கவந்தன் வாலி | கபந்தனும் வாலியும் | புகழ் வளர | (அதனால்) கீர்த்திவளரவும் |
| கணை ஒன்றினால் மடிய | ஓர் அம்பாலே முடியும்படி (செய்தவனும்) | ஒண் தொளி | அழகிய வீதிகளிலேயுள்ள |
| இலங்கை தன்னுள் | லங்காபுரியிலே | மண்டபம் அனைத்தும் | மண்டபங்களிலெல்லாம் |
| பிறை எயிறு வாள் அரக்கர் சேனை எல்லாம் | பிறைபோன்ற கோரப்பற்களையும் வாள்களையுமுடைய அரக்கர்களின் சேனைகளையெல்லாம் | வாரம் ஓத | 'வாரமோதுகை' என்கிற அத்யயநத்தை நடத்தவும் பெற்றதாய் |
| பெரு தகையோடு உடன் | அவர்களது தலைவனான இராவணனோடு கூடவே | சிறை அணைந்த பொழில் அணைந்த தென்றல் வீசும் | நீரரண் நெருங்கின சோலைகளோடு உறைந்து வருகின்ற தென்றல் வீசப்பெற்றதான |
| துணித்த | தொலைத்தொழித்த | திருக்கோவலூரதனுள்—; நான் கண்டேன்—, | |

[கறைவளர்வேல்.] இராமபிரானாகத் திருவவதரித்துக் காடுறைந்தகாலத்துக் கரன் கவந்தன் வாலி முதலானவர்களை முடித்துக்கொண்டு இலங்கை சென்று இராவணனையும் அரக்கர் சேனைகளையும் துணித்தொழித்த பெருமானை, வைதிகர்கள் நிறைந்த பரமபோக்யமான திருக்கோவலூரிலே கண்டேனென்கிறார்.

கறைவளர்வேல் = கரனுடைய வேலாயுதம் ஒருகொடிப்பொழுதும் ஓய்தலின்றியே வேலைசெய்துகொண்டேயிருக்குமாதலால் ரக்தமாம்ஸங்களின் கறை மாறாதிருக்குமென்க. கரனைக்கொன்றது சூர்ப்பணகையின் அங்கபங்கத்திற்கு அடுத்தபடியாக ஜநஸ்தாநத்தில் நடந்த போரில்.

கவந்தன் மடிந்த வரலாறு:—தநுவென்னும் யக்ஷனது மகனாய், ஸ்தூலசிரஸ் என்னும் முனிவனது சாபத்தால் அரக்கனாகி, பிரமனருளால் நீண்ட ஆயுள்பெற்று, தேவேந்திரனோடு எதிர்த்து அவனது வஜ்ராயுதத்தாற் புடைபட்டுத் தனது தலை வயிற்றில் அழுந்தியதுபற்றிக் கபந்தம்போலுந் தோற்றமுடையனானதால் கபந்தனென்று பெயர்பெற்ற அரக்கன் தண்டகாரணியத்தில் ஒருபக்கத்திலேயிருந்து தனது நீண்ட கைகளிரண்டையும் எட்டியமட்டில் பரப்பித்துழாவி அவற்றிற்குள் அகப்பட்ட ஜீவராசிகளையெல்லாம் வாரி வாய்ப்பெய்து விழுங்கிக்கொண்டிருக்க, அங்குச்சென்று இவன்கைகளினிடையே அகப்பட்டுக்கொண்ட ராமலக்ஷ்மணர்கள் இவனது தோள்களைத் துணித்துத் தள்ளியவளவில், இவன் முன்னைய சாபமும் முற்பிறப்பின் தீவினையும் தீர்ந்தவனாகி ராக்ஷஸசரீரத்தை யொழித்து திவ்யசரீரம்பெற்றுப் பெருமானைப்பலவாறு துதித்து நற்கதிக்குச் சென்றனனென்றறிக.

பெருந்தகை என்னும் பதம்—பெருமையுடையவன் என்ற பொருளதாகி அரசனையுணர்த்தும்: இங்கே இராவணனைச் சொன்னபடி.

ஒண் தோளியனைத்தும் = வடமொழியில் 'ப்ரதோளீ' என்றொரு சொல் உண்டு; வீதி என்று பொருள் "ரத்யா ப்ரதோளீ விஶிகா—ரத்யா ப்ரதோளீர் விசிகா." என்பது அமரகோசம். அச்சொல்லில் ப்ர என்னுமுபஸர்க்கம் நீங்கி, 'தோளி' என்பது தொளி யென்று குறுக்கல்விகாரம் பெற்றிருக்கிறதிங்கு. மண்டபம்—வடசொல் [வாரமோத.] வேதமோதுமவர்களின் அத்யயநமுறைமைகள் பலவகைப்பட்டிருக்கும்; அவ்வகைகளுள், வாரஞ் சொல்லுவதென்பது ஒன்று: அதாவது—அநுவாகத்தின் அடியையோ பஞ்சாதியின் அடியையோ ஒருவர் எடுத்துக் கொடுத்துப் பதபாடம் சொல் என்றால் மயங்காமல் ஏற்றக்குறைவின்றி இருநூற்றைம்பது பதங்கள் சொல்லி நிறுத்துதலாம்.

சிறை என்னுஞ் சொல்லுக்குப் பலபொருள்களுண்டு; ஜலப்ராந்தமென்னும் பொருளை இங்குக்கொள்க. ... ... ... (ரு)

உறியார்ந்த நறுவெண்ணெயொளியால்சென்றங்கு
உண்டானைக் கண்டாய்ச்சி யுரலோடார்க்க *
தறியார்ந்த கருங்களிறே போலநின்று
தடங்கண்கள் பனிமல்குந் தன்மையானை *
வெறியார்ந்த மலர்மகள் நாமங்கையோடு
வியன்கலை யெண்டோளினுள் விளங்கு * செல்வச்
செறியார்ந்த மணிமாடந் திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (௯)

ஒளியால் சென்று — (தன்னுடைய புன்முறுவலின்) காந்தியாலே இருட்டான இடங்களிலே) நடந்து சென்று
அங்கு — அவ்விடங்களிலே
உறி ஆர்ந்த — உறிகளிலே நிரம்பிய
நறு வெண்ணெய் — மணம்மிக்க வெண்ணெயை
உண்டானை ஆய்ச்சி கண்டு — வாரியுண்ணும்போது யசோதையானவள் கண்டு
உரலோடு ஆர்க்க — உரலோடே பிணைத்துக் கட்ட
(அதனாலே)
தறி ஆர்ந்த கரு களிறு போல நின்று — கட்டுத்தறியிலே சேர்த்துக் கட்டப்பட்ட கரிய யானை போலக் கட்டுண்டிருந்து
தட கண்கள் பனி மல்கும் தன்மையானை — பெரிய திருக்கண்கள் நீர் நிரம்பப்பெற்ற தன்மையையுடைய பெருமானை,
வெறி ஆர்ந்த மலர் மகள் — பரிமளம்நிறைந்த தாமரைப் பூவில்பிறந்த பிராட்டியோடும்
நா மங்கையோடு — ஸரஸ்வதியோடும்
வியன் கலை எண் தோளினுள் — அழகிய மானை வாஹனமாகவுடையளாய் எட்டுத் தோள்களையுடையளான துர்க்கையோடும்
விளங்கு செல்வம் — விளங்குகையாகிற செல்வத்தையுடையதும்
செறி ஆர்ந்த — நெருக்கம்பொருந்திய
மணி மாடம் — ரத்னமயமான மாடங்கள்
திகழ்ந்து தோன்றும் — மிகவும் விளங்கப்பெற்றதுமான
திருக்கோவலூரதனுள்—; நான் கண்டேன்—.

[உறியார்ந்த.] * ஏராரிடைநோவ எத்தனையோர் போதுமாய்ச் சீரார்தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை நாராருறியேற்றி நன்கு அமையவைத்த தனைக் கண்ணபிரான் கள்ளனாகச் சென்று வாரி விழுங்கும்போது கையும் வாயும் வெண்ணெயுமாகக் கண்ட யசோதையானவள் 'இப்படிப்பட்ட தீங்கோ நீ செய்வது' என்று சீறி ஒரு உரலோடே பிணைத்துத் தாம்பினால் கட்டிவைப்பள்; அப்போதிருக்கும் நிலை, கட்டுத்தறியிலே கட்டிவைத்த யானைக்குட்டியோ! என்னலாம்படியிருக்கும்; மெய்யேவருந்தி அழுபவன்போலக் கண்ணீர் ததும்ப நிற்பன்; அந்த நீர்மை இன்றைக்கும் விளங்குமாறு ஸேவைஸாதிக்கத் திருக் கோவலூரிலே கண்டேனென்கிறார்.

முதலடியில், "ஒளியாச் சென்று" என்றும் "ஒளியால் சென்று" என்றும் பாடபேதமுண்டு. முந்தினபாடத்தில், ஒளியா—'செய்யா' என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்: ஒளிந்துகொண்டு என்றபடி. "ஒளியா

வெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி யொண்கயிற்ருல், விளியாவார்க்க ஆப்புண்டு விம்மியழுதான்" என்று மேலே ஆரும்பத்திலு மருளிச்செய்வர். "ஒளியால்" என்ற பிந்தினபாடத்தில், 1. "நாளிளந்திங்களைக் கோள்விடுத்து, வேயகம் பால் வெண்ணெய் தொடுவுண்ட" என்கிற பாசுரத்தின் படியே பொருள் கொள்ள வேணும்: அதாவது—உறிகளிலே சேமித்து வைத்த வெண்ணெயைக் களவுகாணப் போனபோது, தன் திருநிறத்தின் இருட்சியாலும் அவ்விடத்தின் இருட்சியாலும் ஒன்றுந் தெரியாமையாலே தடவாநிற்கச் செய்தே கையிலே வெண்ணெய்த் தாழிகள் அகப்பட்ட மகிழ்ச்சியினால் சிரிப்புஉண்டாகும்; பூர்ண சந்திரனுடைய கிரணம்போலே திருமுத்துக்களின் ஒளி புறப்படவே, அந்த ஒளியையே கைவிளக்காகக் கொண்டு அமுது செய்வனென்க. ஆகவே, இப்பாட்டில் ஒளியால் என்றது—திருமுத்துக்களின் ஒளியினாலே என்றவாறு. இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை அச்சிடுவித்தவர்கள் ('உபரா உபரா:' என்றதுபோலே,) அநங்விதமாகஅச்சிடுவித்துள்ளார்; அதாவது—"[ஒளியால் சென்றங்குண்டானை.] களவாலேயன்றியே 'நாளிளந்திங்கள்' இத்யாதிப்படியே." என்று அச்சிடுவிக்கப்பட்டுள்ளது இந்த வாக்கியம் எங்ஙனேயிருக்கவேணுமென்றால், "களவாலே. அன்றியே, நாளிளந்திங்களித்யாதிப்படியே." என்று இரண்டுவாக்கியமாக இருக்கவேண்டும் ஒளியா என்ற பாடத்தைத் திருவுள்ளம்பற்றி 'களவாலே' என்று பொருளுரைத்தார். ஒளியால் என்றபாடத்தைத் திருவுள்ளம்பற்றி "அன்றியே" என்று பக்ஷாந்தரமாக வேறொரு பொருளை ஸூசிப்பித்தார் என்றுணர்க.

தறி—யானைகட்டும்கம்பம். உரலைத் தறியாகவும், கண்ணபிரானைக் கருங்களிறாகவுங் கொள்க.

[வெறியார்ந்த மலர்மகளித்யாதி.] ஸ்ரீமஹாலக்ஷ்மியும் ஸரஸ்வதியும் துர்க்கையும் திருக்கோவலூரில் விளங்குகின்றனராம். 2. "விந்தைமேய கற்புடைய மடக்கன்னி காவல்பூண்ட கடிபொழில் சூழ் நெடுமறுகில் கமலவேலி, பொற்புடைய மலையரையன் பணிய நின்ற பூங்கோவலூர்" என்கிறபடியே திருக்கோவலூரில் துர்க்கையானவள் க்ஷேத்ரபாலநம் செய்து கொண்டிருக்கின்றமைபற்றி வியன்கலையெண்தோளினாள்விளங்கு எனப்பட்டது. துர்க்காதேவி மான் வாஹனமுடையவளென்பது "வெய்யகலைப்பாகி" (1—3—9.) என்ற பெரியாழ்வார் திருமொழிப்பாசுரத்தாலும் விளங்குமென்க.

இனி, மலர்மகளாகிய பெரியபிராட்டியாரும் நாமங்கையாகிய ஸரஸ்வதியும் விளங்குகையாவது—திருக்கோவலூரிலுள்ளாரடங்கலும் லக்ஷ்மீ கடாக்ஷம் பெற்ற செல்வர்களாகவும் ஸரஸ்வதீ கடாக்ஷம் பெற்ற வித்வான்களாகவும் இருக்கை. ஸரஸ்வதி நாக்கில் திகழும் தெய்வப்பெண்ணாதலால் நாமங்கை என்று பெயர் பெறுவள். ... .... .... (சு)

1. திருவாய்மொழி 3—8—3. 2. திருநெடுந்தாண்டகம்—7.

இருங்கைம்மா கரிமுனிந்து பரியைக்கீறி
    இனவிடைக ளேழடர்த்து மருதஞ்சாய்த்து *
வருஞ்சகட மிறவுதைத்து மல்லையட்டு
    வஞ்சம்செய் கஞ்சனுக்கு நஞ்சானானை *
கருங்கமுகு பசும்பாளை வெண்முத்தீன்று
    காயெல்லாம் மரகதமாய்ப் பவளங்காட்ட *
செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள்சோலைத்
    திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (எ)

இரு கை மா கரி முனிந்து — நீண்ட துதிக்கையையுடைய ஐந்துவாகிய (குவலயாபீடமென்னும்) யானையைச் சீறிமுடித்து
பரியை கீறி — குதிரை வடிவெடுத்துவந்த கேசியென்னு மசுரனைப் பிளந்தொழித்து
இனம் ஏழ் விடைகள் அடர்த்து — ஒன்றோடொன்று ஒத்த ஏழு ரிஷபங்களையும் (நப்பின்னைக்காக) வலியடக்கி
மருதம் சாய்த்து — இரட்டை மருதமரத்தை முறித்து
வரும் சகடம் இற உதைத்து — (தன்னைக்கொல்ல) மேல் விழுந்த சகடம் முறியும்படி அதனையுதைத்து
மல்லை அட்டு — மல்லர்களை த்வம்ஸம்பண்ணி (கடைசியாக)
வஞ்சம் செய் கஞ்சனுக்கு நஞ்சு ஆனானை — கபடச்செயல்களைச் செய்துவந்த கம்ஸனுக்கு விஷமாகி அவனையும் முடித்த பெருமானை,—
கரு கமுகு — கறுத்த பாக்கு மரங்களினுடைய
பசு பாளை — பசுமைதங்கிய பாளையானது
வெண் முத்து ஈன்று — வெளுத்த முத்துக்களை வெளிப்படுத்தவும்
காய் எல்லாம் — (அதன்) காய்களெல்லாம்
மரதகம் ஆய் — மரதகம்போல் விளங்கவும் (அவற்றின் கனிகள்)
பவளம் காட்ட — பவழங்களைக்காட்டவும்
செருந்தி — சுரபுன்னைகள்
மொட்டு — மொக்குகளை
மிக அலர்த்தும் — மிக அலரச்செய்யவும் பெற்ற
தேன் கொள் சோலை — தேன்னிறைந்த சோலைகளையுடைய
திருக்கோவலூரதனுள், நான் கண்டேன்—.

[இருங்கைம்மாகரிமுனிந்து.] திருக்கோவலூராயனுருடைய ஐந்தாறு சிறுச்சேவகங்களை முன்னடிகளில் நெஞ்சார அநுஸந்திக்கிறார். வில்விழவென்கிற வியாஜம்வைத்துக் கம்ஸனாலழைக்கப்பட்டு அரண்மனையினுள் புகும்போது வாசலிலே எதிர்த்துவந்த மதயானையை முனிந்தான்; கம்ஸனாலேவப்பட்ட ஒரஸுரன் குதிரையின் வடிவோடு ஆயர்கள் நடுங்கும்படி கனைத்துத் துரத்திக்கொண்டு தன்மேற் பாய்ந்துவர, தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களை யுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன்; நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள்தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளையும்

ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கினன்; குழந்தைப் பருவத்தில் யசோதை திருவயிற்றில் கயிற்றினுல்கட்டி ஒருரலிலே பிணித்துவிட, அவ்வுரலையுமிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே சென்றபோது அவ்வுரல் குறுக்காய்நின்று இழுக்கப்பட்டபடியினுலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழும்படி செய்தனன்; நந்தகோபர் திருமாளிகையில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே தன்னைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப் போனபோது கம்ஸனுல் ஏவப்பட்ட அசுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து, சிசுவாகிய தன்மேலே விழுந்து தன்னைக் கொல்லமுயன்றதை அறிந்த தான் பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி உதைத்து அச்சகடம் கீழே விழுந்து முறியும்படி செய்தான்; சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லவீரர்களை மற்போரில் வென்முன்; கடைசியாக, மஞ்சத்தின்மீது வீற்றிருந்த கம்ஸன்மேல் வேகமாக எழும்பி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டனன்; இப்படிப்பட்ட சிறுச்சேவகங்கள் செய்தருளின பெருமானைத் திருக்கோவலூரிலே கண்டேன்.

அத்திருப்பதியின் சோலையினழகைப் பின்னடிகளிற் பேசுகிறுர். முத்து, மரதகம், பவளம் முதலிய சிறந்த பொருள்கள் பொழில்களினின்று வெளி வருகின்றனவென்று சமத்காரமாக அருளிச்செய்தவாறு. .... .... (எ)

பாரேறு பெரும்பாரம்தீரப் பண்டு
பாரதத்துத் தூதியங்கி * பார்த்தன்செல்வத்
தேரேறு சாரதியாயெதிர்ந்தார்சேனை
செருக்களத்துத் திறலழியச் செற்முன்தன்னை *
போரேமுேன் றுடையானு மளகைக்கோனும்
புரந்தரனும் நான்முகனும்பொருந்துமூர்போல் *
சீரேறு மறையாளர் நிறைந்த செல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (அ)

| | |
|---|---|
| பார் ஏறு பெரு பாரம் தீர | பூமியின் மேலேறிக்கிடந்த பாரங்கள் தொலைவதற்காக |
| பண்டு | முற்காலத்தில் |
| பாரதத்து | பாரதயுத்தம் ஸமீபித்த போது |
| தூது இயங்கி | தூதுசென்றவனும், |
| பார்த்தன் | அர்ஜுநனுடைய |
| செல்வம் தேர் ஏறு சாரதி ஆய் | அழகிய தேரையேறி நடத்தின பாகனுகி |
| எதிர்ந்தார் சேனை | எதிரிகளின் சேனையை |
| செரு களத்து | போர்க்களத்திலே |
| திறல் அழிய | வலிமாளும்படி செய்து |
| செற்முன் தன்னை | ஒழித்தவனுமான பெருமானை—, |
| போர் ஏறு ஒன்று உடையானும் | (செருக்காலே) கறைபொருகிற ஒரு எருதை வாஹநமாகவுடைய சிவனும் |
| அளகை கோனும் | குபேரனும் |

| | | | |
|---|---|---|---|
| புரந்தரனும் | தேவேந்திரனும் | சீர் ஏறு மறையாளர் நிறைந்த செல்வம் | சிறந்த வைதிகர்கள் நிறைந்திருக்கையாகிற செல்வம் பொருந்திய |
| நான்முகனும் | பிரமனும் | | |
| பொருந்தும் | நித்யவாஸம் செய்யப்பெற்ற | | |
| ஊர் போல் | வானுலகத்துஸ்தானங்களைப் போன்று | திருக்கோவலூரதனுள், நான் கண்டேன்—. | |

[பாரேறுபெரும்பாரந்தீர.] பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல் வருத்தமற்றிருக்கும்; ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்புமூட்டையைத் தாங்குவதுபோல் மிகவருத்தமாம். ஆதலால், த்வாபரயுகத்தில் இப்பூமியின்கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் துரியோதனுதியர் முதலிய கொடியவர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்து மேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையையடைந்து அச்சபைநடுவில் வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வஸுரர்களைத் தொலைத்துத் தன்னைச் சுகப்படுத்த வேணுமென வேண்டிக்கொள்ள அதற்கு நான்முகன் சிறிதுகாலம் யோசித்து 'இது நம்மாலாகாது, ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் ஸர்வலோகபிதாவாகிய ஸ்ரீமந்நாரயணனுக்கு அறிவித்து அவர்மூலமாக இக்காரியத்தை நிறைவேற்றுவிக்க வேணும்' எனக் கருதி அந்தப் பூமியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டு போய்ப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமனைத்தொழுது துதிக்க, திருமால் அருள்புரிந்த சிந்தை கொண்டு அவர்கட்குக் காட்சிதந்து யோகக்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி 'உங்கள் கருத்தையறிந்து கொண்டேன், நான் வஸுதேவ தேவகிகளின் கர்ப்பத்தில் ஸ்ரீக்ருஷ்ணனாக வந்து பிறந்து ஸாதுபரித்ராணமும் துர்ஜநவிநாசமும் தர்மஸம்ஸ்தாபநமும் செய்யக்கடவேன்' என்று சோதிவாய்திறந்து அருளிச்செய்து அவர்களையனுப்பிவிட்டு அப்படியே வந்து அவதரித்துப் பாண்டவதூதனாயும் பார்த்தஸாரதியாயும் காரியங்கள்செய்து மண்ணின்பாரத்தை நீக்கின பெருமானைத் திருக்கோவலூரில் கண்டேன்.

அத்திருக்கோவலூர் எப்படிப்பட்டதென்னில்; காமனை வென்று ஜிதேந்திரியராயுள்ளவர்கள் பலர் நிறைந்திருப்பதை நோக்குங்கால் ரிஷபவாஹனனாகிய சிவபிரான் பொருந்தும் ஊரோ இது! என்னும்படியாயும், செல்வம்மிக்கவர்கள் நிறைந்திருப்பதை நோக்குங்கால் குபேரபட்டணமாகிய அளகாபுரியோ இது! என்னும்படியாயும், அழகுமிகுதியை நோக்குங்கால் தேவேந்திர பவனமோ இது! என்ன வேண்டும்படியாயும், வேதம் வல்லார்கள் நிறைந்திருப்பதைக் கண்டால் நான்முகனுறையும் ஸத்யலோகமோ இது! என்னவேண்டும்படியாயுமிருக்கும்

புரந்தரன்—தற்சம வட சொல். ... ... ...

தூவடிவிற்பார்மகள் பூமங்கையோடு
சுடராழி சங்கிருபால் பொலிந்துதோன்ற *
காவடிவிற் கற்பகமேபோலநின்று
கலந்தவர்கட் கருள்புரியுங் கருத்தினானை *
சேவடிகை திருவாய்கண் சிவந்தவாடை
செம்பொன்செய் திருவுருவமானான் தன்னை *
தீவடிவிற் சிவனயனே போல்வார்மன்னு
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (௯)

| | |
|---|---|
| தூ வடிவின் | அழகிய வடிவையுடைய |
| பார் மகள் பூ மங்கையோடு | பூமிப்பிராட்டியோடும் பெரிய பிராட்டியோடும் கூடி |
| இருபால் | இரண்டு திருக்கைகளிலும் |
| சுடர் ஆழி சங்கு பொலிந்து தோன்ற | திருவாழி திருச்சங்குகள் பளபளவென்று விளங்க |
| கா வடிவின் கற்பகம் போல நின்று | சோலைசெய்திருக்கின்ற கற்பகம்போல நின்று |
| கலந்தவர்கட்கு அருள் புரியும் கருத்தினானை | பக்தர்களுக்குக் கிருபைபண்ணும் திருவுள்ளமுடையவனும், |
| சே அடி கை திருவாய் கண் சிவந்த ஆடை | சிவந்த திருவடிகள் திருக்கைகள் திருப்பவளம் திருக்கண் திருப்பீதாம்பரம் இவற்றோடு கூடி |
| செம் பொன் செய் திரு உருவம் ஆனான் தன்னை | செம்பொன் போன்ற திருமேனியையுடையவனுமான பெருமானை |
| தீ வடிவின் சிவன் அயன் போல்வார் மன்னு | நெருப்புப்போன்ற வடிவையுடையனான சிவனும் பிரமனும் போல அரிய பெரிய காரியங்கள் செய்யவல்ல மஹான்கள் பொருந்தியிருக்கிற |
| திருக்கோவலூரதனுள், நான் கண்டேன்—. | |

[தூவடிவில்பார்மகள்.] ஸ்ரீதேவியும் பூதேவியும் இரண்டுபக்கத்திலும் திகழவும், இரண்டுதிருக்கைகளிலும் திருவாழி திருச்சங்குகள் பொலியவும் நின்று 'பெரியதொரு கல்பவ்ருக்ஷமோ!' என்னும்படியாக அடியவர்கட்கு ஸர்வஸ்வதானம் பண்ணியருள்பவனும், செந்தாமரைபோன்ற திருவடி திருக்கை திருவாய் திருக்கண் ஆகிய அவயவங்களின் ஒளியாலும் பீதகவாடையின் காந்தியினாலும் செம்பொன்மயமான திருவுருவம் விளங்கப்பெற்றவனுமான பெருமானை, 'ப்ரஹ்மருத்ரர்கள்போலே ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களும் பண்ணவல்ல பெருமை வாய்ந்தவர்களோ இவர்கள்!' என்று நினைக்கலாம்படியான சிறப்பு வாய்ந்த மஹான்கள் நித்யவாஸம்பண்ணுகிற திருக்கோவலூரிலே ஸேவிக்கப் பெற்றேனென்கிறார்.

காவடிவிற்கற்பகம்=கப்பும் கிளையுமாகப் பணைத்துப் பெரிய சோலை போலே பரந்துவிளங்குகிற கல்பவ்ருக்ஷத்தை எம்பெருமானுக்கு உவமை கூறலாமேயன்றி வெறும் கல்பவ்ருக்ஷத்தை உவமை கூறலாகாதென்க. கா—சோலை. கல்பகம்—வேண்டுவார் வேண்டினவற்றையெல்லாம் அளிப்பது என்று காரணப் பெயர்.

தீவடிவிற்சிவன்="ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ" என்பர் திருநெடுந்தாண்டகத்திலும். ... ... ... (௯)

வாரணங்கொளிடர்கடிந்தமாலை, நீல
மரதகத்தை மழைமுகிலே போல்வான்தன்னை *
சீரணங்கு மறையாளர்நிறைந்த செல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேனென்று *
வாரணங்கு முலைமடவார் மங்கைவேந்தன்
வாட்கலியனொலி யைந்துமைந்தும்வல்லார் *
காரணங்களாலுலகம் கலந்தங்கேத்தக்
கரந்தெங்கும் பரந்தானைக் காண்பர்தாமே. (௰)

| | |
|---|---|
| வாரணம் கொள் இடர் கடிந்த மாலை | கஜேந்திராழ்வானடைந்த துக்கத்தைப்போக்கின பெருமானும் |
| நீலம் மரதகம் மழை முகில் போல்வான் தன்னை | கருநெய்தற்பூ, மரகதப் பச்சை, குளிர்ந்த மேகம் ஆகிய இவற்றை யொத்த வனுமான கோபாலனை, |
| சீர் | ஆத்மகுணங்களாலே |
| அணங்கு | (அனைவரும்) ஆசைப்படக் கூடிய |
| மறையாளர் | வைதிகர்கள் |
| நிறைந்த செல்வம் | நிறைந்திருக்கையாகிற அழகுபொருந்திய |
| திரு கோவலூர் அதனுள் | திருக்கோவலூரென்னுந் திருப்பதியிலே |
| கண்டேன் என்று | ஸேவிக்கப்பெற்றேனென்று, |
| வார் அணங்கு முலை மடவார் மங்கை | கச்சினால் அழகுபெற்ற முலைகளையுடைய மாதர் நிறைந்த திருமங்கை நாட்டுக்கு |
| வேந்தன் | தலைவரும் |
| வாள் | வாட்படையை நிரூபகமாக வுடையருமான |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |
| ஐந்தும் ஐந்தும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| வல்லார் தாம் | ஓதவல்லவர்கள், |
| (என்ன பலனைப் பெறுவர்களெனில்;) | |
| உலகம் | உலகத்திலுள்ள பலவகை யதிகாரிகள் |
| காரணங்களால் | தங்கள் தங்களுக்கு இஷ்டமான பலன்களைப் பெறவேண்டிய காரணத்தினால் |
| கலந்து | திரண்டு வந்து |
| ஏத்த | துதிக்க |
| கரந்து எங்கும் பரந்தானை | ஒருவர்க்கும் காணவொண்ணதபடியிருந்து எல்லாவிடங்களிலும் வியாபித்திருக்கின்ற பரமாத்மாவை |
| காண்பர் | ஸேவிக்கப்பெறுவர்கள். |

[வாரணங்கோள்.] கஜேந்திராழ்வானுடைய துன்பத்தைத் தொலைத்தவனும் கறுத்துக் குளிர்ந்த திருவடிவையுடையவனுமான ஸர்வேச்வரனை ஆத்மகுண பரிபூர்ணரான வைதிகர்கள் நிறைந்த திருக்கோவலூரில் தாம் ஸேவிக்கப்பெற்றமையைத் திருமங்கையாழ்வார் வெளியிட்ட பாடலாகிய இத்திருமொழியைக் கற்றுணரவல்லவர்கள் ஸர்வவ்யாபியான ஸர்வேச்வரனை ஸாக்ஷாத்கரிக்கப்

பெறுவர்களென்று இத்திருமொழிகற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

வாரணம்—தற்சமவடசொல். சீரணங்கு மறையாளர்—ஆத்மகுணபூர்த்தியைப் பார்த்தவாறே 'இவர்களுக்கு நாம் அடிமைப்படக்கடவோம்' என்று விரும்புதற்கு உரிய அந்தணர்களாம் திருக்கோவலூரிலுள்ளார்.

"வாரணங்குமுலைமடவார்மங்கை" என்று மங்கை நாட்டின் சிறப்பு சொன்னபடி: சோலைவாய்ப்பு, வயல்வீறு, மதிட்பொலிவு முதலியவற்றைச் சொல்லும் முகத்தால் நகரத்தின்சிறப்பை வெளியிடுதல்போல, மாதர்களின் மேன்மையைச் சொல்லும் முகத்தாலும் வெளியிடுதலுண்டு; "ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி" என்றாற்போல.

காரணங்களால் ஏத்த=ஐச்வர்யம் வேணுமென்றும் புத்ரஸந்தானம் வேணுமென்றும் இந்திரலோகம் வேணுமென்றும் இப்படி பலபல அபேக்ஷைகள் காரணமாக ஏத்துமவர்களுக்கும் பலன் அளிக்க எங்கும் புகுந்து பரந்திருக்கிறானும் எம்பெருமான்.

"ஐச்வர்யத்துக்காகவும் ஆத்மப்ராப்திக்காகவும் பகவத் ப்ராப்திக்காகவும் லோகத்திலுள்ளார் திரண்டு ஆச்ரயிக்க, ஆச்ரயித்தபோதே ஆச்ரிதர்க்கு அபேக்ஷிதத்தைக் கொடுக்கைக்காக எங்கும் புக்கு வ்யாபித்து அங்யைரத்ருஷ்டனாய் [—ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவனாய்] 'நம்மை ஆச்ரயிப்பார் ஆரோ?' என்று அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கிறவனைக் காணப்பெறுவர்" என்ற வியாக்கியான வருளிச்செயல் இங்கு அநுஸந்திக்கத் தகும் ... *

அடிவரவு:—மஞ்சு கொந்து கொழுந்து தாங்கு கறை யுறி இருக்கை பார் தூவடிவின் வாரணம் இருந்தண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
பெரிய திருமொழி திவ்யார்த்த தீபிகையில்
இரண்டாம்பத்து முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

### பெரிய திருமொழியின் முதலிரண்டு பத்துக்களில் ஆழ்வார் அநுஸந்தித்தருளின

# இதிஹாஸ புராண கதைகளின் அடைவும், அக்கதைகள் அமைந்த பாசுரங்களின் தலைப்பும்.

| | [பாசுரங்களின் தலைப்புக் குறிப்பு.] |
|---|---|
| 1. * திருமால் மீனாய்த் திருவவதரித்தது. [இதன் விவரணம் அடியிற் காண்க.] | *மின்னுமாமுகில்மேவு. அன்னமுமீனுமாமையுமரியும்.* |
| 2. அன்னமாய்த் திருவவதரித்தது. [இதன் விவரணம் 214ம் பக்கத்தில் காண்க.] | *அன்னமுமீனுமாமையும்.* |
| 3. ஆமையாய்த் திருவவதரித்தது. [270ம் பக்கத்தில் விவரணம் காண்க.] | *ஷை* |
| 4. கடல் கடைந்தது. [விவரணப்பக்கம் 271.] | *எய்த்த சொல்லோடீளையேங்கி. சூதினைப் பெருக்கி.* |
| 5. பெண்ணாகி அமுதளித்தது. [271ம்பக்கத்தில்விவரணம்] | *நண்ணாதவாளவுணர். பெண்ணாகியின்னமுதம். வஞ்சனைசெய்யத் தாயுரு.* |
| 6. பன்றியாகிப் பாரகம் கீண்டது. [23ம் பக்கத்தில்விவரணம்.] | *வென்றியே வேண்டி. ஏனமுனாகி யிருநிலமிடந்து. கிடந்தானைத் தடங்கடலுள். ஏனத்தினுருவாகி.* |

---

1. * **மத்ஸ்யாவதாரத்தின் வரலாறு** :—*முன் ஒரு கல்பத்தின் முடிவில் நான்முகக் கடவுள் துயில்கொள்ளாநிற்க, அவனது முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக்கொண்டிருந்த நான்கு வேதங்களையும் சோமுகனென்னும் அசுரன் கவர்ந்துகொண்டு பிரளய வெள்ளத்தினுள் மறைந்துசெல்ல, எம்பெருமான் அதனையுணர்ந்து ஒரு பெரு மீனாகத் திருவவதரித்து அப்பெருங் கடலினுட்புகுந்து அவ்வசுரனைத் தேடிப்பிடித்துக் கொன்று அவன் கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து அவற்றைப் பிரமனுக்குக் கொடுத்தருளினன் என்பதாம். (இவ்வரலாற்றில் வேறு வகைகளையுங் கூட்டி விரித்துரைத்தலுமுண்டு ; விரிவுக்கு அஞ்சி இங்கே விடுக்கப்பட்டது.)*

| | |
|---|---|
| 7. நரசிங்கவுருக் கொண்டதும் இரணியன் அகலம் பிளந்ததும்.<br>[விவரணம் 42ம் பக்கத்தில்.] | மறங்கொளாளரியுருவென. மான்முனிந்தொருகால்.<br>ஏனோரஞ்ச வெஞ்சமத்துள். அங்கண் ஞாலமஞ்ச 1+9.<br>எண்டிசைகளும். தாணுயதனூடு. பள்ளியிலோதிவந்த.<br>காண்டாவன மென்பதோர்காடு. தாங்காததோராளரியாய்.<br>புகராருருவாகி முனிந்தவனை. பேணாதவலியரக்கர்<br>மெலிய. பெண்ணாகியின்னமுதம். படநாகத்தணைக்<br>கிடந்து. திரிபுரமூன்றெரித்தானும். திண்படைக்கோளரி<br>யின். அன்னமுமீனுமாமையுமரியும். |
| 8. மாவலிபக்கல் மண்ணிரந்தளந்தது.<br>[விவரணம் உலகப்பிரசித்தம்.] | தாயாய்வந்தபேயுயிரும். காண்டாவனமென்பதோர்.<br>கிடந்தானைத் தடங்கடலுள். தொண்டாயார்தாம் பரவும்.<br>இலகிய நீண்முடிமாவலி. உண்டாயுறிமேல். |
| 9. பரசுராமாவதாரம்.<br>[விவரணப்பக்கம் 246.] | பாராருலகும் பனிமால். |
| 10. சூர்ப்பணகையை அங்கபங்கம் செய்தது.<br>[விவரணப் பக்கம் 93.] | அடுத்தார்த்தெழுந்தாள். |
| 11. $ கரனைக்கொன்றது.<br>[விவரணம் அடியிற்காண்க.] | கறைவளர்வேல்கரன். |
| 12. மாயமானை மாய்த்தது.<br>[விவரணப்பக்கம் 70-88.] | கானிடையுருவை. மான்முனிந்தொருகால்.<br>கிடந்தானைத்தடங்கடலுள். |
| 13. கவந்தனைக்கொன்றது.<br>[விவரணப்பக்கம் 342.] | கறைவளர்வேல்கரன். |
| 14. மராமரமேழெய்தது.<br>[விவரணப்பக்கம் 137.] | வண்கையானவுணர்க்கு. |
| 15. வாலியை வதைத்தது.<br>[விவரணப்பக்கம். 35.] | வாலிமாவலத்து. கறைவளர்வேல்கரன். |
| 16. கடலில் அணைகட்டினது.<br>[விவரணப்பக்கம் 39.] | கலங்கமாக் கடலரிகுலம். கலையுங்கரியும்.<br>மாலுங்கடலார. குடைத்திறல் மன்னவனாய். |
| 17. மாலியைமடித்தது.<br>[விவரணப்பக்கம் 340.] | தாங்கரும் போர்மாலிபட. |
| 18. பலராமாவதாரம்.<br>[விவரணப்பக்கம் 104.] | சிலம்படியுருவின். அலங்கெழுதடக்கையாயன். |

---

11 $. பஞ்சவடியில் சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜநஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய கரன்பக்கல் சென்று இச்செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தையுண்டாக்க, பிறகு அக்கரன் பதினாலாயிரம் ஸேநாதிபதிகளையும் ஸேனைகளையும், தூஷணன் த்ரிசிரஸ் என்பவர்களையும் இராமபிரானோடு போர்செய்ய அனுப்பினான். இராமன் அவர்களத்தனைபேரையும் தாம் ஒருவராகவே கொன்று வென்றிட, பிறகு இதனையறிந்த கரன் தானே நேரில்வந்து எதிர்க்க, இராமன் பிராட்டியை ஒரு மலைக்குகையில் வைத்து லக்ஷ்மணனைக் காவலிட்டுவந்து அக்கரனோடு போர்செய்து, அகஸ்த்யர் கொடுத்திருந்த வைஷ்ணவதநுஸ்ஸில் நாணேறிட்டு அம்பு தொடுத்துவிட்டு அவன்தலையையறுத்து வெற்றி பெற்றனர்.

